அனைத்திந்திய நூல் வரிசை

# அரை நாழிகை நேரம்

பாறப்புறத்து

தமிழாக்கர் :

கே. நாராயணன்

நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புதுடில்லி

1981 (1902)



ரூ. 14-25

*Original Title :* ARA NAZHIKA NERAM (Malayalam)

*Tamil Translation :* ARAI NAZHIKAI NERAM

விநியோகிப்பாளர் :
பாரி நிலையம்
59, பிராட்வே, சென்னை-1.

Published by The Director, National Book Trust, India, A-5, Green Park, New Delhi-110 016 and Printed at The Manorama Press, 115, Jani Jan Khan Road, Royapettah, Madras-600 014.

# முன்னுரை

கேரள நாட்டில் அச்சுத் தொழிலை ஆரம்பித்தவர்களும், மலையாள மொழியில் உரை நடையின் வளர்ச்சிக்கு வழிவகுத்து, அதை ஊக்குவித்தவர்களும் மேலைய நாட்டுப்பாதிரிமார்களே ஆவார்கள். அவ்வண்ணமே இலக்கியத்தில் ஆங்கிலக் கல்வியின் பயனாக நவீனம் எனும் பிரிவு தோன்றியது. நாவல் இலக்கியத்தின் ஆரம்ப காலப் படைப்புகள் ஆங்கில நூல்களின் தழுவலாகவோ மொழிபெயர்ப்பாகவோ இருந்தன. 'ஆஸ் யூ லைக் இட்' எனும் நூலைக் காமாட்சி சரிதமாக மாற்றிய சிதம்பர வாத்தியார்; புல்லேரிக்குஞ்சு எனும் உரை நடை நூலை எழுதிய ஆர்ச் டிக்ஸன் உம்மன் கோசி. பெரிக்லிஸ் என்ற ஷேக்ஸ்பியரது நாடகத்தைப் பரிக்லேச ராஜாவின் கதையாக்கிப் பிரசுரித்த பி. வேலாயுதன் ஆகியோரை ஆரம்பகால நாவலாசிரியர்களாக ஏற்றுக் கொள்ளலாமா என்பது இன்றும் விவாதத்திற்குரிய விஷயம். ஏனெனில், அவர்களது படைப்புகளில் நாவலின் அம்சங்களைக் காண்பது அரிது.

இதனால்தானோ என்னவோ குந்தலதாவின் ஆசிரியரான அப்பு நெடுங்காடி அவர்களையே முதல் நாவலாசிரியராகக் கூறுகின்றனர். 1885 ஆம் ஆண்டு குந்தலதா பிரசுரமாகி வெளிவந்தது. கதை அமைப்பிலோ, பாத்திரப் படைப்பிலோ இந்த நூலை ஒரு வெற்றிப் படைப்பாகக் கூற இயலாதெனினும் நாவலுக்குரிய பல தன்மைகள் தெளிவாகத் தெரிகிற முதல் மலையாள நாவல் இதுதான். நாவல் இலக்கியத்திற்கு உறுதியானதொரு அடிக்கல் நாட்டு, அதைப் பிரபலப்படுத்திய பெருமை, ஓ. சந்து மேனோன், ஸி.வி. ராமன் பிள்ளை ஆகிய இருவர்களையுமே சாரும். இவர்கள் பிற்காலததவர்கள். சந்து மேனோன் அவர்கள் சமூக நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டு சமூக சிந்தனைக் கருத்துக்கள் கொண்ட நவீனங்களைப் படைத்தார். ஸி. வி. ராமன் பிள்ளை அவர்கள் நாட்டு வரலாற்றையும், தேசீய நிகழ்ச்சிகளையும் கதைக் கருவாகக் கொண்டு முன்னோர்களின் வீர

சாகசச் செயல்களையும் ராஜபக்தியையும் பளிச்சென எடுத்துக் காட்டும்சரித்திர நாவல்களையும் படைத்தார். இன்றும் மலையாள நாவல் இலக்கிய அரங்கில் இவ்விருவரும் வெல்வதற்கரியராகவே திகழ்கின்றனர். சந்து மேனோன் அவர்களது 'இந்து லேகா', 'சாரதா' எனும் நவீனங்களுக்குக் கிடைத்த பேரும், வரவேற்பும் எண்ணற்ற எழுத்தாளர்களை அப்பாதையில் செல்லத் தூண்டின. இதன் பயனாகப் பல சமூக நாவல்கள் மலையாள மொழியில் வெளிவந்தன. இவற்றில் பெரும்பாலானவை இலக்கியத் தரம் வாய்ந்தவை என்று கூற முடியாது. 'மார்த்தாண்ட வர்மா', 'ராமராஜ பகதூர்', 'தர்மராஜா' ஆகிய நூல்கள்தாம், ஸி. வி. ராமன் பிள்ளை அவர்களது புகழ் மிகு வரலாற்றுப் படைப்புகள். ராமன் பிள்ளை அவர்களைப் பின்பற்றி, அவர் காட்டிய பாதையில் செல்லப்பலரும் துணிந்து முன்வரவில்லை. அப்படிப் பின்பற்றிச் சென்றவர்களுக்கும் பெரும் வெற்றி கிட்டவில்லை.

மலையாள நாவலாசிரியர்களில் நினைவுகூரவேண்டிய மற்றொரு எழுத்தாளர் ராமவர்மா அப்பன் தம்புரான். கேரள நாட்டின் பழைய வரலாற்றுடன் தொடர்புள்ள சில நாடோடிக் கதைகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு படைத்த 'பூதராயர்', 'பாஸ்கர மேனோன்' என்ற துப்பறியும் நாவல், ஆகிய இரண்டுமே அவரது சிறந்த நூல்கள். 'பாஸ்கர மேனோன்' மலையாள மொழியில் வெளிவந்த முதல் துப்பறியும் நூலாகத் திகழ்கிறது. ஆட்சி முறையிலுள்ள தவறுகளைச் சுட்டிக் காட்டி, அதிகார வர்க்கத்தினரைக் கண்டிக்கும் கதை அமைப்புகளைக் கொண்டு தேசீய நாவல்களைப் படைக்க 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விடுதலை வேட்கை கொண்ட சில எழுத்தாளர்கள் முன்வந்தனர். கே நாராயண குருக்களின் 'பாறப்புறம்', 'உதய பானு' எனும் நூல்கள் அவ்வகையில் முன் வரிசையில் இருப்பவை. இந்த நாவல்கள் வெளியிடப்படக் காரணமாயிருந்தவர் ராமகிருஷ்ணப் பிள்ளை என்பவர். பின்னர் அதிகார வர்க்கத்தின் கொடுங்கோன்மையை எதிர்த்ததற்காக அவரை நாடு கடத்தினார்கள்.

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20 ஆம் நூற்றாண்டின் முதல் பகுதியிலும் எண்ணற்ற நவீனங்கள் மலையாள மொழியில்

தோன்றின. பெரும்பாலும் அவை பிற மொழி நூல்களின் தழுவல்க ளாகவே இருந்தன. இந்தக் காலக் கட்டத்தில், வாசகர்களின் பொழுது போக்கிற்காகச் சில கதைகளை எழுதித்தள்ளுவதைத் தவிர மேலான ஒரு நோக்கம் எழுத்தாளர்களுக்கு இருக்கவில்லை. சமுதாய சீர்திருத்தத்தைக் குறிக்கோளாகக் கொண்டு சிலர் நாவல் எழுத முற்பட்டனர். ஆனால் இவை கலாரீதியாக வெற்றி பெறவில்லை.

நாட்டின் விடுதலைப்போர், அந்நிய ஆட்சியின்பால் வெறுப்பு, சமூக அமைப்பை மாற்றுவதற்கான பேரார்வம், மார்க்ஸீய கருத்துக் கள், ஆகியவை எழுத்தாளர்களைப் பாதிக்கத் தொடங்கியதிலிருந்து, மலையாளச் சிறுகதை–நாவல் இலக்கியம் முன்னேற்றப்பாதையில் பீடுநடை போடலாயிற்று. சிறுகதை ஆசிரியர்களாகத் தொடங்கி பின் நாவலாசிரியர்களாக மாறி வடிவம், உள்ளடக்கம் ஆகியவற்றில் புரட்சிகரமான புதிய எல்லைகளைத் தொட்ட பல எழுத்தாளர் கடந்த அரை நூற்றாண்டுக் காலத்தில் மலையாள மொழியில் தோன்றியுள்ள னர். இலக்கியம் என்பது வெறும் பொழுது போக்கிற்கான ஒரு சாதனமல்ல, எழுத்தாளனுக்குச் சமூகத்தின்பால் ஏனையோரைக் காட் டிலும் பொறுப்புணர்ச்சி இருக்கவேண்டியது மிகவும்அவசியம் என்ற தூண்டுதலுடன் எழுத்தாளர் எழுத ஆரம்பித்தனர். சமூகத்தின் அடி மட்டத்தில் இருப்பவர்களது வாழ்க்கை முறையும், மாற்றத்தை விரும்பும் புதிய கருத்துகளைப் பிரதிபலிக்கும் பாத்திரங்களும் நாவ லில் உரிய இடம் பெறலாயின. தகழி சிவசங்கரன் பிள்ளை, பி. கேசவ தேவ், வைக்கம் முகம்மது பஷீர் ஆகிய மூவரும் விசேஷமாகக் குறிப்பிடப்பட வேண்டியவர்கள். தகழியின் ‘இரண்டு இடங்கழி’ ‘தோட்டியின் மகன்’, ‘செம்மீன்’, கேசவதேவின் ‘ஓடையில் நின்னு’ (சாக்கடையிலிருந்து) ‘பிராந்தாலயம்’(பைத்தியக்காரவிடுதி) ‘அயல் க்கார்’ (அண்டை வீட்டார்) பஷீரின் ‘பால்யகாலசகி’ (குழந்தைப் பருவத்துத் தோழி) ‘எனடெ அப்பூப்பாக்கு புரானெண்டார்ன்னு’ (என் தாத்தாவிடம் ஒரு யானை இருந்தது) என்ற நவீனங்கள் மலை யாள நாவல் இலக்கியத்தில் மைல் கற்களாகத் திகழ்கின்றன.

இம்மும்மூர்த்திகளுக்கு வெகு அருகிலேயே வீற்றிருக்கின்றனர் எஸ். கே. பொற்றக்காடு, உரூப் ஆகியோர். உலகெங்கிலும் நிகழும்

சோதனைகளையும் மாற்றங்களையும் பிரதிபலிக்கும் நூல்களைப் படைக்கும் பல எழுத்தாளர் இன்றைய இரண்டாவது தலைமுறையினராகத் திகழ்கின்றனர். பாறப்புறத்து, எம். டி. வாசுதேவன் நாயர், கே. சுரேந்திரன், ஜீ. விவேகானந்தன், கோவிலன், நந்தனர், மலையாற்றூர் இராமகிருஷ்ணன்; 'விலாசினி' எனும் புனைபெயர் கொண்ட எம். கே மேனேன், ஆகியோர் இவர்களில் முதன்மையானவர்கள். கிறிஸ்துவ வாழ்க்கை முறையைக் கலப்படமில்லாமல் வெற்றிகரமாக வரைந்து காட்டுவதில் தேர்ந்தவராக விளங்கி எண்ணற்ற ரசிகர்களை மகிழ்வித்து வரும் முட்டத்து வாக்கி அப்பிரிவினரைப் பற்றி நிறைய நாவல்களை எழுதியிருக்கிறார். இவ்வாறு புத்தம் புது உணர்ச்சிக் கோடுகளையும் வாழ்க்கைக்காட்சிகளையும் நம்முன் சித்திரித்துக் காட்டி நம்மைக் கவரும் இளம் எழுத்தாளர் இன்னும் பலர் உள்ளனர். அனைத்துலக இலக்கியத்தில் காணக்கிடைக்கும் பலவகையான உத்திகளையும் இன்றைய மலையாள நாவல்களில் பார்க்க முடியும் எதிர்காலத்தின் நம்பிக்கை ஒளியெனப் புது எழுத்தாளர் பலர் தோன்றியிருக்கின்றனர்.

உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்துக்கொண்டு ராணுவத்தில் சேர்ந்து சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்வரை இராணுவ வாழ்க்கை வாழ்ந்துவிட்டு, தற்போது இலக்கிய வாழ்க்கை வாழும் கே. ஈ.மத்தாயி அவர்கள் தாம் 'பாறப்புறத்து' என்ற புனைபெயரில் இலக்கிய உலகில் புகழோடு விளங்கும் இந்நூலின் ஆசிரியர். வெளி உலகத்திற்குத் தெரியாத இராணுவ வாழ்க்கையைத் தத்ரூபமாகச் சித்திரித்துக் காட்டும் சிறுகதைகள் மூலமாக இவர் இலக்கிய உலகிற்கு அறிமுகமானர். எளிமையான, ஆனல் மனதைக் கவரும் ஒரு வாழ்க்கை முறையை வரைந்து காட்டியதால் விரைவிலேயே தலைசிறந்த நாவலசிரியராக ரசிகர்களின் நன்மதிப்பைப் பெற்றார் அவர். நாட்டைக் காப்பதற்காக வாழ்க்கையின் பொற்காலத்தைப் பலியிடும் இளைஞர்களின் தியாகத்தையும் துன்ப உணர்வுகளையும், ஆசைக் கனவுகளையும், ஏமாற்றங்களையும் உள்ளத்தை உருக்கும் வண்ணம் திறம்படத் தமது கதைகளிலும் நாவல்களிலும் சித்திரித்த

முதல் மலையாள எழுத்தாளர் பாறப்புறத்து அவர்களே. அதற்காக அவரது கவனம் பட்டாளப் பாளையங்களோடு நின்றுவிட்டதாகக் கொள்ளக் கூடாது. அவர் தாம் பிறந்து வளர்ந்த கிராமத்தையும், அங்கே வாழும் கள்ளம் கவடற்ற மக்களையும் உயிர்த் துடிப்புடன் அநாயாசமாகச் சித்திரிக்கிறார். மனசாட்சியுள்ள எந்த எழுத்தாளனும் தனது வாழ்க்கைத் தத்துவத்திலிருந்து தனித்து நின்று இலக்கியம் படைக்க இயலாதன்றோ? பாறப்புறத்தின் எல்லாப் படைப்புகளிலும் அவரது வாழ்க்கைத் தத்துவம் ஒளிவிட்டு மலர்வதை நாம் காணலாம். கிறிஸ்துவ வாழ்க்கைத் தத்துவத்தில் அரும்பி, சொந்த வாழ்க்கை அனுபவங்களால் மலர்ந்தது அந்தத் தத்துவம்.

இராணுவ வீரனின் தியாக ஒளி மிகுந்த வாழ்க்கையின் சித்தரிப்புடன் பாறப்புறத்து இலக்கிய வாழ்க்கையை ஆரம்பித்ததாகக் குறிப்பிட்டேன் அல்லவா? தியாகம் அவருடைய இலட்சியம். அது அவரது படைப்புத் திறனில் முனைப்பாக வெளியாகிறது. தனி நபருக்காகவும், சமூகத்திற்காகவும், தேசத்திற்காகவும் தன்னையே அர்ப்பணித்துக் கொள்ளும் தியாக வாழ்க்கையை மேற்கொண்ட பாத்திரப் படைப்புகளை அவரது பல நூல்களிலும் காணலாம். சொந்த சுகத்தைப் பொருட்படுத்தாமல் பிறருக்காக உழைத்தல், சேவையில் வாழ்வின் பயனை அடைதல்-இவையே அவருடைய வாழ்க்கைத் தத்துவத்துடன் இணைந்த ஆதரிசங்கள். பாறப்புறத்தின் படைப்புகள் நெஞ்சின் ஈரத்தையும், மென்மையான உணர்ச்சிகளையும் முக்கியமாகத் தட்டி எழுப்புகின்றன. அவருடைய பாத்திரங்கள் பாமரர்களான கிராமவாசிகளே. அவர்களிடையே வஞ்சகர்களையும், முரடர்களையும் ஒரு வேளை நாம் காண்போம். ஆனால் அத்தகையவர்கள் கூட மனிதாபிமானம் இல்லாதவராக இருக்க மாட்டார்கள். எனவே அந்தப் பாத்திரங்களின் கதையைக் கூறுவதில் உணர்ச்சிப் பெருக்குக்கு இடமேது? உணர்ச்சிப் பெருக்கின் உதவியால் சில காட்சிகளுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் மெருகூட்டி வாசகர்களைத் தாற்காலிகமாகத் திடுக்கிட வைக்கப் பாறப்புறத்து முயல்வதில்லை. அவரது கதையில் பாத்திரங்கள் சாமானியர்கள்.

சாமானியர்களாகவே அவர்கள் நம் முன் தோன்றுகின்றனர். முற்றிலும் இயற்கையாக நம்மிடம் உரையாடுகின்றனர் படாடோபமின்மை, நேர்மை, எளிமை ஆகிய குணங்களால் நம் உள்ளத்தில் இடம் பெறுகின்றனர்.

தாம் எடுத்துக் கொள்ளும் கதை அமைப்பிற்கும், பாத்திரப் படைப்பிற்கும் ஏற்ற முறையிலேயே பாறப்புறத்து அவர்களது கதை கூறும் முறையும் அமைந்துள்ளது என்பது மற்றுமொரு சிறப்பு. வார்த்தைகளைப் பட்டாசுச் சரங்களென வெடித்து, வாசகர்களை அவர் திடுக்கிட வைப்பதில்லை. வாசகர்களுக்கும் பாத்திரத்திற்கும் நடுவே நூலாசிரியரின் முகத்தைக் காணவோ, குரலைக் கேட்கவோ இயலாது. மாற்றங்களை விரும்பும் சமூகப் பொறுப்புள்ள மற்ற எந்த எழுத்தாளரையும் போல, பாறப்புறத்தும் சமூகத்தில் நல்ல மாற்றங்களை விரும்புகிறார். பாத்திரங்களின் இயல்பான செயல்களின் வாயிலாக மாற்றங்களுக்கு நடைமுறை உருவம் கொடுத்து வாசகர்களின் உள்ளத்தில் நிலையான துடிப்பை ஏற்படுத்தவே அவர் முயல்கிறார். அவர் தமது பாத்திரங்களை மேடைச் சொற்பொழிவாற்ற விடுவதில்லை, பிரசார பேரிகை முழங்கச் செய்வதுமில்லை. கலையுள்ளம் படைத்த எந்த எழுத்தாளனும் இவற்றைத் தவிர்க்கவே முயல்வான்.

நிறைந்த வாழ்க்கை அநுபவங்களும் பரந்த வாழ்க்கை நோக்கும் கொண்ட ஒரு நாவலாசிரியரால்தான் வாழ்க்கையின் பல்வேறு சம்பவங்களையும் பல்வேறு கதைப் பாத்திரங்களையும் நம் முன் நடமாடச் செய்ய இயலும். பாறப்புறத்து அத்தகையதொரு நாவலாசிரியர். கொடிய பயங்கரமான வாழ்க்கை அநுபவங்களிடையே தட்டுத்தடுமாறி அலைந்துதிரியும் ஒருமனம் கவர் இராணுவ வீரனின் கதையையே 'இரத்தம் தோய்ந்த காற்சுவடுகள்' (நிணமணிஞ்ஞ கால்பாடுகள்) என்னும் நவீனத்தில் அவர் விவரித்துள்ளார். இந்த நூலில் மாத்யு எனும் பாத்திரத்தின் வாயிலாகத் தியாகத்தின் பெருமையை அழகாக விளக்குகிறார் அவர்.

துன்பம் நிறைந்ததும் தியாகத்தின் அழகு மிளிர்வதுமான ஒரு நர்ஸின் வாழ்க்கையைச் சித்திரிக்கிறது 'தேடினேன் கிடைக்கவில்லை' (அன்வேஷிச்சு கண்டெத்தியில்ல) என்ற நவீனம். தான் பிறந்த நிமிடமே தன்னை நெரித்துக் கொல்லத் துணிந்த தந்தைக்கும் ஈவிரக்கமின்றித் துன்புறுத்தும் சித்திக்கும் இடையே தவிக்கும் தாயில்லாக் குழந்தையான ஸிஸி, மாமன் வீட்டில் வளர்ந்து, பின்னர் நர்ஸாகி வட இந்திய மருத்துவ மனைகளில் பணியாற்றுகிறாள். இந்நாட்களில் பற்பல அக்கினிப் பரீட்சைகளுக்குள்ளாகித் தனது வாழ்க்கையின் புனிதத் தன்மையைக் காப்பாற்றிக் கொள்கிறாள். ஆனால் மனதுக்குத் தகுந்ததொரு துணையைத் தேடும் ஆசைப் பொறியை அவள் ஒவ்வொரு நாளும் போற்றிப் பாதுகாத்தாள், அந்தத் தேடலில் அவள் அடைந்த தோல்வியை உள்ளத்தை உருக்கும் விதத்தில் பாறப்புறத்து வரைந்து காட்டியுள்ளார்.

அவருடைய மற்றொரு புகழ் வாய்ந்த நவீனம் 'முதல் கதிர்கள்' (ஆத்ய கிரணங்கள்). கேரளத்துக் குக்கிராமமொன்றின் இதயத்துடிப்புகளை மிகவும் யதார்த்தமான முறையில் இதில் பதிவு செய்துள்ளார், நாகரிகத்தின் வாடையே அற்ற ஒரு காட்டுப் பிரதேசத்திற்குச் செல்லும் கிராமசேவிகை மேரிக்குட்டி அந்தக் கிராமத்தின் உருவத்தையே மாற்றிவிடும் உயிரோட்டம் மிக்க கதை அது. ஆரம்பத்திலிருந்து இறுதி வரை உணர்ச்சி மிகுந்த நாவலான முதல் கதிர்கள், நமது கிராம முன்னேற்றத் திட்டங்களை மறைமுகமாக ஊக்குவிக்கும் ஓர் அரிய படைப்பு. 'வேலை முடியாத வீடு' (பணி தீராத்த வீடு) 'மகனே உனக்காக' (மகனே, நினக்கு வேண்டி) ஆகிய நவீனங்களும் பாறப்புறத்து அவர்களது சிறந்த படைப்புகளே! இருப்பினும் இதுகாறும் அவர் புனைந்துள்ள நவீனங்களில் மிகச் சிறந்ததும், பெரும் புகழை ஈட்டினதுமான கலைப் படைப்பு அவரது 'அரை நாழிகை நேரம்' என்றுதான் கூற வேண்டும்.

உலகின் கண் நிகழ்பவை அனைத்தையும் கூர்ந்து ஆராய்ந்து 'ஞானம் பெற விரும்பி நான் முயன்றேன். மாந்தர் வருந்தி

உழைக்க வேண்டுமென்பதற்காகவே இறைவன் தொல்லைகளை விதித்திருக்கிறான். வானின் கீழ் , மண்ணில் நிகழும் யாவற்றையும் நான் ஓர்ந்தேன். அவை யாவும் மாயை; வீண் முயற்சியே.!

அரை நாழிகை நேரத்தைப் படிப்பதற்காகக் கையில் எடுத்தவுடன், நூலின் முகப்பில் மேற்கண்ட வரிகள் வாசகர்களுடைய பார்வையில் படுகின்றன. அரை நாழிகை நேரத்தின் ஆன்மாவின் சக்தியே ஒன்றாகத் திரண்டு இந்த வாக்கியங்களில் அடங்கியுள்ளது. மத்திய திருவிதாங்கூரில் வாழும் கிறிஸ்தவர்களின் வாழ்க்கை இந்த நாவலின் கதை- அமைப்புக்குப் பின்னணியாக அமைந்துள்ளது. தொண்ணூறு ஆண்டுகள் வரை வாழ்ந்து வாழ்க்கையில் வெற்றிகளையும் தோல்விகளையும் கண்ட குஞ்ஞுநைனா இந்த நவீனத்திற்கு நடுநாயகமாக விளங்குகிறார். பற்பல நிகழ்ச்சிகள் நிரம்பியது அவருடைய வாழ்க்கை. அந்தக் கதையை வழங்குவதற்கு முன்னுரையாக ஆசிரியர் இவ்வாறு கூறுகிறார்' ''எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து இந்தப் பாத்திரம் பல பெயர்களிலும் பற்பல உருவங்களிலும் என் வாழ்க்கையுடன் ஒன்றியிருந்தது. ஒரு பரம்பரைச் சங்கிலியின் முதற்கண்ணுவாக அமைந்தவர் நைனா.'' ஆம். நினைவு தெரிந்த நாளிலிருந்து தனது மனதில் பதிந்திருந்த பாத்திரத்தை ஆசிரியர் தனது செழிப்பான வாழ்க்கை அனுபவங்கள், கலை நுணுக்கம் ஆகிய பட்டறைகளில் காய்ச்சி உருக்கியெடுத்து அமைத்த பாத்திரப் படைப்புதான் குஞ்ஞுநைனா. கடந்தகால நிகழ்ச்சிகள் எனும் அலைகள் பொங்கியெழுந்து கர்ஜனை புரியும் கடற்கரையில் அமர்ந்தபடி 'இனி அரை நாழிகை நேரந்தான் பாக்கி' என்று எண்ணியவாறு நடு நடுவே அபின் தின்றுவிட்டு மயக்கமடையும் ஒரு கிழவருடைய நினைவுலகின் வாயிலாக, காலவெள்ளத்தின் ஓட்டத்தில் வேருடன் சாய்கின்ற மூன்று தலைமுறைகளின் உயர்வையும், தாழ்வையும் அழகாகவும் இனிமையாகவும் முனைப்பாகவும் பாறப் புறத்து விவரித்துள்ளார். நிமிடத்திற்கு நிமிடம் மங்கலாகிக் கொண்டிருக்கும் நினைவு எனும் கண்ணாடியை இடையிடையே துடைத்தவாறு, விரைந்து வரும் சாவை எதிர் நோக்கியிருக்கும் அந்தக்

கிழவர், மலையாள இலக்கியத்தில் சக்திவாய்ந்த ஒரு பாத்திரப் படைப்பாகத் திகழ்கிறார். எக்காலமும் மனிதனை அச்சுறுத்தக் கூடியதும், தவிர்க்க இயலாததுமாகிய வாழ்க்கையின் சோகமுடிவைப் பொருத்தமான பைபிள் வாக்கியங்களால் உள்ளத்தைக் தொடும் வண்ணம் இப்படைப்பில் சித்தரித்துள்ளார் ஆசிரியர். நிலையற்ற சுகங்களுகாகத் தலைதெறிக்க ஓடுவதும், அதன் வெறுமையை உணர்ந்து தெளியுமுன் தகர்ந்து விடுவதுமான மனித வாழ்வின் சோகத்தை இந்த நூல் வாசகர்களுக்கு உணர்த்துகிறது.

அரை நாழிகை நேரம் மிகச் சிறந்த கலைப் பொக்கிஷமாகத் திகழ்வதற்கு நூலாசிரியர் கையாண்டுள்ள பாணியும் ஒரு முக்கிய காரணம். குஞ்சு நைனுவின் கதையை வரிசைக்கிரமமாக இதில் அவர் வருணிப்பதில்லை. நிகழ்காலச் சம்பவங்களை விவரிக்கும்போது திடீர் திடீரென்று கடந்தகால நினைவுகளில் மூழ்கி விடுகிறது குஞ்சு நைனுவின் மனம். மனத்தின் இத்தகைய கடந்த காலப் பயணங்கள் அத்தப் பாத்திரத்தின் முதுமையின் இயல்புக்குரிய பலவீனமாகையால், செயற்கையாகத் தோன்றுவதில்லை. அதோடு சுவையாகவும் இருக்கின்றன. நனவோடை உத்தியும், நிகழ்ச்சிகளை வருணிக்கும் சாதாரண நடையும் இணைந்த ஒரு புதிய பாணியைத்தான் பாறப்புறத்து இந்த நாவலில் கடைப்பிடித்திருக்கிறார்.

படர்ந்து எரிந்து அணையுந்தருவாயிலுள்ள சொந்த வாழ்க்கையின் பற்பல நிலைகளை லிஸிலிக்குட்டி என்ற பேத்தியின் எதிர்கால வாழ்க்கையின் நிலைகளில் ஏற்றி குஞ்சுத்தாத்தா இந்த நாவலில் ஓர் இடத்தில் விவரிக்கிறார்: 'அவள் துள்ளிக்குதித்தவாறே பள்ளிக் கூடம் போனாள். காலடியோசைதான் கேட்டது. என்றாலும் அவள் பள்ளிக்கூடம் போகும் விதம் குஞ்சுநைனு அறிவார். நெற்றியில் தவழ்ந்து விளையாடும் கேசத்தை ஒரு கையால் ஒதுக்குவாள். மற்றொரு கையில் எலாஸ்டிக் ரிப்பனால் கட்டின பலகையும் புத்தகங்களும் இருக்கும். உன்னதப் பாட்டுகளில் கூறியிருப்பது போல் கேதாரின் கூடாரங்களைப் போலவும், பார்வோனின் இரதத்தில் பூட்டியுள்ள பெண் குதிரைகள் போலவும் நீ அழகி, எங்கேதி நாட்டுத் திராட்சைத் தோட்டத்து மருதோன்றிப் பூங்கொத்துப் போன்றும், சாரோனின் பனிமலர் போன்றும் நீ ரூபவதி. உன் விழிகள் புறாவின் கண்களைப் போன்றவை. உன் கூந்தல் கிலியோத் மலையில் தழைமேயும் வெள்ளாட்டு மந்தைக்கு நிகர். உன்

உதடுகள் சிவப்பு நூலுக்குச் சமம். உன் கன்னம் வெடித்த மாதுளம் பழம். மான்குட்டியைப் போன்று நீ துள்ளி நடக்கின்ருய். மாந்தளிர்போல் நீ மனமோகினி.

நான்கோ ஐந்தோ மாரிக்காலங்கள் வந்து போகும் இப்போது நீ ஒரு குமரி. உன் கன்னங்கள் பளபளக்கும். கண்களில் ஒளி மின்னும். பாதம் வரையிலுள்ள பாவாடையை நீ உடுத்தியிருப்பாய். உன் வயது பத்தோ பன்னிரண்டோ தான் இருக்கும்: ஆயினும், 'ஒருவனுக்குக் கட்டிக் கொடுத்து அனுப்ப வயசாச்சு. பொண்ணுக்கு ஒரு துவையல் கூட அரைக்கத் தெரியாது என்று உன் தாய் கூறுவாள்.

மீண்டும் மூன்ருே நான்கோ கிறிஸ்துமஸ் பண்டிகைகள் வந்து போகும். இப்போது நீ உரக்கச் சிரிக்க மாட்டாய் உன் பார்வை இங்கு மங்கும் போகாது. பல புதுப்புது விஷயங்கள் உனக்குத் தெரிந்திருக்கும். இருப்பினும் எதுவுமே தெரியாதது போன்று பாவனே செய்வாய். ஒன்று மில்லாவிட்டாலும் ஏதோ யோசனேயில் மூழ்கியபடிதான் நீ நடப்பாய். சும்மா இருக்கையிலும் தேவை இல்லாத புன்னகை.

இங்கே ஒரு புதுத் திருப்பம். இனி உனக்கு ஒரு துணே வேண்டும். ஒரு தை மாதத்தில் நீ மணவறையில் புகுந்தால் அடுத்த ஆண்டு தை மாதம் நீ ஒரு சேய்க்குத் தாயாவாய். பிறகு, நீ அடக்கமே உருவான பொறுப்புள்ள இல்லாள்......'

இவ்வாறு குஞ்சு நைனு உட்கார்ந்த இடத்திலிருந்து நகராமல் தன் பேத்தியின் எதிர்கால வாழ்க்கையைத் தன் மனக் கண்ணுடியில் கண்டு, அதை வர்ணிக்கிருர். ஒரு அழகிய பாடலின் நயமும் இனிமையும் கொண்டதாயிருக்கிறது இந்த வர்ணனே. பாவகீதத்தின் லயத்தைத் தன்னுள் கொண்ட ஓர் அசாதாரணமான அழகு நடையை நாம் அரை நாழிகை நேரத்தில் காண்கிருேம்.

கற்பனேவளமும், கதையைக் கொண்டு செல்லும் ஆற்றலும் அழகும் இணேந்த படைப்பு அரை நாழிகை நேரம். புகழ்வாய்ந்த விமரிசகர் ஒருவர் கூறியது போல, உன்னதமான சன்மார்க்க போதமுள்ள ஒரு கலேஞன் வாழ்க்கையைத்துயரமே உருவாகப் பார்த்தபோது உருவெடுத்த உன்னதப் படைப்புதான் அரை நாழிகை நேரம். இந்தக் கதையில் வாழ்வின் சோகம் கம்பீரமாகவும் முழுமையாகவும் வெளிப்படுகிறது.

டி. ஸி. கிழக்கெமுறி.

# ஒன்று

விலா எலும்புகளில் தூண்டில் போட்டு இழுப்பதைப் போன்ற வலி எடுக்கவே குஞ்சுநைநு ஒருக்களித்துப் படுத்தார். அவரால் வலியைப் பொறுக்க முடியவில்லை. முற்றத்தில் சிறிது நேரம் நடந்தால் நல்லது என்று தோன்றியது எழுந்து நடந்தால் படுக்க வேண்டும் போல இருக்கும்; படுத்தால் எழுந்து நடக்கத் தோன்றும். சற்று நடக்கலாம் என்றால் கைத்தடி எங்கே? அந்தப் பாழாய்ப்போன பயல்கள் வந்து கைத்தடியை எடுத்து மாமரத்தின் உச்சியில் அல்லவா மாட்டிவிட்டுப் போய் விட்டார்கள்! நாசமாய்ப் போக! நேரம் இப்போது என்ன ஆகியிருக்கும்? அந்தச் சின்னக் குட்டி வந்திருந்தால் ஏதாவது பேச்சுக் கொடுத்திருக்கலாம். இல் லாவிட்டால் சிவராம குறுப்பு வந்திருந்தாலும் போதும். மளிகைக் கடையிலே கணக்கெழுதிப் பிழைப்பு நடத்துகிற குறுப்பு இங்கே வந்து உட்காரவேண்டும் என்றால், அது நடக்கிற காரியமா? என்ன ஆனாலும் சிவராம குறுப்பு நல்லவன்; அதனால்தானே யாரு டைய கையையோ காலையோ பிடித்துக் கொஞ்சம் கருப்பு (அபின்) வாங்கிக்கொண்டு வாரத்துக்கு ஒரிரு முறை இங்கே வருகிறான்!

"பொண்ணு!"

பதிலில்லை. கூப்பிட்டது காதில் விழுந்திருக்காது.

"தீனம்மாப் பொண்ணு!"

"என்ன மாமா?"

அப்பாடா! காதில் விழுந்தது.

"கொஞ்சம் இங்கே வாயேன்."

"இதோ வரேன் மாமா! கன்னுக்குட்டிக்குக் கஞ்சித்தண்ணி வச்சிட்டு, இதோ நொடியிலே வரேன்."

பாவம் தீனம்மா! எல்லாம் அவளே செய்யவேண்டியிருக்கிறது. இவள் புருசனுக்குப் பெரிய திவான் பேஷ்கார் என நினைப்பு. இந்த ஊரையே கட்டி ஆளுகிறான்! ஐயா பொழுது விடிவதற்கு முன்ன தாகவே எழுந்து போய்விடுவார்; திரும்புவது அவர் இஷ்டத்துக்கு. வீட்டிலே உப்பு இருக்கா? புளி இருக்கா? குழம்புக்கு இருக்கா? இதெல்லாம் அவருக்கு எங்கே தெரியப் போகிறது? இல்லாவிட் டாலும் தானாச்சு, தன் குடும்பமாச்சு என்று நிம்மதியாக இருக்க லாம் என்றால்கூட ஊரார் விட்டால்தானே! விழா நடத்தவேணுமா?

மாத்யு வேணும். தலைமைக் குருவிடம் சென்று ஏதாவது சொல்ல வேணுமா? அதற்கும் மாத்யுதான் வேணும், இந்த ஊரில் அவன் இல்லாமல் எதுவுமே நடக்காது போல இருக்கு! பணம் காசு இல்லாவிட்டாலும் மதிப்புக்குக் குறைச்சலில்லை! இந்தக் காலத்துப் பையன்கள் என்னை மாத்யு ஸாரினுடைய அப்பா என்றுதானே சொல்கிறார்கள்? கண்டிராக்டர் பிலிப்பினுடைய அப்பா என்று எவனாவது சொல்கிறானா? ஆணைப் பிறந்தால் இப்படியல்லவா ஊரார் மதிக்கவேணும்!

''எதுக்கு மாமா கூப்பிட்டீங்க?''

''நீ அங்கே என்ன செஞ்சிட்டிருந்தே?''

''கன்னுக்குட்டிக்குக் கஞ்சித்தண்ணி வச்சிட்டிருந்தேன். நான் சொல்லலியா?''

''சொன்னியா?''

''மாமாவுக்கு ரொம்ப ஞாபக மறதி. இப்போ சொன்னது கொஞ்சம் கழிச்சு நினைவிருக்கிறதில்லை.''

''போறதுக்கு வேளை வந்தால் எல்லாம் அப்படித்தான்.''

''எங்கே போறதுக்கு?''

''இங்கே இருக்கிறதெல்லாம் முடிஞ்சாச்சு. அந்தி மயங்குற நேரம். இனி அதிகமானால் அரை நாழிகை நேரம், அவ்வளவு தான்.''

''ஆமாம், அந்தக் கணக்கெல்லாம் உங்க கையில்தானே இருக்கு?''

''தெரியும் அம்மா, எல்லாக் கணக்கும் தெரியும். மோசேயப் போல நான் எரிகோவுக்கு எதிரேயுள்ள நேபா மலைமேல ஏறுறேன். அதன் உச்சியிலே முடிவு. கர்த்தர் மோசேயிடம் என்ன சொன்னார்? உன் சகோதரனாகிய ஆரோன், ஓர் என்னும் மலையில் மரித்துத் தன் ஜனத்தாரோடு சேர்க்கப்பட்டான். அப்படியே நீயும் மரித்து உன் ஜனத்தாரோடு சேர்க்கப்படுவாய்...''

''கொஞ்சம் சும்மா இருங்க மாமா, ஏதாவது கற்பனை பண்ணிக்கிட்டே இருக்காதீங்க!''

''உம்...உம்...உன் வீட்டுக்காரன் நேத்துப் போனவன் இன்னும் வரலியா?''

''இல்லை.''

''கன்னிப்பலா வீட்டு அவரான் மகனுக்குத் தலைமைக் குரு பட்டம் அளிக்கிறதைப் பேராவள்ளித் திருச்சபைக் காரங்க எதிர்க்

கிருங்களாம். அதுக்காக அவன் தலைமைக் குரு அவர்களிடத்திலே வாதாடப் போயிருக்கான்.''

''வாதாடி ஜெயிச்சு வரட்டும்.''

''என்ன—?''

''ஜெயிச்சு வரட்டும் என்கிறேன்.''

குஞ்சுநைனு சிரித்தார்.

''உம், போகட்டும் அவன். நாலுபேர் மத்தியிலே நாலு வார்த்தை தைரியமாப் பேசத் தகுதி உடையவன் அவனைத் தவிர வேறு எவன் இருக்கான், நம்ம குடும்பத்திலே?''

தீனும்மா ஒன்றும் பேசவில்லை. மாமா சொன்னது சரிதான் என்று அவள் மனத்தில் எண்ணினாள். ஊரிலுள்ள பெரிய மனிதர்கள் எல்லாரும் அவரைப் பார்க்க வருவார்கள். பெரிய பெரிய விஷயங்கள் பேசுவார்கள். ஆம், அவர் நாலு வார்த்தை பேசத் தகுதி உடையவர்தான்.

தீனும்மா அங்கிருந்து போகத் திரும்பியபோது குஞ்சுநைனு வினவினார்:

''நம்ம அண்டையிலே குடியிருக்கானே, சாத்தப் புலையன், அங்கே எங்காவது இருக்கானான்னு பாரேன்.''

''எதுக்கு மாமா?''

''என் கைத்தடியை அந்த வாண்டுப் பயலுக மாமரத்து உச்சியிலே மாட்டிவைச்சிட்டுப் போயிட்டுதுங்க. அதைக் கொஞ்சம் எடுக்கணும். நீ பார்க்கலியா?''

''இல்லையே! எந்தப் பிள்ளைங்க?''

''எள்ளுப் பறம்பு வீட்டு வர்கீஸினுடைய சின்னப்பயலும், என் மூனுவது பிள்ளையின் நாலாவது மகனும். அவன்தான் தலைவன்—அவன் பேரென்ன?''

''யாரு, அந்த ஸண்ணியா?''

''ஆ...ஸண்ணி. அவனேதான். அதுங்க நாலஞ்சுபேரு, இங்க ஓடிவந்து இதோ கொண்டுவந்து தரேன்னு சொல்லிட்டுக் கைத்தடியை எடுத்துப் போச்சுங்க. ஒரு பெரிய கம்பின் நுனியிலே கைத்தடியைக் கட்டி மாங்கா பறிச்சிட்டுக் கம்பை உருவிக் கீழே போட்டுதுங்க. என் கம்பு எப்படியோ கழண்டு மரத்துமேலேயே நின்னு போச்சு. அப்புறம் அதுங்களைக் காணுமே! ஊஹூம். நம்ம வீட்டுச் சின்னக்குட்டியும் அதுங்களோடு இருந்தாள்.''

''எல்லாம் உருப்படாததுகள்.''

''எவனாவது புலையன் இருக்கானா? கைத்தடி இல்லாமல் எப்படி முறைச் சாப்பாட்டுக்குப் போறது?''

''இன்னைக்கு எங்கே?''

''வர்கீஸுவ வீட்டிலே. நேரத்துக்குப் போனாத்தான் ஏதாவது கிடைக்கும். ஆழாக்கு அரிசிச் சோத்துக்காகத் தடியை ஊனித் தொலைவழி, தள்ளாடித் தள்ளாடி நடக்கணும்! அவளும் இவளும் முகத்தையும் மூஞ்சியையும் கோணுறதைப் பார்க்கணும்! ஓர் இடத் திலே நிம்மதியாக இருந்து கஞ்சியோ கூழோ குடிக்கிறதுக்கு வழி செய்யாதவன் பாடு எப்படி பின்னே?''

''அப்படி யாராவது இந்த ஊரிலே சொல்லுவாங்களா, மாமா? ஆனாலும் கையில் இருந்த பிடிப்பை விட்டுக் கொடுத்ததனால் தானே! அது போகட்டும், இங்கே இருக்கிறதிலே ஒருவாய் சாப் பிட்டு, அக்கடான்னு இருக்கச் சொன்னா நீங்க எங்கே கேட்கப் போறீங்க?''

''ஆ...அப்படி முடியாம வரும்போது பார்க்கலாம்.''

''சாத்தப் புலையன் இருக்கானான்னு பார்த்திட்டு வரேன். மாமா!''

தீனம்மா அங்கிருந்து போனாள். குஞ்சுநைநா மறுபடியும் திரும்பிப் படுத்தார். ஹூம், இடுப்பு நிமிர்த்த முடியவில்லையே! மரத்தில் தங்கிவிட்ட தடியை எடுக்கப் பையன்கள் எவ்வளவோ முயன்றார்கள். இயலாமல் போகவேதான் சொல்லாமல் கொள் ளாமல் அங்கிருந்து கம்பி நீட்டினார்கள். மூன்றாவது மகனுடைய பையன் தன் தகப்பனைப் போலவே இருக்கிறான். படு சுட்டி. ஒரே அடம். யாரிடமும் அலட்சியம். அவன் அப்பன் சின்ன வயசிலே இரண்டு அண்ணன்மாரையும் காலால் எட்டி உதைத்த வன்தானே! எந்தக் காரணமும் வேண்டாம். அவன் கேட்டது கிடைக்காவிட்டாலும், அவனுக்குப் பிடிக்காதது ஏதாவது சொன் னாலும் இப்படித்தான் ஏதாவது ரகளை பண்ணுவான். ஆனால் தங்கையிடம் மட்டும் மற்ற எல்லோரையும்விட அவனுக்குப் பாசம் அதிகம். அவளுக்கும் குஞ்சுச் செறுக்கண்ணன் என்றால் உயிர். போகிற இடங்களுக்கெல்லாம் அவளையும் அழைத்துப் போவான். ஐந்து பிள்ளைகளிலேயும் அவன்தான் கெட்டிக்காரனாவான் என்று எண்ணியதுண்டு. ஆனால் அதிருஷ்டம் கட்டை. தொட்டது ஏதும் துலங்கவில்லை. மாட்டு வியாபாரம் செய்தான்; நிலத்தை விற்றான். மர வியாபாரம் பண்ணினான்; இருந்த வீடு தொலைந்தது. அவன்

தான் அப்படி என்ருல் கட்டிய மனேவியோ ஊதாரி! பேராசைக் காரி! யானே கிடைத்தாலும் ஓர் இரவுக்கே கறி சமைத்துத் தீர்த்து விடுவாள். இப்படி அப்படி அசைய மாட்டாள். என்ன கேட் டாலும், எதைச் சொன்னுலும் வாய் திறக்கவே மாட்டாள். ஆனுல் காரியம் என்று வந்தால் ஈன்ற புலி! அவனுக்கு மூத்த மகன் வெளி ஊரில் எங்கோ வேலேக்குப் போனுன். பத்து வருஷம் ஆயிற்று! என்ன வேலே, எங்கே இருக்கிருன் என்பதெல்லாம் யாருக்கும் தெரியாது! அவன் ஒன்றும் தருவதில்லே என்று அப்பன் சொல் கிருன். இரவோடு இரவாக வத்து பணம் கொடுத்துப் போகிருன் என்று மற்றவர்கள் கூறுகிருர்கள். ஆனுல் அவர்கள் இன்னமும் குடிசையில்தான் வசிக்கிருர்கள். இல்லாமை என்று ஊராரை நம்ப வைப்பதற்காகத்தான் இந்த ஏமாற்றுவேலே என்பது மாத்யுவின் வாதம். அப்படி யாராவது செய்வார்களா? உம்...உண்மை எது, பொய் எது என்று யாருக்குத் தெரியும்? இரண்டாவது பையனே மூத்தவன் அழைத்துப் போயிருக்கிருன். அவனுக்கு இன்னமும் வேலே கிடைக்கவில்லேயாம்!

''பெரிய எசமான் கூப்பிட்டீங்களா?''

குஞ்சுனைநனு தலேயைத் தூக்கிப் பார்த்தார். யாரென்று தெரிந்துகொள்ள முடியவில்லேயே!

''யாரடா அது ?''

''சாத்தான்.''

''எந்தச் சாத்தான்?''

''உம், பெரிய எசமானுக்கு எந்தச் சாத்தான்னு சொல் லணுமா? வடக்கு வீட்டுத் தேவன் மகன் சாத்தான்.''

''ஆ...அது தெரியத்தான் கேட்டேன்.''

''தெரிஞ்சாச்சில்லே! இனி விஷயம் என்னுன்னு சொல் லுங்க.''

''விஷயம் என்னுன்னு சொல்லுங்க!''—இவர் பெரிய வக்கீல்! கூண்டிலே நிறுத்தி விசாரணே செய்யப்போகிருர்! விஷயம் என்ன வென்று சொல்லச் சிறிது நேரமானுல் என்னடா செய்வாய்? நன்றி கொன்ற வர்க்கம்! இதையெல்லாம் இவனிடம் சொல்லி என்ன பயன்? இவன் அப்பனேக் 'கீச்சேரி' வயலில் போட்டுத் தாழைத் தண்டால் அடித்திருக்கிறேன். அன்று தாளடி நாள். அது முடியும் வரையில் இவன் அப்பன் தேவனுக்குத் தூக்கம் இல்லே. மனசிலே என்ன நினேத்தானே தெரியவில்லே; வேலேயிலே நெளிவு எடுத்

தான், அப்போது என் கையிலே கிடைத்தது தாழைத் தண்டுதான். அவனை அதால் அடித்ததிலே ஒரு நியாயமும் இருக்குது - எண்ணெய்க் காட்டிலிருந்து அவனை இங்கே கொண்டுவரும்போது அவனுக்குப் பன்னிரண்டே வயசுதான். குடிசை கட்ட இடமும் கொடுத்து, புலையப் பெண்ணுக்குப் பணமும் கொடுத்துக் கண்ணாலம் கட்டி வைத்தேனே!

''பெரிய எசமான்!''

''உம், ம்... ..''

''எதுக்குக் கூப்பிட்டீங்க?''

''என் கைத்தடி அந்த மாமரத்து உச்சியிலே தொத்திக்கிட்டு இருக்குடா. மரத்திலே ஏறி அதைக் கொஞ்சம் எடுத்துக்கொடு.''

''கைத்தடி எப்படி மரத்து உச்சிக்குப் போச்சு?''

''இங்கத்துச் சின்னப் பயலுக வேலை. பெரிய கம்பிலே கட்டி மாங்கா பறிச்சாங்க.''

''என்னாலே இப்போ எறும்புக்கடி பட முடியாது. *தண்டானோ, வேறு யாரானுமோ வரும்போது சொல்லுங்க. ஏணி வைச்சு எடுத்துத் தருவானுங்க.''

தீனம்மா உதவிக்கு வந்தாள் :

''ஏண்டா, சாத்தப் புலையா! அதைக் கொஞ்சம் எடுத்துக் கொடேன். கைத்தடி இல்லாம மாமா எப்படி வெளியே போவாரு ?''

''கொழந்தே! சொல்றது சுலபம். எறும்புக்கடி பட்டவனுக்குத்தானே அதோடு வலி தெரியும். பத்தாக்குறைக்கு ஓணத்துக்கும் சங்கராந்திக்கும் வேறு தரீங்களே அதிகப்படி வேலை செய்யறதுக்குக் கூலி!''

இப்படிக் கூறிய போதிலும் அவன் மரத்தின்மீது ஏறுவதற்குத் தயாரானான். அவன் கூற்று உண்மைதான். அந்த நாட்களிலெல்லாம், கணக்கில்லாமல் வாரி வாரி வழங்கியதுண்டு. இன்று அணு அளவு கொடுப்பதற்கும் கணக்கு இருக்கிறது. அதற்கு ஏற்ற விசுவாசம்தான்...

யாருக்கும் மருமகள் சொன்னால் அதற்குத் தனி மதிப்பு. கொடுப்பதற்கும் வாங்குவதற்கும் நல்ல சாமர்த்தியம். வீட்டுக்கு வந்த மருமகப் பெண்களில் அவளை மிஞ்சுவதற்கு எவருமில்லை...

---

* மரம் ஏறுவதைத் தொழிலாகக் கொண்ட ஒரு ஜாதியினர்.

''சாத்தப் புலேயா!''

அட, சின்னக்குட்டி வந்துவிட்டதா ?

''பெரிய எசமானி அம்மா, எப்போ வந்தீங்க?''

'' நான் ஒண்ணும் பெரிய எசமானியில்லே. சின்ன எசமானி.''

''உம் இப்போ எசமான் எசமானியெல்லாம் கெடயாது.''

''அப்போ, ஏன் தாத்தாவைப் பெரிய எசமான்னு கூப் பிடறே?''

''அதனுலேதான் தாத்தா கைத்தடி மரத்து உச்சியிலே ஏறி உட்கார்த்திருக்கு!''

''ஸண்ணியண்ணனும் மத்தவங்களும் சேர்ந்து மாங்கா பறிச்ச தனுல்தான். கேட்டியா சாத்தப் புலேயா?''

''ஸண்ணியண்ணனும் குண்ணியண்ணனும் எல்லாம் இனி இங்கே வரட்டும். விரட்டுறேனு இல்லேயா பாரு !''

குஞ்சுனைனு 'சின்னக்குட்டி' என்று அழைக்கும் ஸிஸிலி, சாத்தப் புலேயன் கிளேகளேப்பற்றி மரத்தின்மீது ஏறுவதை ஆர்வத் துடன் நோக்கி நின்ருள். சாத்தப் புலேயன் கெட்டிக்காரன். ஸண்ணியண்ணன் பெரியவனுயிருந்தும் பாதிவரைதான் ஏற முடிந்தது. எறும்புக்கடி பொறுக்க முடியாமல் அவன் கீழே குதித்தான்.

''சாத்தப் புலேயா! எனக்கு மாம்பழம் பறிச்சுத் தரியா?''

''சும்மா இரும்மே! நீங்க அப்பமும் புட்டும் தின்னும்போது சாத்தப் புலேயனுக்குத் தரதுண்டா ?''

''இனிமே தரேன்.''

''அப்போ மாம்பழமும் அதுக்குப் பொறவு பறிச்சுத் தரேன்.''

இப்படியெல்லாம் சொன்னுலும் சாத்தப் புலேயன் மாம்பழம் தராமல் இருக்க மாட்டான். அவனது குடிசையின் பக்கமாகப் பள்ளிக்கூடம் போகும்போது அவன் தாய் அழகிப் புலச்சி கூறு வாள் :

''பெரிய எசமானி இதோ பள்ளிக்கூடம் போருங்களே!''

அதைக் கேட்டுத்தான் பெரிய எசமானி என்று சாத்தப் புலேயன் அழைக்கலானுன்.

சாத்தப் புலேயன் ஒரு கிளேயைப் பிடித்து உலுக்கினுன். நான்கைந்து மாங்காய்கள் கீழே விழுந்தன. ஸிஸிலி ஓடிச் சென்று எடுக்க முயன்றபோது சாத்தப் புலேயன் உரக்கக் கூவினுன் :

''தள்ளி நில்லு, மாங்கா மேலே விழப்போவுது. அப்புறமாப் பொறுக்கி எடுத்துக்கோ!''

எல்லாக் கிளைகளையும் உலுக்கவே 'தடதட' என மாங் கனிகள் விழலாயின, மழை பெய்வது போல. கைத்தடியையும் எடுத்துக்கொண்டு கீழே இறங்கியபோது சாத்தப் புலையனின் உடம்பு முழுவதும் ஒரே எறும்புகள்!

தீனும்மா எல்லா மாங்கனிகளையும் கூடையில் பொறுக்கிப் போட்டாள். கைத்தடியை எடுத்துக்கொண்டு ஸிஸிலி தாத்தா விடம் ஓடினாள்:

''தடி கெடச்சுது, தாத்தா!''

குஞ்சுநைனா எழுந்து உட்கார்ந்தார். கைத்தடியை வாங்கித் தரையில் ஊன்றிப் பார்த்தார்: ''உன் அண்ணன்மார்களெல்லாம் இனி இங்கே வரட்டும். அடிச்சு எலும்பை நொறுக்கிப்புடறேன்!'' என்றார்.

''இந்தத் தடியாலேயா?''

''ஆமாம்.''

''என்னையும் அடிப்பீங்களா?''

''பின்னெ, அடிக்காமே?''

''வலிக்காதா?''

''வலிக்கட்டும்,''

''அடிக்காதே, தாத்தா!''

''உம் சரி, யோசிக்கிறேன். உன் சினேகிதிங்களெல்லாம் இன்னைக்கு வந்திருந்தாங்களா?''

''ஆமாம்.''

''அவங்க பேரென்ன?''

''லதா, அம்முக்குட்டி. அன்னைக்கும் சொன்னேன். முந்தியும் சொல்லியிருக்கேன். திருப்பியும் திருப்பியும் ஏன் தாத்தா, கேக்க றீங்க?''

''உனக்குப் பள்ளிக்கூடத்திலே என்ன பேரு?''

''அய்யய்ய! இந்தத் தாத்தாவுக்கு ஒண்ணுமே தெரியாது. மரியம் மாத்யு...''

ஸிஸிலி உள்ளே ஓடிப் போனாள். குஞ்சுநைனா எழுந்தார். கால் ஊன்றி நிற்க முடியவில்லை. மறுபடியும் உட்கார்ந்தார். கைத்தடியைப் பலமாக நிலத்தில் அழுத்திக்கொண்டு முழு வலி வுடன் மீண்டும் எழுந்து நின்றார். பிறகு மெதுவாக நடந்து முற் றத்தை அடைந்தார்.

''பொண்ணு! நான் போய் வரேன்.''

காதில் விழுந்ததோ, என்னவோ? குஞ்சுநைனு நடக்கலானர்.

இரண்டடி நடந்ததும் சிறிது தெம்பு வந்தது. இனி மூன்று நான்கு நாழிகைத் தொலைவுகூட நடக்கலாம்......

''தாத்தா! எங்கே போருப்போலே?''

குஞ்சுநைனு கைத்தடியைப் பலமாக ஊன்றி நின்ருர். யாரது?

''மகன் வீட்டுக்கு, எள்ளுப்பறம்புக்கு. ஆமா, நீ யாருன்னு தெரியலேயே? பார்வை கொஞ்சம் மங்கலாயிருக்கு.''

''சாக்களே வீட்டு......''

''தோமஸோடு பிள்ளையா?''

''ஆமாம்.''

''மூத்தவனு?''

''ஆமாம்.''

''ஏண்டா, கொஞ்ச நாளா நீ ஊரிலே இல்லியா?''

''பதராசுக்குப் போயிருந்தேன். மூந்தாநாள்தான் வந்தேன்''

''அப்படியா......? அப்போ சரி, நீ போ.''

கொஞ்சம் தொலைவு, சென்றதும் வக்கீல் குமாஸ்தா பாஸ்கரன் பிள்ளை நலம் விசாரித்தார்:

''என்ன குஞ்சுநைனு, எங்கே கிளம்பினீங்க?''

குஞ்சுநைனு நிற்கவில்லை. நடந்தபடியே விடைபகர்ந்தார். அதற்குப் பின்னரும் யார் யாரோ கேட்டார்கள்;

''மாமா, எங்கே போறீங்க?''

''தாத்தா, எங்கே போறீங்க!''

அவர்கள் யாரென்று தெரிந்துகொள்வதற்காகக் குஞ்சுநைனு நிற்கவில்லை. புத்தன் சிறைக்காரர்களின் கடைப்பக்கம் வந்தபோது ஒரு பெண் சிரித்தபடியே நேரே வந்து நின்று கூப்பிட்டாள்:

''தாத்தா!''

அறிந்த குரலாயிருக்கிறதே? குஞ்சுநைனு உற்றுப் பார்த்தார்.

''நான் தாத்தா! குட்டியம்மா. ஏன் இவ்வளவு நேரமாச்சு?''

ஆ... . புரிந்தது. வர்கீஸின் மகள்–ஆசிரியை.

''பள்ளிக்கூடத்துக்குப் போறியா?''

''ஆமாம். தாத்தாவுக்குச் சோறு பரிமாறிவிட்டுப் போகலாமுன்னு நெனச்சுக்கிட்டிருந்தேன்.''

''அப்படியா? அப்போ இன்னைக்கு உங்க வீட்டிலேதான் 'முறை'ன்னு உனக்குத் தெரியும்!''

''முறையா?'' குட்டியம்மா சிரித்தாள். ''தாத்தா, உங்களிடத்திலே எங்க வீட்டிலேயே இருக்கும்படி நான் எத்தனை நாளாச் சொல்றேன்?''

''உங்க அப்பன் எங்கே?''

''வீட்டில் இருக்கார்.''

''உனக்கு எங்கிருந்தோ ஒரு வரன் தேடிட்டு வந்ததாகச் சொன்னாங்களே. அது என்னாச்சு?''

பதில் ஏதும் கூறாமல் குட்டியம்மா கையிலிருந்த நோட்டுப் புத்தகத்தில் நகத்தால் கீறியபடியே நின்றாள். தாத்தா மறுபடியும் வினவவே அவள் மொழிந்தாள் :

''எனக்கு ஏதும் தெரியாது, தாத்தா. வேறு யாருக்காவது அதைப்பத்திக் கவலை இருந்தால்தானே நடக்கும்?''

''கவலை இல்லையா?''

மௌனம்.

''என்னம்மா?''

குஞ்சுநைநா கூர்ந்து பார்த்தார். குட்டியம்மாளின் கண்களில் நீர் துளும்பியது. வம்பாப் போச்சே !

''பொண்ணா!''

''என்ன தாத்தா?''

''போ அம்மா, வழியிலே நின்னுகிட்டு அழாதே!''

குட்டியம்மா போகவில்லை ;

''நானாகவே வீட்டுக்கு உதவி செய்ய நெனச்சதுக்குக் கிடைச்ச பலனைத்தான் நான் அனுபவிக்கிறேன். அப்பாவுக்கு மாசா மாசம் பணம் வேணும், அவ்வளவுதான்.''

''உம்.''

''சுனைக்கரையிலிருந்து யாரோ வந்திருந்தாங்க. வந்தவங்களைத் திட்டி அனுப்பினாரு.''

''ஏன்?''

''இப்போ எல்லோரும் இருக்காங்க. எனக்குத் தள்ளாத காலத்திலே யாரும் இருக்க மாட்டாங்க.''

''உம். அழாதே, போ. காலம் வரும்.''

குட்டியம்மா முந்தானையால் தன் கண்களை ஒத்தினாள் :

''தாத்தா! நான் வந்த பிறகுதான் நீங்க போகணும்...'' என்றாள்.

''உம். போய் வா.''

பிறகு அவள் முகத்தை ஏறிட்டுப் பார்க்காமல் அவர் நடக்கலானார். இவ்வகையில் மனம்விட்டுப் பேசுபவளல்ல அவள். வளை அடைந்து போனால் சாரைப்பாம்புக்கும் ரோஷம் வரும்! அவள் கூறியது எவ்வளவு உண்மை! இப்படியே காலம் சென்றால் முதுமை வரும்போது அவளுக்குக் கஞ்சியோ கூழோ கொடுக்க யார் இருக்கிறார்கள்? தாயும் தந்தையும் மண்ணுக்கு அடியில். அக்கா தங்கைகளுக்கு அவரவர்களுடைய கணவன் - குடும்பங்கள். தம்பிகளுக்கு அவர் தம் மனைவிகள். அவள் மட்டுமே தனி. யாருக்காவது வேலைக்காரியாக இருக்கலாம். பணமிருந்தால் எல்லாரும் துணை இருப்பார்கள். இல்லாவிட்டால் பிணம்.

முப்பது வயதாவது இருக்கும் அவளுக்கு. இரண்டு தமக்கையருக்கும் திருமணம் முடித்து வைத்தாள்.

மூத்தவள் ஒரு தீராப்பிணிக்கு ஆளான நோயாளி. ஆண்டவர் அவளுக்கு மண்ணிலேயே கொடிய துன்பத்தைத் தந்திருக்கிறார். என்ன பாவமோ! உத்தமனும் நேர்மையாளனும், கடவுளுக்குப் பயந்தவனும், தீமைகளிலிருந்து விலகி நடப்பவனுமான யோபுவுக்கு ஆண்டவர் செய்ததைப் போலவேதான். அடுத்தவளுக்கு நான்கோ ஐந்தோ குழந்தைகள். குட்டியம்மாவுடைய தங்கைக்கும் இரண்டு மூன்று குழந்தைகள் இருக்கின்றனர். இளையவளுக்கு இது மாசமாம்.

இந்தப் பெண் படிப்பில் மிகுந்த கெட்டிக்காரியாக இருந்தாள். நல்ல சமர்த்து. மெட்ரிகுலேஷன் தேறியதும், அவளுக்குப் பள்ளிக்கூடத்தில் வேலை கிடைத்தது. அன்றிலிருந்து அவள் சம்பளத்தை வைத்துத்தான் அப்பன் பிழைப்பை நடத்துகிறான். மகளுக்கு மணம் முடித்துவிட்டால் பிறகு பிழைக்க வழி? இந்த எண்ணத்தினால்தானோ என்னவோ எவரேனும் பெண்கேட்க வந்தால் முகத்தைத் திருப்பிக் கொண்டு போய்விடுகிறான். ''டேய், அந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் முடிச்சு வையடா, அவள் வயசுப் பெண்ணுங்களெல்லாம் மூணோ நாலோ குழந்தைகளுக்குத் தாயாராயிட்டாங்க'' என்று பலமுறை சொன்னேன். கல்யாணப் பேச்சை எடுத்தாலே அவனுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வருகிறது. சூதுவாது தெரியாதவன்தான். ஆனால் மூக்கு நுனியிலே கோபம். பிழைப்புக்காகத் தெரிந்த வித்தைகளனைத்தும் முயன்று பார்த்தான். ஆண்டவர் அவனுக்கு ஐந்து பெண்களையல்லவா கொடுத்திருக்கிறார்! வித்தை காட்டாமல் வேறு வழி.........

''எங்கே இவ்வளவு தூரம்?''

செவிடனிடத்தில் கேட்பதைப்போல் சைகை காட்டி, உரத்த குரலில் கேட்கும் இந்தப் பெரியமனிதர் யாரோ?

''உம்.''

''இந்தத் தள்ளாத வயசிலே தடியும் ஊனி எங்கே கிளம்பி னீங்க?''

குஞ்சுநைநவுக்கு அது யாரென்று தெரிந்தது. கசாப்புக்கடை மாத்தன் மகன் அவரன். இப்போது இவன் ஒரு குட்டி முதலாளி; புது பணக்காரன். சில நாட்களுக்குமுன் பிலிப்பின் கான்டிராக்டு வேலையிலே உதவிசெய்துகொண்டிருந்தான். அங்கிருந்து கொஞ்சம் பணத்தையும் கையாடி இப்போது சொந்தமாகத் தொழில் நடத்து கிறான்!

''பிலிப்பண்ணன் எப்போதிலிருந்தே சொல்றரே, அங்கே வந்து இருக்கிறதுக்கு. சொன்னல் கேட்டாத்தானே!''

''ச்சீ. போடா, உன் வேலையைப் பார்த்துக்கிட்டு, கசாப்புக் காரன் மகனே! நீ யாரடா எனக்கு உபதேசம் பண்ண?''

அவரன் அயர்ந்துபோனன். பெரியவர் குற்றமாக எடுத்துக் கொள்வார் என்று நினைக்கவில்லை. கும்பல் சேர்ந்தது. வந்தவர் கள் எல்லோரும் அவரனைக் குறை கூறினர்கள். குஞ்சுநைநவை அமைதியுறச் சொன்னர்கள், ''போகட்டும் மாமா! அறியாத பிள்ளை. ஏதோ தெரியாத்தனமாச் சொன்னதுக்கு... .''

அப்படியும் குஞ்சுநைந விடவில்லை :

''டேய், உங்கப்பன் எனக்கு நேருக்கு நேர் நின்னு பேசின தில்லையடா, ஞாபகம் இருக்கட்டும்!''

குஞ்சுநைந நடக்கலானர். கொஞ்சம் இடம் கொடுத்தால் தலைமீது ஏறி உட்காருவான். போடா...

சந்துமுனை திரும்பினதும் சற்று நேரம் நின்று பெருமூச்சு விட் டார். பிறகு மெள்ள நடந்தார். தோட்ட வாசலைத் தாண்டி உள்ளே போனபோது வர்கீஸ் திண்ணையில் சாய்வு நாற்காலியில் படுத்திருக்கக் கண்டார். தந்தையைப் பார்த்ததும் வர்கீஸ் முற் றத்தில் இறங்கி, அப்படியும் இப்படியும் நடக்கலானன். குஞ்சு நைந கட்டிலில் அமர்ந்தார்.

''சந்தைக்குப் போகலியோடா?''

ஏதாவது கேட்க வேண்டுமே என்பதற்காகக் கேட்ட கேள்வி. வர்கீஸ் சிறிய அளவில் மிளகு வியாபாரம் பண்ணுகிறன். முன்பு

மொத்த வியாபாரம் செய்துகொண் டிருந்தான். இப்போது பூ விற்ற கடையில் புல் விற்கிருன்!

வெகுநேரம் அவன் மறுமொழி கூறவில்லை. ஆனுல் இப்போதும் அவன் முற்றத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடந்துகொண் டிருந்தான்.

''சந்தையிலே போய் வியாபாரம் பண்ணப் பணம் வேண்டாமா?''

இவ்வளவு நேரமாயிற்று, பதில் கூற! இவ்வளவு நேரமா யோசித்துக்கொண் டிருந்தான்? குட்டியம்மாவின் விஷயம் உடனே நினைவுக்கு வந்தது.

''டேய்!''

''என்ன?''

''குட்டியம்மாவை இப்படியே வச்சிக்கிட்டிருந்தா எப்படி?''

''அதுக்கு நான் என்ன செய்யணும்?''

''ஒருத்தன் பின்னேடு அனுப்ப வேண்டாமா?''

''அனுப்பணும்.''

''எப்படி அனுப்பப் போறே?''

''உங்க கையிலே ஏதாவது இருந்தாக் கொடுங்க...!''

''இருக்கிற காலத்திலே தந்திருக்கேண்டா. இப்போ ஏதுடா என் கையிலே பணம்?''

''ஒண்ணுமே தெரியாத மாதிரிதான் உங்க பேச்சு. விஷம் வாங்கித் திங்கலாமுன்ஞு அதுக்குக்கூட என் கையிலே சல்லிக் காசில்லே. அவளுக்குச் சம்பளம் கிடைச்சாப் பத்தோ அம்பதோ தர்ரு. அது எதுக்குப் பத்தும்? கட்டிக்கொடுக்கிற விஷயம் இருக்கட்டும். கடைசிப் பெண்ணுக்கு இது மாசமாம். அவளை அழைச்சிட்டு வரவேண்டாமா?''

அதற்கான பதிலையும் வர்கீஸே சொன்ஞன்:

''காசுக்கு ஏதாவது வழி இருந்தால் அழைச்சு வருவேன். இல்லாவிட்டால் அங்கேயே பிரசவிக்கட்டும்.''

அப்பொழுது வர்கீஸ் மனைவி அங்கே வந்தாள்:

''இதுதான் மானமா? பட்டினி கிடந்தால் வயிற்றுக்குத்தான் தெரியும். பிறர் வீட்டில் வாழவேண்டிய பெண்......''

வர்கீஸ் அவள் பேச்சை முடிக்க விடவில்லை:

''அப்போ நீ போய் உங்க பிறந்த வீட்டிலிருந்து பணம் கொண்டு வா.''

''எங்க பிறந்த வீட்டில் இருக்கிறதை அனுபவிக்கிறதுக்கு அங்கே ஆண் பிள்ளேங்க இருக்காங்க. இப்போ மாமாவும்தான் இங்கே இருக்கார், சொல்றேன். நான் பிரசவிச்சு வரும்போது கப்பல் நிறைய என்பாங்க, அப்படி படகு நிறைய எல்லாம் கொண்டு வந்திருக்கேன். உங்களுக்கு ஞாபகம் எங்கே இருக்கப்போகுது! எனக்கே மூணு பேறு எங்க பிறந்த வீட்டில்தான் பார்த்தாங்க!''

''அப்படின்னு, அன்னேக்குக் கொண்டு வந்ததிலிருந்து எடுத்து இன்னேக்கு உன் பெண்ணே அழைச்சிட்டுவா!''

''இந்தச் சொல் மட்டும் எனக்குப் பொறுக்காது! நான் கொண்டு வந்ததையெல்லாம், எல்லாருமாச் சேர்ந்து வித்தும் அடமானம் வெச்சும் தின்னுச்சு!''

''போடி, அந்தப் பக்கம்!''

ஆ...இனி இதை முற்றவிடக் கூடாது, குஞ்சுநைநு மொழிந்தார்:

''குஞ்சுமரியாளே, நீ உள்ளே போ! உன் வேலையைக் கவனி. ஏன் அக்கம்பக்கம் இருக்கிறவங்க பார்த்துச் சிரிக்க வைக்கிறே?''

''நான் என்ன செய்ய? விஷம் தின்னு சாகணுமா? அல்லது கிணத்திலே குதிச்சு உயிரை விடணுமா, சொல்லு! அந்த நாளிலே மூட்டை தூக்கியும், எருச் சுமந்தும், காளேயை ஓட்டிட்டும் அப்பா பின்னுலே நடந்தேன். தம்பிகளேயும் படிக்க வைச்சுப் பெரியவங்களாக்கினேன். இதோ இப்போ ஒருத்தன் கோடீசுவரனு வாழுருன். இங்கே ஆழாக்கு அரிசி கஞ்சி காய்ச்சிக் குடிக்கக் கதியில்லே. அந்த நாளிலே வீட்டுநிலம் கையைவிட்டுப் போகாதிருக்க நாயர்களிடம் அடியும் குத்தும் வாங்கினவன் நான். என்ன லாபம்? வலது கைக் கட்டைவிரல் போச்சு. இப்போ கல்லெறிஞ்சு ஒரு மாங்காயடிச்சுத் தின்ன வழியில்லே...''

இப்போதுதான் குட்டு வெளியே வந்தது! வார்த்தைக்கு வார்த்தை பேசினுல் வீண் குழப்பம்தான். வேண்டாம், அவன் சற்றே ஆறட்டும்!

''கஞ்சியோ சோறோ இருந்தால் கொடு அம்மா! எனக்குப் போகணும். போய்க் கொஞ்ச நேரம் கட்டிலில் படுத்தால்தான் சரியாகும்.''

இதற்குள் வர்கீஸினுடைய கோபம் தணிந்து போயிருந்தது. இதுதானே அவனுடைய குணம்!

''இங்கே கட்டிலும் பாயும் எதுவும் கிடையாதா, படுக்க?''

''உம் சரி... விடுடா.''

உள்ளேயிருந்து குஞ்சுமரியாள் உரக்கச் சொன்னாள் :

''மாமா! இதோ தட்டிலே சாப்பாடு கொண்டுவரேன்.''

ஒலி எழும்பாத அமைதி.

வர்கீஸ் முற்றத்தில் இன்னமும் நடைபோட்டுக் கொண்டிருந்தான். குஞ்சுமரியாள் தட்டில் சோறு கொண்டு வைத்துவிட்டு, மாமாவுக்குக் கை கழுவத் தண்ணீர் ஊற்றினாள்.

''அவன் சாப்பிட்டாச்சா?''

''நீங்க சாப்பிடுங்க மாமா! அவர் பிறகு சாப்பிடுவார்.''

''உன் பையன் பள்ளிக்கூடத்திலிருந்து இன்னமும் வரலியா?''

''வந்து போய்விட்டான்.''

அவன் நண்பர்களோடு வந்து கைத்தடியை மாமரத்தில் மாட்டி வைத்த கதையைக் குஞ்சுனைனா சொல்லவில்லை. ஏன் உதை வாங்கி வைக்க வேண்டும்!

இரண்டு மூன்று கவளம் சோறு உண்டபின் குஞ்சுனைனா எழுந்தார்.

''என்ன மாமா! அதுக்குள்ள எழுந்துட்டீங்க?''

''போதும்,''

''குழம்பு பிடிக்கலியா?''

''நீ சமைச்சது பிடிக்காவிட்டால் வேறு எதுதான் பிடிக்கும்? இப்பொவெல்லாம் இதைவிட அதிகமாச் சாப்பிட முடியறதில்லே.''

குஞ்சுனைனா புறப்படலானார். மூத்த பேத்தி ராகேல் கதவருகில் வந்து எட்டிப் பார்த்தாள்; முகத்தைக் காட்டுகிறாள். ஐந்து நாட்களுக்கு ஒருமுறை வரும்போது இது ஒரு வாடிக்கை. அவளைப் பார்க்க வேண்டும். ஒரு சிறைவாசம் போன்ற வாழ்க்கை இது. யாருமில்லாத தனிமை. வீட்டில் யாராவது வந்தால் அவள் அவர்களுடைய கண்களில் படக்கூடாது.

''பொண்ணா!''

''என்ன தாத்தா?''

''ஏதாவது சாப்பிட்டியாம்மா?''

மறுமொழியின்றி நின்றாள், பாவம்!

குஞ்சுனைனா அவள் முகத்தை உற்றுப் பார்த்தார். ரூபாய் வட்டத்தில் சிவந்து தடித்த வடுக்கள்; தலைமயிர் உதிர்ந்து போயிருக்கிறது. காதுகளில் தடிப்பு. பார்க்கவே மனம் கொள்ளவில்லை.

''தூங்காதே அம்மா! வேதாகமம் படி. ஜெபம் பண்ணு. சேனைகளின் கடவுளாகிய கர்த்தருக்கு முடியாதது எதுவுமில்லை! அவர் சமுத்திரத்தின் பெருமையை ஆளுகிறார். அதன் அலைகள் எழும்பும்போது அவைகளை அமர்த்துகிறார். தமது புய பலத்தினால் பகைவர்களைச் சிதற அடித்தார். எண்பத்தொன்பதாவது சங்கீதம் படித்துப்பார்.''

ராகேலின் விழிகள் நிரம்பின.

''நான் வரட்டுமாம்மா?''

''உம்.''

குஞ்சுநைனா கைத்தடியை எடுத்துக்கொண்டு கிளம்பினார். வீட்டுக்குப் போய்க் கட்டிலில் சற்று நேரம் படுக்க வேண்டும்......... ஒருவேளை அந்தச் சிவராம குறுப்பு அபின் வாங்கி வருவான். பாவம், எவர் காலைப் பிடித்து வாங்கி வருகிறானோ? மத்தியான்னம் அது கொஞ்சம் உள்ளே போனால் இருமடங்கு பலம்! இல்லாவிட்டால் ஒரே களைப்பு!

'பனைச்சமேடு' மூலையை அடைந்தபோது கால்கள் சரியாகத் தரையில் பாவவில்லை என்ற ஐயம். கைத்தடியைப் பலமாக ஊன்றியும் சரியாக நிற்கமுடியவில்லை. கீழே விழக்கூடாது என்று மனத்தைத் திடபடுத்திக்கொண்டார். இதென்ன, பூமி தலைகீழாகச் சுழல்கிறதே! கண்களில் இருள் படர்கிறதே! பிறகு எதுவும் நினைவில்லை.

முகத்தில் தண்ணீர் பட்டதும், குஞ்சுநைனா கண்களைத் திறந்து பார்த்தார். சுற்றிலும் முகங்கள். யாரோ சொல்வது காதில் விழுந்தது:

''கட்டில் கொண்டு வரேன். கட்டிலிலே போட்டுக்கொண்டு போகலாம்.''

''வேண்டாண்டா, என் கைத்தடியை இப்படிக் கொடு.''

அப்படியும் இருவருடைய தோளில் கையைப் போட்டுக்கொண்டுதான் குஞ்சுநைனாவால் நடக்க முடிந்தது. அப்பொழுது கூட்டத்திலிருந்து கசாப்புக்கடை மாத்தன் மகன் கூறியது காதில் விழுந்தது:

''தொண்ணூறு வயசான இந்தக் கிழவர் இப்படி வெளியில் நடந்து போறது நல்லா இருக்கா? அதைச் சொன்னதுக்குத்தான் என்னை அடிக்க வந்தாரு!''

# இரண்டு

பிலிப்புதான் கடைசியாக வந்தான். சைக்கிளைவிட்டு இறங்கியதும் 'ஸ்டாண்'டில் நிற்கவைத்துவிட்டு, 'டர்க்கி டவ'லால் முகத்தைத் துடைத்துக்கொண்டான். பிலிப்புக்குச் சொந்தமாகக் கார் இருந்தது. ஆயினும் சாதாரணமாகச் சைக்கிளில்தான் அவன் பயணம் செய்வது வழக்கம். வர்கீஸும் மாத்யுவும் முற்றத்தில் நின்றுகொண் டிருந்தார்கள். குஞ்சுச்செறுக்கள் தந்தையின் கட்டிலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தான். குஞ்சுநைனாவின் காலம் சென்ற மூத்த மகன் தோமஸின் பிள்ளை குஞ்சப்பியும் வந்திருந்தான்.

வீட்டுடைமை என்ற முறையில் மாத்யு வினவினான்:

''அண்ணா, நீங்க வரதுக்கு ஏன் இவ்வளவு நேரமாயிட்டுது?''

''காலையில் பந்தளம் வரையில் போயிருந்தேன். அங்கே ஒரு பாலம் கட்டுற வேலை நடந்துகிட்டிருக்கு.''

இதன் பிறகு அங்கே யாரும் பேசவில்லை. எதற்காக வந்திருக்கிறோம் என்பதை எல்லோரும் அறிந்திருந்தார்கள். எனினும் யாரும் எதுவும் பேசவில்லை. பிலிப்பு தந்தைக்கு அருகில் சென்று வெகு நேரம் வரையில் அவரையே உற்றுப் பார்த்தவாறிருந்தான்.

''இந்தத் தள்ளாத வயசிலே, ஏன் அப்பா, வீடு வீடாக நடந்து போறீங்க?'' என்று கேட்டான்.

குஞ்சுநைனா பதில் உரைக்கவில்லை. ஆனால் மாத்யு கூறினான்:

''அப்பாவை இனிமேல் இப்படி நடக்கவிடக்கூடாது. அதைச் சொல்லத்தான் வர்கீஸண்ணன் எல்லாரைரும் கூப்பிட்டனுப்பினார்.''

''உம், அதுக்கு நான் இப்போ என்ன செய்யணும்? வீட்டோடு வந்திருங்கன்னு எத்தனை நாளாச் சொல்றேன்? கேட்டால்தானே? வயசு ஆக ஆகச் சின்னப் பிள்ளைங்களைப்போல்தான் எல்லாம்!''

குஞ்சுச்செறுக்கன் சொன்னான்:

''இந்தத் தொண்ணூறுவது வயசிலே அப்பாவை நாம் சொல்றபடி நடக்கவைக்க முடியுமா?''

''அப்படி யார் பேச்சும் கேட்டு வாழ்ந்தவர் அல்ல அப்பா என்று தெரியாதா?'' — மாத்யு.

''டேய், அது அது அந்தக் காலத்திலே வயசானல் தானகவே தெரிஞ்சுக்கிட்டு ஓர் இடத்திலே அடங்கி இருக்கணும்.''

''அதெல்லாம் இனி சொல்லிப் பயனில்லே. என்னவானலும் அப்பாவை வீடு வீடாகச் சாப்பிடறதுக்கு அலேயவிடக் கூடாது. அவருக்குச் செலவுக்கு என்று ஒரு தொகை ஓர் இடத்திலே கொடுக்கணும்.''

மீண்டும் அங்கே மௌனம்! வர்கீஸ் முற்றத்தில் உட்கார்ந்து கொண்டு புற்கிழங்கைக் கல்லிக்கொண் டிருந்தான். அவன் யார் முகத்தையும் ஏறெடுத்துப் பார்ப்பதில்லே. குஞ்சுச்செறுக்கனும் குஞ்சப்பியும், மாத்யுவும் யோசனேயில் மூழ்கியிருந்தார்கள். ஆனல் பிலிப்புக்கு அங்கே அப்படி நின்றுகொண்டிருக்க நேரமேது?

''சொல்லுங்க, இப்போ நான் என்ன செய்யணும்? எனக்குக் கொஞ்சம் அவசரமாகப் போக வேண்டியிருக்கு.''

''அதுதான் சொன்னேனே; அப்பாவுக்குச் செலவுக்கு ஒரு தொகை இங்கே கொடுக்கணும்.''

''அது எதுக்கு? அப்பாவை நான் என் வீட்டுக்கு அழைச் சிட்டுப் போறேன்.''

''தாராளமா.''

பிலிப்பு உரத்த குரலில் கூப்பிட்டான்:

''அப்பா!''

''என் காது செவிடு இல்லேயடா!'' என்று கத்த வேண்டும் போல் இருந்தது குஞ்சுநைனவுக்கு. நீங்கள் எல்லாரும் சேர்ந்து பேசுவதைக் கேட்டுக்கொண்டுதான் நான் படுத்திருக்கிறேன். கொஞ்சம் அயர்ச்சி – அவ்வளவுதான். இதற்காக நீ என்னே உன் தொழுவத்தில் கட்டிவிடலாம் என்று மனப்பால் குடிக்காதே! நான் உலகத்தைப் பார்த்தவன். அது உனக்கும் தெரியுமே? உன் மாட மாளிகையிலுள்ள சந்தனக் கட்டிலில் எனக்குப் படுக்கை போட்டுத் தர வேண்டாம். வெள்ளிக் கோப்பையில் திராட்சை ரசம் ஊற்றிப் பருகத் தர வேண்டாம். தலேக்கு வாசனேத்தைலம் ஊற்ற வேண் டாம். கொழும்புக் கொச்சாப்பியிடமிருந்து இந்த வீட்டை வாங்கிய போது கூனன் வேலு பணிக்கனேக் கொண்டு கூட்டிய கட்டிலடா இது! இதிலே படுத்துத்தான் உயிர்விடவேணும். கண் ஒளி இழந்த ஈசாக்கை ஏமாற்றி ஆசீர்வாதம் பெற்ற யாக்கோபின் தந்திரமா செய்யப் பார்க்கிருய்? ஈசாக்கின் முதிர்ந்த வயசில் அவன் கண்கள் இருளடைந்து பார்வையற்றுப் போகவே, அவன் தன் மூத்த

குமாரனுன ஏசாவை அழைத்து, ''என் மகனே! நீ உன் ஆயுதங்களாகிய அம்பருத் தூணியையும் வில்லையும் எடுத்துக்கொண்டு, வனத்துக்குப் போய் வேட்டையாடி, அதை எனக்குப் பிரியமான ருசியுள்ள பதார்த்தங்களாகச் சமைத்துக் கொண்டுவா. நான் புசித்துச் சாகும் முன்னே உன்னை ஆசீர்வதிப்பேன்'' என்ருன். ஏசா வேட்டையாடுவதற்கு வனத்துக்குப் போனுன். ஏசாவோடு ஈசாக்கு பேசியதை அவன் மனைவி ரெபெக்காள் கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் தன் இளைய குமாரனுகிய யாக்கோபிடம் எல்லாவற்றையும் சொன்னுள். யாக்கோபு அதன்படி ஆட்டு மந்தையிலிருந்து இரண்டு நல்ல வெள்ளாட்டுக் குட்டிகளைக் கொண்டுவந்து, தன் தாயிடம் கொடுத்தான். அவள் ருசியுள்ள பதார்த்தங்களாகச் சமைத்தாள். அதையும் எடுத்துக்கொண்டு ஏசாவின் வேடம் பூண்டு யாக்கோபு தன் தந்தையிடம் சென்ருன். கிழவனும் குருடனுமான ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்தான் :

கடவுள் உனக்கு வானத்துப் பனியையும்
பூமியின் செழுமையும்,
மிருந்த தானியத்தையும்
திராட்சை ரசத்தையும் தந்தருளுவராக.
ஜனங்கள் உன்னைச் சேவிப்பார்களாக.
ஜாதிகள் உன்னை வணங்கட்டும்.
உன் சகோதரருக்கு எஜமானுயிருப்பாயாக.
உன் தாயின் பிள்ளைகள் உன்னை வணங்குவார்களாக!...
''அப்பா!''

அதைத் தானடா சொன்னேன். என்னை ஏமாற்றி விடலாம் என்று கனவு காணுதே. எனக்கு இப்போதும் கண் தெரியும். உன்னையும் உன் அண்ணன்மார்களையும், உன் தம்பிகளையும் வெவ்வேருக என்னுல் அறிய முடியும். இப்போது நீ கார் கொண்டு வருவாய். பிறகு ஊருக்கெல்லாம் பறைசாற்றி என்னை அழைத்துக்கொண்டு போவாய். இந்தச் செய்தி கேட்டவர்கள் 'பிலிப்பு தந்தையை அழைத்துப்போய் எத்தனை வருஷங்களாகத் தன் வீட்டில் வைத்துக் காப்பாற்றுகிருன்' என்று கூறுவார்கள். இது ஊரார் பேச்சு! ஆனுல் வீட்டுக்குள்ளே? பத்து நாள்கூட ஆகியிருக்காது. 'சம்பாதித்தது எல்லாவற்றையும் மற்றப் பிள்ளைகளுக்குக் கொடுத்தார். ஆனுல் கடைசிக் காலத்திலே யாருமே எட்டிப் பார்க்கிறதில்லை. இப்போது எல்லாம் இந்தப் பிள்ளைதான்!'

என்றெல்லாம் பெண்டாட்டி தொணதொணப்பாள். அப்படி நான் யாருக்குத்தான் என்ன கொடுத்தேன்? இந்தப் பெண்கள் எதை வேண்டுமானாலும் பேசுவார்கள்! அது அவர்கள் சுபாவம். ஆனால் அதையெல்லாம் கேட்டுக்கொண்டு, உன் சோறு தின்ன என் நாய் கூட வராது. போடா போ .....

''அப்பா! நான் கூப்பிட்டது கேட்கலியா?''

''உம்...என்ன ?''

''நீங்க என்னோடு வீட்டுக்கு வரணும். கார் கொண்டு வரேன்.''

''இங்கேயே படுத்துக் கிடக்கிறேன்டா !''

'' இங்கேயே படுத்துக் கிடக்கிறேன்டாவாம். என்ன சொன்னாலும் புரியாது.''

''புரியுது. நீ போ, என்னைப் பற்றிக் கவலைப் படாதே. இனி அதிகமானால் அரை நாழிகை நேரம் !''

பிலிப்பு தனக்குத் தானே என்றாலும், மற்றவர்கள் காதில் விழும்படியாகவும் சொன்னான் :

'' இப்படியெல்லாம் எதாவது சொல்ல ஆரம்பிச்சா என்ன செய்ய ?''

மாத்யு வெற்றிக் களிப்புடன் —

''அதுக்காகத்தான் அப்பா இங்கேயே இருக்கட்டுமுன்னு நான் சொன்னேன். அவர் செலவுக்கு என்று ஒரு தொகை எல்லாரு மாகக் கொடுங்க!'' என்றான்.

இதுவரையில் மௌனமாக இருந்த வர்கீஸ் வினவினான் :

''அது எப்படி வேணும், எவ்வளவு வேணுமுன்னு சொல்லு!''

'' இதில் நான் சொல்லறதுக்கு என்ன இருக்கு? நீங்கதானே பெரியவர். நீங்களே சொல்லுங்க!''

'' இதில் பெரியவன் சிறியவன் என்ன வேண்டியிருக்கு ? பெரியவனுக்கு அப்பா, அப்படி அதிகமாக ஒண்ணும் தரலே. கோவணம் கட்ட ஆரம்பிச்ச நாளிலிருந்து, அப்பாகூடக் குடும்பத் துக்காக உழைக்கத் தொடங்கினவன் நான். திருடியோ ஏமாற் றியோ எதையும் சேர்த்து வைக்கலே. உங்க எல்லாருக்கும் சோறு போடற நிலம் கையைவிட்டுப் போகாமல் இருக்கிறதுக்காக நாயர் களிடம் அடியும் குத்தும் வாங்கினதும், எலும்பு நொறுங்கினதும் தான் மிச்சம். இப்போ என் குழந்தைங்களுக்கு ஒருவேளை

கஞ்சிக்குக்கூடக் கதி இல்லே. பாகப் பிரிவினையின்போது அப்பா வுக்கு இளைய பிள்ளைங்களைப்பற்றித்தான் ஞாபகம் இருந்தது.''

இதற்குக் குஞ்சுச்செறுக்களுல் பதில் கூருமல் இருக்க முடியவில்லை.

''சொல்லும்போது எல்லாமே சொல்லணும்! வர்கீஸண்ணன் மட்டும் அல்ல, நானும் அடியும் குத்தும் வாங்கினவன்தான். பெரி யண்ணன் உதைபட்டு இறந்து போன விஷயம் மறந்து போச்சா? அப்பாவோடு அந்தக் காலத்திலே நடந்து கொண்டதுக்கான பலனும் கிடைச்சிருக்கே ! குடும்பச் சொத்தை எடுத்து வீடு கட்டித் தந்தார் ! பெண்ணுக்கு மணம் முடிச்சு வச்சார் !''

''டேய், அப்பா மணம் முடிச்சு வைச்ச பெண்ணு, அதோ வீட்டிலேயே உட்கார்ந்திருக்கு !''

''அது செய்வினை. யாரோ ஏதோ செய்ததுதான் அவளுக்கு அப்படி ஒரு பெரும் வியாதி வந்தது! மற்றவர்கள் இன்னும் குடிசை யிலேதான் இருக்கிருங்க! என்னை அண்ணன் என்று சொல்றதுக் குக்கூடப் பிலிப்புக்கு வெட்கம்!''

பேச்சு திசை திரும்பவே, பிலிப்பு இடையில் குறுக்கிட்டான் :

''எய்தவனிருக்க அம்பை நோவறதில் என்ன இருக்கு? எனக்கு அப்பாவோ அண்ணன்மார்களோ ஒண்ணும் தரலே. ஆண்ட வர் தந்தார். எல்லாருக்கும் கிடைச்சது போலத்தான் எனக்கும் கிடைச்சுது. அஞ்சு ஏக்கர் நிலம், நான் பாடுபட்டுக் கஞ்சி குடிக்க; அறுபத்திமூணு சென்டு பூமி வீடு கட்ட. அது உங்கள் கண்ணை உறுத்தறதாக இருந்தால் சொல்லுங்க. நான் இந்த ஊரைவிட்டு வேறு எங்கேயாவது போய்விடறேன்.''

''வர்கீஸ் சாந்தமடைந்தான். வீராப்புக்கு ஏதாவது பேசினு லும் சீக்கிரத்தில் சமாதானமடைந்து தெளிவாகச் சிந்தனை செய் வான். ஆனுல் குஞ்சுச்செறுக்கனின் குணம் அத்தகையதல்ல.

''நீ எதுக்கடா போகணும்? இந்த ஊரைவிட்டுப் போக வேண்டியவன் நான்தான். காசர்கோடுக்கோ மங்களூருக்கோ போகலாம் என்று ரொம்ப நாளாவே யோசித்துக் கொண்டிருக் கேன். நீயும் உன் தம்பியும் நாட்டாண்மையுடன் வாழுற ஊரிலே இந்த இராப்பட்டினிக்காரனுக்கு என்ன வேலை?'' மாத்யு வின்மீது ஒரு மறைமுகத் தாக்குதல் !

''எனக்கு உங்களில் யாருடைய தயவும் வேண்டாம். பிச்சை எடுத்தோ, தோட்டவேலை செய்தோ நான் பிழைச்சுக்கிறேன்.

ஒருவேளைக் கஞ்சிக்குக்கூட உங்களில் எவர் வீட்டுக்கும் நான் வரப் போறதில்லை.''

இப்போது தோமஸின் மகன் குஞ்சப்பி கூறினன் :

''இந்த வீண் பேச்செல்லாம் எதுக்கு, சித்தப்பா? வந்த காரி யத்துக்கு ஒரு முடிவு செய்வோம்!''

மாத்யு சொன்னன் :

"அதைத்தான் நான் முதலிலேயே சொன்னேனே. அப்பா வுக்குச் செலவுக்கு என்று ஒரு தொகை எல்லாரும் சேர்ந்து கொடுக்க வேணும். அவருக்கு அபின் வாங்க வேணும். உணவுக்கும் உடைக்கும் வேணும். மத்தியான்னம் ஒருவேளைச் சாப்பாட்டைத் தவிர மற்றதெல்லாம் நான் தான் இதுவரை கவனித்து வந்திருக்கேன். எனக்கு அப்பா எதையும் வாரி வாரித் தரலை; தரவும் வேண்டாம், கூடாது. பாகப் பத்திரத்தில் இதைப்பற்றிய விவரம் இருக்குது.''

வர்கீஸ் வினவினன் :

'' அப்பாவின் செலவுக்காக ஒவ்வொருவரும் என்ன கொடுக்க வேணுமென்று நீ எதிர்பார்க்கிருய் ?''

''அதிகமாக ஒண்ணும் வேண்டாம். ஆளுக்கு இருபத்தஞ்சு ரூபாய் கொடுங்க, போதும்.''

குஞ்சுச்செறுக்கன் கணக்குப் போட்டான் :

''இருபத்தஞ்சு அஞ்சு நூற்றி இருபத்தஞ்சு. பரவாயில் லையே! உன் செலவைக்கூட இதிலேயே நடத்திடலாம் !''

மாத்யு இருந்த இடத்தைவிட்டுத் துள்ளி எழுந்து, குஞ்சுச் செறுக்கனுக்கு நேராகச் சுட்டுவிரலைக் காட்டிச் சொன்னன் :

'' அதுவும் இதுவும் பேசாதே. யார் தயவிலும் நான் பிழைக் கலே. என் மகன் மாசா மாசம் அம்பது ரூபாய் 'அலாட்டு மென்டு' அனுப்பருன். மூட்டை தூக்கியோ கூலிவேலை செய்தோ நான் என் அப்பாவைக் காப்பாற்றுறேன்.''

பெரியவன் குறுக்கிட்டான் :

''சும்மா ஏண்டா குதிக்கிறே, மாத்யு ? குஞ்சுச்செறுக்கன் சொன்னதும் சரிதானே? வெளி ஊரிலே இருக்கும் நம்ம பையன்கள் வரும்போது அப்பாவுக்குத் துணியும் கைச்செலவுக்கு அஞ்சோ பத்தோ ரூபாவும் கொடுப்பாங்க. புக்ககத்திலிருந்து பெண்கள் வரும்போது ஏதாவது கொடுக்காமல் இருக்கமாட்டாங்க. போக,

இந்த மூணுவேளைச் சாப்பாடுதானே? அதுக்கு நூற்றி இருப்பத் தஞ்சு ரூபாய் வேணுமா?''

குஞ்சுச்செறுக்கனுக்குப் பின்பலம் கிடைத்துவிட்டது :

''உண்மையைச் சொன்னதுக்கு இவன் அடிக்க வரானே!''

''அப்படியானல் நீங்களே அப்பாவை அழைச்சிட்டுப் போய்க் காப்பாற்றுங்களேன்!''

''அப்பா ஏன் வரப் போருர்! நீதான் அவர் மனசைக் கலேச்சு வைச்சிருக்கியே! போதாக்குறைக்கு யாரையும் சட்டை செய்யாமல் தன் இஷ்டத்துக்கு நடந்தவர் ஆச்சே, அப்பா!''

மாத்யு மறுபடியும் சினம் கொண்டு சீறினன் :

''ஒண்ணு மட்டும் சொல்றேன், நினைவு வச்சுக்குங்க, தள்ளாமல் படுத்திருக்கிற என் அப்பாவைப் பற்றித் தாறுமாருப் பேசாதீங்க. யாரும் ஒண்ணும் தரவேண்டாம். நீங்கள் எல்லாரும் போகலாம். ஆனல் இதை மட்டும் நினைவு வச்சுக்குங்க. மூத்தோரின் சாபம் ஏழு தலைமுறைக்கு உங்களை விடாது.''

குஞ்சுச்செறுக்கன் ஏளனமாகச் சிரித்துக்கொண்டு கூறினன் :

''இவனுக்கு மட்டும் அப்பா! மற்றவருக்கு இல்லை, அப்படித் தானே?''

விஷயம் இவ்வளவுக்கு முற்றவே, பிலிப்பு தனது பர்சைத் திறந்து, அதிலிருந்து பத்து பத்துரூபாய் நோட்டுகளை எடுத்து எல்லாரிடமும் காட்டிய பின் தந்தையின் தலையணைக்கு அடியில் வைத்தான்.

''இந்தப் பணம் செலவழிஞ்ச பிறகு அப்பாவின் செலவுக்காக என்ன வேணுமுன்னு சொல்லியனுப்பு—கொடுத்தனுப்பறேன்.''

பிலிப்பு முற்றத்தில் இறங்கினன், சைக்கிளைத் தள்ளிக் கொண்டே கூறினன் :

''நாற்றம் எது, வாசனை எதுன்னு தெரிஞ்சுக்க வகையற்றவனுங்க!''

குஞ்சுச்செறுக்கன் ஏதோ பதில் கூற முயன்ருன். ஆனல் அதற்குள் பிலிப்பு சைக்கிளில் ஏறி வெகு தூரம் போயிருந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் வர்கீஸும் குஞ்சுச்செறுக்கனும் தந்தையிடம் விடைபெற்றுக்கொண்டு கிளம்பினர்கள்.

''அப்பா! போய் வரேன்.''

ஒரு கேசு விஷயமாகத் தன்னை அழைத்துப் போக வந்திருந்த புகையிலை வியாபாரியுடன் மாத்யுவும் எங்கோ வெளியே சென்ருன். அப்போது குஞ்சப்பி தீரும்மாவிடம் சென்று கூறினன் :

''சித்தி, எனக்கும் போக நேரமாச்சு. சனிக்கிழமை வரேன். தாத்தா செலவுக்கு என்ன தேவையோ, அதைக் கொண்டு வந்து தரேன். கணக்குப் பார்க்கிறதுக்கு இதுதான் நேரமா?''

''நான் என்னத்தைச் சொல்ல, குஞ்சப்பி? உன் சித்தப்பா குணம்தான் உனக்குத் தெரியுமே? அண்ணன்மார்களை எல்லாம் கூப்பிட வேண்டாம்னு நான் எவ்வளவோ சொன்னேன். கேட் டால்தானே! வீட்டில் என்ன கஷ்டங்கள் இருந்தாலும் மாமாவுக்கு ஒரு குறைச்சலும் வைக்கிறதில்லை. வேணுமுன்னு கேட்டுப்பாரு.''

''எனக்குத் தெரியும், சித்தி !''

குஞ்சப்பி தாத்தாவின் கட்டிலுக்கு அருகில் சென்று உரத்த குரலில் 'தாத்தா' என்று கூப்பிட்டான்.

''யாரு?''

''நான் தான், குஞ்சப்பி.''

''சரி, போய் வா.''

''தாத்தா! நீங்க என்னோடு வீட்டுக்கு வரீங்களா ?''

''நேரமில்லையடா......''

''நேரம்......!''

''என் வேட்டியும் மற்ற துணிகளும் வண்ணான் இன்னமும் கொண்டு வந்து தரலே.''

குஞ்சப்பி கேள்விக் குறியுடன் தீனம்மாவை நோக்கவே, அவள் மெள்ள மொழிந்தாள் :

''இப்படித்தான், சில நேரங்களிலே நல்ல நினைவு இருக்கிற தில்லை.''

''உன் தங்கை மாமனுருக்கு உடம்பு எப்படி இருக்கு?''

''அப்படியே இருக்கு. படுத்த படுக்கை, தாத்தா!''

''அவர் என்னைவிடப் பத்து வயசு சின்னவர்.''

''நான் போய் வரேன். ஆபீஸுக்குப் போகணும். ''

''சரி, போய் வா.''

''சனிக்கிழமை வரேன்.''

''உம்.''

குஞ்சப்பி போவதைப் பார்த்துக்கொண்டே குஞ்சுனைநு படுத்திருந்தார். தந்தையைப் போலவே அடக்கமே உருவானவன். இப்போது தாமஸ் மட்டும் உயிரோடிருந்தால் இவர்களெல்லாம் இப்படித் துள்ளுவார்களா? ஈசாயின் ஏழு புதல்வர்களில் கர்த்தர் ஆசீர்வதித்த ஒருவனைப் போன்றவன் அவன். தனது இருபதாவது

வயசில், மார்பை அகல விரித்து, கைகளை வீசிக்கொண்டு, இந்தப் பனைச்சமேடு கிராமத்தில் அவன் நடப்பது கண் கொள்ளாக் காட்சி யாக அல்லவோ இருந்தது! 'குஞ்சுநைனு! உன் உடல்கட்டு உன் மூத்த பிள்ளைக்குத்தான் கிடைச்சிருக்கு' என்று செறுக்கன் ஜாகோபு உயிரோடிருந்த காலத்தில் சொல்வான். ஆனால், அற்பா யுசில் ஆண்டவர் அவனை அழைத்துக் கொண்டு விட்டார். அவர் கொடுத்தார். அவர் எடுத்துக் கொண்டார். அவர் நாமம் வாழ்க!

'கீச்சேரி' வயலில் புலையர்கள் அழுவதைக் கவனித்தவாறு வரப்பில் நின்றுகொண் டிருந்தான் அவன். 'நெஞ்சுக்குள்ளே என்னமோ பண்ணுது' என்று கூறிக்கொண்டு அங்கேயே உட்கார்ந்தான். வீட்டுக்குக் கொண்டுவந்தபோது பிணமாகி விட்டான். நாயர்களோடு போட்ட சண்டையில் ஏற்பட்ட உள் காயமாம்! அன்று தம்பிகளை அடிப்பதை கண்ணால் பார்த்ததும் சமாதானம் பேசவும், அவர்கள் அடிப்பதைத் தடுக்கவும் முயன்றான். 'பனைச்சவிளை' வாசு குறுப்பு என் நெஞ்சில் கட்டையால் அடிப் பதைப் பார்த்தபோது அவன் பொறுமை இழந்து சினம் கொண் டான். சவுலுடனும் அவன் சேனையுடனும் போர் புரிந்த தாவீதை நினைவூட்டினான் அவன். சவுல் ஆயிரம் பேரைக் கொன்றான்; தாவீது பதினாயிரம் பேரைக் கொன்றான். அன்று மானம் காத்ததே அவன்தான். ஆனால் காலம் கடந்தாயினும் விலை கொடுக்க வேண்டி வந்தது.

தாமஸ் இறக்கும் போது குஞ்சப்பிக்குப் பன்னிரண்டு வயசு இருக்கும். அடுத்தது இரண்டும் பெண்கள். குழந்தைகளைக் காப் பாற்றவும் படிக்க வைக்கவும் அவன் தாய் மிகவும் பிரயாசைப் பட்டாள். வேறு வழி இல்லாத நிலையில்தான் அவள் தன் பிள்ளையைப் பாட்டனிடம் அனுப்பினாள். பிள்ளையும் மிகுந்த தன் மானம் கொண்டவன். அவனுடைய தாயும் அத்தகையவள் தானே? ஏழு நாள் பட்டினி கிடந்தால்கூட வெளியே தெரியாது. அலட்சியமாக வெளியே வாயிற்படியில் வந்து நின்று கொண்டு—

''அம்மா அனுப்பினாள்...'' என்பான்.

''ஏண்டா, உன் அப்பா என்னிடத்திலே ஏதாவது கொடுத்து வச்சிட்டுப் போயிருக்காரா ?''

இதைக் கேட்க வேண்டியதுதான் தாமதம்-அவன் அங்கிருந்து பேசாமல் நடையைக் கட்டுவான்!

''இங்கே வாடா!'' என்று அழைத்து—

தேவையானதைக் கொடுத்தனுப்புவேன். அப்பன் சற்றே நொண்டிஞற் போல நடப்பானே, அதுகூட இவனிடம் அப்படியே பிதுரார்ஜிதம் போல ஒட்டியிருக்குது! பாசமுள்ள பிள்ளை. வாரத்துக்கு ஒருமுறை கறி மீனேடு சாப்பாடு போடுவான். துணிமணிகள் வேறு வாங்கித் தருவான். 'தாத்தா!' என்று இவன் ஆசையோடு கூப்பிடுவதை எத்தனை முறை கேட்டாலும் திருப்தி வராது.

''உன் மாமியார் வீட்டார் ஐந்நூறு ரூபாய் தரத்துக்கு இருந்தாங்களே? அது கிடைச்சுதா?''

'' ... ... ... ... ''

'' ஏண்டா பேசாமல் நிற்கிறே ?''

தீனம்மா சமையல் அறையிலிருந்து வந்தாள் :

''யாரோடு பேசறீங்க, மாமா ?''

''குஞ்சப்பியோடு.''

''குஞ்சப்பி எப்பவோ போய்ட்டானே! உங்களிடம் சொல்லிக் கொண்டுதானே போனன் ?''

''ஆ......''

''கஞ்சி கொண்டு வரட்டுமா?''

''கொஞ்ச நேரம் கழிச்சுக் கொண்டு வா, போதும்.''

''இப்படி மயக்கமாப் படுத்துக்காதீங்க, மாமா. அதனுலதான் ஏதேதோ உளரறீங்க.''

''பொண்ணு!''

''என்ன மாமா ?''

''ஞானமுள்ள மகன் தந்தையை மகிழச் செய்வான். புத்தியில்லா மகன் தாய்க்குத் துயரமாவான். நீதிமொழிகள் பத்தாவது அத்தியாயம் முதல் வாக்கியம் படிச்சிருக்கியா?''

''நினைவு இல்லை. இதை இப்போ சொல்றதுக்குக் காரணம்?''

''தாமஸ் ஞாபகம் வந்தது. அவன் என்னிடத்திலே சண்டை போட்டுக்கொண்டு போய்த்தான் கல்யாணம் கட்டிக் கொண்டான். உனக்கு அந்தக் கதை தெரியுமா?''

''ஏன் தெரியாது? நீங்களே எத்தனை தடவை சொல்லியிருப்பீங்க? கதை கேட்கிறதுக்கு இப்போ நேரமில்லை. சின்னக்குட்டி பள்ளிக்கூடத்திலிருந்து வருகிற நேரமாச்சு.''

அப்படி ஒன்றும் பெரிய விஷயம் அல்ல. நான் நிச்சயிக்கிற பெண்ணைத்தான் என் பிள்ளை கட்டிக்கொள்ளவேணும் என்று ஒரு பிடிவாதம். 'நீ என் பிள்ளையல்ல, எங்காவது போய்த் தொலை'

என்றுகூட ஒருநாள் சொல்லிவிட்டேன்! என் நாக்கிலே சைத்தான்: வேறு என்ன? தாவீதின் குமாரனுன சாலொமோன் கூறுகிருர்: 'என் அறிவுக்கு எட்டாதவை நான்கு உண்டு, ஆகாயத்தில் கழுகின் வழி, கன்மலையில் பாம்பின் வழி, நடுக்கடலில் கப்பலின் வழி, பெண்ணை நாடிய மனிதனின் வழி ஆகிய இவைகளே'—அவனுக்குப் பிடித்த பெண்; பெரிய மாமா வீட்டில் தங்கி இருந்தாள். அவளை அவனுக்குப் பிடித்துவிட்டது, பெண்ணும் நல்லவள். உயர்ந்த குடும்பம். ஆனுல் கல்யாணப் பேச்சை அவன் மாமாவே கொண்டு வந்தாரே என்று ஒரு மனக்குறை. அந்த நாட்களில் அவரோடு சிறிது மனத்தாங்கல். எப்படியோ, திருமணம் நடந்தது. உயர் குடியைச் சேர்ந்த, தெய்வபயம் உள்ள பெண். அவன் கைகளுக் குப் பலமாகவும், வாழ்க்கைக்கு நல்விளக்காகவும் இருந்தாள். அவன் பணம் சேர்த்து வைக்கவில்லை என்ருலும் மானமாகவும் நிம்மதியாகவும் இல்வாழ்க்கை நடத்தினுன். தந்தைக்காகவும் தம்பிகளுக்காகவும் உயிரைக் கொடுத்தான். அவன் சந்ததிகளுக்கு ஒரு குறைவும் வராது. தாய் தந்தையர்களை மதித்து, சகோதரர் களை நேசித்து, கடவுளை நம்பி வாழ்பவன் ஒரு போதும் நசித்துப் போகமாட்டான். அவன் செய்த குற்றங்களை ஆண்டவர் மன்னித்து அருளுகிருர். தாவீதை மன்னிக்கவில்லையா? தாவீது செய்தது எவ்வளவு பெரிய பாவம்! ஒருநாள் மாலைநேரம் தன் படுக்கையி லிருந்து எழுந்து அரண்மனை மாடியின்மேல் உலாவிக்கொண்டிருந்த போது, நீராடிக்கொண் டிருந்த ஒரு பெண்ணை அவன் பார்த்தான். அந்தப் பெண் மிகுந்த அழகுள்ளவள். தாவீது ஆளை அனுப்பி, அவள் யாரென்று விசாரித்தான். அவள் தன் படை வீரர்களில் ஒருவனுன ஊரியாவின் மனைவி பத்சேபாள் என்று அறிந்தான். அவளை வரவழைத்த அவன் சில நாட்கள் தன் அரண்மனையில் தங்கச்செய்தபின் அனுப்பினுன். அவள் கருத்தரித்தாள். பிறகு தாவீது ஊரியாவைப் போர்க்களத்திலிருந்து வரவழைத்து மனைவி யிடம் அனுப்பித் தன்னுல் உண்டான கருவின் பொறுப்பை அவன் மீது சுமத்த முயன்ருன். ஊரியாவோ தன் வீட்டுக்கே போகாமல் அரண்மனை வாசலில் ராஜசேவகர்களோடு படுத்துறங்கினுன். மது அருந்த வைத்துப் போதை ஊட்டியும் அவன் மனைவியின்பாற் செல்லச் சம்மதிக்கவில்லை. கடைசியாகத் தாவீது அவனைப் போர் முனைக்குத் திருப்பி அனுப்பி, வெஞ்சமர்க்களத்தில் அவனை நிறுத்தி, வெட்டுண்டு வீழ்ந்துவிடச் செய்தான். பிறகு பத்சேபாளைத் தன்

மனைவி ஆக்கிக்கொண்டான். ஆண்டவர் அவனைத் தண்டித்தார். பத்சேபாளிடத்தில் அவனுக்குண்டான மகனை எடுத்துக் கொண்டார். தன் மகன் அப்சலோமுக்குப் பயந்து அவனைப் பாலைவனத்தில் ஓடச் செய்தார். இருப்பினும் கடவுள் அவனை முற்றிலும் அழித்துவிடவில்லை. அவனது பாச்சாத்தாபத்துக்குச் செவி மடுத்தார். அவனை இஸ்ரேலின் புகழ் வாய்ந்த அரசனாக்கினார். பத்சேபாளின் வாயிலாக, ஞானிகளுக்கும் ஞானியான சலொமோன் என்னும் குமாரனையும் கொடுத்தார்.......

''என்ன குஞ்சுநைநா! தூக்கமா ?''

''யாரு?''

''நான்தான், சிவராம குறுப்பு.''

''ஆ... ஊரிலே இருக்கீங்களா? பார்த்து நாலஞ்சு நாளாச்சே!''

'' ஊருக்குப் போயிருந்தேன். ஆமாம், நீங்கள் மயக்கம் போட்டு வழியிலே விழுந்துவிட்டதாகக் கேள்விப்பட்டேனே!''

'' என்ன சொன்னீங்க ?''

'' விழுந்ததாகக் கேள்விப்பட்டேனே ?''

'' அப்போ, அது உங்க காதுக்கும் எட்டிச்சா? ஏதாவது நல்ல செய்தியாக இருந்தால் இவ்வளவு சீக்கிரம் காதுக்கு எட்டியிருக்குமா?''

குறுப்பு கடகடவென்று சிரித்தான். ஒரே முழக்கம் !

''அதுதான் உலக வழக்கம்....
கோமாதா மடியிலிருந்து பால் சொரியும்; அதைக்
குடிக்க மனம் இலா உண்ணி இரத்தம் உண்ணும்
காமம் போல், கயவர் நற்கருத்தாம் பாக்கள்
காதொலித்தும் அது கேளார். தவறே செய்வார்!''

குஞ்சுநைநாவின் முகத்தில் ஓர் ஒளி படர்ந்தது. அவர் பிரயாசைப்பட்டு எழுந்து உட்கார்ந்தார் :

''கோ என்றால் பசு என்றுதானே அர்த்தம்?''

ஓர் இரகசியத்தின் சாளரம் திறப்பதைப் போன்று பொருள் பொதிந்த புன்னகை புரிந்தான் சிவராம குறுப்பு. அதன் பிறகு சோப்புப்பெட்டியைப் போன்றதொரு பெரிய டப்பியைத் திறந்து வெற்றிலை போடலானான். வாசனைப் புகையிலை, துளிர் வெற்றிலை. வண்ணச் சுண்ணாம்பு - எல்லாம் இருந்தன.

''ஆமாம், ஆமாம். குஞ்சுநைநாவுக்கு வடமொழிகூடத் தெரியும் போல இருக்கிறதே?''

'எல்லாம் தெரியும்' என்னும் பொருள்படக் கையால் சைகை செய்தவாறு குஞ்சுஞைநஞ சொன்ஞர் :

''எனக்கும் கொஞ்சம் ஆகம ஞானமெல்லாம் இருக்கு, அய்யா.''

''குஞ்சுஞைநஞ, எல்லா ஆகமங்களும் ஒன்றுதான். பைபிளும், குரானும், கீதையும், உபநிடதங்களும் எல்லாம் ஒன்றுதான். பெயர் மட்டும் வேறு வேறு! உலகில் அதருமம் முற்றும்போது பல பெயர்களிலும், பல உருவங்களிலும் கடவுள் தோன்றுகிருர். தசாவ தாரம் என்றெல்லாம் சொல்லுகிருர்களே, அவையெல்லாம் இதைத் தான் குறிக்கின்றன....

யதா யதா ஹி தர்மஸ்ய
க்லாநிர் பவதி பாரத
அப்யுத்தான மதர்மஸ்ய
ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்
பரித்ராணுய ஸாதூனும்
விஞசாய ச துஷ்க்ருதாம்
தர்ம ஸ்ம்ஸ்தாப ஞர்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே!''

சிவராம குறுப்பு சுலோகத்தின் பொருள் விளக்கிச் சொன்ன வுடன் குஞ்சுஞைநஞவுக்கும் ஒரு விழிப்புணர்வு ஏற்பட்டது :

'' சரிதான். சோதாமிலும், கோமேராவிலும் அக்கிரமும் அநியாயமும் முற்றியபோதுதானே கர்த்தர் கந்தகத்தையும் தீ மழையையும் பொழியச் செய்தார்? கடவுள் மிகவும் பொறுத்தார். கடைசியில் அவர்கள் பாவம் கட்டுக்கடங்காமல் போகவே இரண்டு தூதர்களை அங்கே அனுப்பிஞர். அவர்கள் கர்த்தரின் தொண்டஞை லோத்தின் வீட்டில் தங்கிஞர்கள். இதை அறிந்த பாவி ஜனங்கள் லோத்தின் வீட்டை நாஞ திசைகளிலும் வந்து சூழ்ந்துகொண்டு 'இன்றிரவு உன்னிடத்துக்கு வந்த மனுஷர் எங்கே? எங்களுக்கு அவர்களை விட்டுக்கொடு' என்ருர்கள். லோத்து அவர்களிடம் 'சகோதரர்களே, இந்தத் துன்மார்க்கம் வேண்டாம். புருஷரை அறியாத இரண்டு பெண்கள் இருக்கின்றனர். அவர்களை வேண்டு மாஞல் உங்களிடம் கொண்டு விடுகிறேன்; உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள். இந்தப் புருஷர்களை மட்டும் ஒன்றும் செய்ய வேண் டாம்!' என்ருன். பாவத்தில் மூழ்கிய ஜனங்கள் அதைக் கேட்க வில்லை. அப்போது, கடவுளின் தூதர்கள் அவர்களைக் குருடர் களாக்கிஞர்கள். லோத்துக்கும் அவன் குடும்பத்தாருக்கும் கடவுள்

'பிராணன் தப்ப ஓடிப்போ, திரும்பிப் பாராதே' என்றே கட்டளை இட்டார். அவ்வண்ணமே அவர்கள் ஓடினார்கள். ஆனால் லோத்தின் மனைவியோ திரும்பிப் பார்த்ததினால் உப்புத் தூணாக மாறினாள். கர்த்தர் வானத்திலிருந்து, கந்தகத்தையும் அக்கினியையும் பொழிந்து பட்டணங்கள் அனைத்தையும் அழித்தார். லோத்து சோவார் பட்டணத்துக்கும், அங்கிருந்து மலைக்கும் ஓடிப் போனான். அங்கே ஒரு குகையில் தங்கியிருக்கையில் அவனுக்குத் தன் குமாரத்திகளிடம் சந்ததி உண்டாயிற்று....''

''அட, அதெப்படி? சொல்லுங்கள், சொல்லுங்கள்!''

குஞ்சுநைனா கதையைத் தொடர இருந்தார். அப்போது சட்டென நினைவு வந்தவனைப்போல் சிவராம குறுப்பு கேட்டான் :

''ஆமாம்...இங்கே வேறு யாரும் இல்லையா ?''

''எல்லோரும் இருக்காங்க.''

குறுப்பு உரத்த குரலில் கேட்டான் :

''இது என்ன, புதுமையாயிருக்கிறதே ! வீட்டைத் தேடி யாராவது வந்தால் பேசக் கூடாதோ? ஒன்றும் தர வேண்டாம். ஒரு நல்ல வார்த்தையாவது சொல்லக் கூடாதா ?''

தீனும்மா கதவருகில் வந்து நின்றாள் :

''அப்போ, மாமா சொல்றதெல்லாம் கெட்ட வார்த்தைகளா?''

''ஓகோ, அதனால்தான் பேசவில்லையோ ?''

''ஆண்கள் வந்தால் ஆண்களோடுதான் பேசுவாங்க.''

''சரி, ஒத்துக்கொள்கிறேன்.''

''ஒத்துக்கச் சொல்லலே. நாங்கள் பணக்காரங்க இல்லே. இருந்தாலும் வந்தவங்களை மதிச்சு நடக்கிறதுக்குத் தெரியும். தவிர, நீங்க இந்த வீட்டுக்கு விருந்தாளி இல்லையே?''

தீனும்மா உள்ளே சென்றாள். குஞ்சுநைனா மனத்துக்குள் 'குடும்ப கௌரவத்தை நிலைநிறுத்தும் பெண்ணுக்குரிய இலக்கணம் இதுதான். அவள் கூறிய சொற்களில் பொருளும் பெருமையும் மரியாதையும் செறிந்திருக்கின்றன...' என்று எண்ணிக் கொண்டார்.

தீனும்மா அப்படிக் கூறியபோதிலும், சிறிது நேரத்துக்கெல்லாம் இரண்டு கண்ணாடி டம்ளர்களில் பாலில்லாத காபியுடன் வந்தாள்.

''பால் கிடையாது, மாமாவுக்குப் பாலில்லாத காப்பிதான் பிடிக்கும். குறுப்பு, வீட்டுக்குப் போய்க் கொஞ்சம் பால் குடிச்சால் சரியாயிடும்!''

சிவராம குறுப்பு வாய்விட்டு உரக்கச் சிரித்தான்:

''இருக்கிறது போதுமே. குசப்புல்லும் தர்ப்பையாகிறது என்று மொழிகிறது பிரமாணம்!''

காபி பருகிக்கொண்டே குறுப்பு கேட்டான்:

''குஞ்சுநைனு, நீங்கள் மீதிக் கதையைச் சொல்லவில்லையே!''

''என்ன?''

''அந்தக் கதை...''

''ஆ... லோத்தும் குமாரத்திகளும் குகையில் வசிக்கும்போது மூத்தவள் இளையவளைப் பார்த்து, 'நம்முடைய தந்தைக்கு வயசாகிவிட்டது. பூமியெங்கும் நடக்கும் முறைமைப்படி நம்மைப் புணர்ந்து சந்ததிபெறப் பூமியில் ஒரு புருஷனும் இல்லை. நம்முடைய தந்தையின் சேர்க்கையால் சந்ததி ஏற்பட அவருக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்து அவரோடு சயனிப்போம் வா' என்றாள். அப்படியே அன்று இரவில் அவர்கள் தங்கள் தந்தைக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்தார்கள். மூத்தவள் தன் தந்தையினருகில் சென்று கிடந்தாள். அவள் படுத்ததையும் எழுந்ததையும் அவன் உணரவில்லை. மறுநாள் இளையவளும் அவ்வண்ணமே செய்தாள். இவ்விதமாய் இருவரும் கருத்தரித்துப் பிள்ளைகளைப் பெற்றுக் கொண்டார்கள் என்றும், மோவாபியர்களுடையதும் அம்மோனியர்களுடையதுமான வமிச பரம்பரை இப்படியாக ஆரம்பிக்கிறதென்றும் யாத்திராகம புஸ்தகத்தில் கூறப்பட்டிருக்குது.''

தனது திறந்த மேனியின் சதைகள் அசைந்தாடச் சிவராம குறுப்பு குலுங்கக் குலுங்கச் சிரித்தான்.

குஞ்சுநைனுவுக்கு உற்சாகம் மேலிட்டது. கதைகள் சொல்லி மற்றவர்களை மகிழ வைக்கத் தம்மால் இப்பொழுதும் இயலும். இந்தக் குறுப்பு முகத்தில்தான் என்ன களை! நெற்றியிலே சந்தனக் கீற்று. காதுக்குப் பின்னால் துளசி. நல்ல ஆரோக்கியம் வேறு! புத்தன்குளத்து நாணு நாயர் மகளைக் கைப்பிடித்து இந்த ஊரில் வசிக்க ஆரம்பித்த நாளிலிருந்து இப்படியேதான் இருக்கிறான். ஆனால் அந்த மண வாழ்க்கை வெகு நாள் நிலைத்திருக்கவில்லை. தவறு தாணு நாயருடையதுதான். அதன் பின்னர் 'சந்தோஷம்' கேசவன் நாயர் மகளை மணந்தான். ஆனால் அதுவும் நிலைக்கவில்லை. அந்தப் பெண் 'பொல்லாதவள்'! இப்போது குறுப்பு தனிக்கட்டை. ஷண்முகம் பிள்ளையின் மளிகைக் கடையில் கணக்கப்பிள்ளை. சொந்தச் சமையல்; வாடகைவீட்டில் வாசம்.

''கதை நன்ருக இருக்கிறது. ஆனுல் கிழவன் உணராதிருந்தான் என்று சொன்னதை நம்ப முடியுமா, குஞ்சுநைனு !''

''நம்பணும். இது கட்டுக்கதை அல்ல, உண்மை நிகழ்ச்சி. நம்ம வட்டப்பரம்புவீட்டுக் குஞ்சுப்போத்தனுடை ஒரு மகன் பட்டாளத்திலே இருக்கிருன். விமானம் ஓட்டற வேலே.''

''எயர் ஃபோர்ஸ்.''

''ஆ...அதுவேதான். அவன் இந்த இடங்களையெல்லாம் போய்ப் பார்த்திருக்கிருனும். லோத்தின் மனைவி உப்புத் தூணுக நிற்கிறதை இப்பவும் பார்க்கலாம் என்று அவன் என்னிடத்திலே சொன்னுன்''.

''உண்மையாக இருக்கலாம். நம்பிக்கைதான் அடிப்படை. ஹிந்துப் புராணங்களில் விஞயகரும் ஐயப்பனும் உண்டான கதை கூட விசித்திரம்தானே! உங்களுக்குத் தெரியுமா ?''

சிவராம குறுப்பு அந்தக் கதையைக் கூற முற்படுகையில் மாத்யு அங்கே வந்தான் :

''ஏன் ஐயா, இந்த ஊரில் தான் இருக்கிருயா?''

''எங்கே வீட்டுக்கு வந்தால் உன்னைப் பார்க்கவே முடிகிறதில்லே, உன் அப்பாவோடு பேசிக்கொண் டிருந்தேன்.

''உம். அம்பாவுக்கு உடம்பு சரியில்லே·''

''கேள்விப்பட்டேன்.''

'உடல் நலமில்லாதிருப்பதால் அவரிடத்தில் அதிகமாகப் பேச வேண்டாம்' என்றுதான் மாத்யு மறைமுகமாகச் சொல்கிருன் என்று குறுப்பு புரிந்துகொண்டான். எனவே டப்பியைத் திறந்து மறுபடியும் வெற்றிலே போட்டுக் கொண்டு அங்கிருந்து எழுந்தான்.

''குஞ்சுநைனு !''

''உம்...''

''அதை நாளைக்குக் கொண்டு வருகிறேன்.''

''என்ன ?''

''அபின். நாளைக்குக் கொண்டு வருகிறேன். கிடைக்கிறது அபூர்வமாக இருக்கிறது. ஓரிரண்டு வைத்தியர்களிடத்திலே சொல்லி வைத்திருந்தேன். ஆனுல் அவர்கள் அதை மருந்து செய்வதற்கு எடுத்துக் கொண்டார்களாம். இனிமேல் கொய்யாப்பள்ளியில் ஒருத்தரைப் போய்ப் பார்க்கவேண்டும். எப்படியும் நாளைக்குக் கொண்டுவருகிறேன். ஐயா மாத்யு! போய் வரட்டுமா ?''

''சரி.''

சிவராம குறுப்பு போனவுடன் மாத்யு உள்ளே சென்று தீனும்மா இடத்தில் சொன்னான்.

''நான் இன்னைக்கு மாலேயில் திருவனந்தபுரம் வரையில் போறேன். திரும்பி வரதுக்கு இரண்டு மூன்று நாள் ஆகும்.''

''என்ன காரியமாப் போறீங்க? ஊரைச் சுற்றிப் பார்க்கிற துக்குன்னு நானும் வரேன். மாமாவை வீட்டுக்குக் கொண்டு போய்க் கவனிச்சுக்கிறதுக்கு 'நான் நான்'ன்னு எல்லாரும் முந் திக்கிறாங்களே! மாமா அவங்களோடு போகட்டும்.''

''ஊரைச் சுற்றிப் பார்க்கிறதுக்காகவா போறேன்? நல்ல வேடிக்கைதான். போ. நம்ம வாழைவெளி தானியல் இல்லே? அவன் மகனுக்கு ஒரு வேலே வாங்கிக் கொடுக்கணும். அதுக்காகத் தான்.''

''யார் யார் பிள்ளைக்கோ வேலே! யார் யார் பெண்ணுக்கோ வரன்! 'இடவக்கார'னுங்களின் தகராறு தீர்க்கிறதுக்குக் கேசு! இப்படி மற்றவங்களுக்காகப் பாடுபடறதில் நமக்கு என்ன லாபம்?''

''லாபத்தைப் பார்த்துத்தான் எல்லாம் செய்யணுமா?''

''எல்லாம் வேண்டாம். நம்ம வீட்டையும் குடும்பத்தையும் கவனிக்காமல் ஊருக்காக மட்டும் உழைச்சால் போதுமா?''

''ஆமாம். வீட்டையும் குடும்பத்தையும் கட்டிகிட்டு மாரடிச் சால் போதும். இல்லேயா?''

மாத்யு இப்படிக் கடிந்து கூறினான் ஆயினும் அவனுடைய உள்ளத்தைக் குற்ற உணர்ச்சி உறுத்தாமலில்லே. ஊரில் எல்லாரும் மதிக்கிறார்கள். நல்ல செல்வாக்கும் இருக்கிறது. எல்லாம் சரிதான். ஆனால் வீட்டைக் கவனிக்க நேரம் கிடைப்பதில்லே. இளம் மனைவிக்குரிய இன்பப் பொழுதை அவனால் நீட்டித்துக் கொடுக்க முடிவதில்லே. அவளுடைய தேவைகளைக் கண்டறிந்து பேண இயல்வதில்லே. அவளுக்கு வயது இருபத்தெட்டு என்றும் தனக்கு நாற்பத்தேழு என்றும் மாத்யுவுக்கு நினைவு வந்தது. ஒரு குழந்தைக்குத் தாயாகியும் அவள் தன்னை அலங்கரித்துக் கொண்டு கிளம்பினால் அவளை வெல்வதற்கு இந்த ஊரில் பெண் கிடையாது. அவளுடைய ஆசைகளை நிறைவேற்றாமல் இருப்பது பாவமல்லவா? தெரிந்திருந்தும் ஊர் பிரசினைகளில் மூழ்கிவிடுகிறானே?

மூத்தவளுக்குப் பிறந்த மகன் மாதம் ஐம்பது ரூபாய் அனுப்பு கிறான். எனவே பணக் கஷ்டம் தெரிவதில்லே.

மாத்யு வெளியே போகக் கிளம்பியபோது தீனும்மா கூறினள் :

''நம் ராஜண்ணனுடைய நண்பன் லீவு கழிஞ்சு அடுத்த வாரம் போகப் போருனும். அவனிடத்தில் ஏதாவது கொடுத்தனுப்ப வேண்டாமா?''

''கொடுத்தனுப்பணும்.''

''கொடுத்தனுப்பணுமுன்னு சொன்னல் மட்டும் போதுமா?''

''நான் அங்கே நிரந்தரமாகத் தங்கறதுக்காகவா போறேன்? இரண்டு மூணு நாட்களுக்குள்ளே வந்துவிடுவேன் !''

மாத்யு தோட்ட வாயிலைத் தாண்டிப் போவதைப் பார்த்துக் கொண்டே தீனும்மா நின்ருள்.

# மூன்று

சந்து வழியின் இரு மருங்கிலும் தாழைப் புதர் செறிந்திருந்தது. எவரேனும் மறைந்திருந்து தாக்கினல் தொலைய வேண்டியதுதான். 'நாருணமூழி' சேகரன் நாயருக்கும் அவனுடைய ஆட்களுக்கும் இடையே பகை இருந்தது. தாமஸைத் தீர்த்துக் கட்டுவதாகச் சொல்லிக் கொண்டு சில நாட்கள் திரிந்தான். பெரிய பயில்வான்! ஆனல், தன்னைப் பயில்வான் என்று சொல்லிக் கொண்டிருந்தவன், ஒரே அடியில் மல்லாந்து விழுந்தான்...என்னவானலும் மடக்குத் கத்தி திறந்தபடியே கையில் இருக்கட்டும். யாராவது பார்த்தால் நகம் வெட்டலாம்; அல்லது பாக்குச் சுரண்டலாம்...போடா போ...

படையெடுத்து வருவதுபோல் அந்தக் கிராமத்தார் திரண்டு வந்தனர். தலைவன் 'நாருணமூழி' சேகரன் நாயர். ஆராம் அரசன் பென்ஹதத் தன் முப்பத்திரண்டு சிற்றரசர்களுடனும், குதிரைகளுடனும், தேர்களுடனும் இஸ்ரவேல் அரசனை ஆகாபிடம் போர் செய்யப் புறப்பட்டது போன்ற காட்சி. கர்த்தர் ஆகாபிடம் 'இந்த மகா சங்கத்தை உன்னிடம் ஒப்படைப்பேன்' என்று கூறினர். அதன்படியே இஸ்ரேலியர்கள் ஆராம் அரசனையும் குதிரைகளையும் தேர்களையும் சிறைப் பிடித்தனர்.

''தாத்தா!''

''உம், உம்.''

''தூங்குறீங்களா?''

''இல்லையே.''

''எவ்வளவு நேரமாகக் கூப்பிடறேன்.''

''நீ எப்போ வந்தே?''

''கொஞ்சம் முன்னே.''

''உன் வீட்டுக்காரர் எங்கே ?

''.. ......''

''குழந்தைகளை அழைச்சிட்டு வரலையா?''

ஸிஸிலி கண் இமைக்காமல் தாத்தாவின் முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டு நின்றாள். அவளுக்குச் சற்று அச்சம் தோன்றவே, உரக்க ''அம்மா!'' என்று கூவினாள்.

''என்ன கண்ணா!''

தீனம்மா ஓடி வந்தாள்.

''தாத்தா என்னைப் பயமுறுத்துறார், அம்மா !''

''பயமுறுத்தினாரா?''

''கண்ண மூடிப் படுத்துக்கிட்டே வீட்டுக்காரர் எங்கேன்னு கேட்கிறாரு.''

தீனம்மா சிரித்தாள்.

''தாத்தா அபின் தின்னுட்டு மயக்கமாகப் படுத்திருக்காரடீ, என் சின்னக்குட்டி!''

''ஏ...ஏ .. ஏ...?''

''மாமா! சின்னக்குட்டியிடத்தில் என்ன கேட்டீங்க?'[3]

''சின்னக்குட்டியா ?''

''வேறு யாருன்னு நினைச்சீங்க?''

''நான் குஞ்சம்மாவை நினைச்சுக்கிட்டுப் படுத்திருந்தேன்.''

''அது சரி, குஞ்சம்மா கல்யாணம் நிச்சயமான உடனேயே இறந்து போனாங்களே! அவங்க வீட்டுக்காரரைப் பற்றிக் கேட்டது...?''

''ஆ...குஞ்சம்மா புகுந்த வீட்டிலிருந்து வருகிறாப் போலே கனவு கண்டேன். நீ பார்த்திருக்கிறாயா அவளை?''

''நல்ல வேடிக்கை! உங்க பிள்ளையைவிட நாலு வயசு சின்னவளுன்னு சொல்லியிருக்கீங்க, கல்யாணம் நிச்சயமான சில நாட்களுக்கெல்லாமே போனாங்கன்னும் சொல்லியிருக்கீங்க. அப்படியிருக்கும்போது எப்படி மாமா, நான் பார்த்திருக்க முடியும்?''

''குழந்தையாக இருக்கும்போது உன் சின்னக்குட்டியைப் போலவே இருந்தாள் அவள். அவளுக்குப் பத்து வயசு இருக்கும்

போது உன் மாமி இறந்து போனுள். அதற்காகத் தாயில்லாத குறை தெரியாம வளர்த்தேன். ஐந்து அண்ணன்களுக்கு ஒரே செல்லத் தங்கை. தரையிலே மேனி படாமல் அவளே வளர்த்தோம். அவளுக்குப் பத்து வயது ஆனதிலிருந்து என்ன காரியமாக இருந் தாலும் அவளிடம் சொல்லாமலிருக்க மாட்டேன். அவள் அண்ணன் மாருக்கும் என்னிடம் ஏதாவது ஆகவேண்டியிருந்தால் தங்கை யிடத்தில் சொல்லித்தான் சரிக்கட்டுவார்கள். பதினுலு பதினைந்து வயசில் 'பிளௌஸ்' அணிந்து, 'கச்சை முண்டு' உடுத்தி மாதா கோவிலுக்குச் செல்லும் காட்சியைப் பார்ப்பவர்கள் அத்தனை பேரும் வைச்ச கண் எடுக்காமல் பார்த்துக்கிட்டே இருப்பாங்க பெண்ணுக்குப் பையனைத் தேடிப் போகிறதுதானே நம்ம வழக்கம். ஆனுல், இவளைத் தேடிப் பையன் வீட்டுக்காரர்கள வரத் தொடங் கினுங்க ! அதுவும் ஒன்றல்ல, மூன்று பேர் ! ஆயிரத்து ஒரு ரூபாய் வரதட்சிணை என்று தீர்மானம், அந்தக் காலத்து ஆயிரம் இந்தக் காலத்துப் பதினுயிரத்துக்குச் சமமுன்னு தெரிஞ்சுக்கோ. பையனுக் குக் குமாஸ்தா வேலை. இப்போ ரிஜிஸ்தரார்! அவன் மட்டும் இப்போ உயிரோடிருந்தால் என் தலைமாட்டை விட்டு இந்தப் பக்கம் அந்தப் பக்கம் நகர்ந்துகூட இருக்க மாட்டாள். கடவுள் எனக்கு அந்தப் பேற்றைத் தரவில்லை. என்ன மாயை! ஞானி களின் அரசனுன பிரசங்கி கூறுகிறுர்: 'வானத்தின் கீழ் நடப்ப வற்றை விசாரித்து ஞானமாய் ஆராய்வதில் நான் என் மனத்தைச் செலுத்தினேன்.' இது கடவுள் மனிதருக்குக் கொடுத்துள்ள பெரிய தொல்லை தான்! எல்லாம் மாயை; காற்றைப் பிடிக்க வேட்டையாடுதலாம். அதற்காக முயற்சி செய்யாம்ம இருக்க முடியுமா? 'நீ பாடுபட்டுப் புசிப்பாய்' என்பது கர்த்தரின் சாபம். அது எப்படிப் பலிக்காமல் போகும்? பிரசங்கி மேலும் கூறுகிறுர்: 'சூரியனின் கீழ் மாயையான மற்றொரு காரியத்தையும் கண்டேன். ஒன்றிக்கட்டை ஒருவன் இருக்கிறுன். அவனுக்கு மகனுமில்லை சகோதரனுமில்லை. அப்படியிருந்தும் அவன் படும் வேதனைக்கு முடிவு இல்லை. அவன் தன் செல்வத்தைக் கண்டு திருப்தியாவதும் இல்லை...''

''மாமா!''

''உம்.''

''அதிகமாகப் பேசாதீங்க. களைப்பாயிருக்கும். கொஞ்ச நேரம் பேசாமல் படுங்க.'

''சரி.''

''சின்னக்குட்டிக்குச் சோறு போடப் போறேன். உங்களுக்கும் போடட்டுமா?''

''போடு.''

''தாத்தாகூடச் சாப்பிடறியா. லிஸி !''

''ஊஹூம்.''

''ஏன்?''

''என்னை ஏன் பயமுறுத்தினர்?''

''அஹா... கோவமா? மாமா, கேட்டீங்களா?''

''என்ன?''

''சின்னக்குட்டிக்குத் தாத்தாவோடு கோவமாம்.''

''அப்படியா? அவளும் கோவிச்சுக்கிட்டாளா?''

''இனிமேல் நான் தாத்தாவோடு சேர மாட்டேன். என் ராஜண்ணன் பட்டாளத்திலிருந்து வரும்போது கொண்டு வரதைத் தாத்தாவுக்குத் தரமாட்டேன்.''

''என்ன சொல்றள்?''

''அவள் ராஜண்ணன் கொண்டு வரதை உங்களுக்குத் தர மாட்டாளாம்.''

''அப்போ, இனி நான் என்ன செய்ய?''

தீனும்மா சமையல் அறைக்குப் போனுள். குஞ்சுனைனை கூப்பிட்டார் :

''சின்னக் குட்டி!''

லிஸி ஏன் என்று கேட்கவில்லை.

''குட்டி!''

''என்ன?''

''தாத்தா இறந்து போனல் அப்புறம் யாரோடு கோவிச்சுப் பாய் ?''

''என்னைக்கு இறந்து போவீங்க ?''

''...ம்.. ஆண்டவருக்குத்தான் தெரியும்.''

''இனிமேல் என்னைப் பயமுறுத்துவீங்களா ?''

''தாத்தா ஏதோ நினைவில் சொன்னதுதானே!''

''கனவு கண்டீங்களா ?''

''ஆமாம், அன்னைக்கு ஒரு நாள், உன் கல்யாணத்தில் காரில் ஏறிப் போறதாகக்கூடக் கனவு கண்டேன்.''

''எப்போ கல்யாணம்?''

''ஆ...?''

''கல்யாணத்தின்போது என்னையும் காரில் அழைச்சிட்டுப் போறீங்களா?''

''என்ன சொன்னே?''

''கல்யாணத்தின்போது என்னையும் காரில் அழைச்சிட்டுப் போறீங்களான்னு...''

குஞ்சுநைனு உரக்கச் சிரித்தார்.

''கல்யாணப் பெண்ணுக்கு இல்லாத காரா? உன்னைச் சிங்காரிச்சு, 'பெஸல்' காரிலேயல்ல, அழைச்சிட்டுப் போவாங்க ?''

ஸிஸிலிக்கு மீண்டும் சந்தேகம் ; தாத்தா மறுபடியும் பயமுறுத்துகிறாரா? இல்லாவிட்டால் காரில் போகிறதைப்பற்றிப் பேசும்போது ஏன் சிரிக்கவேண்டும் ?

தீனும்மா சமையல் அறையிலிருந்து வந்தாள்.

''மாமா, சோறு பரிமாறி வைச்சிருக்கேன்'' என்றாள்.

குஞ்சுநைனு கைத்தடியை ஊன்றி மெல்ல எழுந்தார். சாப்பிட்டு எழுந்திருக்கையில் முற்றத்தில் யாரோ கூப்பிடும் குரல் கேட்டது.

''குஞ்சுநைனு !''

''யாரு ?''

கைத்தடியை 'டக் டக்' என்று தட்டி வரும் சத்தம். பக்கத்தில் வந்தபோதுதான் யாரென்று தெரிந்தது. 'நேர்மையாளன்' கொச்சுப்பாப்பி.

''அ...நீ இன்னமுமா இந்த உலகத்தில் இருக்கிறாய்?''

''அப்படித்தான் தோணுது.''

''நேற்றும் உன்னைப்பற்றி நினைச்சேன். அப்படி நினைக்கக் காரணமும் இருக்கு. நேற்று இங்கே ஒருத்தன் கல்யாணத்துக்கு அழைக்க வந்திருந்தான்."

''யாரு?''

''நம்ம நீளமாத்தனை உனக்கு ஞாபகம் இருக்கா? அவன் மகன். அவன்தான், உன்னிடம் வேலை செய்து கொண்டிருந்தானே ஒருத்தன் - மிளகு வாரிப் போட்டுக் காய வைக்கிற வேலை. என்ன அவன் பேரு?''

''கொச்சாயி.''

''ஆ...அவனே தான்.''

நேர்மையாளன் கொச்சுப்பாப்பி தலையசைத்தவாறு கூறினான்.

''அவன் பிள்ளைக்குக் கல்யாணம்!''

''ஆமாம். ஆளை அடையாளமே தெரியலை. கடிகாரம் என்ன; செருப்பு என்ன? சரிகை அங்கவஸ்திரம்! தங்கச் செயின் வேறு! ஒண்ணும் சொல்லாதே!''

''வரதட்சிணை பதினாயிரம்.''

''சொன்னான். காலம் போகிற போக்கு! நீ ஒண்ணே அரையோ *சக்கரம் கொடுத்துக் கொண்டிருந்ததனால்தானே அவன் அம்மாவும், சின்னத் தம்பிகளும் கஞ்சியோ கூழோ குடிச்சு வாழ முடிந்தது? அந்த நீளமாத்தன் கள்ளையும் குடிச்சுக் கண்ட கண்டவனிடம் அடி வாங்கித் திரிந்து கொண்டிருந்தான், இவன் நிலை இப்படி உயருமுன்னு யாராவது நினைச்சாங்களா? துன்பத் துக்கு ஒரு காலம், இன்பத்துக்கு ஒரு காலம். விதைக்க ஒரு காலம், அறுக்க ஒரு காலம்.''

''உண்மைதான்.''

''நீ அந்தக் காலத்தில் கஞ்சித்தடத்து ஈஸப்பிடமிருந்து இருபத்து அஞ்சு *சர்க்கார் ரூபாய். வாங்கிப் பத்தாவது நாள் இருபத்து அஞ்சு பிரிட்டிஷ் ரூபாய் திருப்பிக் கொடுத்துக் கொண்டி ருந்தாய். வாங்கினதும் கொடுத்ததும் தவிர வேறு என்ன மிச்சத் தைக் கண்டாய்? நேர்மை அளவுக்கு மிஞ்சினால் இப்படித்தான்!''

''சரிதான். ஆனால் நேர்மைக்கு மாறாகப் போக எனக்குத் தெரியாது.''

''என்ன?''

''நேர்மைக்கு மாறாகப் போக எனக்குத் தெரியாது.''

''நேர்மைக்கு மாறு என்றால் என்ன அது?'

''நீயே சொல்லு.''

''வியாபாரம் என்பது நேர்மைக்கு மாறில்லையா? நீ கீழாற்றங் கரையை சந்தில் தராசையும் கூடையையும் வைச்சுக்கிட்டு உட் கார்ந்திருக்கிறாய். அப்போது பன்றிக்காட்டிலிருந்து ஒருத்தன் ஒரு சின்னக் கூடையில் அரைப்படி மிளகு கொண்டு வருகிறான். வாங்கி விற்றால் ரெண்டு சக்கரம் கிடைக்கும். நியாயமான லாபம் நாலு காசு. ஆனால், நீ ஒண்ணேமுக்கால் சக்கரம் கொடுத்து வாங்குவியா? மாட்டாய். முதலில் எட்டுக் காசு விலை பேசுவாய்.

---

* பழைய திருவிதாங்கூர் ஸம்ஸ்தானத்தில் இருந்த ஒரு நாணயம்.

* திருவிதாங்கூர் ஸம்ஸ்தானத்தில் மட்டும் புழக்கத்தில் இருந்த நாணயம். இதன் மதிப்பு மற்ற ரூபாயைவிடக் குறைவு.

அதிகம் ஆனால் ஒரு சக்கரத்துக்கு வாங்குவாய். இது நேர்மைக் கேடுதானே?''

''இப்படியெல்லாம் பார்த்தால் நடக்குமா?''

''பின்னே எப்படியெல்லாம் பார்க்கணும்? டேய், சாமர்த்தியம் இல்லாதவனைத்தான் நேர்மையாளன்னு சொல்லுவாங்க. துணிவில்லாதவன் அடக்கமானவன். நாலுபேரு மத்தியிலே பேசத் தெரியாதவன் அவையடக்கம் தெரிஞ்சவன். என்ன சரிதானே?''

''சரியாக இருக்கலாம்.''

''வாழறதுக்குக் கொஞ்சம் வித்தையெல்லாம் வேணும். ஆகமத்துக்கு விரோதமாகப் போகக் கூடாது. விதவைகளையும் அனாதைகளையும் துன்புறுத்தக் கூடாது. முயற்சி வேணும்; கொஞ்சம் தந்திரமும் வேணும். போரில் தந்திரமில்லையா? வாழ்க்கையும் ஒரு போர்தான். தந்திரம் தெரியாதவனைப் பகைவன் வெட்டி வீழ்த்திவிடுவான். அவமானம், பைத்தியம் என்றெல்லாம் சில பேருங்க சொல்வாங்க. அதில் அப்படி ஒண்ணும் அர்த்தமில்லே. நாயைத் தின்னாலும் பத்து நாள் பைத்தியம்தான். நான் வெட்டியாற்று நிலம் வாங்கின கதை உனக்குத் தெரியுமா?''

'எப்பொழுதாவது சொல்லியிருப்பாய், இருந்தாலும் இன்னுமொரு தடவை சொல்லு' என்று பொருள்படக் கொச்சுப்பாப்பி உட்கார்ந்தான். 'என்னவானாலும் உன்னிடமிருந்து தப்புவது எளிதல்லவே!'

''ஆனால், குஞ்சுனைனாவுக்குக் கதைகள் சொல்றதுக்கு முன் போல் தெம்பு இல்லே. பெருமூச்சு விடறார்.'' தீனம்மா சமையல் அறையிலிருந்து வந்து சொன்னாள் :

''மாமா! சாப்பிட்ட பிறகு இப்படி விடாமல் பேசிக் கொண்டிருந்தால். அப்புறம் களைப்பாயிடும். கொஞ்ச நேரம் சும்மா படுத்துக்குங்க. பத்து அடி நடந்தால்கூடத் தலை சுற்றுதே.''

''ஆ.. ஒண்ணும் களைப்பாயிடாது. நீ அந்தப் பக்கம் போ. பேசாமலும், வாய் திறக்காமலும் இருந்தால் மட்டும் சாகமாட்டாங்களா? ஆதாமைப் போலத் தொள்ளாயிரத்து முப்பது ஆண்டு ஆண்டவர் நம்மை உயிரோடு வைக்கப் போறாரா? இல்லே. அப்போ ஆறு மாசம், ஒரு வருஷம் அதிகப்படுத்திக் கிடைக்கறதில் என்ன லாபம்? ஏண்டா, அப்படித்தானே? ஆ...நான் என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்? வெட்டியாற்றில் மோர் விற்கிற ஒரு நாயர் இருந்தான்...''

தீனும்மா நேர்மையாளன் கொச்சுப்பாப்பியிடம் கேட்டாள் :

''சிற்றப்பா, வெற்றிலை போடறீங்களா?''

''இருந்தால் கொடு. இடிக்கணும்.''

''ஒருபடிப் பாலை மோராக்கி ஒரு கலயத்தில் ஊற்றி, அதை ஒரு கூடையில் வைத்துக்கொண்டு ஒன்றுவிட்டு ஒருநாள் இந்தப் பக்கம் வருவான். வழியெல்லாம் நாலு காசுக்கும், எட்டுக் காசுக்கும் மோரை விற்று அந்தி மயங்கும் நேரத்தில் உப்பும், மிளகும், மற்றச் சாமான்களும் வாங்கிக்கொண்டு ஊர் திரும்பு வான். அந்தக் காலத்தில் இப்படியெல்லாம் நடந்து விற்றால் என்ன கிடைக்கும்? ரெண்டோ நாலோ சக்கரம்! ஒருநாள் அந்த நாயர் – என்ன பேரு சொன்னேன்? சங்கரன் நாயர்தானே? சங்கரன் நாயர் என்னிடத்தில் வந்து 'குஞ்சுநைனு! எனக்கு ஓர் உதவி செய்யணும், ஐம்பது ரூபாய் இருந்தால் கொடுங்க. பெண்டாட்டி ஆசுபத்திரியிலே படுத்துக் கிடக்கிறள். மருந்து வாங்குறதுக்குப் பணம் இல்லை' என்று சொன்னான். பயறும் கொள்ளும் வாங்கி வியாபாரம் பண்ணினதில் கிடைச்ச பணம் கொஞ்சம் என்னிடத்தில் இருந்தது. ஆனால் சும்மாப் பணம் கொடுக்க முடியுமா? அதுக்கு ஒரு வழியும் அந்த நாயரே சொன்னான். அஞ்சு பறை விதை விதைக்கிற நிலம் இருக்கிற தாம். ஏழு பேருக்கு அதில் உரிமையாம். தனது உரிமையை அவன் விலைக்குத் தருவானும். மற்ற உரிமை அவனுடைய ரெண்டு சகோதரிகளையும் அவங்களுடைய நான்கு குழந்தைகளை யும் சேர்ந்ததாம். அவங்க இருக்கிறது சேய்ப்பாட்டுரில். நிலத் தைக் குத்தகைக்குத் தருவதாகவும், மற்றவங்களுடைய குத்தகை நெல்லை அவங்களுக்குக் கொடுத்தால் போதுமென்றும் நாயர் சொன்னான். 'நமக்கு ஏன் இந்த வம்பு! பாடுபட்டுத் தேடிய பத்துக் காசு நீர்மேல் எழுத்து ஆகக் கூடாதே' என்றெல்லாம் யோசித் தேன். தென்கிழக்கு வீட்டுப் பெரியவர் அப்போது உயிரோடு இருந்தார். பெரிய வக்கீல் அவர். அவரிடத்தில் போய் யோசனை கேட்டேன். அவருடைய 'லா'வையும் சட்டநுட்பத்தையும் கேட்டால் வாங்குவது அவ்வளவு சரியில்லைதான். 'வம்பில்லாவிட் டால் சரி, அப்புறம் உன் இஷ்டம்' என்றார். சின்ன வயதிலிருந்தே என்னிடத்தில் ஒரு குணம். எவ்வளவு பெரிய கெட்டிக்காரனை இருந்தாலும், அவன் பேச்சைக் கண்ணை மூடியபடி ஒப்புக்கொள்ள மாட்டேன். நல்லதுன்னு படுவதை மட்டும் எடுத்துக் கொள்

வேன். இஸ்ரேலிலிருந்து கனான் நாட்டுக்குப் புறப்பட்ட மக்களுக்குக் கர்த்தர் வழி காட்டியாக இருந்ததுபோல் என்னுடைய எல்லாக் காரியங்களிலும் ஆண்டவர் என்னுடன் இருக்கிறார் என்ற ஒரு நம்பிக்கை எனக்கு. கேசவன் நாயருக்குப் பணம் கொடுத்தேன்...''

கொச்சுப்பாப்பி தவறு திருத்தினான் :

''சங்கரன் நாயர்.''

''ஆமாம், சங்கரன் நாயர்தான். சொன்னபடி அவன் தனது எல்லா உரிமைகளையும் விட்டுத் தந்தான். நெற்பயிர் விளைமுற்றி நிற்கும் காலம், அது. அறுவடையானதும் நம்ம பாறைவீட்டு உம்மிணியோடு ஒரு காளை மாட்டையும் ஓட்டிக்கொண்டு நிலம் உழுவதற்குப் போனேன். சங்கரன் நாயருடைய கை சோர்ந்திருந்தாலும் அவன் உறவினர்கள் நல்ல நிலைமையில் வாழுபவர்கள். எங்கிருந்தோ வந்த கிறிஸ்தவன் அத்துமீறி நாயர்களுக்குச் சொந்தமான நிலத்தை உழுவதைப் பார்த்துக் கொண்டு அந்த ஊர் நாயர்கள் சும்மா இருப்பார்களா? ஒரு குண்டன் இறங்கி வந்து 'நீ யாரடா' என்று கேட்டான். கூட்டம் கூடியது. பேச்சு முற்றியது. நியாயமெல்லாம் பேசி வந்தபோது அந்த ஊர் ஜனங்கள் ஒரு கேள்வி கேட்டார்கள். 'சேய்ப்பாட்டூர்'க்காரர்கள் குத்தகைக்கு விட்டதற்கான பத்திரம் இருக்கா?' என்று. சரியாக மாட்டிக் கொண்டேன்! சுருக்கமாகச் சொன்னால், காளையோடு நான் வந்த வழியே திரும்பினேன். யாரோ சொன்னாற்போல் 'கறக்கிற மாட்டைக் கொடுத்து முட்டும் காளையை வாங்கிய' கதை.''

குஞ்சுநைனா சற்று நேரம் களைப்பினால் வாளாவிருந்தார். 'பேசாதீங்க' என்று விலக்கிய தீனம்மாவும் கதவுக்குப் பின் மறைந்து நின்று கதை கேட்டுக் கொண்டிருந்தாள். இந்தப் பழங்கதைகள் இப்போதும் சுவை குன்றிவிடவில்லை! மாமா வலுக்குன்றிப் போய்விட்டார்! இல்லாவிட்டால் கதை சொல்லும் போது அதற்கு ஏற்றாற்போல் அங்கங்களை அசைத்து நடிக்கவும் செய்வார்,

குஞ்சுநைனா மீண்டும் கதை சொல்லத் தொடங்கிய போது சிவராம குறுப்பு வந்தான். அவன் நடையிலேயே ஒரு தாளம். காலோசை கேட்டாலே யாரென்று தெரிந்துவிடும். தீனம்மா உள்ளே போனாள்.

''குறுப்பு! வா ஐயா, உட்கார்.'' இப்படிச் சொன்னவன் நேர்மையாளன் கொச்சுப்பாப்பி. குஞ்சுநைனா கவனித்ததாகவே

காட்டிக் கொள்ளவில்லை. அவர்தான் கதை சொல்வதில் மூழ்கி யிருக்கிறாரே...

''நான் வீட்டுக்குத் திரும்பவில்லை. காளையைக் கொச்சு கிருஷ்ணனிடத்தில் கொண்டு போகச் சொன்னேன்......''

''எந்தக் கொச்சு கிருஷ்ணன்?''

''காளைக்காரன் - சுக்குன்னு சொன்னால் உனக்குக் கொக்குன்னு கேட்கும்!''

''உம்மிணின்னு சொல்லு;''

''ஆ, உம்மிணியின் அண்ணன்தான் கொச்சு கிருஷ்ணன். நான் நேராகச் சேய்ப்பாட்டுருக்குப் போனேன். என் மனத்திலே ஒரே குழப்பம். எப்படியாவது தப்பினால் போதும். நிலம் வேண்டாம்; பணம் கிடைச்சால் போதும் என்று எண்ணினேன். விலாசம் கேட்டுத் தெரிந்துகொண்டு அங்கே போய்ச் சேர்ந்தேன். அவர்கள் நல்ல நிலைமையில் வாழும் நாயர்கள். அவர்களில் ஒருவனைச் சரிக்கட்டினேன். அவன் பெரிய சட்டாம்பிள்ளை. கொஞ்சம் குடிக்கிறவனும்கூட. அவனை அழைச்சுப் போய் நல்லா 'விருந்து' வைச்சேன். சுருக்கமாகச் சொன்னால், குத்தகைப் பத்திரம் எழுதி வாங்கி வரப்போன நான் சல்லிக்காசுகூடக் கொடுக்காமல் முழு உரிமையையும் விலைக்கு எழுதி வாங்கி வந்தேன். அப்புறம் விலையை நாலைந்து தடவைகளாகத்தான் கொடுத்துத் தீர்த்தேன்.''

சிவராம குறுப்பு சொன்னான் :

''நான் இதையெல்லாம் எத்தனையோ தடவை கேட்டிருக்கிறேன்.''

''என்ன?''

''இந்தக் கதையெல்லாம் எத்தனையோ தடவை கேட்டிருக்கிறேன் என்று சொன்னேன்!''

''கேட்டிருக்கலாம். தற்பெருமை ஒண்ணும் இல்லை; இருக்கா?''

''இல்லவே இல்லை.''

நேர்மையாளன் கொச்சுப்பாப்பி எழுந்தான்.

''நான் போய் வரேன். ஓர் ஆடு இருக்கு. அது என்னடான்னா, காராமணிப் பயிரெல்லாம் தின்னுட்டுது. கை எட்டும் இடத்திலிருந்து கொஞ்சம் பலா இலையைப் பறிச்சுக் கொடுக்கலாமுன்னு கிளம்பினேன்...''

கொச்சுப்பாப்பி போனவுடன் குஞ்சுறைநு கேட்டார் :

''அது கிடைச்சுதா, குறுப்பு ஐயா?''

''கிடைத்தது. அதில்லாமல் நான் வருவேனு? கொய்யாப் பள்ளி வரையிலும் போனேன், இதுக்காக.''

சிவராம குறுப்பு மடியிலிருந்து பொட்டலத்தை எடுத்துக் கொடுத்தான்.

''இன்னைக்கு இல்லையேன்னு கவலைப்பட்டுக் கொண்டிருந் தேன். இதில்லாமல் இருக்க முடியலே, குறுப்பு! சின்ன வயசிலி ருந்து ஏற்பட்ட பழக்கம். கதை தெரியுமா?''

''சொல்லியிருக்கிறீர்கள்.''

''ம்...என்னவெல்லாம் செய்திருக்கேன்! எல்லாமே நேற்று நடந்ததுபோல் தோணுது. எண்பது தொண்ணூறு ஆண்டு என் றெல்லாம் சொல்வது நொடியில் வந்து போனதைப் போல இருக்கு.''

'ஆனல் யாராவது அதைப்பற்றி நினைக்கிருர்களா? மனிதன் தலைதெறிக்க ஓடறதைப் பார்த்தால் உலகத்தின் முடிவுவரையில் அவன் இருக்கப் போவதைப்போல் அல்லவா இருக்கிறது!''

''அதுதான் மாயை! மாயைக்குப்பின் மனிதனைக் கடவுள் ஓடவைக்கிருர் — பலா இலைக்குப் பின்னலே ஆடு ஓடுவதைப் போல ''

''உண்மை, உண்மை ''

''குறுப்பு மாமா!''

சமையல் அறையிலிருந்து ஸிஸிலி ஓடோடியும் வந்தாள்.

''ஸிஸிலிக்குட்டி, வா, வா!''

குறுப்பு ஸிஸிலியைத் தூக்கித் தன்மடிமீது உட்கார வைத்துக் கொண்டான்.

''நான் உட்கார மாட்டேன். அன்னைக்குக் கதை சொல் றேன்னு என்னை ஏமாற்றினீங்களே !''

''அவ்வளவுதானே ? ஸிஸிலிக்குட்டிக்கு எத்தனை கதை வேணுமானலும் சொல்கிறேன். அரச குமாரன் அரச குமாரி கதை. மண்ணங்கட்டியும் இலைச்சருகும் சேர்ந்து காசிக்குப் போன கதை...சரி, கதை சொன்னல் மாமாவுக்கு என்ன தருவாய்?''

''பாயசம்.''

''எங்கே?''

''அம்மா அவிக்கிருங்க.''

சிவராம குறுப்பு உரத்த குரலில் சிரித்தான் ?

''அ...ஹா'' ஸிஸிலி அம்மா பாயசம் அவிக்கிறார்களா ? தின்றுவிட்டே போகலாம் !''

குறுப்பு உரத்த குரலில் சொன்ன போதுதான் குஞ்சுநைநு கேட்டார் ; அவரும் சிரித்தார்.

ஸிஸிலி கேட்டாள் :

''பின்னே எப்படியாம்? பாயசம் சுடுவாங்களா?''

அன்புடன் சிவராம குறுப்பு ஸிஸிலியின் கன்னத்தில் ஒரு முத்தம் கொடுத்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் குஞ்சுச்செறுக்கன் அங்கே வந்தான். அவனுடைய கையில் ஓர் இலைப் பொட்டலம் இருந்தது. பாயசம் குடித்துவிட்டே சிவராம குறுப்பு செல்லலாம் என்று நினைத்தான். ஆனால், குஞ்சுச்செறுக்கனைப் பார்த்ததும் சட்டென விடைபெற்று எழுந்தான். அதற்கான காரணமும் இருந்தது. இருவருக்கும் மனத்தாங்கல். நண்பர்களாக இருந்தனர். ஏதோ தகராறில் நட்பு முறிந்தது. குஞ்சுச்செறுக்கன் வாய்க்கு வந்ததைப் பேசக் கூடிய ஆசாமி என்று சிவராம குறுப்புக்குத் தெரியும். எனவே அங்கிருந்து போய்விடுவதுதான் நல்லது என்று முடிவு கட்டினான்.

குஞ்சுச்செறுக்கன் கேட்டான் :

''அப்பா! ஏன் இப்படிப் படுத்திருக்கீங்க?''

நல்ல கேள்வி ! வேறு என்ன செய்யணும் ? எழுந்து ஓடணுமா ?

''எழுந்திருந்து உட்கார முடியலியா?''

''......''

''அப்பா!''

''உம்.''

''இதோ கொஞ்சம் கறி. கன்னுக்குட்டியுது. கொச்சுக்குட்டியும் வேறு சிலரும் வாங்கி அறுத்ததிலிருந்து வாங்கி வந்தேன்.''

குஞ்சுநைநு முகத்தைத் திருப்பி இலைப் பொட்டலத்தைப் பார்த்தார். இஸ்ரேலியர்களுக்காக வானத்திலிருந்து 'மன்னு' இறங்கி வந்ததுபோல் வியப்பாக இருக்கிறதே தூண்டிலில் வைத்துள்ள இரை; குறி என்னவோ ?

''தீனும்மா! இதை வாங்கி உள்ளே வை.''

தீனும்மா வெளியே வந்து பொட்டலத்தை வாங்கிக் கொண்டாள்.

''மிளகும் தனியாவும் சேர்த்து நல்லா இதை வறுத்து அப்பாவுக்குக் கொடு. எப்படியெல்லாம் பணத்தைச் செலவு செய்து சாப்பிட்டு வாழ்ந்த அப்பா! என் நிலைமை இப்படியாகி விட்டதே! இல்லாவிட்டால் என் அப்பாவை இப்படித் தவிக்க விடுவேனா? போன ஆவணி மாசத்திலிருந்து பழையகுளம் ராம கிருஷ்ணன் கடையிலேதான் கடனுக்கு மளிகை வாங்குறேன். கொடுத்தும் வாங்கியும் அறுபது ரூபாய் வரையில் கடன் ஏறிப் போச்சு. அவனுக்கு இப்பவே பணம் வேணுமாம். 'போடா'ன்னு சொன்னால் நடக்குமா? இனிமேலும் வாங்கணுமே! வேறு யார் தருவாங்க?''

அப்பா ஏதாவது கூறுவாரோ என்று எதிர்நோக்கி குஞ்சுச் செறுக்கன் இரண்டு நிமிடம் நின்றான். புகையேறிக் கறுத்துப் போயிருந்த மேற்கூரையை நோக்கியபடியே குஞ்சுநைனா படுத் திருந்தார். செல்லரித்துப் போயிருக்கிறது கூரை !

''நான் போய் வரேன் அப்பா! யாரிடமிருந்தாவது கொஞ்சம் பணம் கடன் கிடைக்குமான்னு பார்க்கணும்.''

''போய் வா.''

குஞ்சுச்செறுக்கன் தோட்டத்தின் வாயில் வரை சென்றவன் திரும்பி வந்தான்.

''அப்பா !''

''உம்.''

''அன்னைக்குப் பிலிப்பு தந்த பணம் உங்கள் கையில் இருக்கா? பையனிடமிருந்து பணம் வந்தால் திருப்பிக் கொண்டு வந்து தறேன்.''

''என்ன?''

பணிவுடன், அமைதியாகக் குஞ்சுச்செறுக்கன் மீண்டும் விஷயத்தைக் கூறினான். பிறகு அடக்கத்தோடு பதிலுக்காகக் காத்து நின்றான்.

குஞ்சுநைனா உள்ளூறச் சிரித்துக் கொண்டார். பரவாயில் லையே? அப்படியா சமாசாரம் ?

இங்கேயும் யாக்கோபு எசாக்கை ஏமாற்றி ஆசீர்வாதம் பெற்ற கதைதான்! யாக்கோபுக்குத் தந்தையின் ஆசீர்வாதமும் அண்ண னின் உரிமைகளும் கிடைத்தன. உனக்கு வேண்டியது சில்ல றைக் காசு !

''அது எங்கே இருக்கப் போறது? எல்லாம் செலவாயிருக்கும்.''

''அப்போ, நான் போய் வரட்டுமா?''

பாவம்! இரக்கம் தோன்றியது. இரை தேடுவதற்குக் கற்றுக் கொடுத்த கோழிக்குஞ்சின் தந்திரமல்லவா இது? ஆனால் இவனுக்கு முறத்தில் ஏறிக் கொத்தத்தான் தெரியும்...

''பொண்ணூ!''

''என்ன மாமா?''

''என் பிள்ளை பிலிப்பு கொண்டுவந்து தந்த பணத்திலே எவ்வளவு மிச்சமிருக்கு ?''

''நாற்பதோ ஐம்பதோ இருக்கும்.''

''அதை எடுத்துவந்து உன் மைத்துனருக்குக் கடனாகக் கொடு.''

தீனம்மா சற்றுத் தயங்கினாள், கடவுளே, இது திரும்பி வராதே !

''கொடம்மா, நாளைக்கோ, மறுநாளோ பையனிடமிருந்து ரூபாய் வந்ததும் கொண்டு வந்து தருவான்.''

தீனம்மா கொண்டுவந்து தந்த பணத்தை வாங்கிக் கொண்டு, தான் செய்வது பெரும் தவறுதான் என்பது போல முகத்தை வைத்துக்கொண்டு குஞ்சுச்செறுக்கன் விடைபெற்றான். தோட்ட வாயில் வரை போனவன் மறுபடியும் திரும்பி வந்தான்.

''அப்பா! இப்படிச் சொல்றேன்னு நீங்க தப்பா நினைக்கக் கூடாது, தீனம்மா! நீயும் கேட்டுக்கோ. உனக்கும்தான் சொல்றேன். அந்தக் குறுப்பு ஏன் எப்போதும் இங்கே வரான்? அவனை வீட்டு வாசற்படி ஏறவிடுவதே தப்பு. நம்மை அடிப்பதற்குக் கிராமத்தாரை எல்லாம் கூட்டிக்கொண்டு வந்த வீட்டில் பெண் எடுத்தவன் இவன். அப்பாவோடு பேசறதுக்கு நம்மவங்க யாருமே இல்லையா? யாரும் இல்லாவிட்டால் நான் வந்து உட்காருகிறேன்......''

''உம்.''

''நான் எப்போது வந்தாலும் அவன் இங்கே இருக்கிறான். அவனுக்கு இங்கே வரவேண்டிய வேலை?''

''நீ போய் ராமகிருஷ்ணன் பணத்தைக் கொடு. எனக்குத் தைலமும் மருந்தும் வாங்குறதுக்காக வைச்சிருந்த பணம் அது திங்கட்கிழமை தாண்டக்கூடாது. அதற்குள் திரும்பக் கொண்டு வந்து தந்து விடணும்.

''நான்தான் சொன்னேனே அப்பா! பையனிடமிருந்து ரூபாய் வந்ததும் முதல் வேலையாகப் பணத்தைக் கொண்டு வந்து தந்துவிடுகிறேன். இந்த அப்பா, என்னை நாலு காசுக்குக் கூட நம்பக்கூடாதா?''

குஞ்சுச்செறுக்கன் நடந்தான்.

# நான்கு

சமையல் அறையையும் வடவண்டைத் தாழ்வாரத்தையும் மண்ணும் சாணியும் கூட்டித் தீனும்மா மெழுகிக் கொண்டிருந்தாள். மாமனார் படுத்திருக்கும் கிழக்குப்புறத்துப் பெரியதிண்ணையும் ஆங்காங்கே பெயர்ந்து பொக்கையும் பொள்ளையுமாய்த்தான் இருக் கிறது. எனினும் வருகிறவர்களும் பேசுபவர்களுமாகக் கலகலக் கும் சந்தடி ஓய்ந்த பின்னரே அங்கு மெழுக முடியும். நிலவறை, பலகைத்தட்டு எல்லாம் கொண்ட பழைய நாலைய வீடு. உயரம் குறைந்த கூரைத் தாழ்வாரங்கள். படி ஏறும்போது கவனமாகக் குனியாவிட்டால் தலை கூரையில் இடிக்கும். கிழக்கும் மேற்கும் முற்றங்கள். கற்றளம் பாவிய சுற்றுடன் வடபுற முற்றத்தில் கிணறு இருக்கிறது. உட்புற அறையில் காற்றும் வெளிச்சமும் புக வழியில்லை. எனவே அறையில் படுத்துறங்க இயலாது. ஓலைத் தடுப்பால் மறைக்கப் பெற்ற தாழ்வாரப் பகுதிதான் படுக்கையறையாக இருக்கிறது.

''பொண்ணா!''

''இதோ வரேன் மாமா!''

தீனும்மா கை கழுவிவிட்டுச் சென்றாள்.

''என்ன செஞ்சிட்டிருந்தே?''

''திண்ணை மெழுகிகிட்டிருந்தேன். எல்லாமே இடிஞ்சு விழுந்து கிடக்குதே!''

''கூரையும் மாற்றணும். எல்லாம் செல்லரிச்சிருக்கு.''

''நம்மாலே இப்போ இது நடக்கிற காரியமா?''

''என்ன?''

''நம்மாலே பிலிப்பு மச்சானைப் போல மாடிக் கட்டிடம் கட்டி வாழ முடியுமா? ஓலையாலோ தட்டியாலோ மறைச்சு, இதுக்

குள்ளேயே காலம் தள்ளுரோம். கடவுள் இதே போல எப்போதும் கஞ்சிக்குப் படியளந்தால் போதும்.''

''படியளப்பார்''.

''உறுதியாச் சொல்றீங்களா?''

''உறுதியாத்தான் சொல்றேன். இந்த நாள் வரையில் கஞ்சியோ கூழோ கொடுத்தார். இனிமேலும் கொடுப்பார். நான் பிறந்தப்போ என்ன இருந்தது? நம்முடையதுன்னு சொல்லிக்க ஒரு சென்டு நிலம் இல்லே. வீடு இல்லே. ஆனல் முப்பது பறை விதை விதைக்கிற புஞ்சைநிலத்தையும், நாலு ஏக்கர் தோப்பையும் என் பிள்ளைங்களுக்குப் பங்கு போட்டுப் பிரிச்சுக் கொடுத்தேன். இவ்வளவையும் எனக்குத் தந்த கடவுளால் ஆகாதது ஒண்ணு மில்லே. இஸ்ரவேல் ஜனங்களைக் கனன் நாட்டுக்கு அழைத்துப் போன மோசேக்கு அப்படி என்ன திறமை இருந்தது? மோசே கர்த்தரிடம், 'ஆண்டவரே! இதற்கு முன்னுவது, தேவரீர் உமது அடியாளுேடு பேசினதற்குப் பின்னுவது நான் வாக்குவல்லவன் அல்ல. நான் திக்குவாயும் மந்தநாவும் உள்ளவன் என்று சொல்ல, கர்த்தர் அவனிடம், 'மனுஷனை ஊமயானுகவும் செவிடனுகவும், பார்வையுள்ளவனுகவும் குருடனுகவும் செய்தவர் யார்? கர்த்தராகிய நான் அல்லவா? ஆதலால் நீ போ. நான் உன் நாவிலிருந்து நீ பேச வேண்டியதை உனக்குப் போதிப்பேன்' என்ருர்......''

''எதுக்கு மாமா, அந்தப் பழைய கதையெல்லாம் சொல்றீங்க? நான் சும்மாத்தான் கேட்டேன்.''

''நான் இந்த வீடும் மனையும் வாங்கின கதை உனக்குத் தெரியுமா?''

''எனக்கு இப்போ கதை கேட்டு நிக்கிறதுக்கு நேரமில்லே, மாமா! நீங்க எதுக்குக் கூப்பிட்டீங்க?''

'சூடாகக் கொஞ்சம் கஞ்சித்தண்ணி வேணும்.''

''கஞ்சி இன்னமும் கொதிக்கலே. கொதிச்சதும் கொண்டு வந்து தரேன்.''

ஆ... கதை கேட்க நேரமில்லாவிட்டால் வேண்டாம். நீ போ. கேட்டால் கூட உனக்கு என்ன புரியப் போகிறது? அப்பொழுது நீ பிறக்கக்கூட இல்லே. நல்ல வேடிக்கை போ! உன் அம்மாவாவது பிறந்திருப்பாளா? அதுவும் சந்தேகம்தான். மேல்தொழுத்துக் கொச்சுப்பாப்பியிடமிருந்து இந்த வீட்டை வாங்கும்போது எனக்கு

இருபது வயதிருக்கும். எழுபது ஆண்டுகள் ஓடி மறைந்துவிட்டன! மேல்தொழுத்து கொச்சுப்பாப்பியென்ருல் யாருக்கும் தெரியாது. கொழும்புக் கொச்சுப்பாப்பி என்று சொன்னுல்தான் புரியும். கொழும்பிலிருந்து பணம் சம்பாதித்து வரப்போனவன். பாவம்! இந்தப் பனைச்சமேடு கிராமத்திலே மிகப் பெரிய குடும்பத்திலே மிஞ்சின கடைசிப் பிள்ளை அவன். அதாவது என் அப்பாவுக்கு மாமா பிள்ளை. ஒரு காலத்தில் இந்த ஊர் முழுவதும் மேல்தொழுத்துப் போத்த ஈசோவுக்குச் சொந்தமாயிருந்ததாம். போத்த ஈசோ குதிரை மீதுதான் சவாரி செய்வாராம். ஏதேதோ வேறு கதையும் இருக்குது. ஏதோ ஒரு காலத்தில் பெரிங்கனச்சேரியிலிருந்து ஓடி வந்த நான்கு அண்ணன்தம்பிகளில் மூத்தவர் பனைச்சமேட்டில் வசித்தார். போத்த ஈசோவின் தாத்தாவாகவும் இருக்கலாம். மற்ற மூவரில் ஒருவர் அம்பலத்துறையிலும் இன்னொருவர் மாதே காட்டிலும், பின்னொருவர் கற்றனுற்றிலும் வசித்தனர். இதெல்லாம் மெய்யோ பொய்யோ, யாருக்குத் தெரியும்? ஒன்று மட்டும் உண்மை. மேலைத்தொழுத்துக் குடும்பம் பேர்போன குடும்பமாக இருந்தது. ஆனுல் ஒவ்வொன்ருக விற்று அந்தக் குடும்பம் சீரழிந்தது. பெரிய வீட்டைக்கூடப் பெயர்த்து விற்ருர்கள்! இப்பொழுது இருக்கிற இந்த வீடு கொச்சுப்பாப்பியோடு அப்பா 'கூறுபாடு' மத்தாயி மாமா கட்டினது. கொச்சுப்பாப்பி சின்னப் பையனுக இருக்கும்போதே வீட்டில் எல்லோரும் முழுப் பட்டினி. அவன் 'வழை'ப் பூவையும் மிளகையும் பறிக்க என்னுடன் வருவான். அந்த நாளில் எனக்குச் சில்லறை வியாபாரம்தான். பெரிதாக வியாபாரம் பண்ணப் பணம் வேண்டாமா? வழைப் பூவையும் மிளகையும் குத்தகைக்கு எடுப்பேன். கிளைகளை வெட்டிப் போட்டு, கொச்சுப்பாப்பி வழைப்பூப் பறிப்பான்; கொடியிலிருந்து மிளகைப் பறிப்பான். வீடு வீடாகச் சென்று காராமணிப் பயறும் கொள்ளும் வாங்குவான். நாளொன்றுக்கு ரெண்டு சக்கரம் கூலி. அவனும் அவன் அம்மாவும் மட்டும்தான் இருந்தார்கள். சிறிது நாட்களுக்குமுன் மத்தாயி மாமாவை மாஜிக் ராவுத்தன் கத்தியால் குத்திக் கொன்ருன். தாயார் இறந்த பிறகு யாரோ ஒருவருடன் கொச்சுப்பாப்பி சிலோனுக்குப் போனுன். நாலைந்து ஆண்டு களுக்குப் பிறகுதான் திரும்பி வந்தான். அப்பொழுது நிறையப் பணம் கொண்டு வந்தான். கொண்டு வந்த பணத்தைப் பத்தே

நாளில் நண்பர்களோடு சேர்ந்து கண்டபடி செலவழித்தான். ஒரு நாள் நடு இரவு என்னிடம் வந்து சொன்னான்:

''குஞ்சுநைனா! நாளைக் காலையிலே நான் கொழும்புக்குப் போறேன்.''

''நீ கண்ணாலம் கட்டிக்கிட்டு இங்கேயே இருக்கப் போறதாகச் சொன்னியே?''

''அது நடக்காது.''

''ஏன்?''

''அது அப்படித்தான்.''

விஷயம் என்னவென்று துருவி விசாரிக்கவே குட்டு வெளிப் பட்டது. அவனுக்குக் கொழும்பிலே ஒரு சிங்களமனைவி இருக்கிறாளாம். குழந்தையும் இருக்கிறதாம். அவர்களுக்குத் தெரியாமல் வந்திருக்கிறான். அங்கிருந்து அவனைத் தேடிப் போலீஸ் வந்திருக்கிறது. போகாவிட்டால் வம்பு......

''நான் போனால் இனித் திரும்ப மாட்டேன். என் வீடும் மனையும் உனக்கு வேணுமா? தரேன்'' என்றான் அவன்.

இப்படி எனக்கு என்று ஒரு வீடு கிடைக்கும் என்று நான் நினைத்ததே இல்லை. எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடுவதைப் போன்ற ஆசை! நினைவு தெரிந்த நாளிலிருந்து சொந்த வீடு இல்லை. வடநாட்டு நாடோடி வியாபாரிகளின் மூட்டை முடிச்சைத் தூக்கிக்கொண்டு அப்பா போவார். அபின் வியாபாரம். திருட்டு அபின். பாண்டி நாட்டிலிருந்து கள்ளக் கடத்தல்காரர்கள் கொண்டு வந்து கொடுப்பார்கள். அதைச் சிறிய மாத்திரைகளாகச் செய்து வாடிக்கைக்காரர்களுக்குக் கொடுப்போம். அபின் தின்று மயங்கியவராகவே அப்பா நடப்பார். நல்ல நினைவு இருக்காது. பத்துச் சக்கரம் சுருக்குப் பையிலிருந்தால், சிறிது நேரம் சென்றபின் மறுபடியும் எண்ணிப் பார்த்து ''பதினாலு சக்கரம் இருந்தது, நீ திருடினாய், கொடு'' என்பார். பிறகு தலைகால் தெரியாமல் அடிப் பார். இப்படிக் கொஞ்சநாள் சென்றதும் அப்பாவுடன் செல்வதை நிறுத்தினேன். அவருடைய பார்வையில் படாமல் ஒளிந்து வாழ்ந்தேன். யாருக்காவது சிறுசிறு வேலைகள் செய்து காசு வாங்கிப் பிட்டும் கடலையும் வாங்கித் தின்பேன். ஆடுமாடுகளை மேய்த்திருக்கிறேன். எருச் சுமந்திருக்கிறேன். தண்ணீர் சுமந்திருக்கிறேன்.

நூற்றுத்தொண்ணூற்று ஐந்து ரூபாய்க்குக் கொச்சுப்பாப்பியிடமிருந்து வீடும் தோட்டமும் கிரயம் பண்ணி வாங்கினேன்.

அதுதான் அடிக்கல். வீட்டின் கூரையும் மற்றவைகளும் மாற்றிப் புதுப்பிக்க வேண்டும் என்ற ஓர் ஆசை இருந்தது. நடக்கவில்லை. நினைப்பதெல்லாம் நடக்குமா? கடவுள் விருப்பமும் வேண்டுமே! அவர் விருப்பமில்லாவிடில் புல் பூண்டுகூட முளைக்காது. நேர்மை யாளர்களில் தலைசிறந்தவரான யோபு கூறுவதைப் போன்று, சகல பிராணிகளின் ஜீவனும் அவர் கையிலிருக்கிறது. வாயானது போஜனத்தை ருசி பார்க்கிறது போல, செவியானது வார்த்தை களைச் சோதித்துப் பார்க்கிறதல்லவா? அவர் இடித்தால் கட்ட முடியாது; அவர் மனுஷனை அடைத்தால் விடுவிக்க முடியாது. அவர் தண்ணீர்களை அடக்கினால் எல்லாம் உலர்ந்துபோம். அவர் அவைகளை வரவிட்டால், பூமியைக் கீழது மேலதாக்கும்.

தீனும்மா சமையலுக்கு அரைத்துக் கொண்டிருந்தாள். அப் பொழுது எள்ளுப்பறம்பு வர்கீஸ் மகள் லீலாம்மாவும், காலாய் பிலிப்பு மகள் பொன்னம்மாவும் அங்கே வந்தனர்.

''அட, இது யாரு! பொண்ணுங்களே, என்ன வழி தவறி வந்தீங்களா?''

''வழியொண்ணும் தவறலே?''

''நாங்க தத்தித் தத்தி நடந்த வழிதான் இது, சித்தி!''

''அதெல்லாம் நீங்க சின்னக் குழந்தைகளாக இருந்த காலம். இப்போதான் நீங்க பெரியவங்களாயிட்டீங்களே.''

''பின்னே ஆகாம? என்னிக்கும் சின்னக் குழந்தைங்களாகவே இருப்பாங்களா? நல்ல வேடிக்கை!''

''அது சரிதான். இதென்ன ஒருத்தி, வயிற்றிலே பிள்ளையோடு வந்திருக்காளே!''

லீலாம்மா வெட்கத்தால் குன்றிப் போனாள். அப்பொழுது அவள் முகத்திற்கு ஒரு தனிக் களையிருப்பதாகத் தீனும்மாவிற்குத் தோன்றியது. இல்லாவிட்டாலும், மூத்தவருடைய ஐந்து பெண் களும் அழகிகள்தாம். மூத்தவள் வியாதிக்காரியாகப் போய் விட்டாள் என்பதுதான் குறை. இவளைப் பிரசவத்திற்கு அழைத்து வரப் பணம் இல்லையென்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார் கள். பாவம் அக்கா! கிடைத்த இடத்திலிருந்தெல்லாம் கடன் வாங்கி எப்படியோ சமாளித்தாள். பொன்னம்மா திருமணம் நடந்து ஆறு மாதம்தான் ஆகிறது. வரதட்சிணை எவ்வளவு என்று கூட யாருக்கும் தெரியாது. அப்பாவிடத்திலோ அண்ணன்மார்

களிடத்திலோ ஒன்றும் சரியாகச் சொல்லமாட்டார் பிலிப்பு மச்சான். எதற்காகச் சொல்லணும்? தாம் சம்பாதித்த பணத்தைத் தம் பெண்ணிற்குக் கொடுக்கிறார். மாப்பிள்ளையின் அப்பாவும் கண்டிராக்டராம். கைச்செலவுக்கே பதினாயிரம் ரூபாய் கொடுத்த தாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்! கார் வாங்கிக் கொடுக்கப் போகிறாராம்; வீடு கட்டிக் கொடுக்கப் போகிறாராம்.

''தாத்தாவுக்கு நல்ல தூக்கம்போல் இருக்கு. ரொம்ப நேரம் முற்றத்திலே நின்னுக்கிட்டிருந்தோம். கூப்பிட்டுப் பார்த்தோம். கண்ணைத் திறக்கவே இல்லை.''

''தூக்கம் ஒண்ணும் அல்ல, குழந்தைகளே! அபின் தின்னுப் பிட்டு மயக்கமாய்ப் படுத்திருக்காரு. தாத்தாவுக்குத் தூக்கமே இல்லை. ராத்திரி வேளையிலே ஒரு இலை அசைஞ்சாலே போதும், யாருன்னு கூப்பிட்டுக் கேட்பாரு.''

லீலாம்மா சொன்னாள்:

''இப்போ தாத்தாவைப் பார்த்தாப் பழைய மாதிரி இல்லை. முகச் சாயலே மாறிப் போச்சு.''

தீனம்மா யோசித்தாள். இந்தப் பெண் சொல்வதற்கு என்ன பொருள்? பட்டினி போட்டுத் தாத்தாவை வாட்டுகிறார்கள் என்பதா?

''வயசாச்சே! அந்தக் களைப்புத்தான். இங்கே அரைப் பட்டினியானாலும் முழுப்பட்டினியானாலும் அவருக்கு ஒரு குறைவும் வைக்கிறதில்லை.''

''அப்படீன்னு யாராவது சொன்னாங்களா, சித்தி? நான் அப்படியெல்லாம் நினைச்சுச் சொல்லலை.''

''நான் சொன்னேன், அவ்வளவுதான்.''

பொன்னம்மா தீனம்மாவை ஆமோதித்தாள்.

''வேறு யாரும் தீனம்மா சித்தி தாத்தாவை கவனிக்கிறாப் போல் கவனிக்க மாட்டாங்க.''

''அது எனக்குத் தெரியும். சொத்து இருந்தாலும் இல்லா விட்டாலும் எல்லாமே கவனிக்கிறதிலேதான் இருக்கு.''

தீனம்மா பேச்சை மாற்றினாள்:

''அது போகட்டும். நீ அன்னிக்கு வந்த பிறகு போகலையா, பொன்னம்மா?

''இல்லை சித்தி.''

''ஜோயி வரலேயா ? ''

''மதராசுக்குப் போயிருக்கார். திங்கள்கிழமை வருவார்.''

எதற்காகச் சென்னே போயிருக்கிருர் என்று தீனும்மா கேட்க வில்லே. அடிக்கடி சென்னேக்கும் பம்பாய்க்கும் விமானத்தில் பறப்பவர்களிடம் அதைப்பற்றிக் கேட்க வேண்டிய அவசியம் என்ன ? போன வாரம் மாதாகோவிலில் பார்த்தபோது பொன் னம்மாவின் கழுத்தில் கண்ட தங்கச் செயினல்ல இப்போது...

''ஸிஸிலி எங்கே, பள்ளிக்கூடம் போயிருக்காளா?''

''ஆமாம், வருகிற நேரமாச்சு.''

''சித்தப்பா எங்கே?''

''ரெண்டு நாளாச்சு வீட்டுக்கு வந்து. 'கன்வென்ஷன்' நடத் தறதுக்கான ஏற்பாடுகளிலே மூழ்கியிருக்கார். வீட்டிலே இருக்கா இல்லேயா, இதெல்லாம் சித்தப்பாவுக்குத் தெரிய வேண்டாம்; வரும் போது எல்லாம் தயாராக இருக்கணும். நான் ஒருத்தி படற பாட்டை யாருகிட்டே சொல்றதம்மா?''

பொன்னம்மா சொன்னுள்:

''எங்கம்மா எப்பவும் இதைச் சொல்லுவாங்க.''

''என்ன செய்யறதம்மா! பொழுது விடியறதுக்கு முன்னே எழுந்திருக்கணும். அப்புறம் கொஞ்சம் கண்மூடணுமின்னு ராத்திரி பத்து மணியாகும். இதுக்கிடையிலே தாத்தாவைக் கவனிக்கணும்; வீட்டு வேலேகளேச் செய்யணும். விருந்தாளிகளே வேறு உபசரிக்க ணும். இதை ஏன் இப்போ சொல்றேன்னு நம்ம தாழைச்செருவு குஞ்சம்பி வீட்டுக்காரி அம்மணி முந்தாநாள்—முந்தாநாளில்லே, போன ஞாயிற்றுக்கிழமை இங்கே வந்திருந்தாள். அந்தி வேளே. தாத்தா பக்கத்திலே யாரோ ரெண்டு மூணுபேர் உட்கார்ந்திருந் தாங்க. இங்கே எனக்கு நூறு வேலே. நான் அவளே உபசரிக்க லேன்னு 'கல்லுவெளியில்' சித்தியிடத்திலே போய்ச் சொல்லியிருக் காள்னு, பார்ந்துக்கோ. ஹூம், அவள் திவான் பேஷ்கார் பொண்ணு பாரு, யாருக்கும் தெரியாதா ? அவள் ஏதோ வேண்டாததெல்லாம் வேறு சொல்லியிருக்காளாம். ஒண்ணு தெரிஞ்சுக்கோ, அவங்க அவங்க படிச்சதுதானே பாடுவாங்க.''

தன் குரலேக் குறைத்துக் கொண்டு தீனும்மா தொடர்ந்து சொன்னுள் :

"நீங்க சின்னக் குழந்தைகள். ஆனாலும் சொல்றேன். குஞ்சம்பியைக் கல்யாணம் கட்டிக்கிட்ட பிறகும்கூட அவளைப் பார்க்க ஒருத்தன் அடிக்கடி அங்கே வந்துபோய்க்கிட்டு இருந்தானும். எப்படியாவது தொலையட்டும். நமக்கு ஏன் இந்த வீண் வம்பு ?"

"மெய்தான். நமக்கு ஏன் மற்றவங்க வம்பு ?"

லீலாம்மா ஒன்றும் பேசவில்லை. அதற்குக் காரணமும் இருந்தது. அவள் கேள்விப்பட்டிருந்தது வேறொரு விஷயம். தாழைச்செருவு அம்மணி நல்ல மீன் வறுத்துக்கொண்டு வந்திருந்தாளாம், தாத்தாவுக்குக் கொடுப்பதற்கு. பேச்சுவாக்கில் 'தாத்தா விருப்பமெல்லாம் நடக்கிறதில்லை ; அதனால்தான் களைச்சுப் போயிருக்காரு'ன்னு சொன்னாளாம் ! தீனம்மா சித்தி விட்டுக் கொடுக்கிறவங்களா ? 'அவ்வளவு பந்தபாசம் இருந்தால் வீட்டுக்கு அழைச்சுட்டுப் போய் நாலஞ்சு மாசம் வெச்சுப் பராமரிப்பதுதானே' என்றாளாம் சித்தி. இப்படி ஏதேதோ பேச்சு வளரவே, சண்டை முற்றியதாம். ரெண்டு பேருக்கும் முன்னமேயே ஏதோ மனத் தாங்கலாம்.

பேச்சை மாற்றுவதற்காக லீலாம்மா கேட்டாள் :

"ராஜண்ணனிடமிருந்து கடிதம் வந்ததா சித்தி ?"

"போன வாரம் ஒரு கடிதம் வந்தது. ஒருவேளை இரண்டு மாசத்திலே வந்தாலும் வருவான்."

பொன்னம்மா கேட்டாள் :

"சித்திக்குத் தெரியுமா ? 'கல்லுவெளியில்' சித்தப்பா வீடு கட்டப் போறாராம். கேசவத் தச்சன் நேற்று வந்து இடம் பார்த்தான்."

தீனம்மா வியப்புடன் கேட்டாள் :

"குஞ்சுச்செறுக்க சித்தப்பாவா ? உனக்கு யாரு சொன்னது?"

"எங்க ஸாம்குட்டி அங்கே இருந்தான். மூணு படுக்கையறை, போர்டிகோ, சமையல்கட்டு எல்லாம் உண்டாம். குறைஞ்சது பதினையாயிரம் ரூபாயாவது ஆகுமுன்னு அப்பா சொன்னார் "

லீலாம்மா சொன்னாள் :

"அவங்களும் ஒரு நல்ல வீடு கட்டிக்கொண்டு வாழட்டும்."

"தானியல் அண்ணன் நிறைய ரூபாய் அனுப்பறதாகச் சொல்லிக்கிருங்க. நேராக அப்பா பேருக்கு அனுப்பறதில்லையாம்.

வேறு யார் யார் பேருக்கோதான் பணம் வருதாம். ஏதோ கள்ளக் கடத்தல்னு பேசிக்கிறாங்க. யாருக்கும் தெரியாமல் வந்து போறதாகவும் கேள்வி.''

தீனம்மா சொன்னாள் :

''லீலாம்மா சொன்னதுபோல் அவங்களுக்கு நல்ல நிலைமை வரட்டும். ஆனால் இனிமேலாவது இந்தமாதிரி பித்தலாட்டத்தில் ஈடுபடாமல் இருந்தால் சரி !''

''அதென்ன சித்தி ?''

''சொல்ல ஆரம்பிச்சா எவ்வளவோ இருக்கு. அன்னிக்குத் தாத்தாவின் செலவைப்பற்றி முடிவெடுக்க இங்கே எல்லாரும் ஒண்ணு கூடியதுதான் உங்களுக்குத் தெரியுமே ? அப்போ, பொன்னம்மாவின் அப்பா நூறு ரூபாய் கொடுத்துவிட்டுப் போனார். அதிலே செலவழிஞ்சது போக மீதி ஐம்பது ரூபாய் இங்கே இருந்தது. ரெண்டு மூணு நாளைக்குள்ளே திருப்பித் தாறதாகச் சொல்லிக் குஞ்சுச்செறுக்க சித்தப்பா அந்த ரூபாயை வாங்கிக்கிட்டு போனார். ஒரு மாசமாச்சு. ரொம்ப முடை வந்தப்போ நான் அதைக் கேட்கறதுக்காகப் போனேன், என் நல்ல காலம், அடி உதை வாங்காமல் வந்து சேர்ந்தேன். பதினையாயிரம் ரூபாய்க்கு வீடு கட்டரதுக்குட பணத்தைக் கையில் வைச்சுக்கிட்டுத்தான் நார் உரிக்கிற இந்த வித்தையைக் காட்டறாரு. ஆண்டவரே ! இவங்களெல்லாம் எப்படிப்பட்ட மனுஷங்களோ ?''

''தாத்தா செலவெல்லாம் எப்படி நடத்தறீங்க, சித்தி ?''

''எப்படின்னு கேட்டால் என்னத்தைச் சொல்ல ? கடவுள் நடத்தறாரு, குஞ்சம்பி போனவாரம் இருபத்தஞ்சு ரூபாய் கொண்டு வந்து தந்தான். பொன்னம்மா! நீ போய் இதெல்லாம் உங்க அப்பாவிடத்திலே சொல்லி வைக்காதே. நான் ஏதோ பேச்சுவாக்கிலே சொன்னேன், அவ்வளவுதான்.''

லீலாம்மா சொன்னாள் :

''இந்தாங்க சித்தி, பத்து ரூபாய். அப்பா கொடுத்தனுப்பினாரு. கையிலே இல்லை. அதனால்தான் முன்னமேயே தரமுடியாமல் போச்சு என்னை அழைச்சு வர்ற செலவுக்காக எங்கிருந்தெல்லாமோ அம்மா கடன் கிடன் வாங்கினாள். 'என் அப்பாவுக்கு ஒண்ணும் கொடுக்க முடியறதில்லை. எப்படியெல்லாம் உழைச்சுப் பாடுபட்ட அப்பா' என்றெல்லாம் அப்பா சொல்லாத நாளே இல்லை.''

''உங்க அப்பா மனசு எனக்கு நல்லாத் தெரியும். படபடப்பாய்ப் பேசினாலும் நல்ல உள்ளம்.''

''வீட்டிலேயும் அப்படித்தான். கோபம் வந்தால் வாய்க்கு வந்தபடி எங்களையும் அம்மாவையும் திட்டுவார்.''

''சூதுவாது இல்லாதவங்களுடைய குணம் அப்படி. நீயே ரூபாயைத் தாத்தாவிடத்திலே கொண்டுபோய்க் கொடு. அவருக்கும் சந்தோஷமாக இருக்கும்.''

''அங்கே யாரு?''

''தாத்தா விழிச்சுட்டாரு பொன்னம்மா, வா...''

லீலாம்மாவும் பொன்னம்மாவும் கிழக்குப்புறத் திண்ணைப் பக்கம் போனார்கள். அப்பொழுதும் குஞ்சுநைநா கண்ணை மூடிய வாறு படுத்திருந்தார்.

'' தாத்தா!''

'' யாரு?''

''நான்தான், பொன்னம்மா.''

''எப்போ வந்தே?''

''கொஞ்ச நேரமாச்சு.''

''மாப்பிள்ளை வரலையா?''

''இல்லை.''

''பசங்கள் எங்கே?''

''அம்மாடி!''

லீலாம்மா வாய் பொத்திச் சிரிப்பை அடக்கிக் கொண்டாள். சமையலறையிலிருந்து வந்த தீனம்மா கேட்டாள் :

''மாமா! நீங்க யாருன்னு நினைச்சுப் பசங்க எங்கேன்னு கேட்டீங்க?''

''யாரு?''

''கண்ணைத் திறந்து பாருங்களேன்.''

கஷ்டத்துடன் ஒரு வேலை செய்வது போலக் குஞ்சுநைநா கண்ணைத் திறந்தார். பிறகு முகத்தைத் திருப்பிப் பார்த்தார்......

''எள்ளுப்பறம்பு லீலாம்மாவும் காலாய் வீட்டுப் பொன்னம்மா வும் மாமாவைப் பார்க்க வந்திருக்காங்க.''

''உம்.''

தீனம்மா கூறினாள் :

''இந்த வீட்டுச் சின்னக்குட்டி போய்க் கூப்பிட்டால்கூடச் சில வேளைகளிலே இப்படித்தான், ஏதாவது கேட்பார். என்ன, ஏதுங்கிற ஞாபகமே இருக்கிறதில்லே.''

''ஞாபகம் எல்லாம் இருக்கு, நான் ஒரு கனவு கண்டேன் குஞ்சம்மாவைப் பற்றியது.''

''கேட்டீங்களா ? கல்யாணம் நிச்சயமானபோது இறந்து போன உங்க அத்தையைப் பற்றித்தான் சொல்றுரு.''

லீலாம்மா சொன்னுள் :

''சொல்லிக் கேட்டிருக்கேன், சின்னச் சித்தப்பாவுக்கும் தங்கைன்னு.''

குஞ்சுனைநு சொன்னுர் :

''தங்க நிறம் !''

'அதைப்பற்றியெல்லாம் இப்போ ஏன் யோசிக்கறீங்க, மாமா!'

''சும்மாத்தான்.''

''மாமா ! சேதி கேட்டீங்களா ? குஞ்சுச் செறுக்க மச்சான் பெரிய வீடு கட்டப் போறுராம். நேற்றைக்கு இடம் பார்த்து வைச்சாச்சாம். மதிப்பெல்லாம்கூடப் போட்டாச்சாம்.''

''என்ன ?''

தான் சொன்னதையே தீனும்மா உரத்த குரலில் மீண்டுமொரு முறை கூறினுள்.

''யாரு சொன்னது ?''

''பொன்னம்மா, அவங்க வீட்டு ஸாம்குட்டி அங்கே இருந் தாணும். அவன் பார்த்து வந்து சொன்னது.''

குஞ்சுனைநு புன்முறுவல் பூத்தார். ஒளி மிகுந்த புன்னகை.

இடம் குறித்திருக்கலாம். மதிப்பீடும் போட்டிருக்கலாம். ஆனுல் கட்டடவேலே நடக்காது. ஏன் என்று கேட்டால் அது அப்படித்தான். அவனுக்குக் கெட்டிக்காரத்தனம் இல்லே என்பதல்ல காரணம். அளவுக்கு மிஞ்சிய கெட்டிக்காரத்தனம்! மீன்களிலே எந்த மீனுக்குச் சாமர்த்தியம் அதிகமென்று தெரியுமா? விராலுக்கு. அது முட்டை இடுவது வரப்பிலே. இதைப் போலத்தான் அவன் காரியங்களும். அவனேப் போன்று திறமையும் சாமர்த்தியமும் இருந்தால் இதற்குள் லட்சாதிபதியாகி யிருக்கலாம். ஆனுல், இத்தனே ஆண்டுகளாகியும் இன்னமும் அவன் குடிசையில்தான் வசிக்கிறுன். அங்கே இருந்து கொண்டே பெண்களுக்கு மணம்

முடித்து வைத்தான். இப்போது, வெளியூருக்கு வேலைக்குச் சென்றிருக்கும் பிள்ளைகள் வீடு கட்டவேண்டும் என்று வற்புறுத்து கிருர்கள். கல்யாணப் பேச்சு வரும்போது, பையன் குடிசைவாசி என்று பெண்ணின் தந்தை சொல்ல மாட்டாஞ? எனவே, வீடு கட்டி முடித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.''

கெட்டிக்காரத்தனத்திஞல் மட்டும் எல்லாவற்றையும் சாதித்து விடமுடியாது. கடவுள் விருப்பமும் வேண்டும். ஐந்து பிள்ளை களிலேயும் பிலிப்புதான் மண்டுவாக இருந்தான். மண் வெட்டு வது, எருச்சுமப்பது போன்ற வேலையெல்லாம் அவஞல் செய்ய முடியாது. மற்ற நால்வரும் எலும்பொடிய உழைத்திருக்கிருர்கள். பாடுபடாமல் அந்தக் காலத்தில் வாழ முடியாது. மேற்கே சாத்தக்குற்றிக் கிராமத்திலிருந்து எருவிற்காகக் குப்பை கூளங் களைத் தூக்கி வரணும். படகுத்துறையிலிருந்து சாணியும் சாம்பலும் சுமந்து வரணும். வெயிலில் நின்று மண் வெட்டணும். மரத்திலே ஏறித் தழை வெட்டணும். இவை போல இன்னும் எத்தனை எத்தனையோ வேலைகள்! வேலையாட்களை விட்டு இந்த வேலைகளை யெல்லாம் செய்துவிட முடியாது. எல்லாப் பிள்ளைகளும் பொழுது விடிவதற்கு முன்னரே எழுந்திருப்பார்கள், மண்வெட்டி, கோடாரி, அரிவாள் முதலியவைகளை எடுத்துக்கொண்டு கிளம்புவார்கள். மூத்தவன் தலைவன். வேலை செய்வதில் கெட்டிக்காரன், இரண் டாவது பிள்ளை. குஞ்சுச்செறுக்கன் அன்றும் இன்று போலத் தான், தந்திரசாலி. பிலிப்பு எதற்குமே லாயக்கில்லை உடலை வருத்தி அவஞல் வேலை செய்ய இயலாது. இருமல், நோய் என்று ஏதாவது இருக்கும். அதஞல்தான் அவன் படிப்பைத் தொடர முடியவில்லை. அவனுக்குப் பதிஞறு வயது இருக்கையில் குழிப் பறம்புவீட்டு மாமா ரோடுவேலை காண்டிராக்டு எடுத்து, வேலையாட் களையும் அழைந்துக்கொண்டு வந்தார். அந்தக் காலத்தில் இந்த ரோடு ரிப்பேர் வேலை என்பதெல்லாம் என்ன? அம்பட்டன் முகச் சவரம் செய்வதுபோல் ரோடுக்கு இருபக்கங்களும் சுரண்டுவார்கள்; அவ்வளவுதான். இந்தப் பையன் இப்படிச் சும்மா இருக்கிருனே என்று சொல்லவே, மாமா இவனையும் தம்முடன் அழைத்துக் கொண்டு போஞர். ஐந்தோ ஆருே ஆண்டுகளுக்குப் பின் திரும்பி வந்தபோது, அவனிடத்தில் கொஞ்சம் காசுபணம் இருந்தது. அதற்குப்பின் அவன் ஏற்றம் காணலாஞன். உதவாக்கரை என்று

தள்ளிவிட்ட கல் சர்வேக்கல் ஆயிற்று ! அவன் மற்ற நால்வரையும் விட உயர்ந்தான்.

''தாத்தா !''

''உம், உம்...''

''மறுபடியும் கண்ணை மூடிப் படுத்துக்கிட்டீங்களே ! தூக்கமா?''

''இல்லை. தூங்கலே. ஏதேதோ யோசனை !''

''அப்படி யோசிக்க என்ன இருக்கு ?''

''நீ என் கையைக் கொஞ்சம் பிடித்துத் தூக்கி விடு, எழுந்திருக்கிறேன்.''

பொன்னம்மா கையைப் பிடிச்சுத் தூக்கிவிடவே குஞ்சுநைனு எழுந்து உட்கார்ந்தார்.

''கைத்தடியை எடுத்துக் கொடு.''

''தாத்தாவாலே நடக்க முடியுமா ?''

''ஏன் முடியாது ? தடியை எடுத்துக் கொடு.''

கைத்தடியை ஊன்றிக் குஞ்சுநைனு எழுந்தார். பிறகு பேத்திகளின் தோளைப் பிடித்துக் கொண்டு முற்றத்தில் இறங்கினுர். உடலில் காற்றுப் படவே இன்பமாயிருந்தது. எப்போதும் படுத்துக் கிடப்பதால்தான் இவ்வளவு களைப்பு. கையையும் காலையும் அசைக்கவிட்டால்தானே ?

குஞ்சுநைனு தம் இரு பேத்திகளையும் உற்றுப் பார்த்தார். பெரியவனுடைய மகள் அவளுடைய அம்மாவைப் போலவே சிவப்பாக, லட்சணமாக இருந்தாள். பிலிப்பின் மகள் குழந்தையாக இருக்கும்போது சொறியும் சிரங்குமாக இருந்தாள். இப்போது முகத்தில் ஒரு களை இருக்குது. இல்லாவிட்டாலும் அது அப்படித் தானே ? குப்பை மேட்டுக் கீரையானுலும் பிராயம் வந்தால் துளிர்விட்டுச் செழிக்காதா ?

குஞ்சுநைனு திண்ணையில் உட்கார்ந்தபடி கேட்டார் :

''உன் அப்பா மாட்டுத் தரகு ஆரம்பிச்சதாகக் கேள்விப் பட்டேனே. நிஜந்தானு ?''

லீலாம்மா சொன்னுள் :

''என்னவோ, எனக்குத் தெரியாது.''

''பணம் காசு கிடைக்கும். ஆனுலும் உருப்பட விடாது தொழில்.''

லீலாம்மா பதில் சொல்லவில்லை. என்னத்தைச் சொல்ல ?

''தலைப்பள்ளி கிராமத்திலே 'செவியன்' நாணுன்னு ஒரு தரகன் இருந்தான். அந்த நாளிலே ஒரு சந்தைத் தினத்தன்று மட்டும் இருநூறோ முந்நூறோ ரூபாய் கிடைக்கும். இப்போ, நீயே ஒரு காளையைச் சந்தைக்குக் கொண்டு போறதாக நினைச்சுக்கோ. அதுக்குப் பல்லிலேயோ, காலிலேயோ ஏதோ கோளாறு; நீ செவியன் நாணுவைப் பார்க்கிறாய். 'தரகு தரேன். எப்படியாவது விற்றுக் கொடு'ன்னு சொல்றே. அவன் பொறுப்பு ஏத்துக்கிறான். காளையை வாங்கறதுக்குன்னு கயிறும், பணப்பையும் கட்டுச் சோறுமாக் குன்னச்சேரியிலிருந்து ஒரு முஸ்லிம் வர்றான். நாணு அவனை நெருங்குகிறான். 'என்ன விலையிலே வேணும்' என்று கேட்கிறான். 'நாற்பது அறுபதுக்குள்ளே' என்கிறான் அந்த முஸ்லிம், 'நான் தோதுபண்ணித் தரேன். என்ன தரகு தருவே?' என்று கேட்கிறான்.

''முன்னே பின்னே தெரியாத மாதிரி குன்னச்சேரிக்காரனையும் அழைச்சுக்கிட்டு நாணு உன்னிடத்திலே வரான். 'இந்தக் காளைக்கு என்ன விலை கேக்கறே ஐயா?' என்று கேட்கிறான். நீ ஒரு விலையைச் சொல்லறே. 'சரி, காளையைப் பார்க்கட்டுமா, நாணுவே மாட்டினுடைய பற்களை எண்ணிப்பார்க்கிறான். தொட்டும் தடவியும் பார்க்கிறான். 'பரவாயில்லை!' குன்னச்சேரிக்காரனைக் கூப்பிட்டுக் காதோடு ஏதோ சொல்கிறான். பேரமாச்சு. இதுதான் தரகு வேலை...அப்போ. நான் என்ன சொல்லிக்கிட்டு வந்தேன்? ஆ... இப்படி வாங்கியும் கொடுத்தும், கள்ளைக் குடிச்சும் செவியன் நாணு பெரிய ஆசாமியாக நடமாடி வந்தான். கடைசிக் காலத்திலே பேச முடியாமத்தான் அவன் செத்துப் போனான்......''

லீலாம்மாவும் பொன்னம்மாவும் சிரித்தார்கள். தீனம்மா கேட்டாள் :

''மாமா, நீங்க ஏன் இதெல்லாம் குழந்தைகளிடம் சொல்றீங்க?''

''சும்மா சொன்னேன்.''

''சும்மாத்தான் ஏதேதோ சொல்றாரு. அவ்வளவுதான்!''

''இப்போ என்ன நேரமிருக்கும்? சின்னக்குட்டி வர்ற நேரமாச்சா?''

''இதோ வந்திடுவாள்.''

லீலாம்மா கையிலிருந்த காகிதப் பொட்டலத்தைத் தாத்தாவிடம் கொடுத்தவாறே சொன்னாள் :

''அப்பா கொடுத்தனுப்பினரு, தாத்தா!''

''என்ன அது?''

''உங்களுக்கு எண்ணெய்யும் தைலமும் வாங்கறதுக்கு.''

''வரும்போது தாத்தாவுக்கு ஒரு கம்பளி வாங்கி வரும்படி நான் ஜோயி அத்தானுக்கு எழுதியிருக்கேன்.''

''யாரு இந்த ஜோயி அத்தான்?''

பொன்னம்மா புன்முறுவல் புரிந்தாள்.

தீனம்மா கூறினள் :

''அவள் மாப்பிள்ளை.''

''மாப்பிள்ளை எப்போ அத்தானனன்?''

''நாகரிகம் பெருகிப் பெருகி இப்பொவெல்லாம் இப்படித்தான் அழைக்கிருங்க!''

லீலாம்மாவும் பொன்னம்மாவும் வாய்விட்டுச் சிரித்தார்கள்,

லீலாம்மா கேட்டாள் :

''நாங்க போகட்டுமா, தாத்தா?''

''சந்தி வரையில் நானும் வரேன்.''

குஞ்சுநைனு தடியை ஊன்றி எழுந்தார்.

''அம்மாடி! தாத்தாவுக்கு நடக்க முடியுமா?''

''ஏன் முடியாது?''

''சித்தி!''

''சித்தியுமாச்சு சுத்தியுமாச்சு ! நான் தானேடி வரச்சொன்னேன். வா போகலாம்.''

''மாமா, நீங்க சொல்றது நல்லா இருக்கே! மயக்கம்போட்டு விழுந்தால் என்ன ஆகிறது?''

''ஒண்ணும் விழமாட்டேன். நீ பேசாமல் இரு.''

இதற்குப் பின் தீனம்மா ஒன்றும் பேசவில்லை. சொன்னல் மாமா கேட்கமாட்டார் என்று அவளுக்குத் தெரியும்.

''குழந்தைகளே! ஜாக்கிரதையாக அழைச்சுட்டுப் போகணும். கூடவே நடக்கணும். திரும்பி வரும்போது அச்சன்குஞ்சையோ, ஸண்ணியையோ துணைக்கு அனுப்பணும். ஸிஸிலி அப்பாவுக்குத் தெரிஞ்சாத் திட்டுவாரு.''

குஞ்சுநைனு நடந்நார். பொன்னம்மாவும் லீலாம்மாவும் அவருடன் கூடவே நடந்தனர். வீட்டை விட்டு வெளியே கிளம்பி ஒரு மாதமாயிற்று. நீல வானையும், சில இலைகளையும், உழுது பயிரிட வேண்டிய நிலத்தையும், பனைச்சமேட்டு மாதாகோவிலின்

மணிக் கூண்டையும் பார்த்தபோது அவர் உள்ளம் குளிர்ந்தது. அடைத்துப் போட்ட கூட்டிலிருந்து வெளிவந்தாற் போன்றதோர் உற்சாகம். இந்த மண்ணெல்லாம் எனது காலின்கீழ் மிதிபட்டது தானே? இந்த மரங்களெல்லாம் எனது கண்ணெதிரில் முளைத்தவை தாமே? சிறிது காலத்துக்குப் பிறகு நான் இருக்க மாட்டேன் இந்த மரங்களெல்லாம் அப்போதும் இருக்கும்! நான் மட்டும் இருக்க மாட்டேன்? நான் போகும் இடம் எது? சொர்க்கமா? நரகமா? யாருக்குத் தெரியும்? சொர்க்கத்தில் போவதற்கு வேண் டிய புண்ணியம் செய்ததில்லை. நரகத்திற்குப் போவதற்கான பெரும் பாவமும்..ஒன்றும் சரியாகப் பிரித்தறிய முடிவதில்லை. களங்கம் நிறைந்த உள்ளத்தோடு வேண்டுமென்று எந்தப் பாவமும் செய்ததில்லை. என்னைக் காலூன்றி நிலைநிறுத்திக் கொள்வதற்காகச் சில காரியங்கள் செய்திருக்கிறேன். அப்புறம் நாயர்களோடு சண்டையிட்டது. அது ஒரு பாவமா? ஆள்பலம் இருக்கிறது என்ற அகந்தையோடு அக்கிரமம் செய்ய முற்பட்டவர் களுக்கு அடிபணியவில்லை. நியாயப் பிரமாண காலத்தில் கர்த்தரின் ஜனங்களும் அக்கிரமத்தை எதிர்த்துப் போர் புரிந்திருக்கின்றனர். தவிர, தாவீது செய்தது போன்ற ஒரு பாவமும் செய்திருக்கிறேன். கர்த்தர் மோசேக்கு இட்டுள்ள பத்துக் கட்டளைகளில் ஏழாவதும் முக்கியமானதுமான ஒன்றை மீறியிருக்கிறேன். பாவ புண்ணியம் என்பதெல்லாம் என்னவென்று யோசிக்க அன்று நேரம் இருக்க வில்லை. அதற்காக எனக்கு நரக தண்டனை விதிக்கலாம். 'தீர்க்கதரிசி' கூறுவது போல வானத்திலிருந்து தீ இறங்கி வந்து கந்தகக் குழியில் ஒருவேளை தள்ளுமோ என்னவோ? யாருக்குத் தெரியும்?

சந்தியை அடைந்ததும் குஞ்சுறைநு ராமகிருஷ்ணபிள்ளையின் கடைக்கு முன்னுள்ள பெஞ்சின்மீது அமர்ந்தார். ராமகிருஷ்ணனே எழுந்து வந்து அவர் கையைப் பிடித்து உட்கார வைத்தார்.

''வியாபாரமெல்லாம் எப்படி இருக்கு?''

''ஏதோ நடக்கிறது குஞ்சுறைநு. உண்மையைச் சொல்லப் போனல் எப்படியோ நடத்தறேன், அவ்வளவுதான். நம்மவங்க சமாசாரம் தெரியாதா? வாங்கிய பொருளுக்குப் பணம் தரமாட் டானுங்க. கேட்டால் கௌரவக் குறைச்சல். என்னத்தைச் செய்ய?''

''கஷ்டம்தான்.''

''சொல்றேன்னு தவரு நினேச்சுக்காதீங்க. உங்க பிள்ளேயே எழுபது ரூபாய் வரைக்கும் தரணும். ஐந்து ஆறு மாசமாகச் சாமான் வாங்கிய கடன்.''

''யாரு? குஞ்சுச்செறுக்கனு?''

''ஆமாம்.''

''போன மாசம் ஐம்பது ரூபாய் கொண்டு வந்து தரலேயா ?''

''எங்கே தந்தாரு ? கால் காசு தரல்லே. அதுதான் சொன்னேனே. பணம் கேட்டதற்குச் சண்டைக்கு வந்தாரு. சொல்லாத வார்த்தை இல்லே. இப்போ என்னடான்னு, இங்கிருந்து சாமான் வாங்கிறதும் இல்லே.''

குஞ்சுநைனு பிறகு எதுவும் கேட்கவில்லே. தன் பல்லேயே குத்தி ஏன் மோந்து பார்க்கணும்?

எங்கிருந்து வந்தானே, பிலிப்பு சைக்கிளேப் பிடித்துக் கொண்டு கடைவாசலில் நின்று கொண்டிருந்தான்.

''ஏன் அப்பா, இங்கே உட்கார்ந்திருக்கீங்க?''

''என்ன?''

''ஏன் இங்கே உட்கார்ந்திருக்கீங்க?''

''தடியை ஊன்றிக் கொஞ்சம் மெதுவாக நடந்து பார்த்தேன். எவ்வளவு நேரம் கட்டிலிலேயே படுத்துக்கிடக்கிறது?''

''வழியிலே மயக்கம் போட்டு விழுந்தா என்ன ஆகிறது?''

''ஒன்றும் விழமாட்டேன்.''

''ஒன்றும் விழமாட்டேன் ! நான் அங்கே கொடுத்து வந்த பணத்தை மூன்ருவது பிள்ளேக்குக் கடன் கொடுத்தீங்களா?''

''யார் சொன்னு?''

''யாரோ சொன்னுங்க. நீங்க கொடுத்தீங்களா ?''

குஞ்சுநைனு பதில் கூறவில்லே. சந்தியிலே நின்று ஊர் சிரிக்க வைக்காதே. உன் வேலேயைப் பார்த்துக் கொண்டு போ...

''உங்க பிள்ளே இப்படி ஆனதற்குக் காரணம் நீங்க ஒருவர் தான். இதையெல்லாம் எப்படிப் பார்த்துக்கிட்டு வாய்மூடிச் சும்மா இருக்கமுடியும் ? பிள்ளேங்களுக்கு உதவுணுமின்னு சம்பாதிச்சுப் பெட்டியிலே வெச்சிருக்கிற பணத்திலிருந்து எடுத்துக் கொடுக்கிறது தானே ?''

அப்பொழுதும் குஞ்சுநைனு பொறுமையாயிருந்தார்.

''பிள்ளைகளும் பேரனும் எல்லாருமாச் சேர்ந்து முடிவு செஞ்சாங்களே, செலவுக்கு வேறு யாரெல்லாம் பணம் கொடுத் தாங்க?''

''நீ மட்டும்தான் தந்தே. தந்த பிறகு அந்தப் பணம் என்னு டையதுதானே? நான் அதை யாருக்குக் கொடுத்தால் உனக் கென்ன?''

''அப்படிக் கண்டவனுங்களுக்கெல்லாம் கொடுத்து, ஊட்டி வளர்க்கிறதுக்கு என்னிடத்திலே பணம் இல்லே. ஒரு தடவை தந்நால் போதுமா? இன்னமும் வேண்டாமா?''

''வேண்டாம். நீ போ!''

''நீ போ. இந்தச் சுபாவமெல்லாம் இன்னமும் வெச்சுக்கிட்டு இருக்கிறதினுலேதான்...''

''நீ என்னைப் பயமுறுத்தவா வந்திருக்கே? போடா, சல்லிக் காசுக்கு மதிப்பில்லாதவனே! நீ என் மீசையிலிருந்து உதிர்ந்த காசைப் பார்த்திருக்கியா? அற்பனுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியிலே குடை பிடிப்பானும். டேய், நீ அற்பனடா!''

சத்தம் கேட்டுக் கும்பல் சேர்ந்தது. யாரோ ஒருவன் சொன்னுன்:

''போகட்டும், விடுங்க குஞ்சுநைநு அண்ணே. யாராவது கேட்டா என்ன சொல்லுவாங்க?''

''அது அவனுக்கல்லவா தெரியணும்?''

பிலிப்பு எதுவும் பேசாமல் சைக்கிளில் ஏறிச் சென்றுன்.

கூட்டத்திலிருந்த ஒரு பேர்வழி சொன்னுன்:

''அப்பனுக்கும் பிள்ளைக்கும் வெட்கமோ ரோஷமோ கிடை யாது.''

அவனுக்குப் பிலிப்பின் மீது ஏதோ மனத்தாங்கல் போலும்!

''பணம் இருந்தால் மட்டும் போதுமா?'' வேறு ஒருவன் அங்கலாய்த்தான்.

வர்கீஸினுடைய பையன் அச்சன்குஞ்சும் குஞ்சுச்செறுக்கனின் நான்காவது மகன் ஸண்ணியும் தாத்தாவை அழைத்துப்போக வந்தார்கள். இரண்டு பேத்திகளுடைய துணையுடன் நடந்து வந்து, இந்தக் கடைவாசலில் உட்கார்ந்துகொண்டு இப்படியெல்லாம் பேசியிருக்க வேண்டாம். என்ன செய்வது? தள்ளாமையுடன் வெளியே கிளம்பியதே தவறு உம், ஆனது ஆச்சு...

''தாத்தா, ஏன் இவ்வளவு தூரம் நடந்து வந்தீங்க?''

''நடக்கிறதுக்கு மறந்து போச்சா இல்லையான்னு தெரிய

அ — 5

வேண்டாமா ?''

ஸண்ணி சொன்னன் :

''அது சரிதான்.''

பெரிய மனிதர்களைப் போல்தான் இவனுடைய பேச்சும் நடத்தையும். அப்பனுடைய துணிச்சலும் புத்தியும் அப்படியே ; உடல் கட்டும் அப்படியே இருக்குது ; மார்பை அகல விரித்து நடப்பதைப் பார்த்தால் பார்த்துக்கொண்டே இருக்க வேணுமென்று தோணுது.

''உனக்கு என்ன வயசு ?''

''யாருக்கு? எனக்கா, அச்சன்குஞ்சுக்கா ?''

''உனக்குத் தான்?''

''பதினஞ்சு.''

அச்சன்குஞ்சு உடனே—

''எனக்குப் பதினறு வயசாச்சு!'' என்ருன்.

குஞ்சுநைநு மீண்டும் இருவரையும் மாறி மாறிப் பார்த்தார். பதினைந்து வயதுப் பையன் பதினறு வயதானவனுக்கு அண்ணனைப் போல் இருக்கிருன். நல்ல வளமான மண்ணில் தழைத்து நிற்கிற தென்னங்கன்று போல ! அதற்குக் காரணமும் இருக்கிறது. அரைப்படி அரிசிச் சோறு தின்னும் தாயின் பிள்ளை தானே அவன் !

''நீங்க எந்த வகுப்பிலே படிக்கிறீங்க?''

''ஸிக்ஸ்திலே.''

''எஸ் எஸ்.எல்.ஸி. முடிச்ச பிறகு என்ன செய்யப் போறீங்க?''

''எங்கேயாவது போய் உன் வயிற்றுப் பாட்டுக்கான வழியைத் தேடிக்கோன்னு அப்பா சொல்லிவிட்டார்!'' என்ருன் அச்சன்குஞ்சு.

''சரிதானே? அவன் வேறு என்ன செய்வான், பாவம்!''

ஸண்ணி சொன்னன் :

''நான் எங்க தானியல் அண்ணன்கூடப் பம்பாய்க்குப் போகப் போறேன்.'

''உம், எங்கேயாவது போ. வர்கீஸ் சொன்னது போல நீயும் உன் வயிற்றுப் பாட்டுக்கான வழியைத் தேடிக்கோ.''

அச்சன்குஞ்சு கேட்டான் ;

''ராஜண்ணனிடத்திலே சொன்னல் என்னையும் பட்டாளத்திலே எடுத்துப்பாங்களா?''

''கேட்டுப் பாரு. அவன் அடுத்த மாசம் வரப்போறதாகக் கேள்வி.''

தோட்ட வாயிலே அடைந்ததும் குஞ்சுநைநு பேரன்களைத் திருப்பியனுப்பினர். உள்ளே பேச்சுக் குரல் கேட்டது. பக்கத்தில் சென்றபோது யாரென்று தெரிந்தது. சிவராம குறுப்பு !

''அப்போ ஸிஸிலிக்கு இரண்டு பெயரா ?" ஒன்று நிஜப் பெயர். வேறொன்று செல்லப் பெயர்.''

''என்ன, என்ன ?''

''ஆ ..குஞ்சுநைநு வந்தீர்களா ? ஸிஸிலிக்குட்டி என்கூடத் தான் இன்றைக்குப் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாள். 'குறுப்பு மாமா' என்று கூப்பிட்டுக்கொண்டே ஓடோடி வந்து என் கையைப் பிடித்தாள். அப்போ அவள் சிநேகிதி ஒருத்தி 'மரியம் மாத்யு, போறியா'என்று கேட்டாள். அப்போதுதான் ஸிஸிலிக் குட்டி இவளுடைய செல்லப் பெயர் என்ற விஷயம் எனக்குத் தெரிந்தது'

''மரியம் அவள் பாட்டியின் பெயர். தவிர, கர்த்தரின் அன்னையின் பெயரும் கூட.''

''ஆஹா! அது எனக்கும் தெரியும். வள்ளத்தோள் கவிஞருடைய மக்தல மரியம் நான் வாசித்திருக்கிறேன்.

''கர்த்தரின் புகழைக் கேளாய் ! கேளாய் மரியமே!
கருத்துடன் கேட்பார்க் காறுதல் தரும் புகழ் ..''

''குறுப்பு ! நீங்க சொன்னது தப்பு. மக்தல மரியாள் வேறு; கர்த்தரின் அன்னை மரியாள் வேறு.''

''அப்படியா ?''

''ஆமாம். மக்தல மரியாள் ஒரு மாபாவியான பெண். கர்த்தர். பரிசேயரில் ஒருவன் வீட்டில் உணவு அருந்திக்கொண்டிருந்தார். அப்பொழுது பாவியான ஒரு பெண் ஒரு வெள்ளைக்கல் ஜாடியில் வாசனைத் தைலம் கொண்டு வந்து, அவருடைய பாதங்களைத் தன் கண்ணீரால் கழுவி, தன் தலைமயிரினுல் துடைத்து, முத்தமிட்டு, தைலத்தைப் பூசினுள். பரிசேயன் 'இவள் பாவியாயிற்றே' என்று தனக்குள் எண்ணிக் கொண்டான். இதை அறிந்த கர்த்தர், ''ஒருவனிடம் இரண்டு பேர் கடன் வாங்கினுர்கள். ஐம்பது தினுர் ஒருவன் பெற்றுன் ; மற்றவன் ஐந்நூறு தினுர் வாங்கினுன். இருவருமே பட்ட கடனைத் தீர்க்க இயலாதவராயினர். கடன் கொடுத்தவன் இருவருக்குமே விட்டுக்கொடுத்தான். இவ்விரு

வரில் அந்த மனிதரிடம் யாரே அதிகமாக அன்பு செலுத்துவர் ?' என்று கேட்டார். அதற்குப் பரிசேயன், 'அதிகமான அருளைப் பெற்று, அந்தக் கடனுக்காக விட்டுக்கொடுக்கப் பெற்றவனே கூடுதலான அன்பு செலுத்துவான்' என்ருன்.

''கர்த்தர் அவனிடம், 'உன் கருத்து சரியே. நான் உன் வீட்டுக்கு வந்தேன். நீ எனக்குத் தண்ணீர் அளிக்கவில்லை ; இவளோ கண்ணீரால் என்னுடைய கால்களைக் கழுவி நீள் முடியினுல் துடைத்துவிட்டாள்' என்ருர். பின்னர் அவளிடம், 'உன்னுடைய நம்பிக்கையே உன்னைக் காத்தது. நீ அமைதியுடன் ஏகுவாய்' என்ருர். இவ்வகையில் பாவ விமோசனம் பெற்ற மக்த லேனு மரியாளும் கர்த்தரின் அன்னை மரியாளும் கர்த்தர் சிலுவை யில் அறையுண்டபோது சேர்ந்திருந்து கண்ணீர் வடித்ததாக அபோஸ்தலர் கூறுகிருர்''.

''அப்படியா? இதெல்லாம் எனக்குத் தெரியாது.''

ஸிஸிலி சமையலறையிலிருந்து ஓடி வந்து சொன்னுள்:

''தாத்தா! ராஜண்ணன் அடுத்த மாசம் வரப் போருராம். கடிதம் வந்திருக்கு.''

''என்ன?''

''ராஜண்ணன் அடுத்த மாசம் வரப் போருர்.''

''அப்படியா?''

குறுப்பு கேட்டான் :

''ராஜண்ணன் கொண்டுவருவதை இந்தக் குறுப்பு மாமா வுக்கும் தருவாயா?''

ஸிஸிலி சற்று யோசித்தான் பிறகு சொன்னுள் :

''என்ன கொண்டு வர்ருர்னு பார்ப்போம். அப்புறம் சொல் றேன்.''

''பலே தந்திரக்காரி! சின்னப் பெண்ணுயிருந்தாலும் சாமர்த் தியம் இருக்கிறது.''

குஞ்சுகைநனு சொன்னுர் :

''குட்டிப் பாம்பிற்கு நஞ்சில்லையா ! அப்படித்தான். பெண் ணிற்கு இரண்டு சாபம் இருக்கு. ஒன்று, சீக்கிரம் தந்திர வலையிலே விழுவாள். மற்றது, வாய்ப்பு வந்தால் தந்திரம் புரிவாள். இரண்டுமே ஏதேன் தோட்டத்திலிருந்து ஆரம்பித்தது. சாத்தான் பாம்பாக வந்தது பெண்ணிடம்தானே ? பெண் சாத்தான் விரிச்ச

வலையில் விழுந்தாள். சாத்தானின் துர்ப்போதனை கேட்டதினால் புசிக்கிறதுக்கு நலமானதென்றும், பார்க்கிறதுக்கு இன்பமானதென்றும், விவேகத்தைப் பெறுவதற்கு இச்சிக்கத்தக்கதென்றும் பெண்ணானவள் கண்டு, அதைப் பறித்துப் புசித்தாள். ஆதம் கூட இருந்திருந்தால் இப்படி நடந்திருக்குமா? நடந்திருக்காது. தான் புசித்ததோடல்லாமல் அதைத் தந்திரமாகக் கணவனுக்கும் கொடுத்தாள்...''

''என்ன சாமர்த்தியம் ?''

''இன்னும் கதை இருக்கு. யாக்கோபு லாபானின் புதல்விகளான ராகேலையும் லேயாளையும் அழைத்துக்கொண்டு ஓடிப்போனான். லாபானும் அவனுடைய சகோதரர்களும் பின் தொடர்ந்து, அவர்களைத் தடுத்தார்கள். விஷயம் என்ன தெரியுமா ? லாபானின் தெய்வங்களின் சிலைகளை ராகேல் திருடிவந்திருந்தாள். அது திரும்பக் கிடைக்கவேண்டும். ராகேல் என்ன செய்தாள் தெரியுமா ? அவள் சிலைகளை ஒட்டகத்தின் சேணத்துக்கடியில் வைத்து, அதன்மேல் உட்கார்ந்திருந்தாள். மற்ற எல்லா இடங்களையும் தேடின பிறகு லாபான் ராகேலிடம் வந்தபோது அவள், 'உங்களுக்கு முன்பு நான் எழுந்திருக்காததைப்பற்றிக் கோபம் கொள்ளாதீர்கள். பெண்களுக்கு இயல்பான மாத வீட்டு விலக்குத்தான் காரணம்!'' என்றாள். இப்படி அவள் தன் தந்தையைத் திருப்பி அனுப்பினாள்.

''பரவாயில்லையே. நல்ல சாமர்த்தியம் !''

குறுப்பு உரக்கச் சிரித்துவிட்டு மீண்டும் சொன்னான் :

''பெண்ணின் தந்திரத்துக்குப் புராணத்திலேயும் எத்தனையோ உதாரணம் இருக்கிறது. இல்லாவிட்டால் அது வேண்டாம். வடக்குக் கேரளத்திலே வழங்குகிற ஒரு நாடோடிப் பாட்டின் கதையைக் கேட்டிருக்கிறீர்களா? உண்ணியம்மா பாலாட்டுக் கோமனைத் தன் கூந்தலுக்குள் மறைத்து வைத்தாளாம். தொன்னூரும் வீட்டுக் குறுப்பன்மார்களின் சகோதரியான உண்ணியம்மைக்கும், அவர்களுடைய பரம்பரை விரோதியான கோமனிடத்தில் காதல் ஏற்பட்டு விட்டதாம். அவள் குளிக்கப் போனபோது கோமனும் அவளுடன் சென்று குளத்தில் இறங்கினான். செய்தி அறிந்து அவளுடைய சகோதரர்கள் வந்தார்கள். அவள் என்ன செய்தாள்...?

''அதுதானே பார்த்தாளே உண்ணியம்மா,
மெல்லிய ஆடை அணிந்து கொண்டாள்.
இடுப்பளவு நீரில் இறங்கி நின்ருள்.
கூந்தலை அவிழ்த்தாள் பெண்மணிதான்.
கூந்தலின் கீழ் கோமனை நிற்க வைத்தாள்.
''அவளுடைய சகோதரர்கள் எவ்வளவு தேடியும் கோமனைக் கண்டு பிடிக்க முடியவில்லை.
''வீசல் வலையை வீசிப் பார்த்தனராம்.
எழுத்தாணி உளியை எய்து பார்த்தனராம்...

''ஆனல், கோமன் கண்ணில் படவில்லை. உண்ணியம்மா கூந்தலின் கீழ்க் கோமனை நிற்க வைத்து, சகோதரர்களுக்குத் தெரியாமல் தப்ப வைத்தாள் என்பது கதை. அப்போ குஞ்சுநைனு, அவள் தலைமயிர் எப்படி இருந்திருக்கும்?''

அக்கம் பக்கம் பார்த்துக்கொண்டு தாழ்ந்த குரலில் குஞ்சுநைனு: ''படுத்தால் கட்டில் நிறைய இருக்கும்.'' என்ருர்.

''ஹா ஹா ஹா'', சிவராம குறுப்பு உரக்கச் சிரித்தான்.

''கற்பனை பிரமாதம்.''

''என்ன?''

''கற்பனை நன்ருய் இருக்கிறது.''

''கற்பனையல்ல.''

குறுப்பு திறந்த வாய் திறந்தபடி கண்களை அகல விரித்தவாறு உட்கார்ந்திருந்தான்.

''அதை இத்தனை நாளாக என்னிடத்திலே சொல்லவே இல்லையே!''

''அப்படிச் சொல்றதுக்கு ஒண்ணும் இல்லை. ஒரு பழைய கதை ஞாபகம் வந்தது.''

உண்மையில், நிஜத்தை மறைக்கும் முயற்சிதான் செய்து கொண்டிருந்தார் குஞ்சுநைனு. இங்கே உட்கார்ந்துகொண்டு அதைச் சொல்ல இயலுமா? மருமகள் உள்ளே இருக்கிருளே! தவிர, நாற்பத்தைந்தாவது வயதுச் சபலத்தை இந்தத் தொன்னூருவது வயதில் எப்படி இன்னெருவரிடத்தில் சொல்வது? அப்படி யாருக்கும் தெரியாத சங்கதியல்ல, பிள்ளைகளுக்குக் கூடத் தெரிந்திருந்தது. 'அப்பா நல்ல புகழ் சம்பாதிச்சுத் தருகிருர் பிள்ளைங்களுக்கு' என்று

மூத்த பிள்ளை நேருக்கு நேர் நின்று வேறு சொன்னனே. போகட்டும் ஏன் பழைய குப்பைகளையெல்லாம் கிளறிப் பார்க்கவேணும்?''

''அப்பா!''

குஞ்சுநைனு திரும்பிப் பார்த்தார். குஞ்சுச்செறுக்கன் கட்டில் அருகில் நின்றுகொண் டிருந்தான்.

''என்னடா?''

''நான் உங்களிடம் ஒரு சங்கதி சொல்லலாம்னு வந்தேன்.''

''உம், சொல்லு.''

''உங்களிடம் மட்டும் சொல்ல வேண்டிய சங்கதி...''

உம், ஏதோ குழப்பத்திற்குத்தான் இவன் வந்திருக்கிறுன். சிவராம குறுப்புக்கு நிலைமை புரிந்தது ; அவன் எழுந்தவாறே கூறினன் :

''குஞ்சுநைனு ! நான் போய் வருகிறேன்.''

''நாளைக்கு மட்டும்தான் மருந்து இருக்கு. சாயந்தரம் கொண்டு வரணும்.''

''ஆகட்டும்.''

''காசு வேண்டாமா ?''

''அப்புறம் வாங்கிக் கொள்கிறேன்.''

குறுப்பு முற்றத்தில் இறங்கி நடந்தான்.

குஞ்சுச்செறுக்கன் தந்தையிடம் கேட்டான் :

''அப்பா ! உங்களுக்கு வாங்கி வர்றதுக்குப் பிள்ளைகளும் பேரன் களும் இல்லாமல்தான கூலிக்கு ஆளை வெச்சிருக்கீங்க ?''

சிவராம குறுப்பு திரும்பிப் பார்த்தான். இக்கட்டான நிலைமை யைப் புரிந்துகொண்ட குஞ்சுநைனு சொன்னர் :

''குறுப்பு ! போய் வாங்க. நாளைக்குச் சந்திக்கலாம்.''

''நாளைக்குச் சந்திக்கிற காரியத்தைப் பற்றித்தான் நான் சொன்னேன். ஏன் சந்திக்கணும் ? உங்களுக்கு வேண்டியதை நான் வாங்கி வர்றேன். இல்லாவிட்டால் நம்ம குடும்பத்திலே இருக் கும் எந்தப் பையனையாவது விட்டு வரவழையுங்க.''

எவ்வளவு நல்லவனுக நடக்க முயன்றுலும் இவ்வளவு தூரம் விட்டுக் கொடுப்பது ஆண்மைக்கு அழகல்ல என்று குறுப்புக்குத் தோன்றியது.

''என்ன ஐயா, குஞ்சுச்செறுக்கன் ! நான் உங்கள் அப்பாவிடம் பேசுகிறதோ, அவருக்கு மருந்து வாங்கிக் கொடுக்கிறதோ உங்கள் மதிப்புக்குக் குறைச்சலாகத் தெரிகிறதா ?''

''ஆமாம், மதிப்புக் குறைச்சல்தான். முதலாவதாக வீட்டிலே நுழையவிடத் தகுதியில்லாதவன் நீ. போகிற இடமெல்லாம் கல்யாணம் செய்து பெண்டாட்டியைக் கைவிடுபவன் நீ. உன்னுடைய ஒரு பெண்டாட்டி வீட்டாருக்கும் எங்களுக்கும் கடும் பகை. அவங்க, கிராமத்திலே இருக்கிற அத்தனை பேரையும் சேர்த்துக்கிட்டு எங்களை அடிச்சுக் கொல்ல வந்தாங்க. ஆனால் உன் நாலு மச்சானையும் தீர்த்துக் கட்டினோம். மூணுபேரு அப்புறம் இருமி இருமிச் செத்தாங்க. எங்களுக்கு ஒருத்தன் போனான். ஏன் இதையெல்லாம் உன்னிடத்தில் இப்போ சொல்லணும்? நீ நம்பத் தகுந்தவன் அல்ல. பதிமூணேமுக்கால் ரூபாய்க்காகத்தானே நீ என்னைக் காட்டிக் கொடுத்தே......?''

குஞ்சுநைநா அடித்துப் புரண்டெழுந்தார் :

''ச்சீ பொறுக்கி. என் வீட்டைவிட்டுப் போடா வெளியே! அவ்வளவுக்காச்சா உனக்கு ?''

சிவராம குறுப்பு சொன்னான் :

''குஞ்சுநைநா! நீங்கள் பேசாமல் இருங்கள். கேளய்யா, குஞ்சுச் செறுக்கா ! நீ படித்த பள்ளிக்கூடத்திலே நான் படிக்கவில்லை. அதனாலே நீ பேசின மாதிரி எனக்குப் பேசத் தெரியாது. அப்புறம், நான் இங்கே நுழையத் தகுதிஇருக்கிறவனா இல்லாதவனா என்பதை இந்த வீட்டில் இருக்கிறவர்கள் நிச்சயிக்கட்டும். அவர்கள் வரக் கூடாதென்று சொன்னால் அப்புறம் இந்த வாசலை இந்தக் குறுப்பு மிதிக்க மாட்டான். முன்னால் எப்போதோ உங்களோடு சண்டை போட்ட ஒரு வீட்டில் பெண் எடுத்ததினால் வந்த தோஷம்... அது உனக்கு மட்டும்தான் என்னிடத்தில் இருக்கிறதாகத் தெரிகிறது. உன் அண்ணன்மாருக்குத் தெரியவில்லை. உன் தம்பிக்கும் தெரியவில்லை. அப்போ நீ மூன்றாவதாக ஒரு சங்கதி சொன்னாயே, அது தான் உண்மை. லஞ்சம் வாங்கிப் பொய்ச்சாட்சி சொன்னது...''

''அது உன் தொழில். போற இடமெல்லாம் கல்யாணம் கட்டிப் பெண்களை பாழாக்கிறது உன் தொழில். இந்த இடமானதாலே நான் அதிகமா ஒண்ணும் பேசலே. வெளியே வா, கவனிச்சுக்கிறேன்?''

''எங்கே வேண்டுமானாலும் கவனித்துக்கொள்!'' சிவராம குறுப்பு நடந்தான்.

குஞ்சுச்செறுக்கன் சொன்னான் :

"அப்பா ! நீங்க என்னை என்ன வேணுமானாலும் திட்டுங்க. அதனாலே என் கௌரவம் குறைஞ்சு போயிடாது. தப்புத் தவறு கள், எங்கே பார்த்தாலும் யார் செய்தாலும் நான் சொல்லத்தான் சொல்வேன். ஒரு சங்கதியைப்பற்றி யோசிக்கிறதுக்காக நான் இங்கே வந்தேன். ஆனால் நீங்க என்னை வீட்டைவிட்டு வெளியே போகச் சொன்னீங்க. இது உங்க வீடுதான் ; நான் இல்லேன்னு சொல்லலே. ஆனால் நானும் பாடுபட்டு உண்டாக்கின சொத்து இது என்பதை மறக்காதீங்க. எல்லாப் பிள்ளைகளிலும் நான் ஒருத் தன் தான் உங்களுக்கு ஆகாதவன். கடவுளே ! நான் வேண்டா தவனாப் போயிட்டேனே !"

குஞ்சுச்செறுக்கனின் குரல் தழதழத்தது. அவனுக்கு அழுகை வரும்போல் இருந்தது.

"தீனும்மா !"

"என்ன ?"

"மச்சானுக்குக் குடிக்கக் கொஞ்சம் தண்ணி குடம்மா."

தீனும்மா ஒரு பீங்கான் பாத்திரம் நிறையத் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். அதை வாங்கிக் 'கட கட' வென்று குடித்த பின் குஞ்சுச்செறுக்கன் நடந்தான்.

"போகட்டுமா அம்மா ?"

தீனும்மா காலிப் பாத்திரத்துடன் மாமா அருகில் சென்று கூறினாள் :

"மாமா !"

"உம்."

"நான் ஒரு காரியம் சொல்லட்டுமா ?"

"என்ன ?"

"அந்தக் குறுப்பச்சனைவிட்டு இனிமேல் அபின் வாங்கச் சொல்ல வேண்டாம்."

"குறுப்பு இங்கே வர்றது உனக்கும் பிடிக்கலையா ?"

"மாமா பக்கத்திலே உட்கார்ந்து பேசறது எனக்கு ஏன் பிடிக்காமல் போகணும்?"

''அப்படியானல் அவன் இங்கே வருவான். நான் உயிரோடு இருக்கிற வரையிலும் வருவான்.''

''அப்புறம் உங்க விருப்பம். நான் சொல்றதுக்கு என்ன இருக்கு ?''

தீனம்மா உள்ளே போனள்.

# ஐந்து

பள்ளிக்கூடம் போவதற்கு ஆயத்தமாகிய ஸிஸிலி தாத்தா விடம் சென்று கேட்டாள் :

''கவுன் நல்லா இருக்கா, தாத்தா ?''

''ஏ ?''

''என் கவுனைப் பாருங்க.''

''நல்லா இருக்கு.''

''கண்ணை மூடிப் படுத்துக்கிட்டிருந்தால் எப்படிப் பார்க்க முடியும் ?''

''எனக்குக் கண்ணை மூடிப் பார்த்தாலும் தெரியும்.''

''பொய்.''

''திராட்சைக் கொடியும், திராட்சைக் குலையும் போட்ட கவுன் தானே ?''

''ஆமாம். எப்படிப் பார்காமலேயே சரியாகச் சொல்றீங்க, தாத்தா ?''

''அதுதான் ரகசியம். ஞானிகளுக்கு அகக்கண் இருக்குன்னு தெரிஞ்சுக்கோ ! நாட்டில் பனியும் மழையும் பெய்வது நின்று, பஞ்சம் வரப்போவது தீர்க்கதரிசி எலியாவுக்கு எப்படித் தெரிஞ்சுது ? கர்த்தரின் அருளாலே. கர்த்தரின் பக்தர்களுக்குக் காணமுடி யாதது எதுவும் இல்லை.''

''நீங்களும் பக்தரா ?''

''உம்.''

''அப்போ, எல்லாமே உங்களுக்கு முன்னலேயே தெரிஞ்சுடுமா ?''

''உம்.''

''நான் பரீட்சையில் பாஸாவேனு ?''

''உம்.''

''வருகிற திங்கள்கிழமை பரீட்சை.''

''நல்லாப் படிச்சிருக்கியா ?''

''கொஞ்சம் கொஞ்சம். கடவுளிடத்திலே சொல்லி என்னைப் பாஸ் பண்ண வையுங்க, தாத்தா.''

''அது முடியாது. நாம் பாதி, கடவுள் பாதி. போ, நல்லாப் படி!''

''அப்போ நான் போய் வர்றேன், தாத்தா.''

''சரி.''

ஸிஸிலி துள்ளிக் குதித்தவாறே பள்ளிக்கூடம் போனுள். காலடி யோசைதான் கேட்டது என்றாலும் அவள் பள்ளிக்கூடம் போகும் விதம் குஞ்சுநைநை அறிவார். நெற்றியில் தவழ்ந்து விளையாடும் கேசத்தை ஒரு கையால் ஒதுக்குவாள். மற்றொரு கையில் எலாஸ்டிக் ரிப்பனுல் கட்டிய பலகையும் புத்தகங்களும் இருக்கும். உன்னதப் பாட்டுகளில் கூறியிருப்பதுபோல் கேதாரின் கூடாரங்களைப் போலவும் பார்வோனின் ரதத்தில் பூட்டிய பரிகள் போலவும் நீ அழகி. எங்கேதி நாட்டுத் திராட்சைத் தோட்டத்து மருதோன்றிப் பூங்கொத்துப் போன்றும், சாரோனின் பனிமலர் போன்றும் நீ ரூபவதி. உன் விழிகள் புருவின் கண்களைப் போன்றவை. உன் கூந்தல் கிலியோத் மலையில் தழை மேயும் வெள்ளாட்டு மந்தைக்கு நிகர். உன் உதடுகள் சிவப்பு நூலுக்குச் சமம். உன் கன்னம் வெடித்த மாதுளம் பழம். மான் குட்டியைப் போன்று நீ துள்ளி நடக்கிருய். மாந்தளிர்போல் நீ மனமோகினி.

நான்கோ ஐந்தோ மாரிக்காலங்கள் வந்து போகும். அப்பொழுது நீ ஒரு குமரி. உன் கன்னங்கள் பளபளக்கும். கண்களில் ஒளி மின்னும். பாதம் வரையிலுள்ள பாவாடையை நீ உடுத்தியிருப்பாய். உன் வயதோ பத்தோ பன்னிரண்டோதான் இருக்கும். ஆயினும், 'ஒருவனுக்குக் கட்டிக் கொடுத்து அனுப்ப வயசாச்சு; பொண்ணுக்கு ஒரு துவையல்கூட அரைக்கத் தெரியாது' என்று உன் தாய் கூறுவாள்.

மீண்டும், மூன்ரே நான்கோ ஐந்தோ கிறிஸ்துமஸ் பண்டிகைகள் வந்து போகும். அப்போதெல்லாம் நீ உரக்கச் சிரிக்கமாட்டாய். உன் பார்வை இங்குமங்கும் போகாது. பல புதுப்புது விஷயங்கள் உனக்குத் தெரிந்திருக்கும். இருப்பினும், எதுவுமே தெரியாதது போன்ற ஒரு பாவனை செய்வாய். ஒன்றுமில்லாவிட்டாலும் ஏதோ யோசனையில் மூழ்கியபடியே நீ நடப்பாய். சும்மா இருக்கையிலும் தேவையில்லாத புன்னகை......

இங்கே ஒரு புதுத் திருப்பம். இனி உனக்கு ஒரு துணை வேண்டும். ஒரு தை மாதத்தில் நீ மணவறையில் புகுந்தால் அடுத்த தையில் நீ ஒரு சேய்க்குத் தாயாவாய். பிறகு, நீ அடக்கமே உருவான பொறுப்புள்ள இல்லாள். ஆடு, கோழி, அரிசிப் பானை, செப்புக் கலயம், ஆட்டுக்கல்..... எல்லாம் உன் தாயைப் போலவே தான். மீண்டும் கிறிஸ்துமஸ் பண்டிகைகளும், மாதாகோவில் உற்சவங்களும் வந்து போகும். உன் மூத்த மகளுக்கு அல்லது மகனுக்குத் தம்பி தங்கைகள் பிறப்பார்கள். இப்போதெல்லாம். வேலை செய்யும் கூலியாட்களை நீயே நேரில் சென்று கண்காணிப்பாய். ஐம்பது ரூபாய் கடனுக வாங்க வரும் ‘அபேஸ்’ தாமஸிற்குப் பயந்து உன் கணவன் உள்ளே பதுங்கியிருக்கும் போது, நீ வெளியே வந்து கால்காசு கூட வீட்டில் இல்லை, அண்ணே. நேற்றைக்கு ‘வந்திருந்தால் ஒரு வேலை கிடைச்சிருக்கும்’ என்று கூறிவிட்டு, அவனைச் சாமர்த்தியமாக அனுப்பி விடுவாய்.

காலச் சக்கரம் சுழன்று கொண்டே இருக்கும். கல்லூரியில் படிக்கிற இரண்டு புதல்வர்களுக்கு வகுப்புக் கட்டணந்திற்கும் புத்தகங்கள் வாங்குவதற்கும் பணம் வேண்டும். கணவனுக்குச் சிறுநீர் வியாதி. அதற்குச் சிகிச்சை செய்யவும் பணம் வேண்டும். ஆக, பெரிய ஒரு நெருக்கடி. பெண்ணின் திருமணத்திற்காகச் சேமித்து வைத்ததிலிருந்து சிறிது பணம் எடுப்பாய். இப்படியே போனுல் என்ன செய்வது என்று கணவனும் மனைவியும் கலந்தாலோசிப்பீர்கள். மனக்கவலை, பெருமூச்சு! படகின் துடுப்பு கிட்டத்தட்ட உன் கையில்தான்.

ஓர் இரவு; அது கோடைக்காலமாகவும் இருக்கலாம். கணவன் உன்னைக் கூப்பிடுவான்.

‘‘ஸிஸிலி! ’’

''என்ன ?''

''தூக்கம் வரலையா ?''

''இல்லை. ஏதேதோ யோசனை.''

''நாலஞ்சு நாளாக எனக்கு ஒரே களைப்பு.''

''இன்னும் அஞ்சோ ஆறோ ஊசி போட்டால் எல்லாம் சரியாப் போயிடும்.''

''ஹூம். பெண்ணைப்பற்றி நினைச்சா ஒரே கவலையாக இருக்கு.''

அந்தக் கவலையைப் போக்காமல், களைப்பை ஆற்றாமல் அவன் என்றென்றைக்குமாக உன்னை விட்டுப் பிரிந்தாலும் பிரியலாம். ஆனால், நீ தோல்வியடைந்து பின்வாங்க மாட்டாய். பெரிய பரீட்சை எழுதிய உன் பிள்ளைக்கு நல்ல வேலை கிடைக்கும். உன் மகளுக்குத் திருமணம் முடித்துவிட்டு அவளைக் கணவனுடன் அனுப்புவாய். உன் பிள்ளை உனக்கு மருமகளைக் கொண்டு வருவான். மகளும் மருமகளும் தாயாராகின்றனர். நீ பாட்டியாகிறாய்.

மீண்டும் வறட்சியும் வெள்ளமும் வந்து போகும். முன் போல் உனக்கு உடலில் வலிமை இருக்காது. பார்வை மங்கும். காது மந்தமாகும். முகத்தில் சுருக்கங்கள் விழுந்திருக்கும். கைத்தடியின்றி உன்னால் நடக்க இயலாது. பெண்களும் பேத்திகளும் உன் நலன் விசாரித்தறிய வந்து போகிறார்கள். அப்போது உன்னிடம் பிடிப்பெதுவும் இருக்காது. பிள்ளைகளோ மருமகளோ தந்தால் சாப்பிடலாம். குற்றம் குறைகள், நிந்தனைகள் எல்லாம் கேட்க வேண்டிய ஒரு நிலைமை வரும்.

இனி இருப்பது சில நாட்களே என்று எண்ணிக்கொண்டு எல்லாவற்றையும் நீ பொறுத்துக் கொள். உன் தாத்தாவிற்கும், தாய் தந்தையருக்கும் இப்படியொரு காலகட்டத்தைக் கடக்க வேண்டியிருந்தது என்று எண்ணி, மனத்தைத் திடப்படுத்திக் கொள். இனி அதிகமானால் அரை நாழிகை நேரம்.

எண்ணிப்பார்க்கையில் மொத்தத்தில் ஒன்றுமில்லை. மாயையின் வலிமையினால் நீயும் நானும் இதை அறிவதில்லை. பற்பல ஆசாபாசங்களில் நாம் சிக்கியுள்ளோம். அக்கரைப்பச்சைபோல் தெரியும் சுக போகங்களை அடையத் தலை தெறிக்க ஓடுவதற்கிடையில் ஒளியும் இருளுமாகக் காலம் கடந்து செல்கிறது. சுகம் என்று நாம் நினைப்ப

தெல்லாம் கையில் கிடைக்கும்போது சுகமாக இருக்காது. சிலந்தி வலை பின்னுவதை நீ பார்த்ததுண்டா? ஒரு பெரிய பேரரசை நிறுவப் போவதாக அதற்கு நினைப்பு! ஓய்வு ஒழிச்சல் இல்லாமல் அது வேலை செய்கிறது. ஒன்றோ இரண்டோ பூச்சிகளை வலையில் சிக்க வைத்துத் தின்னவேண்டும் என்பதுதான் அதன் நோக்கம். சில வேளைகளில் அதன் எண்ணம் கைகூடுகிறது. சில நேரங்களில் வலையைப் பின்னி முடிப்பதற்குள்ளாகவே ஒரு சிறு காற்று வந்து, வலையைப் பாழடித்துவிடும். நிலைத்திருப்பதற்காக நாம் செய்யும் முயற்சியின் விளைவுகளும் இப்படியெல்லாம்தான் இருக்கும். அதற்காக, சிலந்தி தன் வேலையை நிறுத்திவிடுகிறதா? இல்லை. உலக வாழ்க்கை என்பதும் அப்படித்தான்.

தலை தெறிக்க ஓடுவதற்கிடையில் என்ன சாதித்தோம் என்பதை நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. ஐந்தேகால் செண்டு நிலத்திற்காகத் தானே நானும் என் பிள்ளைகளும் கிராமத்தாரோடு போர் புரியக் கிளம்பினோம்? அதற்கு விலையாகத் தலைமகனை உயிர்ப் பலி கொடுத்தேனே!

ஐந்தேகால் சென்டு புறம்போக்கு நிலத்துடன் முல்லைத்தரை உண்ணி எசமானனிடமிருந்து வாங்கிய நாற்பத்திரண்டு சென்டு இருபோக நிலத்துடன் சேர்ந்திருந்தது. பட்டயத்தில் குறிப்பிடா விட்டாலும் வெகு நாட்களாகவே இந்தப் புறம்போக்கு நிலம் சர்வே நம்பர் முந்நூற்று நான்கின் நாற்பத்தேழின் பகுதியாக இருந்து வந்தது. அதற்கு வடக்கே நான்கு பகுதிகளாக இருந்த அறுபத் திரண்டு சென்டு நிலம் நாணு நாயரின் மூத்த பெண், அதாவது சிவராம குறுப்பின் முதல் மனைவியுடைய அக்காவுக்குப் பாகப் பிரிவினையில் கிடைத்தது. அவளுடைய கணவன் நாருணமூழி சேகரன் நாயர் விவசாயம் செய்ய வந்தபோது, நிலத்தை அளக்கச் செய்தான். தஸ்தாவேஜின்படி அறுபத்திரண்டு சென்டு நிலம். அளந்து பார்த்தபோது ஐம்பத்தேழு! மீதி நிலம் எங்கே? குஞ்சு நைனா அதைத் தம் வசமாக்கியிருந்தார். உழுவதற்குக் காளைகள் வயலில் இறக்கியபோது, தகராறு ஆரம்பித்தது. வாக்குவாதம் வலுத்தது. கூட்டம் சேர்ந்தது. என்னுடைய நிலத்தின் சுற்றிலு முள்ள நிலம் நாயர்களுக்குச் சொந்தமானது. நாணு நாயரின் உறவினர்களுக்கே ஏழு பங்குகள் இருந்தன. வாதிக்காகப் பரிந்து

கொண்டு பேசுவதற்குத்தான் எல்லோரும் இருந்தார்கள். 'இதென்னடா பெரிய குழப்பமாப் போச்சே!' அதிகமாக இருக்கும் நிலத்தை விட்டுக்கொடுக்க வேண்டுமாம். அது நடக்குமா? வீண் சண்டை எதற்கு என்று நினைத்தேன். எனவே சொந்தச் செலவில் ஆளைக் கொண்டுவந்து அளக்கச் செய்தேன். சேகரன் நாயரின் அறுபத்திரண்டு சென்டு நிலமும் அப்படியே இருந்தது. ஆனால் அந்த முரடன் ஒத்துக்கொள்ள வேண்டுமே! அப்பொழுது இதற் கென்ன வழி செய்யலாம்? எப்படிப் பார்த்தாலும் அவர்கள் வலிமை மிக்கவர்கள். எனவே ஒருநாள் அதிகாலையில் முல்லைத்தரை எசமானரிடத்தில் சென்றேன். அவர் மிகவும் நல்லவர். பனைச்ச மேட்டிலிருந்து கண்ணன்கோடு கிராமம் வரையில் முல்லைத்தரை வீட்டார்களின் ஆதீனத்திலிருந்தது. ஊரே அவர்களிடம் பயந்து மரியாதை காட்டிவந்தது. மேல்துண்டை இடுப்பில் கட்டி, வாய் பொத்தி, எசமானர் எதிரில் போய் நின்றேன்.

''என்னடா, குஞ்சுநைநா!''

என் வழக்கை முறையிட்டேன் :

''எசமான் கருணைகூர்ந்து தந்த மண்ணு. அந்த மண்ணிலே வேலை வேணும், என் பிள்ளைங்களுக்குக் கஞ்சியோ கூழோ வார்க்க.''

பெரிய எசமானர் கனகம்பீரமானவர். வார்த்தைகளை அளந்து தான் பேசுவார்.

''சரி, நீ போ.''

பெரிய எசமானர், சேகரன் நாயரைக் கூப்பிட்டனுப்பி, புத்திமதி சொன்னார். ஆனால், அவனாவது, அதன்படி நடப்ப தாவது! அனுசரணையற்றவனாச்சே!.. ...

இப்படி, சச்சரவும் வாதப்பிரதிவாதமுமாக அந்த ஆண்டு விவசாயம் ஒருவிதமாக நடந்தது. அறுவடைக்குப்பின் நிலம் உழுவதற்காகப் போனபோது, வரப்பை மாற்றி வைத்திருப்பதைக் கண்டேன். மூத்த பிள்ளையும் வர்கீஸும் என்னுடன் இருந்தார்கள். புலையன் தேவனிடமிருந்து மண்வெட்டியை வாங்கினான் வர்கீஸ். பிறகு வரப்பைப் பழையபடியே வெட்டி வைத்தான். அப்போது சேகரன் நாயர் அங்கே இல்லை. செய்தி தெரிந்தவுடன் அவன் விரைந்து வந்தான். அவனுடன் எட்டுப் பத்து ஆட்கள் வேறு

இருந்தார்கள். இதற்குள் தேவனுடைய மச்சான் கண்டங்காளி ஓடிச்சென்று, குஞ்சுச்செறுக்கனேயும் கஞ்சித்தட்டு வீட்டுக் கொச்சுப் பாப்பியையும் அழைத்துவந்தான். பிலிப்பு ஊரில் இல்லே. மாத்யு சின்னப் பையன்..... ஆக, பெரிய குழப்பம் வரும் என்று மனத்தில் எண்ணிக்கொண்டேன். 'என்ன செய்யலாம்?' வந்ததும் வராதது மாகச் சேகரன் நாயர் அலறினன் :

"வயலிலிருந்து வெளியே போடா, க..... பயலே!"

"அது உன் அப்பனேப் பார்த்துச் சொல்லுடா, தே.....பயலே"

இப்படிச் சொன்னவன் வர்கீஸ்தான். அப்பாவை வாய்க்கு வந்தபடி ஏசினல் அதைக் கேட்டுக்கொண்டு அவன் வாளா விருப்பானு?

சேகரன் நாயர் ஒரு குட்டியானே. 'கோதா'வில் வேறு பயின்றவனும். அவன் தாவிவந்து வர்கீஸின் கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறை விட்டான். மூத்தவன் அப்போதும் சண்டையைத் தவிர்க்கத்தான் முயன்றுன். சேகரன் நாயருடைய நண்பன் பனேச்சவெளி வாசு குறுப்பு என் உடம்பில் கை வைத்தபோது அவன் சினம் கொண்டான். எட்டி உதைக்கவே குறுப்பு மல்லாந்து விழுந்தான். என்னிடமிருந்து மடக்குக்கத்தியை வாங்கி, அதைப் பல்லால் கடித்து நிமிர்த்தினன். அவ்வளவுதான், தபதபவென்று ஆட்கள் வயலில் குதித்தனர்! இவ்வளவுதான் ஞாபகம் இருக்கிறது. அவர்கள் சுமார் முப்பதுபேர் இருந்தார்கள்! நாங்கள் ஐந்து பேர்கள்! கூக்குரல் கேட்டு, குழிக்கண்டத்துப் பாப்பச்சனும் அவன் மச்சானும் ஓடோடி வந்தார்கள். என் கையில் கிடைத்தது மண்வெட்டி. இப்படி ஒவ்வொருவர் கையில் ஒவ்வொன்று. எதிரி களேக் கொன்று சாய்த்து விடவேண்டும் என்ற ஒரு வெறி. ஒரு விதமான பைத்தியம் என்றுதான் சொல்ல வேண்டும். சத்தமும் கூக்குரலும் கண்ணன்கோடு கிராமம் வரை கேட்டதாகச் சொல் கிருர்கள். அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்தெல்லாம் மக்கள் வந்து கூடினுர்கள். வயலில் ரத்தம் உறைந்து தேங்கிக்கிடந்தது. செய்தி தம் காதிற்கு எட்டவே முல்லேத்தரை எசமானர் வந்தார். அவர் வயலில் இறங்கி நின்றுகொண்டு கர்ஜித்தார் :

நிறுத்துங்கடா, அயோக்கியப் பயல்களே! எல்லாரையும் ஜெயிலுக்கு அனுப்பறேனா இல்லையா, பாருங்க''.

சண்டை நின்றது. யார் செத்தார், யார் பிழைத்தார் என்றெல்லாம் தெரியவில்லை. பையன்களின் மனைவிகள் வேறு 'குய்யோ முய்யோ' என்று கதறியழுதுகொண் டிருந்தார்கள். கைப்பிடிவரை ரத்தம் தோய்ந்த கத்தியைக் கையில் பிடித்தவாறு மூத்தவன் மயக்கமாக விழுந்துகிடந்தான். உடலில் குத்துப்பட்டு நான்கைந்து பேர்கள் விழுந்துகிடந்தார்கள். போர்க்களம்தான்! யகோசாபத் மன்னன்பாலைவனத்துக் கோட்டை வாயிலில் வந்து பார்த்தபோது கண்ட அதே காட்சி. தாமஸ் வீழ்ந்துகிடப்பதைப் பார்த்தபோது உள்ளமே குமுறிவிடும்போல் இருந்தது....

''டேய், உன்னை அவங்க கொன்னுவிட்டாங்களா?''

''மாமா!''

குஞ்சுறைநா விக்கி விக்கி அழலானார். திரும்மா உரக்கக் கூப்பிட்டாள்:

''மாமா!''

''என்ன?''

''ஏன் அழறீங்க?''

''அழுதேனா?''

''பின்னே அழாமல்? உன்னைக் கொன்னுவிட்டாங்களான்னு வேறு கேட்டீங்க!''

''சின்னக்குட்டி போய்விட்டாளா?''

''எப்பவோ போய்விட்டாளே? நேற்றைக்குத்தான் நான் சொன்னேனே, சும்மா இப்படி ஏதேதோ யோசிக்க வேண்டாமுன்னு.''

''உம்.''

''குறுப்பு வந்திருந்தார்.''

''அப்புறம்.''

''சிறிது நேரம் இங்கே உட்கார்ந்திருந்தார். மாமா தூங்கறார்; எழுப்பவேண்டாமுன்னு சொன்னார். அபின் தந்திருக்கிறார்''

''நல்ல வேளை நாலு நாளைக்குக் கவலையில்லை.''

''குஞ்சுச்செறுக்க மச்சான் பேசினபேச்சுக்கு இங்கே வந்திருக்கக்கூடாது, இருந்தாலும் மாமாவை நினைச்சுத்தான் வந்ததாகச் சொன்னார்.''

''நல்ல குடியில் பிறந்தவன் அவன்.''

''உங்களைப் பார்ப்பதற்கு ஒருத்தி அந்தப் பக்கம் வந்திருக்காள்.''

''யாரு?''

''ராகேல்.''

''ஏ... ?''

''வர்கீஸ் மச்சான் மூத்த மகள்.''

''கூப்பிடு.''

ராகேல் வந்தாள். அவள் முக்காடிட்டுத் தலையை மறைத்திருந்தாள். குஞ்சுநைனு அவளை உற்றுப் பார்த்தார். 'முறைக்'குப் போவதை நிறுத்தியதிலிருந்து அவளைப் பார்க்கவே இல்லை.

''இப்படிப் பக்கத்தில் வா.''

முகத்தில் தடிப்பு அப்படியே இருக்குது. அதிகமாகிவிட்டதோ என்றுதான் சந்தேகம்.

''பொண்ணு !''

''என்ன தாத்தா ?''

''தாத்தாவைப் பார்க்கத்தான் வந்தாயா ?''

''ஆமாம்.''

''உன் தங்கை இரண்டு நாட்களுக்கு முன்னால் இங்கே வந்திருந்தபோது அவளிடம் உன்னைப்பற்றி விசாரிச்சேன்.''

''ஆனால் அவள் என்னிடம் எதுவும் சொல்லவில்லை.''

''சொல்லவில்லையா ?''

''என்னிடம் யாரும் எதுவும் சொல்றதில்லை.''

''ஏ... ?''

''நான் எல்லாருக்கும் வேண்டாதவளாகப் போய்விட்டேன். என்னாலே எல்லாருக்கும் கஷ்டம்.''

''உம்.''

''தங்கைமார்களுடைய கணவர்களும் மற்ற சொந்தக்காரர்களும் வரும்போது வெளியே வரக்கூடாதுன்னு கட்டளை.''

ராகேல் முன்தானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். தீனும்மா சொன்னாள்:

''அழாதே ராகேல். உலகமே அப்படித்தான். அம்மா, அப்பா, அண்ணன், தங்கை யாராக இருந்தாலும் அவ்வளவுதான்!''

''கடவுள் என்னைக் கூப்பிடமாட்டேன் என்கிறாரே! பூமிக்குப் பாரமாக ஏன் என்னை வைச்சிருக்கிறார்?''

''உன் புக்ககத்திலிருந்து யாராவது வந்தாங்களா?''

ராகேல் பதில் சொல்லவில்லை. என்ன பதில் சொல்வது? புக்ககத்திலிருந்து வருவதும் போவதும் எப்போதோ நின்றுவிட்டது என்பதை அறிந்துள்ள தாத்தாவா இந்தக் கேள்வி கேட்கிறார்?

சிறிது நேரம் குஞ்சு நைனாவோ தீனம்மாவோ ராகேலிடம் ஒன்றும் பேசவில்லை.

''யாருக்கும் தொந்தரவு கொடுக்காமல் ஒரு நாள் போனால் போதும்.''

''அதெல்லாம் நம் கையிலேயா இருக்கு? கடவுள் விருப்பமும் வேண்டாமா?''

''நான் ஒரு விஷயம் நிச்சயம் பண்ணியிருக்கேன்.''

''என்ன?''

''அவங்களுடைய கஷ்டத்தைப் போக்கிவிடப் போறேன்.''

''முட்டாள்தனமாக உளறாதே, ராகேல்!''

''என்ன, என்ன?''

''ஒண்ணுமில்லை மாமா.''

துக்கத்தை அணை போட்டு நிறுத்தமுடியாமல் போகவே ராகேல் வாய்விட்டு அழுதாள்.

''அழாதேம்மா. கடவுள் உன் துயரத்தைப் போக்குவார். அவரால் இயலாதது எதுவும் இல்லை.''

சற்று நேரம் ராகேல் தாத்தாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தாள். மீண்டும் கண்களைத் துடைத்தாள்:

''நான் போய் வர்றேன், தாத்தா!''

''சரி.''

அந்த இடத்தை விட்டுப் பிரிய மனமில்லாதவள்போல் அவள் சிறிது நேரம்கூட அங்கேயே நின்றாள். தீனம்மா சொன்னாள்:

''உச்சிவேளையாய் விட்டதே, ராகேல்! வா, சாப்பிட்டுவிட்டுப் போகலாம்.''

''வேண்டாம், சித்தி.''

சித்தி என்று கூப்பிட்டாலும் தீனும்மாவைவிட ராகேலுக்குத் தான் வயது அதிகம். ஆனுல் உறவு முறைப்படி தீனும்மா சித்தியாகிருள்.

குஞ்சுனைநனு நினைக்கலானுர் : பாவம்! இந்தப் பெண்ணிற்கு இப்படியும் ஒரு துயரமா? அவளால் தாங்கிக்கொள்ள முடிவதில்லை. தாய் தந்தையரின் வசைமாரி, தங்கைகளின் சொல்லம்புகள்! எல்லாவற்றையும் எப்படித் தாங்குவாள்? அப்படி என்னதான் குற்றம் புரிந்தாள் அவள்? கடவுள் அவளுக்குத் தீராத வியாதியைக் கொடுத்துள்ளார். மிகவும் அருவருப்பான ஒரு வியாதி. கடவுள் ஏன் அவளுக்கு இந்த வியாதியைக் கொடுத்திருக்கிருர்? உத்தமனும் நேர்மையாளனும் கடவுளுக்குப் பயந்து நடந்தவனுமான யோபுவைச் சோதித்ததுபோல் அவளையும் சோதித்துப் பார்க்கிருரா? எல்லாம்வல்ல இறைவனின் விருப்பத்தை யாரறிவார்? குடும்பத்தில் வேறு யாருக்கும் இந்த வியாதி வந்ததில்லை. தாய் வழிப் பரம்பரையிலிருந்து கிடைத்ததாகச் சொல்கிருர்கள். அவளுக்குப் பத்தோ பன்னிரண்டோ வயது இருக்கும்போது, இடது கையில் சிறு தடிப்புத் தோன்றியது. எண்ணெய்யும் கஷாயமும் சாப்பிட்டால் எல்லாம் சரியாகப் போய்விடும் என்று சொல்லி, வைத்தியம் செய்தார்கள். வர்கீஸின் ஐந்து பெண்களில் இவள் மூத்தவள், தங்கைகளைக் கவனிப்பதற்கும் வளர்ப்பதற்கும் கெட்டிக்காரியாக இருந்தாள். வயதுவந்த பிறகு சமையலறைப் பொறுப்பு அவளிடம் தான் இருந்தது. இதற்கிடையில் வியாதியைச் சரிவரத் தெரிந்து சிகிச்சை செய்ய நேரம் எங்கே? பதினுரோ பதினேழோ வயதான போது அவளுடைய தாய் மாமா ஒரு திருமணப் பேச்சுடன் வந்தார். பையனுக்கு வங்கியில் வேலை. விசாரித்தபோது நல்ல இடம் என்று தெரிந்தது. எனவே அவள் அப்பா சொன்னுர் :

"அப்பா!"

''என்ன?''

"இந்தக் கல்யாணம் எப்படியாவது நடத்தினுல் நல்லா இருக்கும்.''

''உம், நடத்து.''

''நடத்தறதுக்கு என்னிடத்தில் பணம் ஏது?''

எனவே யோசித்தேன். அவனிடம் பணம் இல்லை. ஐந்து பெண்களுக்கு அவன் மணம் முடித்து அனுப்பியாகணுமே! அப்புறம் தானே அவன் கொஞ்சம் நிம்மதியாக இருக்கமுடியும்? விவசாயத்தி லிருந்தும் வியாபாரத்திலிருந்துமாகக் கிடைத்த பணம் கொஞ்சம் அப்போது என்னிடம் இருந்தது.

''நம்மவங்க நாலுபேரை அழைச்சுக்கிட்டுப்போய் நிச்சயம் பண்ணு.''

''நீங்களும் வாங்க, அப்பா!''

நானும் சென்றேன். திருமணமும் நடந்தது. அதற்கு அடுத்த வாரம் பெண்ணைப் பிறந்த வீட்டில் கொண்டுவிட்டு விட்டார்கள். பிறகு யாருமே அழைத்துக்கொண்டு செல்ல வரவில்லை. விசாரித்தபோது கையில் இருந்தத் தடிப்பை அவர்கள் பார்த்துவிட்டதாகத் தெரியவந்தது. அதை தெரிவிக்காமல் மறைத்ததாகவும் குற்றம் சாட்டினார்கள்; நியாயம்தானே? எனினும், மணம் முடிந்த பெண்ணிற்குக் கணவனுடைய வீட்டில்தானே உரிமை? வேண்டுமென்றால் அங்கே கொண்டுபோய் விட்டு வரலாம். ஆனால் கைபட்டால் குற்றம், கால்பட்டால் குற்றம் என்பார்கள். அடியும் உதையும் வாங்கிக்கொண்டு நாட்களைப் போக்கலாம். எனவே அவள் பிறந்த வீட்டில் இருக்கிறாள். இதற்கிடையில் வியாதி உடல் முழுவதும் பரவிவிட்டது. வெளியே தலையைக் காட்டக் கூடாது என்று கட்டுப்பாடு செய்து, அவளை வீட்டுடன் வைத்திருக்கிறார்கள்; ஏதோ வாழ விடுகிறார்கள்.

அப்படிக் கட்டுப்படுத்துகிறவர்களை ஏன் குறை கூற வேண்டும்? பழைய ஏற்பாட்டின் காலத்திலேயே இந்த வியாதி வெறுத்து ஒதுக்கப்பட்டதாக இருந்து வந்திருக்கிறது. சினாய் மலையில் கர்த்தர் மோசே ஆரோன் என்பவர்களிடம்: 'ஒரு மனிதனுடைய சரீரத்தின்மேல் ஒரு தடிப்பாவது, அசருவது, வெள்ளைப் படராவது உண்டாகி, அது குஷ்டரோகம்போல் தோன்றுமானால், அவனை ஆசாரியனாகிய ஆரோனிடத்திலாகிலும், ஆசாரியராகிய அவன் குமாரர்களில் ஒருவனிடத்திலாகிலும் கொண்டு வரவேண்டும். ஆசாரியன் அவன் ரோகத்தைப் பார்க்க வேண்டும். ரோகம் இருக்கும் இடத்தில் மயிர் வெள்ளையாகவும், ரோகமுள்ள இடம்

சற்றுப் பள்ளமாகவும் தோன்றினால் அவனைத் தீட்டுள்ளவனாகத் தீர்க்க வேண்டும்' என்று கூறினார்... ...

''பொண்ணு.''

''என்ன மாமா ?''

தீனம்மா வந்தாள்.

''கொஞ்சம் கஞ்சித்தண்ணி கொடு.''

குஞ்சுநைனா எழுந்து உட்கார்ந்தார். தலையணையின் கீழிலிருந்து சிறிதளவு அபினை எடுத்துச் சாப்பிட்டார். பிறகு கஞ்சித் தண்ணி வாங்கி, அதைக் குடித்தார். மீண்டும் படுத்தபோது தோட்டவாயிலில் பேச்சுக்குரல் கேட்டது :

''சாமி ! லாஸர் மச்சான் பக்கம்தானே பேசறீங்க !''

''ஆமாம். அதுதான் நியாயம்.''

''நாலுபேரு நினைக்கிறதுதானே நியாயம் ?''

குஞ்சுநைனா தீனம்மாவிடம் கேட்டார் :

''மாத்யுகூட வேறு யாரது ?''

தீனம்மா முற்றத்தில் இறங்கிப் பார்த்த பிறகு சொன்னாள் :

''கார்த்திகைப்பள்ளி சாமியார்.''

''ஆ...''

''நீங்க அப்படித்தான் சொல்லுவீங்க, சாமி ! என்ன இருந்தாலும் பேரன் பேத்தி எடுத்திருக்கும் ஒரு மனைவியை அடிக்கிற புருஷனுக்கு மானம் மரியாதை இருக்கான்னு கேட்கிறேன்.''

''அடிக்கிறது சரியென்று நான் சொல்லவில்லை. ஆனால் ஒரு விஷயம். அக்காவுக்கு நா சுத்தமில்லை. மாத்யு, நீ எங்கேயோ இருந்துகிட்டு நியாயம் கேட்கிறே. ஆனால் நான் அண்டை வீட்டில் இருந்துகொண்டு எல்லாவற்றையும் காணவும் கேட்கவும் செய்கிறேனே !''

''அக்கா குணம் அப்படியானதற்குக் காரணம் என்னவென்று நீங்க யோசித்ததுண்டா, சாமி ?''

''எனக்கு எல்லாம் தெரியும்.''

''வீட்டிற்கு வந்த நாளிலிருந்து நிம்மதியாக அக்காவை வாழ விட்டிருக்கானா? நடத்தை கெட்டவன். போகிற இடங்களிலெல்லாம் வைப்பாட்டி. அக்கா முதலில் கோபித்தும் கடிந்தும் பார்த்தாள். சண்டை போட்டும் பார்த்தாள். திருந்தாமல் போகவே

தான் உள்ளத்தால் அகன்ருள். பிறகு நெருங்கவில்லே. கிறிஸ்துவர் களுடைய வாழ்க்கை முளேயிலே கட்டிப் போட்ட ஆட்டைப் போன்றது. அக்காவாக இருந்ததால் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு அங்கே இருக்கிருள். கர்த்தரால் இணேக்கப்பட்டது; கடைசிநாள் வரை கணவனுக்குத் தொண்டு புரிய வேண்டும் என்றெல்லாம் சொல்வதில் என்ன பொருள் இருக்கிறது?''

குஞ்சுநைனு கேட்டார் :

''யாரைப் பற்றிப் பேசறீங்க ?''

''தீனும்மாவின் மூத்த அக்காவைப் பற்றித்தான், மாமா!''

''ஆ...மரியம்மாவைப் பற்றியா? யோசித்துப் பார்த்தால் அதிலே தச்சன் தவறும் இருக்கு; மரக்குற்றமும் இருக்கு.''

தீனும்மா கேட்டாள் :

''என் அக்காதானே! சாமிக்கும்தானே அக்கா ?''

சாமியார் உரக்கச் சிரித்தார்.

''ஆமாம் நீங்கள் ஒரு தாயின் வயிற்றில் பிறந்த அக்கா தங்கைகள். நான் சற்றுத் தாமதித்து வந்தவன். சரிதானே ?

''சரிதான்.''

'' நான் உங்கள் வீட்டிற்கு வரும்போது உனக்கு நாலு வயசு தானே தீனும்மா ?''

''ஆமாம்.''

அந்த நான்கு வயதுச் சிறுமியைச் சாமியார் தம் மனத்திரையில் கண்டார்: சின்னஞ்சிறு கவுன் அணிந்து, வண்ணத்திப் பூச்சி போல் பறந்து நடக்கின்ற பருவம். அவர் 'குருமாணவன்'. அவளுக்குக் கதைகள் கேட்பதென்ருல் உயிர். அவருடன் கட்டிலில் படுத்துத் தூங்க வேண்டுமென்று அடம் பிடிப்பாள். 'லாஸர் அண்ணேவிடச் சாமியண்ணன்தான் நல்லவர்' என்று கூறுவாள். அந்தக் குழந்தைப் பருவத்திலும் ஒரு தாமரை மொட்டுப் போல் அவள் அழகாக இருந்தாள். பதினறு வயதானபோது அவள் பேரழகியாகத் திகழ்ந்தாள். இருந்தும் இரண்டாம் தாரமாகத்தான் அவள் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டாள். விதியின் வலிமை! இரண்டு பெண்களின் திருமணமும், தம் நோக்காடுமாக அவள் தந்தையை வறுமை வாட்டியது. வீடும் தோட்டமும் தவிர

*ஸிரியன், கத்தோலிக்கக் குருமார்களேச் சாமியார் என்று அழைப்பார்கள்.

மற்றவையெல்லாம் சீட்டுக் கடனில் தொலைந்தது. அழகியானாலும் திருமணம் முடிக்க இயலாத நிலைமையில் தந்தைக்குப் பெண் ஒரு சுமைதான். மாத்யுவுக்குத் தீனம்மாவை மணம் முடிக்கப் பேச்சுக் கொண்டு வந்தவர் சாமியார்தான். மாத்யு அவருடைய அத்தை யின் மகன். இரண்டாம் தாரமாக இருந்தாலும் மாத்யுவை எல்லோருக்கும் பிடித்திருந்தது. வாட்டசாட்டமானவன்; நாவன்மை யுள்ளவன்......

''சாமிக்கு இப்போ அங்காடி மாதாகோவிலில்தானே ஊழியம்?''

''ஆமாம். 'மாமா '

''திருச்சபைச் சண்டையெல்லாம் எப்படியிருக்கு ?''

''முன்போல் அவ்வளவு காரசாரமாக இல்லை.''

''கொப்பரை வீட்டுப் பெரியவர் இருக்காரா ?''

''காலமாயிட்டாரே. இப்போது அவருடைய மூத்த பையன் தான் நாட்டாண்மை. சாண்டி முதலாளியினுடைய மகளைக் கட்டியவன்.''

''உம்...ம், தெரிஞ்சுது.''

''இப்போதெல்லாம் பணமோ குலப்பெருமையோ இருந்தால் மட்டும் திருச்சபையை ஆளமுடியாது. கமிட்டியிலே சாமான்யர் களுக்குத்தான் மெஜாரிட்டி. அவர்கள் சொல்வதுதான் நடக்கும்.''

''ஆ... அது அப்படித்தானே? இங்கேயும் எல்லாம் அப்படித் தான்.''

''தீனம்மா கேட்டாள் :

''அக்காவுக்கு இப்போ எப்படி இருக்கு, சாமி?''

''நீ போனமாதம் வந்தபோது இருந்தமாதிரிதான் இருக்கு. கயிற்றைப் பிடித்துக்கொண்டுதான் நடக்க முடியும். இப்போது ஒரு சித்த வைத்தியன் வந்திருக்கிறான். நடக்கிறதென்ன, ஓடவே வைக்கிறேன்னு சொல்லியிருக்கிறான். ஆண்டவருக்குத்தான் தெரியும்.''

''என்ன, என்ன ?''

''அக்கா உடல்நலம் விசாரிச்சேன், மாமா!'' பிறகு தீனம்மா சாமியாரிடத்தில் சொன்னாள் :

''மாமாவுக்குக் கொஞ்சம் நாளாகக் காது சரிவரக் கேட்ப

தில்லே. உரக்கச் சொல்லணும். நல்லா ஞாபகமும் இருக்கிற தில்லே.

சாமியார் சொன்னர் :

''அது அப்படித்தான். கடைசி நாட்களில் காது சரிவரக் கேட்காது, பார்வை மங்கும். இந்தக் கட்டத்தை எல்லாரும் தாண்டித் தான் ஆகவேண்டும். அப்படித்தானே, மாமா?''

''ஏ... ?''

''நான் சொன்னது சரிதானே, மாமா ?''

''சரியாக இருக்கலாம். இப்போதெல்லாம் நீங்க சொல்றது தானே சரி?''

சாமியார் கடகடவென்று சிரித்தார். சிரிப்பு அவரது பெரிய ஆயுதம். தம்மைக் கொல்லவரும் பகைவனேயும் அவர் தம் சிரிப்பால் மயக்கிவிடுவார். குஞ்சுநைனு அப்படிக் கூறியதன் பொருள் சாமியாருக்குத் தெரியவந்தது. திருச்சபை வழக்கைத்தான் அவர் ஜாடையாகக் குத்திக் காட்டினர். சாமியாரும் குஞ்சுநைனுவும் யாக்கோபுத் திருச்சபையின் இரண்டு வெவ்வேறு கட்சிகளேச் சார்ந்தவர்கள். குஞ்சுநைனு கத்தோலிக்கக் கட்சியைச் சார்ந்தவர். சாமியார் ஸிரியன் பாத்ரியாக்கீஸ் கட்சியைச் சார்ந்தவர். விசுவாசப் பிரமாண விஷயங்களில் ஒன்ருக இருந்தாலும் ஆட்சி விஷயத்தில் சபை இரண்டு பிரிவுகளாகப் பிரிந்திருந்தது.

''நாங்கள் சொல்வது சரிதான். மாமாவுக்கு இதிலே என்ன சந்தேகம் ?''

''முயலுக்கு மூணு கொம்புன்னு சொல்றதுதான் சரி.''

''அதென்ன அப்படிச் சொல்றீங்க?''

''சித்தப் பிரமைன்னு துருக்கி சுல்தான் சொல்லிவிட்டதனல் அப்துல் மஸீஹா உங்களுக்குப் *பாத்ரியாக்கீஸ் அல்லாமல் போய் விட்டார்.''

''சுல்தான் சொன்னது மட்டுமல்ல காரணம். *ஸின்னஹதோஸ்கூடத் திருக்கட்டளையைத் திருப்பி எடுத்துக்கொண்டார்.''

''அது சுயநலவாதிகள் வேண்டுமென்று செய்தது. எனக்கு வியாதி வந்தால் நான் மாத்யுவின் அப்பா இல்லேயென்று ஆகி விடுமா ?''

---

* பாத்ரியாகீஸ் – பிஷப்பைப் போன்ற ஒரு மதத்தலேவர்.

* ஸின்னஹதோஸ் – ஸிரியன் கிறிஸ்துவர்களின் தலேமைப் பீடம்.

''இந்த உதாரணம் இதற்குப் பொருந்தாது, மாமா! இங்கே விவாதத்திற்குரிய பிரச்னை ஒரு திருச்சபையின் ஆன்மிகத் தலைவரைப் பற்றியது. சபையின் சரித்திரத்தைத்தான் புரட்டிப் பாருங்களேன். வாழ்விக்கவும் தடை செய்யவும் ஸின்னஹதோஸிற்கு அதிகாரம் இருக்கிறது. மோர் அப்துல்லா பாத்ரியாக்கீஸை வாழ்வித்தவர் ஸின்னஹதோஸ்தானே? இங்கே வட்டச்சேரிப் பெரிய குருவைத் தடைசெய்ததும் அதற்குரிய அதிகாரம்கொண்ட தலைமைப்பீடம்தானே?''

''ஆ... அதிகாரம்! என்ன அதிகாரம்? எல்லாம் நாம் கொடுத்த அதிகாரம்தானே? கூனன் சிலுவைச் சத்தியத்திற்குப் பிறகு நடந்த நிகழ்ச்சிகளைத்தான் பாருங்களேன்.''

மாத்யு குறுக்கிட்டான் :

''உடம்போ தள்ளவில்லே. அப்படியிருந்தும் ஏன் அப்பா இப்படிச் சத்தம் போட்டுக்கொண்டு பேசறீங்க? சண்டையும் சச்சரவும் முடிஞ்சு சபை இப்போ ஒண்ணுயிட்டது. ஆனால் உங்க சண்டை இன்னும் ஓயலே.''

தீனும்மா கதவருகில் வந்து நின்று சொன்னாள் :

''எப்போ வந்தாலும் சாமியும் மாமாவும் இப்படித்தான் ஏதாகிலும் வாதம் பண்ணிக்கிட்டே இருப்பாங்க.''

மீண்டும் சாமியார் உரக்கச் சிரித்தார்.

''நாங்கள் சண்டையா போடறோம்? நியாயம் பேசறோம்.''

தீனும்மா சொன்னாள் :

''கை கழுவுங்க சாமி! காப்பி குடிச்சிட்டுப் போகலாம்.''

சாமியார் சிரித்துக்கொண்டே கேட்டார் :

''காப்பி குடிக்கக் கை கழுவணுமா?''

இதைக்கேட்டும் கேளாதவள்போல் அவசர அவசரமாகத் தீனும்மா சமையலறைக்குப் போனாள். அரைப்படி அரிசி பொடித்து வறுத்து வைத்தது எவ்வளவு நல்லதாயிற்று! தீனும்மா பிட்டுச் செய்தாள். வாசு குறுப்பின் கடையிலிருந்து வாழைப்பழம் வரவழைத்தாள். பிட்டும் பழமும் காப்பியும் மேஜைமீது வைத்தபிறகு தீனும்மா சொன்னாள் :

''அப்படிப் பிரமாதமா ஒண்ணும் இல்லே.''

''இதெல்லாம் பிரமாதம்தானே?'' சாமியார் அப்போதும் உரக்கச் சிரித்தார்.

''லில்லிக்கு ஜுரமெல்லாம் குணமாச்சா? கல்லூரிக்குப் போகிருளா?''

''போகிருள். கொஞ்சம் இளைப்புத்தான்.''

''ராஜு நல்லா இருக்காஞ?''

''உம், நல்லா இருக்கான்.''

''தீஞம்மாச் சித்தி என்று சொன்ஞல் முன்னெல்லாம் அவர்களுக்கு உயிர். விடுமுறைக்கு லில்லி இங்கே வராமல் இருக்க மாட்டாள்.''

''ம்...''

''இப்போ அக்காவின் பெரிய குழந்தைகளுக்கு இங்கே வர்றதே கௌரவக் குறைச்சல். 'சித்திக்கு நல்ல வீடில்லை'; வேலைக்காரர்கள் இல்லை, என் அக்காவிற்கு உடம்பு சரியில்லாமல் போனதினுல் தான்......''

தீஞம்மா கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். மாத்யு உடனே—

''ஆரம்பிச்சிட்டாளா, பூங்கண்ணீர் விடறதுக்கு? அதுக்கு இப்போ, சாமி என்ன செய்யணும்னு சொல்றே?'' என்று சினந்தான்.

''சாமி ஒண்ணும் செய்ய வேண்டாம்.''

''அவளைச் சொல்லவிடு மாத்யு. அவள் தன் துயரத்தைக் கூறட்டும். பெண்களுக்கு அதெல்லாம் ஒரு ஆறுதல்தானே!''

சாமியார் புன்னகை புரிந்தவாறே தீஞம்மாவிடம் சொன்ஞர்:

''அதெல்லாம் சரிதான் அம்மா. இனி நான் சொல்வதையும் கேள். உன் இரண்டு அக்காவிற்கும் உன்னைவிடப் பணம் இருக்கு. ஒத்துக் கொள்கிறேன். அதில் மூத்தவளைப்பற்றி இங்கே பேசினது நீ கேட்டிருப்பாயே. கேட்கிறதுக்கு என்ன இருக்கு? உனக்குத் தெரியாத விஷயமா? பணமிருந்தும் சுகமிருக்கா? நிம்மதியிருக்கா? அப்புறம் சின்ன அக்காவினுடைய சங்கதியைப் பற்றியும் யோசி நல்ல நேரத்தில் கடவுள் அவளைச் சோதித்துவிட்டாரே! வீட்டை விட்டு வெளியே கிளம்பிப் பத்தொன்பது ஆண்டுகள் ஆயின. ஆக,

---

*ஸிரியன் பிரிவைச் சார்ந்த சாமியார்கள் திருமணம் புரியலாம்.

அவளுக்குக் கிடைத்தது வேருெருதுக்கம். இந்த இரண்டு வகையான துக்கங்களும் உனக்கில்லே; அப்படியிருக்க, கடவுள் உன்னிடம் கருணே தானே காட்டியுள்ளார்? 'பிரசங்கி' சொல்வது போல எவ்வளவு கெட்டிக்காரனுக இருந்தாலும் கொடிய வலேயில் பிடிபடும் மீன்களேப் போலவும், கண்ணியில் சிக்கும் குருவிகளேப் போலவும் தங்களுக்குத் திடீரென்று கேடுகாலம் வரும்போது மனிதர்களும் அவைகளேப் போலவே அகப்பட்டுக் கொள்கிருர்கள். அப்படித் தானே, மாமா?''

''உம்.''

'' மாமா எதிரில் இருக்கும்போது நான் வேதநூலே மேற்கோள் காட்டுவது அசட்டுத் துணிச்சல்தானே? மாமாவுக்குத் தெரியாத வேதமா எனக்குத் தெரியும்?''

''எனக்கு என்ன தெரியும் என்று கேட்கிறீங்க? ஞானிகளின் அரசஞன சாலொமோன் தமக்கு ஒன்றும் தெரியாது என்று கூறு கிருர். அப்புறம்தானே நான்?''

சாமியார் சிரித்தார்:

''நான் இங்கே வந்ததற்கான இன்னெரு காரணமும் இருக்கு.''

மாத்யு கேட்டான்:

''என்ன அது, சாமி?''

''ராஜன் விடுமுறைக்கு வருவதாகக் கேள்விப்பட்டேன். எப்போது வருகிருன்?''

''அடுத்த மாதம் முதல் வாரத்தில் வருகிருன்போல் இருக்கு. அப்படித்தானே, தீனு?''

''ஆமாம், அப்படித்தான் எழுதியிருக்கான்.''

''எதுக்கு, சாமி ?''

''ஒரு திருமணப் பேச்சு.''

தீனும்மா கணவனின் முகத்தைப் பார்த்தாள்.

குஞ்சுநைநு கேட்டார் :

''என்ன, என்ன ?''

அந்தக் கேள்வியை அவ்வளவாகச் சட்டை செய்யாமல் தீனும்மா சொன்னுள் :

''ராஜன் சின்னப் பையன்தானே சாமி ? இருபத்துமூணு வயது தானே ஆச்சு, அவனுக்கு ?''

''திருமணத்திற்கு என்ன வயது ஆகணும் ? முன் காலத்திலெல் லாம் பதினலு வயது ஆவதற்கு முன்னதாகவே பையன்களுக்குத் திருமணம் முடித்து வைப்பார்கள். அப்படித்தானே, மாமா ?''

''அது அந்தக் காலத்திலே.''

''இந்தக் காலமானலும் வேண்டிய நேரத்திலே திருமணம் முடிச்சு வைக்கணும். இருபத்துமூணு என்பது சரியான வயது. பெண்ணிற்குப் பதினேழு வயது. என்ன, சரிதானே ?''

''எந்த ஊர் ?''

''புத்தனற்றங்கரை.''

''சாமி, முன்னலே எப்பவோ நீங்க அங்கே ஊழியம் செய்துக் கிட்டு இருந்தீங்களே ?''

''ஆமாம். கொஞ்சநாள் முன்னல் அந்த வழியாகப் போன போது அந்தப் பெண்ணைப் பார்த்தேன். நான் அந்த ஊரைவிட்டு வந்தபோது அவளுக்கு ஒரு வயதுகூட இருக்காது. மாதாகோவில் பக்கத்தில்தான் வீடு. கடவுள்பக்தி உள்ளவர்கள். அதுதானே முக்கியம் ? அப்பா இல்லை. அம்மா மாசமா இருக்கும்போது அவள் அப்பா ஒரு விபத்திலே இறந்து போனர். பெண்ணைப் பார்த் தால் தீனம்மாவின் தங்கை என்று சொல்லுவார்கள்.''

இதற்குப்பின் வெகுநேரம் வரையிலும் யாரும் எதுவும் பேச வில்லை. சற்று நேரத்திற்குப்பின் மாத்யு கேட்டான் :

''அப்பா, சாமி சொன்ன விஷயம் கேட்டீங்களா ?''

''கல்யாணப் பேச்சுத்தானே ?''

''ஆமாம்.''

''எல்லாம் சரிப்பட்டு வந்தால் நடத்துடா.''

''சரிப்பட்டால் மட்டும்போதும். அவர்கள் யாராவது இங்கே வருவார்கள். அப்புறம் நீ அங்கே போய்ப் பார்த்துவா!''

''சாமி, உங்களுக்குப் பிடிச்சிருக்குன்ன அப்புறம் நான் ஏன் போய்ப் பார்க்கணும் ?''

''அது சரியல்ல. இங்கிருந்து யாராவது போகணும். எல்லா வற்றையும் விசாரிச்சுத் தெரிஞ்சுகிட்டு வரணும். வர்கீஸோ பிலிப்போ போகட்டும்.''

தீனும்மா சொன்னள் :

''எப்படியானலும் ராஜன் வரட்டும். அவனுடைய விருப் பத்தைத் தெரிஞ்சிட்ட பிறகு சொன்னல் போதாதா ?''

''போதும் அம்மா ! நான் இப்படி ஒரு யோசனை சொன்னேன்; அவ்வளவுதான். அவசரமில்லை. ராஜன் வந்தபிறகு நான் இந்தப் பக்கம் வர்றேன்.''

சாமியார் குடையைக் கையில் எடுத்துக்கொண்டு போவதற் காக எழுந்தார். தீனும்மா கேட்டாள் :

''குடையை ஏன் எடுக்கறீங்க ?

''போய் வர்றேன் அம்மா, நூறு வேலை இருக்கு.''

தீனும்மா சாமியார் பக்கத்தில் சென்று குடையைப் பிடித்துக் கொண்டு சொன்னள் :

''வேலையெல்லாம் இன்னைக்கு ஒருநாள் அப்படியே இருக் கட்டும். உங்களைச் சாப்பிடாமல் போக விடமாட்டேன்.''

தங்கையின் இந்த உரிமையைக் கண்டு சாமியார் செய்வதறி யாது நின்றார். குஞ்சுநைநை சொன்னர் :

''சாப்பிட்டுவிட்டே போங்க சாமி. ஆசையோடு சொல்கிருள். நேரம் வேறு உச்சிப் பொழுதாச்சு.''

சாமியார் மறுபடியும் நாற்காலியில் அமர்ந்தார்.

''நீங்களே சொல்லும்போது நான் எப்படித் தட்டறது ? மறுத் தால் தீனும்மாவிற்கு என்னிடத்தில் மனவருத்தம் உண்டாகும். இதோ பாரு, இருக்கிறது போதும். எனக்காக வேறு குழம்போ, கறியோ ஒன்றும் சமைக்க வேண்டாம். கேட்டாயா தீனும்மா !''

''ஒண்ணும் அதிகமாகச் சமைக்கப் போறதில்லை. முருங்கைக் கீரைக் கூட்டு, கொஞ்சம் காராமணிப் பயறு இருக்கு; அதாலே ஒரு கறி. அவ்வளவுதான்.''

சாமியார் சிரித்தார்.

''தீனும்மா ! நீ அதையெல்லாம் இன்னும் நினைவு வைச்சிருக்கே ! கேளுங்க மாமா ! இவள் சின்னக்குழந்தையாக

இருக்கும்போது இவள் வீட்டுக்குப் போனல், சாப்பாட்டுக்கு இந்தக் கூட்டும் கறியும் இல்லாமல் இருக்காது. எனக்கும் பிடிக்கும் என்கிற தைத் தெரிஞ்சுகிட்டு, நான் போன உடனேயே இவள் முருங்கைக் கீரை பறிக்கிறதுக்கு ஓடுவாள்.''

''அண்ணனிடம் தங்கைக்கு எப்பவும் ஒரு தனிப்பாசம் இருக்கும். நான் அதை அனுபவிக்கக் கொடுத்து வைக்காதவன்.''

''உண்மைதான். மாமாவுக்குத் தங்கை இல்லையே! நாலு அண்ணன்களுக்குமாக ஒரே செல்லத் தங்கையாகத்தானே அத்தை இருந்தாங்க?''

இதற்கிடையில் வெளியில் யாரோ ஒருவருடன் பேசிக்கொண்டிருந்த மாத்யு உள்ளே வந்தான். அவன் சொன்னன் :

''சாமி! கொஞ்சம் வெளியே போக வேண்டியிருக்கு. சீக்கிரமாகத் திரும்பி வர்றேன்.''

''எங்கே போகிறே?''

''ஓர் அடகுக் கேசு விஷயம். என்னையும் வரும்படி கட்டாயப் படுத்துறன். நான் வந்த பிறகுதான் நீங்க போகணும்.''

மாத்யு வெளியே சென்றன். குஞ்சுநைனு கேட்டார் :

''உங்க பெரிய அக்கா சின்னமரியம் சுகமா இருக்காளா?''

''அக்காவுக்கு உடல் நலமில்லை. வாத நோய்.''

''என் கல்யாணத்தின்போது 'கச்சை முண்டு' உடுத்தி, ரவிக்கையைப் போட்டுக்கிட்டு மாதாகோவிலுக்கு வந்தது இன்னும் எனக்கு ஞாபகமிருக்கு. அந்தக் காலத்திலே சேலை, சோலி எல்லாம் கிடையாது''

''ஆமாம், ஆமாம்.''

''காலம் எப்படி மாறிப்போச்சு! அந்தக் காலத்திலே கல்யாணத்தின்போது பெண் காதிலே பெரிய தோடு அணிவாள். பையன் 'நிலை அங்கி' போட்டுக்கிட்டிருப்பான். கழுத்திலே சிலுவை மாலை இருக்கும். இப்போ என்னடான்னு, கோட்டும் ஸூட்டும் போடுறன். பெண்கள் பிளவ்ஸுக்குள்ளே வேறு என்னமோ ஒண்ணு போடுறுங்களே, வெளியேகூடத் தெரியுமே, பார்த்திருக்கீங்களா?''

''உம் ம்.''

சாமியாரின் சிரிப்பு வீட்டிற்குள் மாற்ருெலி கொண்டது. குஞ்சு நைனுவும் சிரிப்பில் பங்கு கொண்டார். தீனம்மா சொன்னுள்:

“இந்த மாமா சில நேரங்களிலே இப்படித்தான். யார் இருக் கிருங்க என்றெல்லாம் பார்க்கிறதில்லே. இஷ்டத்துக்கு ஏதேதோ பேசுவார்.''

தீனும்மா கூறியதைக் குஞ்சுநைனு பொருட்படுத்தியதாகத் தெரியவில்லே.

''அந்த நாளிலே கல்யாணம்னு பையனுக்கும் பெண்ணிற்கும் என்ன தெரியும்? வறுக்கருங்க; பொரிக்கிருங்க. அவங்களும் இவங்களும் வருகிருங்க; போகிருங்க. இவ்வளவுதான் தெரியும்! பன்னிரண்டு வயதுப் பையனுக்கும், எட்டு வயது பெண்ணிற்கும், என்னதான் தெரிஞ்சிருக்கப் போகிறது?''

“உண்மைதான்.''

“பையன் இருபது வயது வரையில் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் இருந்தால், அவனுக்குப் பெண் கிடைக்கவில்லே; அதனுல்தான் இப்படி அலேகிருன் என்றெல்லாம் சொல்வார்கள். நானும் அப்படி ரொம்ப நாள் அலேஞ்சிருக்கிறேன்.........''

தீனும்மா சமையலறையிலிருந்து வெளியே வந்து, சாமியாரிடம் சொன்னுள் :

“கேட்கிறதுக்கு யாராவது இருந்தால், மாமா இப்படிப் பழைய கதைகளேச் சொல்லிக்கொண்டே இருப்பார். அப்புறம் ஒரே களேப்பு.''

குஞ்சுநைனு கேட்டார் :

''என்ன?''

''ஒண்ணுமில்லே.''

''மாமா ! அதிகமாகப் பேசாதீங்க. அப்புறம் களேப்பாக இருக்கும்.''

''அதையெல்லாம் சொன்னுல் அவர் கேட்கமாட்டார், சாமி!''

களேப்பென்ன, களேப்பு? முதுமையின் களேப்புத்தான்! அது பேசாமல் இருந்தாலும் இருக்கும். கல்யாணத்தைப்பற்றிப் பேசுகை யில் ஒவ்வொன்ருக ஞாபகம் வருகிறது. அவளே மணம் முடித்த போது எனக்குப் பத்தொன்பது வயது இருக்கும். அந்தக் காலத்துக் கணக்குப்படிப் பார்த்தால் காலம் கடந்து நடந்த திருமணம். உரிய காலத்தில் திருமணம் முடிக்க எனக்கு யாரும் இருக்கவில்லேயே!

அப்பாவுக்கு அப்படி ஒரு எண்ணமே இருக்கவில்லை. வேறு யார் இருந்தார்கள்? சில்லறை வியாபாரங்கள் செய்தும், கொடுத்தும் வாங்கியும் என் கையில் நாலு காசு சேர்ந்தது. தூரத்து உறவுச் சிற்றப்பா ஒருவர் ஒரு கல்யாணப் பேச்சுடன் வந்தார். அப்போது அவளுக்குப் பதினைந்து வயது. இருந்தாலும் பிராயத் துக்குத் தகுந்த வளர்ச்சி இல்லை. கல்யாணமாகி நான்கைந்து மாதங்களுக்குள் அவள் ஆளே மாறிவிட்டாள். அந்தக் காலத்தி லேயே அவள் நான்காவது வகுப்பு வரையில் படித்திருந்தாள். சாமியின் அப்பா, அவர்தான் அவள் அண்ணன், திண்ணைப் பள்ளிக்கூட வாத்தியார். தங்கையை வீட்டிலேயே படிக்கவைத்துக் கெட்டிக்காரியாக்கி யிருந்தார். அவளுக்கு நன்ருகப் பாடவும் தெரிந் திருந்தது. திருமணம் முடிந்து வரும்போது பெரிய மச்சான் சொன்ஞர்:

''இவள் நன்மையின் விதை. லெபஞன் தேசத்துத் திராட்சைக் கொடிபோல் படர்வாள்.''

ஆம், அவள் திராட்சைக் கொடிபோல் படர்ந்தாள். அவள் தொட்டதெல்லாம் துலங்கியது. பலமடங்காகப் பெருகியது. குணக்குன்று அவள். எந்தத் துயரமாஞலும் மனத்திலே அடக்க வல்லவள்; எந்தப் பேரிடியையும் தாங்கக் கூடியவள். ஆஞல் கடைசி நாட்களில் அவளால்கூடத் தாங்க முடியாத ஒன்றல்லவா நிகழ்ந்தது ......

எட்டுப் பறம்பு வீட்டு ஈசோ அண்ணனுடன் சேர்ந்து கூட்டு வியாபாரம் செய்துகொண் டிருந்தேன். ஒருநாள் வீட்டிற்குத் திரும்புகையில் இரவு வெகு நேரமாயிற்று. அன்று என்றுமில்லாத கோபம் எனக்கு. ஈசோ அண்ணன் வியாபாரத்தில் வஞ்சனை செய் தான். இருநூறு ரூபாய் விஷயமானதால் நான் அன்று கடிந்தே பேசினேன். எப்போதும்போல், தகரடப்பா விளக்கை ஏற்றி வைத்துக்கொண்டு அவள் என்னை எதிர்பார்த்தவாறு உட்கார்ந் திருந்தாள். வந்ததும் நான் அவளிடம் எதுவும் பேசவில்லை. சிறிது நேரம் கழித்து அவள் கேட்டாள்:

''ஏன் இவ்வளவு நேரமாச்சு?''

''ஈசோ அண்ணனோடு தகராறு.''

''என்ன?''

''கூட்டு வியாபாரத்திலே வஞ்சனை செய்தான்.''

வெகு நேரம் வரை மௌனமாக இருந்தபிறகு அவள் சொன்னாள் :

''இப்படிச் சொன்னவரும் வஞ்சனை செய்திருக்காரே !''

''என்ன ?''

''நாம் இரண்டு பேரும் விசுவாசமாக இருப்போமுன்னு ஒப்பந்தம் செய்யலையா ?''

அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தேன். அவள் கூறியதன் பொருள் என்ன ?

''நீங்களும்தான் ஒப்பந்தத்தை மீறினீங்க. அதுவும் இந்த வயதான காலத்திலே.''

''நீ என்னடி உளரறே ?''

''எனக்குப் புதுசா ஒரு 'தங்கை' இருக்கிறாளென்று தெரிஞ்சுது.''

''.........''

''அடிக்கடி சந்தைக்கு எதுக்காகப் போறீங்க என்கிற குட்டு இப்போதானே வெளியே வந்தது !''

''போடி, போ ......மவளே !''

எட்டி உதைக்கவே அவள் மயக்கமுற்றுக் கீழே விழுந்தாள். என்ன ஆகுமோ என்று பயந்தேன். அதற்குப் பிறகுதானே........

''மாமா !''

சாமியார் கூப்பிட்டார். குஞ்சுணைனை அசையாமல் படுத்திருந் தார்.

''மாமா தூங்கிவிட்டாரா ?''

தீனம்மா சொன்னாள் :

''பேசிக்கொண் டிருக்கும்போதே மாமா மயக்கமாயிடுவார். எழுப்பினால் சம்பந்தமில்லாமல் ஏதேதோ பேசுவார்.''

''உம் தொண்ணூறு வயசாகலையா ? நினைவு ஒரு கட்டுப் பாட்டில் இருக்காது.''

''வேறு யாரும் கிடைக்காவிட்டால் ஸிஸிலியையாவது பக்கத்தில் உட்காரவைத்துப் பேசிக்கொண் டிருப்பார்.''

''குழந்தைகளும் கிழவர்களும் ஒன்று என்று நீ கேள்விப்பட்ட தில்லையா ?''

''மாமா இப்படிப் படுத்திருக்கிறதினாலே கோவிலுக்குக்கூடப் போறதில்லை.''

''இந்தத் தொண்டுதான் அம்மா, மிகச்சிறந்த புண்ணியமான காரியம். கர்த்தர் கூறியுள்ளாரே? பசியாயிருந்தேன்; நீங்கள் எனக்குப் போஜனம் கொடுக்கவில்லை. தாகமாயிருந்தேன்; நீங்கள் என் தாகத்தைத் தீர்க்கவில்லை. வஸ்திரமில்லாமல் இருந்தேன்; நீங்கள் எனக்கு வஸ்திரம் கொடுக்கவில்லை. வியாதியுள்ளவனாக இருந்தேன்; நீங்கள் என்னை விசாரிக்க வரவில்லை. மிகவும் சிறியவனாகிய ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்யாதிருந்தீர்களோ அதை எனக்கே செய்யாதிருந்தீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்கிறேன்......''

அப்போது முற்றத்தில் காலடி ஓசை கேட்டது. அத்துடன் ஒரு செய்யுளும் காதில் ஒலித்தது!

இனியதேன் மொழியாள்; மன்னர்
  இயல்குல அருமைப் பெண்ணாள்;
தனிப்புகழ் அழகால் ஓங்கும்
  தமயந்தி! உள்ளம் பத்தில்
நனி முறை ஐந்தறிந்தும்
  நல்லன்னம் மேலும் காணும்
கனிவினால் மெல்லியாள் போய்க்
  கருத்துடன் முயல்வ தென்னே!

வாயிற்படி ஏறுகையில் பாதிரியாரைக் கண்ட சிவராம குறுப்பு அவரை உற்று நோக்கினான். குறுப்பையும், அவனது நெற்றியில் இருந்த சந்தனக் கீற்றையும், காதில் செருகியிருந்த துளசியையும் சாமியாரும் கவனித்தார்.

''குஞ்சுநைனா!...தூங்குகிறாரா?''

''ஆமாம். வாங்க, உட்காருங்க!''

குறுப்பு திண்ணையில் ஏறிவந்து, முக்காலியில் அமர்ந்தான். சாமியார் கேட்டார் :

''யார் என்று தெரியவில்லையே?''

தீனம்மா சொன்னாள் :

''மாமா நண்பர்...''

குறுப்பு அதைப் பூர்த்தி செய்தார்.

''பெயர் சிவராம குறுப்பு.''

''பார்க்க முடிந்ததிலே சந்தோஷம்.''

தீனம்மா சாமியாரையும் அறிமுகப்படுத்தினாள் :

''கார்த்திகைப்பள்ளிச் சாமியார்.''

''ஆஹா. தெரிந்தது தெரிந்தது. ஸிஸிலிக் குழந்தை சொல்லிச் கேட்டிருக்கிறேன். நான் சில நேரங்களிலே குஞ்சு நைனைவைப் பார்க்க வருவதுண்டு. அவரது வேதஞானத்தைப் பற்றி என்ன சொல்ல ? அறிவுக் கடலேதான். வேதாந்தத்திலே எனக்கும் கொஞ்சம் பற்று உண்டு. யோசித்துப் பார்க்கையில், எல்லா மதங்களும் ஒரே கருத்தைத்தான் கூறுகின்றன. அதருமத் திலே மூழ்கிய மனித குலத்தை உய்விப்பதற்குக் கடவுள் தம் திருக்குமாரரை அனுப்பினார் என்றுதானே கிறிஸ்தவ வேதம் சொல்கிறது? இந்துக்கள் புராணமும் அதையேதான் சொல்கிறது ! ''தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே' என்ற கீதையின் சுலோகத்தை நீங்கள் கேட்டிருப்பீர்களே. எண்ணிப் பார்த்தால் எல்லாமே ஒன்றுதான்.''

''எல்லாம் ஒன்றல்ல''

''என்ன ?''

''எல்லாம் ஒன்றல்ல. இயேசு வழியல்லாமல், அவர் காட்டிய பாதை வழி நடக்காமல் யாருக்கும் விமோசனம் கிடையாது.''

''என்ன விமோசனம் ?''

''அதுதான், மோட்சம்.''

''மோட்சத்தை அடைவது அவரவர்கள் கருமத்தைப் பொறுத் துள்ளது. கடவுளை அடைய ஞானயோகத்தையும் கர்மயோகத்தை யும் கீதையில் கண்ணன் போதித்துள்ளார் :

''லோகேஸ்மின் த்விதா நிஷ்டா

புரா ப்ரோக்தா மயாஅநக

ஜ்ஞான யோகேன ஸாங்க்யானாம்.

கர்ம யோகேன யோகீனாம்.''

''எங்களுக்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லை.''

''அப்படியானால், எவ்வளவு நல்ல கருமங்கள் செய்தாலும் கிறிஸ்தவனல்லாவிட்டால் மோட்சம் கிடைக்காது என்று சொல் கிறீர்கள் ?''

''ஆமாம். பிதாவான தேவனுடைய பரிசுத்த ஆவியின் பெயரில் ஞானஸ்னானம் பண்ணாமலும், அவர் திருக்குமாரரின் திருச்சரீரத்தின் ரத்தம் உண்டு பாவமோசனம் பெறாமலும் மனிதனுக்கு விமோசனம் இல்லை!''

''அப்படி நீங்கள் நம்புவதாகச் சொல்லுங்கள், சாமி.''

''ஆம், நம்பிக்கைதானே எல்லாம்!''

''ஆனால் எங்கள் நம்பிக்கை வேறு. ஏந்த மதத்தைச் சார்ந்தவராயிருந்தாலும் ஒளியைக் கண்டவர்கள் அனைவருக்கும் மோட்சம் உண்டு என்று நாங்கள் நம்புகிறோம். எல்லாக் கதவுகளும் திறந்திருக்கிற ஒரு மாமெரும் மணிமண்டபம் போன்றது எங்கள் இந்து மதம். யாராயிருந்தாலும் சரி, இந்த மணி மண்டபத்தில் வந்திருந்து ஓய்வெடுக்கலாம், பசியையும் தாகத்தையும் தீர்த்துக் கொள்ளலாம், களைப்பாறலாம். காமக் குரோதங்களிலிருந்து மனத்தை அகற்றி ஆன்மாவின் பொருளைத் தெரிந்துகொண்ட அனைவருக்குமே மோட்சம் உண்டு என்பதில் சற்றும் சந்தேகமில்லை.

''காமகுக்ரோத வியுக்தானாம்
யதீனாம் யத சேதஸாம்
அபிதோ ப்ரஹ்ம நிர்வாணம்
வர்த்ததே விதிதாத்மனாம்.''

சாமியாரின் முகத்தில் ஏளனத்தின் நிழல் படிந்தது. ஒரு வடமொழிச் சுலோகத்தைச் சொல்லி, கிறிஸ்தவமதத்தைத் தோற்கடிக்க வந்திருக்கிறான்!

''மக்களை ஏமாற்றுவதற்கு இப்படியெல்லாம் சொல்லி நடிக்கிறார்கள். ரட்சகனை இயேசு செய்த மாபெரும் ஆன்மத் தியாகம் போன்று ஏதாவது சொல்வதற்கு உங்களிடம் இருக்கிறதா? இயேசு புரிந்த அற்புதம் போன்ற ஒன்றை உங்களால் சொல்ல முடியுமா?''

''இயேசு அப்படி என்ன அற்புதம் புரிந்தார்?''

''அற்புதமா? ஒரு கன்னியின் மகனாக இயேசு பிறந்ததே ஒரு மாபெரும் அற்புதம்தானே?''

''யார் சொன்னார்?''

''யார் சொன்னார் என்று கேட்கிறீர்கள்?''

''ஆமாம். அது உங்கள் நம்பிக்கைதானே சாமி? உங்கள் நம்பிக்கையை உறுதியோடு கடைப்பிடிக்க உங்களுக்கு உரிமை இருக்கிறது. அதைப் போலவே அதை மறுக்கவும், வேறொன்றை நம்பவும் எங்களுக்கும் உரிமை இருக்கிறது.''

''இருக்கிறது, இருக்கிறது நம்பிக்கையை விடாமல் கெட்டியாகப் பிடித்துக்கொண்டே இருங்கள்.''

அப்படிச் சொல்லித் தப்பித்துக் கொண்டாலும் உண்மையில், சாமியார் பதில் கூற முடியாமல் திணறினார். குறுப்பிடம் அவருக்கு மதிப்பு ஏற்பட்டது.

தீனம்மா சொன்னாள்:

''குறுப்போடு விவாதம் பண்ணிக்கொண் டிருந்தால் சாப்பிட்டாப் போலத்தான். கை அலம்புங்க.''

சாமியார் சிரித்தார்:

''விவாதம் பண்ணிக்கொண் டிருந்தால் நேரம் போவதே தெரியாது.''

''எவ்வளவு தள்ளாது படுத்திருந்தாலும் குறுப்பு வந்திருக்கிறார் என்று சொன்னால் மாமாவுக்கு அப்புறம் ஒரே உற்சாகம்தான்.''

''மாமாவும் வாதம் பண்ணுவதிலே வல்லவராச்சே!''

''ஞானக்கடல்தான் அவர்! நான் போய் வருகிறேன். சாமி சாப்பாட்டுக்கு நான் குந்தகம் விளைவிக்கவில்லை.''

சாமியார் சொன்னார்:

''நீங்களும் சாப்பிடுங்க.''

தீனம்மா சொன்னாள்:

''நான் கை அலம்பச் சொன்னது இரண்டு பேரையுந்தான்.''

''எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனாலும் இன்னொரு நாள் ஆகட்டும். குஞ்சுநைனா தூங்குகிறாரே. அப்புறம் வருகிறேன்.''

குறுப்பு போனபிறகு சாமியார் சொன்னார்:

''விவரம் தெரிஞ்ச மனுஷன்!''

''மாமாவுக்குக் குறுப்பு என்றால் உயிர். அபின் வாங்கிக் கொண்டு வந்து கொடுப்பதும் இவர்தான்.''

''அப்படியா?''

''குஞ்சுச்செறுக்க மச்சானுக்கு இவரைப் பார்த்தால் பிடிக்காது. ஏதோ ஒரு காரியத்தில் இரண்டு பேருக்கும் சண்டையாம்.''

''அந்த ஆசாமிக்கு யாரிடத்திலேதான் சண்டை இல்லை?''

உணவு அருந்திய பிறகு சாமியார் மறுபடியும் குஞ்சுநைனாவின் கட்டிலருகில் சென்று அவரைக் கூப்பிட்டார். பல முறை கூப்பிட்ட பிறகுதான் அவர் எழுந்தார்.

''நான் போய் வர்றேன், மாமா!''

''போய் வர்றீங்களா?''

''ஆமாம்.''

''காபரியல் தேவதூதன் என்னுடன் இருந்தார்.''

''என்ன?''

''என்னிடம் தம் இறக்கையில் உட்காரும்படி சொன்னார். வேண்டாம்; நான் நடந்தே வருகிறேன் என்று அவரிடம் சொன்னேன்......''

தீனும்மா தாழ்ந்த குரலில் சொன்னாள் :

''ஏதோ கனவு கண்டார்போல் இருக்கு,''

''மாமா! நாம் ஜெபம் பண்ணுவோமா?''

''எழுந்து உட்காரட்டுமா?''

''வேண்டாம். நீங்க படுத்துக்கொண்டே இருங்க.''

தீனும்மா தலையில் முக்காடிட்டுக் கொண்டு பிரார்த்தனை செய்வதற்கு ஆயத்தமானாள். ஒரு பாட்டின் நான்கு வரிகளைப் பாடினாள் :

''என் செல்வமென்று சொல்வதற்கு வேறு ஏதும் இல்லை.
இயேசு மட்டும் என் செல்வமாவார்......''

பிறகு கர்த்தரின் ஜெபமும், நன்மை நிறைந்த மரியமும் ஜெபித்தார்கள். பிறகு குஞ்சுநைனாவிற்காகப் பிரத்தியேகமாய் ஜெபித்தார்கள்.

சாமியாரை வழியனுப்புவதற்குத் தீனும்மா தோட்ட வாயில் வரை சென்றாள். திரும்பி வந்தான பிறகு குஞ்சுநைனாவிடம் சொன்னாள் :

''என்ன மாமா! இப்படியுமா ஒரு தூக்கம்? குறுப்பு வேறு வந்து விட்டுப் போனார்.''

''என்னைக் கூப்பிடறதுதானே?''

''கூப்பிட்டால் எழுந்திருக்க வேண்டாமா? நேரம் இல்லாத நேரத்திலே மருந்து சாப்பிட்டதால்தானே இப்படி அடிச்சுப் போட்டாப்போலே தூங்கறீங்க?''

''என்னாலே அது இல்லாமல் முடியாதம்மா!''

''கெட்ட பழக்கத்தையெல்லாம் பழக்கி வைச்சிருக்கீங்களே!''

''என்ன செய்யறது! நீயே சொல்லு!''

''எழுந்து கை அலும்புங்க. கஞ்சி கொண்டு வரேன்.''

''சாமியார் சாப்பிட்ட பிறகுதானே போனார்?''

''ஆமாம்.''

தேங்காய் வதக்கிப் போட்ட காராமணிக் கறியும் எலுமிச்சை ஊறுகாயும் சேர்த்துக் கஞ்சி குடித்தபோது குஞ்சுநைனாவிற்கு ஒரு தெம்பு தோன்றியது. வெகு நாட்களுக்குப் பிறகு சாமியார் வீட்டிற்கு வந்திருக்கையில், மயக்கமாய்ப் படுத்திருந்ததற்காக அவர் வருந்தினார். என்ன ஆனாலும், சாமியார் கொண்டு வந்த கல்யாண யோசனையை விடவேண்டாம். பையனுக்கு வயதாக வில்லை என்றெல்லாம் சொல்வது மடத்தனம். இதுதான் சரியான வயது. வாட்டசாட்டமாக வேறு இருக்கிறான். கிளி போன்ற பெண் என்றும் சொல்கிறார்கள். உம், நடக்கட்டும்........

''மாமா!''

''ஏ ?''

கூப்பிட்டது தீனம்மா என்றுதான் நினைத்தார். முகத்தைத் திருப்பிப் பார்த்தபோது......

''ய்யாரு?''

''நான்தான் மாமா, அன்னம்மா''

பிலிப்பின் மனைவி!

''மாமா! நீங்க எங்க வீட்டுக்கு வரணும்.''

''என்னால் நடக்க முடியாதே, அம்மா!''

''முக்கியமான விஷயம். நான் கார் கொண்டு வர்றேன். நீங்க அங்கே வராவிட்டால் கொலை நடக்கும்.''

அக்காவினுடைய பதற்றத்தைக் கண்டு ஓடி வந்த தீனம்மா கேட்டாள் :

''என்ன அக்கா சங்கதி?''

''சங்கதியா? என்னத்தைச் சொல்ல? இப்போ எங்க வீட்டு வேலைக்காரியோடுதான் உன் மச்சானுக்குத் தொடர்பு. அதனாலே இரண்டில் ஒன்று தீர்மானமாகணும். அவள், இல்லாவிட்டால் நான்.''

''கொஞ்சம் மெதுவாகப் பேசுங்க, அக்கா.''

''ஆமாம். யாருக்கும் தெரியாதுன்னு நீ நினைக்கிறயா? பிள்ளை அப்பாவைக் கத்தியால் குத்தப் போகிற வரையிலும் விஷயம் முற்றிப் போச்சு!''

''ஆண்டவரே!''

குஞ்சுறைநுை கேட்டார் :

''சந்தேகத்தை வச்சுத்தானே நீ இப்படிச் சொல்றே? நீயே உன் பையனைத் தூண்டிவிட்டாயா?''

''கண்ணுல் பார்த்த பிறகுமா, மாமா, சந்தேகம்?''

''உம். பார்த்தே, கேட்டே..... ''

''மாமா, நீங்க என்கூட வாங்க. நிஜத்தை நிரூபிக்கிறேன்."

செய்வதறியாது நீறைம்மா கலவரமடைந்தாள். சிறிது நேரத் திற்குப் பிறகு குஞ்சுறைநுை கேட்டார் :

''நான் வந்துதான் என்ன செய்யமுடியும்? அப்பாவின் பாது காப்பில் இருக்கும் சின்னக் குழந்தையா அவன்? ஊருக்கே அரசன், பணக்காரன். குடும்பஸ்தன். மகனுயிருந்தாலும் தோளளவு வந்தால் தோழன்னு சொல்லுவாங்க. தொண்ணூறு வயதான, அதுவும் பிடிப்பில்லாத அப்பா சொன்னுல் எந்தப் பிள்ளைதான் கேட்பான்?''

''நான் என்ன செய்யணுமுன்னு சொல்லுங்க! மாமா, நான் வேறு யாரிடத்திலே முறையிடுவேன்? எனக்கு அப்பாவோ அண்ணன்களோ இல்லையே! இருந்தால் அவங்களை அழைச்சிட்டு வந்திருப்பேன் ..''

அன்னம்மா அழுதாள். வழியில் செல்லும் பெண்கள் கவனிப்ப தைத் தெரிந்து கொண்ட நீறைம்மா அக்காவின் கையைப் பிடித்துக் கொண்டு சொன்னுள் :

''வாங்க அக்கா, உள்ளே போய்ப் பேசலாம்.''

இருவரும் உள்ளே சென்றுர்கள். குஞ்சுறைநுை நினைக்கலானுர்: அன்னம்மாவிடம் நான் அப்படிச் சொன்னுலும் சங்கதி உண்மையாக இருக்கும். இதைப்போல் பல சங்கதிகளும் இதற்கு முன்னுலும் கேள்விப்பட்டிருக்கிறேன். குழவஞ்சேரிக்குப் பக்கத்தில் எங்கோ ரோட்டு வேலை நடந்துகொண் டிருக்கும்போது ஒரு விதவை நாயர் டீச்சரம்மாவுடன் அவனுக்குத் தொடர்பு இருந்ததாகக் காதில் விழுந்தது. எனவே, சந்தேகப்படுவதற்கு ஒன்றுமில்லை. துக்கம்

தாங்க முடியாது போகவே அன்னம்மா இங்கே ஓடி வந்திருக்கிருள். இப்படியெல்லாம் நிகழும்போது எங்கே போவது; யாரிடம் முறையிடுவது என்றெல்லாம் யோசிக்க நேரமேது ?

அன்னம்மா சொல்வதைக் கேட்டு அங்கே போவதாகவே வைத்துக் கொள்வோம். அப்போது என்ன நடக்கும் ? அவன் கூடத்தில் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருப்பான். முற்றத்தில் நின்று கொண்டு அவனைக் கூப்பிட வேண்டியிருக்கும் :

"இங்கே வாடா ?"

அவன் வருவான்.

''அன்னம்மா என்னடா சொல்ருள் ?''

''அவள் விவரமில்லாமல் ஏதோ சொன்ஞள் என்பதை வைச்சுக்கிட்டு நீங்க என்னை விசாரணை செய்ய வந்திருக்கீங்களா ?

''டேய், அது ......''

''ஒன்றும் பேசாதீங்க. வயதான காலத்திலே கிடைக்கிறதைச் சாப்பிட்டுக்கிட்டுச் சும்மா ஒரு இடத்திலே இருங்க.''

சத்தம் கேட்டு அவனுடைய மூத்த பிள்ளை மாடியிலிருந்து இறங்கி வருவான்.

''அவள் இந்தக் கேட்டைத் தாண்டி, உள்ளே வந்தால் காலை இரண்டு துண்டாக வெட்டிப் போடுவேன்.''

''ச்சீ. போடா இங்கிருந்து!''

"அவளை இங்கிருந்து விரட்டுவாய் ஆனல் என்னை விரட்டுடா பார்க்கலாம். வா, பேரன் பேத்தி எடுத்தாச்சு நீ...''

—அன்னம்மா இருக்கிருளே !

இவ்வளவு தூரம் பேச்சு முற்றும்போது அவன் பதில் சொல்லியாகவேண்டுமே.

''அன்னம்மாப் பொண்ணு ! நீ அந்தப் பக்கம் போ.''

''அவள் எங்கும் போக வேண்டாம். அவளும் கேட்கட்டும். நீங்கள் ஒருத்தர்தான் இந்தச் சண்டைக்கெல்லாம் காரணம். எல்லாரைப் பற்றியும் எனக்கு நல்லாத் தெரியும். யாரும் ஒன்றும் சொல்ல வேண்டாம். எங்க அம்மாவை உள்ளத்திலே வேலைப் பாய்ச்சித்தானே சாகடிங்சீங்க? இப்போ நீங்கதான் எனக்குப் புத்தி சொல்ல வந்திருக்கீங்களா...?''

இதற்கு நான் பதில் கூற முடியுமா? தலையைத் தொங்க விட்டுக்கொண்டு வரவேண்டியதுதான், ஏன் வம்பை விலைக்கு வாங்கவேண்டும்? எதற்காகப் போகவேண்டும்?

தம் மனைவி மரியம் ஒரு தடவை சொன்னது குஞ்சுநைனுவிற்கு நினைவு வந்தது :

''இரண்டு பேரில் யாராவது ஒருத்திதான் இருக்கமுடியும். இது நிச்சயம். என்னுடைய வாலிப நாட்களில் ஒரு வேலைக்காரியைப் போல், நீங்கள் சொன்னதையெல்லாம் கேட்டு, உங்கள் சுகமும் சந்தோஷமும் கவனிச்சு வாழ்ந்தேன். மனத்தால்கூட ஒரு பாவமும் செய்யவில்லை. அதனால், என்னால் இதைப் பொறுக்க முடியாது...''

யோசித்துப் பார்க்கையில், எவ்வளவு கடுமையாக நான் அவளிடத்தில் நடந்துகொண்டேன்? வாழ்க்கைப் படகைச் செலுத்த அவளும் உறுதுணையாக இருந்தாளே? விவேகத்தோடுதான் எதையும் செய்வாள். உத்தமி. நல்லவளாக வாழ்ந்தாள்; நல்லவளாகவே இறந்தாள். தாவீது சொன்னது போல, இனி எண்ணிப் பார்த்து என்ன பயன்? அவளைத் திருப்பி அழைத்துவர முடியுமா? அவளிடம் போக முடியுமே தவிர, அவள் என்னிடம் திரும்பி வருவாளா?

உள்ளே தீனும்மாவும் அன்னம்மாவும் பேசும் குரல் கேட்டது. அன்னம்மா சொன்னாள் :

''தீனு! அவளது அன்னநடையும், சிங்காரமும், ரொம்ப நாளாக நானும் பார்த்துக்கிட்டே வர்றேன். ஆனால் நமக்கெல்லாம் இப்படி ஒரு சந்தேகம் தோணுமா? அதுக்கு நியாயமிருக்கா? நீயே சொல்லு. எனக்குக் கை கால் வலி ஆரம்பிச்ச நாளிலிருந்து காலையிலே சீக்கிரமாக எழுந்திருக்க முடிவதில்லை. அதனால் காலையில் காப்பி போடுவதும், கொண்டு கொடுப்பதும் எல்லாம் அவள்தான். அவர் அஞ்சு மணிக்கு எழுந்திருப்பார். எழுந்ததும் அவருக்குக் காப்பி வேணும். ஒருநாள் காப்பி கொண்டு கொடுக்கப் போனவள் வெகுநேரம் வரையில் திரும்பவில்லை. எழுந்திருக்க முடியாவிட்டாலும் நான் முழிச்சிக்கிட்டுத்தானே படுத்திருந்தேன்! ஏதேதோ சத்தமும் கேட்டது.....''

''உம்.''

''அவள் திரும்பி வரும்போது ஒரு மாதிரியாகத்தான் இருந் தாள். அன்னையிலிருந்து எனக்குக் கொஞ்சம் சந்தேகம். இன்னிக்குக் காலையில் அவள் காப்பி கொண்டுபோய் ரொம்ப நேரமாச்சு. திரும்பி வரலே. எனக்கு முடியாத நிலையிலும் நான் மெதுவாக எழுந்து போனேன். சாத்தியிருந்த கதவைத் திறந்த போது நான் பார்த்ததை எப்படியடி சொல்லுவேன், தீனு ?''

''என் ஆண்டவரே !''

''அப்புறம் நடந்ததை எல்லாம எதுக்குச் சொல்லணும் ? சத்தம் கேட்டு ஜோணி எழுந்து வந்தான். அப்பாவும் பிள்ளையும் எதிரும் புதிருமாக நிற்கிறதைப் பார்த்தால்......''

''அன்னம்மாப் பொண்ணு !''

''என்ன மாமா ?''

''நீ போ, நான் வேண்டியதைச் செய்யறேன்.''

''மாமா, வர்றீங்களா ? கார் அனுப்பட்டுமா ?''

''வர்கீஸைக் கூப்பிட்டு வேண்டியதைச் சொல்லச் சொல் றேன்.''

''வர்கீஸ் மச்சான் சொன்னால் ஒண்ணும் அவர், கேட்கப்போற தில்லே.''

''கேட்காவிட்டால் நான் வர்றேன். நீ போ.''

தீனும்மாவும் சொன்னாள் ;

''அக்கா ! கவலைப் படாதீங்க. ஏதாவது வழி உண்டாகாமல் போகாது.''

குஞ்சுனைநனு சொன்னார் :

''பூமியைப்போலப் பொறுமையைக் கடைப்பிடி. விவேக மில்லாதவள் என்று மற்றவர்கள் சொல்லும்படியாக நடந்து கொள் ளாதே. சாலொமோன் கூறியது என்ன தெரியுமா ? ஞானமே முக்கியம். ஞானத்தைச் சம்பாதி. என்னத்தைச் சம்பாதித்தாலும் புத்தியைச் சம்பாதித்துக் கொள். நீ அதை மேன்மைப் படுத்து; அது உன்னை மேன்மைப் படுத்தும். நீ அதைத் தழுவிக் கொண்டால் அது உன்னைக் கனம் பண்ணும். அது உன் தலைக்கு அலங்காரமான முடியைக் கொடுக்கும்...........''

அன்னம்மா போனுள். என்ருலும் அவள் சொன்னதெல்லாம் அவர் கண்முன் தோன்றிக்கொண் டிருந்தது. பணம் சம்பாதித்த தினுல் மட்டும் என்ன பயன் ? மூடனை உரலில் போட்டு உலக்கை யினுல் நொய்யோடு நொய்யாகக் குத்தினுலும், அவனுடைய மூடத்தனம் அவனைவிட்டு நீங்காது.........

இருட்டி வெகுநேரம் கழித்துத்தான் மாத்யு வீட்டிற்கு வந்தான். இரவுச் சாப்பாட்டிற்குப் பிறகு வெகுநேரம் வரையில் கணவனும் மனைவியும் பேசிக்கொண் டிருந்தது குஞ்சுனைநுை காதில் விழுந்தது. காலையில் தீனும்மா மாமாவை எழுப்பினுள் :

''மாமா !''

''உம்.''

''ராகேல் இறந்து போய் விட்டாளாம்.''

''யார் சொன்னுர் ?''

''இப்போதுதான் ஓர் ஆள் வந்து சொல்லிவிட்டுப் போனுன்.''

''ஆ......நான் நேற்றே.. நினைச்சேன்.''

''கர்த்தரே ! இந்த உயிர் போவதற்கு முன்னுல் என்னவெல் லாம் காணவும் கேட்கவும் வேண்டுமோ ?''

''ஆமாம், என்னவெல்லாம்......''

''மாமா ! நீங்களும் வர்றீங்களா ?''

''இல்லை, நீ போ.''

போகாவிட்டாலும் குஞ்சுனைநுைவால் எல்லாவற்றையும் காணவும் கேட்கவும் முடியும்.

சிறையிலிருந்து அவளுக்கு விடுதலை கிடைத்தது. நிரந்தரமான விடுதலை. கர்த்தரின் திருநாமம் வாழ்க. ஆண்டவரே ! நீரே என்றென்றைக்கும் தேவனுயிருக்கிறீர். நீர் மனுஷரை நிர்த்தூளி யாக்கி, ''மனுபுத்திரரே'' திரும்புங்கள் என்கிறீர். உமது பார்வைக்கு ஆயிரம் வருஷங்கள் நேற்றுக் கழிந்த நாள் போலவும், இராச்சாமம் போலவும் இருக்கின்றன. அவர்களை வெள்ளம்போல் வாரிக்கொண்டு போகிறீர். நித்திரைக்கு ஒத்திருக்கிருர்கள். காலையில் முளைக்கிற புல்லுக்கு ஒப்பாயிருக்கிருர்கள். அது காலையிலே முளைத்து, பூத்து மாலையிலே அறுப்புண்டு உலர்ந்துபோம். நாங்கள் உமது கோபத் தினுல் அழிந்து, உக்கிரத்தினுல் கலங்கிப் போகிருேம்...எங்கள் ஆயுள் நாட்கள் எழுபது வருஷம். பலத்தின் மிகுதியால் எண்பது

வருஷமாயிருந்தாலும் அது சீக்கிரமாய்க் கடந்து போகிறது. நாங்களும் பறந்து போகிறோம்......

திண்ணையில் பாய்விரித்து, அவள் சடலத்தைக் குளிப்பாட்டிப் படுக்க வைத்திருக்கிறார்கள். அவள் திருமணத்தின்போது உடுத்தியிருந்த அதே புடைவையைத்தான் உடுத்தி வைத்துள்ளார்கள். முகூர்த்தப் புடவையைப் போர்த்தியுள்ளார்கள். சாம்பிராணி புகைகிறது. தலைமாட்டில் மெழுகுவர்த்தி ஏற்றி வைத்திருக்கிறார்கள். அவளுடைய தாய், உள்ளே எங்கோ ஓர் அறையில் தலைவிரிகோலமாக, நெஞ்சில் அடித்துக் கதறிக்கொண்டிருக்கிறாள். பத்து மாதம் சுமந்து, அங்கமெல்லாம் நொந்துபெற்ற தலைப்பெண் அல்லவா? தாய்க்கு மட்டும் தாளமுடியாத துயரம் இருக்கும்; மற்றவர்களுடைய துயரமெல்லாம் வெறும் நடிப்புத்தான். தங்கைகள், சித்திகள் என்று பத்தோ இருபதோ பெண்கள் அவளது கட்டிலுக்கு நான்கு புறமும் உட்கார்ந்திருக்கிறார்கள். செய்தி கேட்டு யாராவது வந்தால் எல்லாரும் சேர்ந்து ஓலமிடுகிறார்கள்.

இதோ ராணி அக்கா வந்தாள் :

''என் தங்கமே! நீ அனுபவிச்ச துக்கம் கொஞ்ச நஞ்சமா? கர்த்தர் உன் துக்கத்தைப் பார்த்துத்தான் உன்னைக் கூப்பிட்டாரடி!''......

சவப்பெட்டி செய்தாயிற்று. பெட்டியில் கறுப்புத் துணியும் வெள்ளை நாடாவும் அடிக்கிறார்கள்.

''தெரிவிக்க வேண்டிய இடங்களிலெல்லாம் தெரிவிச்சாச்சா?''

''ஓ ..அதிகாலையிலேயே ஆட்கள் போய்ச் சொல்லி எல்லாரும் வந்தாச்சே!''

''குஞ்சுநைனா வரலையா?''

''அவரால் நடக்க முடியாது.''

''எப்போ இறந்தாள்?''

''ராத்திரி சாப்பிட்டுப் படுத்தாள். அப்போ அவள் உடம்புக்கு ஒண்ணும் இல்லை.''

''உம், போகிற நேரம் வந்தாச்சு.''

''ஆமாம்.''

''புக்ககத்திலிருந்து யாராவது வந்தாங்களா?''

''இல்லே. யாரும் வரலே.''

''எதுக்கு அவங்க வரணும் ?''

''அதோ, சாமியார் வந்துவிட்டாரே ! இனி நேரமாக்க வேண்டாம். வர்கீஸ் என்ன சொல்றே ?''

''சவக்குழி வெட்டியாச்சா ?''

''எப்பவோ வெட்டியாச்சு.''

''அவசரப்பட வேண்டாம். யாராவது வரவேண்டியது இருந்தால் வரட்டும். குஞ்சுறைநை..... ?''

''அவருக்குக் கொஞ்சம்கூடத் தள்ளலே.''

''தொண்ணூறு வயசாவது ஆகியிருக்கும், இல்லேயா ?''

''நம்ம மொளேமுட்டுவீடு கொச்சாடி இருந்தாரே, அவர் வயதுதான். அவர் இறந்துதான் பத்து வருஷமாச்சே!''

சாமியார் எழுந்தார் :

''நாம் ஜெபம் பண்ணக்கடவோம்.''

எல்லாரும் எழுந்திருக்கிருர்கள். வீட்டிற்குள்ளிருந்து உள்ளம் குமுறி வெடிக்கும் சத்தம் கேட்கிறது. இங்கிருக்கும் சிலர் அதை மறுமொழிகிருர்கள். சிலர் சடலத்தைச் சவப்பெட்டியில் எடுத்து வைக்க முன்வருகிருர்கள். எல்லாருமாகச் சேர்ந்து ஓவென்று அழுகிருர்கள். தாய், சடலத்தின்மீது தடாலென்று விழுகிருள்.

''என் தங்கமே ! என்னே விட்டுப் போகிருயேடி.''

சவப்பெட்டியைத் தாங்கி எடுத்துப்போகும் கடைசி யாத்திரை ஆரம்பமாகிறது. சிலுவை இல்லே; குடையில்லே; வாத்தியம் இல்லே...

''காலமாகிற தேரில் நான் சொர்க்கத்திற்குப் போகிறேன்.
என் நாட்டைப் பார்ப்பதற்கு அவசரமாகப் போகிறேன்.''

மாதாகோவில் மணி அடிக்கிறது.

மாதாகோவிலில், அணேயா விளக்கிற்கு அருகில், கிழக்கு நோக்கிச் சவப்பெட்டியை வைக்கிருர்கள். சாமியார் ஈமச்சடங்குகளே ஆரம்பிக்கிருர்.

''கர்த்தரே ! இவ்வுலகிலிருந்து புறப்பட்டு உம்மிடம் வந்திருக்கும் இந்த ஏவலாளின் ஆவிக்கு அதிருஷ்டம் வாய்ந்த மணவறையும், சந்தோஷம் மிகுந்த விருந்தும், மகிழ்ச்சி நிறைந்த வீடும் கொடுத்தருளும் !

"வாக்குறுதி அளித்ததனுல் ஆதாமின் சந்ததியார்
மீக்குயர்ந்த பதம் பெறவே வியப்பீந்தாய் ஏசுவே ! ஓ !
காக்கின்ற பரமபிதா ! கதியென்றே உன்னடிக்கீழ்
போக்கற்றுத் தூங்குகிற புரிஏவற்குயர்வளிப்பாய்.

"ஆண்டவரே, உம் ஏவலாளிடம் கருணை புரியும். மாமோதீஸா வின் வாயிலாக நீர் கொடுத்த ஒளி வஸ்திரத்தையும், மூருேறு கிற முத்திரையையும் இவளிடமிருந்து எடுத்து விடாதேயும். இரண் டாம் இறப்பும், 'போ, உன்னை நாம் அறியோம்' என்கிற சொற்கள் கேட்க இவளுக்கு வாய்ப்பும் ஏற்படலாகாதே......"

சடலத்தைச் சவக்குழிக்கு அருகில் வைக்கிருர்கள் வாசனைத் தைலம் தெளிக்கிருர்கள். சடலத்தைச் சவக்குழியில் வைக்கிருர்கள். எல்லாரும் கதறியழுகிருர்கள். சாமியார் மண்ணை அள்ளிச் சிலுவை வடிவத்தில் குழியில் போடுகிருர்.

"நேசமுடன் வந்தணைந்த திருக்குமரா—மரணமில்லாதவனே எங்களை இரண்டாம் இறப்பிலிருந்து காப்பாற்றும்."

ஒவ்வொருவரும் பிடிமண்ணை அள்ளிக் குழியில் போடுகிருர்கள். பிறகு, மண்வெட்டியால் மண்ணைப் போட்டுக் குழியை மூடுகிருர் கள். எல்லாம் முடிந்தது.

# ஆறு

ராஜன் குளித்துவிட்டு வந்தான். சீப்புக் கிடைக்கவில்லை. தேடாத இடமில்லை. ஆனுல் எங்கும் காணும்.

"எந்தப் பொருளும் வைச்ச இடத்தில் இருக்காது."

தீனும்மா சமையலறையிலிருந்து ஓடி வந்தாள்.

"ராஜப்பா, என்ன தேடறே ?"

"சீப்பு."

"அந்த நாசமாப்போன பொண்ணு வேலே. எங்கே கொண்டு போய் வைச்சிருக்காளோ ? இரு, தேடி எடுத்துத் தர்றேன்.

தீனும்மா எங்கிருந்தோ சீப்பைக் கண்டெடுத்து வந்து கொடுத் தாள். ராஜனுக்குக் கோபம் மூக்குநுனியிலே ! அவன் நினைக் கிறது உடனேயே நடக்கவேண்டும். தலையை வாரிக்கொண்டு

உடையை மாற்றுவதற்கான ஆயத்தங்களில் அவன் ஈடுபட்ட போது தீனும்மா கேட்டாள் :

''ராஜப்பா, எங்கே கிளம்பினே ?''

''கடைவீதி வரையிலும் போய் வர்றேன்.''

''புத்தனூற்றங்கரைக்கு நாளைக்குத்தானே பெண்பார்க்க வர்றதாகச் சொல்லியிருக்கோம்.''

''நான் எங்கேயும் போகப் போறதில்லே''

''நல்லா இருக்கே, நீ சொல்றது. பையன் பெண்ணைப் பார்க்க வர்றான்னு அவங்க எல்லாமே தயாரா வைச்சுக்கிட்டுக் காத்திருப் பாங்களே!''

''என்னிடத்திலே கேட்காமல் ஏன் இந்த ஏற்பாடெல்லாம் பண்ணனீங்க ?''

''பையனையும் பெண்ணையும் கேட்டுக்கிட்டுத்தான் கல்யாணத் தைப்பற்றி யோசிப்பாங்களா ? நல்ல வேடிக்கையாயிருக்கே, நீ சொல்றது ! அதது நடக்க வேண்டிய நேரத்திலே நடந்தால்தான் நல்லா இருக்கும்.''

''நடக்கவேண்டிய நேரத்திலே நடந்தால் மட்டும் போதுமா ? ஒரு பெண் வந்தால் இருக்கிறதுக்கு இந்த வீட்டிலே வசதி இருக்கா ? வந்தவள் எங்கே படுத்துத் தூங்குவாள் ?''

தீனும்மா அப்படி ஒரு கேள்வியை எதிர்பார்க்கவில்லை. எனவே பதில் கூறச் சற்றுத் தடுமாறினாள். ஆயினும் சிறிது நேரம் யோசித்தபின் சொன்னாள் :

''எல்லா வசதிகளையும் செஞ்சு வைச்சிட்டுத்தான் கல்யாணம் செய்யணுமுன்னு நினைச்சால் அது நடக்கிற காரியமா ?''

''இது மிகமிக அவசியமாக இருக்கவேண்டிய வசதி. இருக்கிற வசதிகளை வைச்சுக்கிட்டு நாம் இங்கே வாழ்ந்தால் போதும். ஆனால் ஒரு வீட்டில் சுகமாக இருக்கிற பெண்ணை அழைச்சிட்டு வந்து ஏன் கஷ்டத்தைக் கொடுக்கணும் ?''

''நல்ல பெண்ணாயிருந்தால் இதையெல்லாம் எவரும் பிரச்னை யாக நினைக்க மாட்டார், கண்ணு, இல்லாவிட்டால் நீ ஒண்ணு செய். வீட்டைப் புதுசாக் கட்டி முடிக்கிற வரைக்கும் அவளையும் உன்னோடு அழைச்சிட்டுப்போய்க் குடித்தனம் பண்ணு!''

அப்படியெல்லாம் சொன்னபோதிலும் வசதிக் குறைவைப் பற்றித் தீனும்மா எண்ணிப் பார்த்தாள். மணமான பிறகு பையனும் பெண்ணும் தம் இச்சையாக இருக்க ஒரு தனியறையாவது வேண்டும். இங்கே நிலவறை போல இரண்டு அறைகள் உண்டென்றாலும் அவைகளில் மனிதர்கள் இருக்கமுடியாது. மற்ற இடங்களைப்பற்றிச் சொல்லவே வேண்டாம், சத்திரம்போல் திறந்து கிடக்கிறது. எப்படி இருந்தாலும் சாமியார் கொண்டுவந்த திருமணப் பேச்சு; அவன் போய்ப் பெண்ணைப் பார்க்கத்தான் வேண்டும். சரிப்பட்டு வந்தால் திருமணமும் நடத்தவேண்டும், தென்புற வராந்தாவைப் பலகை அடித்து மறைத்து, அவர்களுக்கு ஒதுக்கிக் கொடுத்தால் தற்போதைக்குச் சரியாய் விடும்...

ராஜன் வாசற்படியிறங்கும்போது குஞ்சுனைநனு அவனைப் பார்த்தார்.

''இங்கே வாடா !''

ராஜன் அவரருகில் சென்றான்.

''எங்கேடா போறே ?''

''கடைவீதி வரைக்கும்.''

''சத்தம் போட்டுச் சொல்லுடா; எனக்குக் காது நல்லாக் கேட்காது.''

''உம்.''

''கண்ணும் சரியாத் தெரியாது.''

''.........''

''வந்தபிறகு எல்லாப் பெரியப்பா வீடுகளுக்கும் போனயா ?''

''போனேன்.''

''என்ன சொன்னங்க ?''

''என்ன சொல்லுவாங்க ?''

''என்னைப்பற்றி யாரும் ஒண்ணும் கேட்கலையா ? நான் இந்தக் கட்டிலிலே தள்ளாமல் படுத்திருக்கிறது யாருக்கும் நினைவில்லை போல் இருக்கு. ஒருவேளை அவங்களுக்கு நேரமில்லாமலிருக்கலாம். வர்கீஸுக்கு எப்பவும் கஷ்டம்தான். அவன் மூத்தபெண் இறந்து போய்விட்டாள் ! அதொரு விதத்திலே நல்லதாப் போச்சு. இல்லா விட்டால் அவளுக்கும் கஷ்டம்; மற்றவங்களுக்கும் கஷ்டம். அவனுடைய ஒரு டீச்சரம்மாப் பெண் இருக்காளே அவளுக்கு இன்

னும் கல்யாணம் ஆகலே. அவளைக் கல்யாணம் கட்டிக் கொடுத் தனுப்பினுல் அப்புறம் அவன் பிழைப்புக்கு வழி என்ன? அந்த நரகத்திலிருந்து எப்படியாவது வெளியே போனுல் போதுமுன்னு அந்தப் பெண் நினைக்கிருள். வர்கீஸ் நினைக்கிறப் போல எப்பவும் அந்தப் பெண்ணைத் தன்வீட்டிலேயே கட்டிப்போட்டு வைக்க முடியாது. அவள் எவன் கையையாவது பிடித்துக்கொண்டு போய் விட்டால் அவங்க என்னடா செய்வாங்க?''

ராஜன் தாழ்ந்த குரலில் சொன்னுன் :

''எனக்குத் தெரியாது.''

''ஏ...?''

ராஜன் மௌனமாக இருந்தான்.

''ஆ...வர்கீஸ் விஷயம் அப்படியிருக்கு. அவன் தம்பி குஞ்சுச் செறுக்கன் என்னடான்ஞ எப்படியாவது நாள் தள்ளினுப் போது முன்னு காரியம் செய்யருன். கால் பங்கு புத்தின்ஞ முக்கால் பங்கு புரட்டு. எப்படியாவது காரியம் நடந்தால் போதும் அவனுக்கு. அதுக்காக யார் தலையிலே வேணுமானுலும் கையை வைப்பான். ஆனுல் இதெல்லாம் செய்தும் தரம் கூடியதா என்று கேட்டால் அதுதான் இல்லே.''

''இதையெல்லாம் ஏன் என்னிடத்திலே சொல்றீங்க? எல்லாரைப்பற்றியும் எனக்கு நல்லாத் தெரியும்.''

''ஏ ...?''

''.........''

''என்னடா சொன்னுய்?''

''நாலு வருஷமா நானும் எனக்குக் கிடைக்கிறதை எல்லாம் அப்பாவுக்கு அனுப்பிக்கிட்டே இருக்கேன். அனுப்பிக் கண்ட பலன் என்ன? ஒன்றுமில்லாவிட்டாலும் இந்த வீட்டையாவது ரிப்பேர் பண்ணியிருக்கக் கூடாதா? அதெப்படி முடியும்? நான் அனுப்புவதெல்லாம் அவருடைய பயணச் செலவுக்கே பற்ற வில்லையே! ஊரைக் கட்டி ஆள வேண்டாமா?''

தீனும்மா வெளியே வந்தாள்.

''இதைச் சொன்னுல் இங்கே எப்பவும் சண்டைதான், கண்ணு! யார் சொன்னுலும் கேட்கமாட்டார் உங்க அப்பா.''

"அதுக்கு நான் ஒருவழி வைச்சிருக்கேன்."

"என்ன ?"

"நான் அதுக்கு ஒரு வழி வைச்சிருக்கேன், தாத்தா !"

சற்றுக் கலவரத்துடன் குஞ்சுனைநை தீனம்மாவைப் பார்த்தார். தீனம்மாவின் முகத்தில் அதைவிடக் கலவரம் தெரிந்தது 'பையன் வக்கரித்துக் கொண்டால்...?'

"டேய், அவன் அப்படி ஊர்ப்பயணம் செய்யருன் என்றலும் ஒரு பைசாக்கூட இங்கிருந்து எடுக்கிறதில்லே. அதுக்கெல்லாம் அவனுக்கு வேறு எங்கிருந்தோ கிடைக்குது."

"கிடைக்குது, கிடைக்குது, கிடைக்கிறதாகவே இருக்கட்டும். மற்றவர்கள் சொல்லும்படியாக ஏன் இப்படி ஊர் ஊராச் சுற்றணும் ?"

அப்பொழுது குஞ்சுனைநை மிகத் தெளிவாகத் தம் பிள்ளைக்குப் பரிந்தார். எப்பொழுதுமே அப்படித்தான். யாராக இருந்தாலும் பிள்ளைகளைத் தாக்கிப் பேசினல் குஞ்சுனைநை விட்டுக்கொடுக்க மாட்டார்.

"டேய், ஒரு விஷயம் தெரிஞ்சுக்கோ. அவன் நம்ம சமுதாயத்திலே ஒரு முக்கியமான ஆள்; வெளியே போய்ப்பார். மேலேத் தொழுத்து மாத்யுவின் மகன்னு சொல்றதே உனக்கு ஒரு பெருமையடா."

தீனம்மா கூறினள் :

"மாமா எப்பவும் இப்படித்தான். பிள்ளை பக்கம்தான் பரிஞ்சு பேசுவார்."

"நான் என்ன பரிஞ்சா பேசறேன் ? அன்னிக்கு ஒருநாள் அவனே அழைச்சுக்கிட்டு வரும்படியாகப் பெரிய சாமியார் கார் அல்லவா கொடுத்தனுப்பிச்சாரு !"

"அதெல்லாம் சரிதான்."

"பின்னெ என்ன ? இவன் பணம் அனுப்பறதனல்தானே இங்கே எல்லாம் நடக்கிறது ? கிடைக்கிற நெல் அஞ்சு ஆறு மாதங்களுக்குத்தானே வரும் ? தோட்டத்திலேயிருந்தும் ஏதாவது கிடைக்குமுன்னு வைச்சுக்கோ. ஆனல் அதனலெல்லாம் ஒரு வீட்டுச் செலவு நடக்குமா ?"

அப்பொழுது தீனம்மாவும் குஞ்சுனைநை பக்கம் சேர்ந்தாள்.

''மாமா இங்கே இருக்கிறதனலே விருந்தாளிங்க ஒஞ்ச நேரமே இல்லே.''

பிறகு சிறிது நேரம் யாரும் எதுவும் பேசவில்லே. வெகு நேரம் கழித்துத் தீனம்மா சொன்னள் :

''மாமா! நாளேக்கு ராஜன் புத்தனற்றங்கரைக்குப் போருன்.''

''நாளேக்கா ?''

''ஆமாம்.''

''முதலாவதாக, குடும்பத்தைப் பார். ஆணயிருந்தாலும், பெண்ணயிருந்தாலும் குலப்பெருமை வேணும். அப்புறம், பெண் கூட அழைச்சுக்கிட்டுப் போகத் தகுதி இருக்கிறவளான்னு பார்த்துக்கோ! மூணவதாக, பணம்...''

ராஜன் மறுமொழி ஏதும் கூருமல் அங்கிருந்து நழுவினன். அங்கே நின்றுகொண்டிருந்தால், விடியும்வரை தாத்தா பேசிக் கொண்டே இருப்பார்.

பெண் பார்க்கப் போவதில்லே என்று கூறிய போதிலும், ராஜன் புத்தனற்றங்கரைக்குப் போவதற்கு மனத்தைத் தயார் செய்து கொண்டிருந்தான். எள்ளுப்பரம்பு வர்கீஸின் கடைசிப் பெண்ணன லிலாம்மாவின் கணவன் பேபியையும் அழைத்துக்கொண்டு போவதற்காக ஏற்பாடாகியிருந்தது. பேபி தாலூகா ஆபீஸ் குமாஸ்தா. அழகன். நல்ல ரசிகன். ராஜனின் உற்ற நண்பன். 'ராஜனுக்கு இந்தத் தடவை எப்படியாவது கால்கட்டுப் போட்டுவிடணும்' என்று ராஜன் விடுமுறையில் ஊருக்கு வந்ததுமே பேபி சொன்னன். உலாவப் போகும்போது வழியில் கண்ட பெண்ணேப்பற்றி இருவரும் கருத்துகள் பரிமாறிக் கொண்டனர். அப்படி ஒரு பேச்சின் பொழுதுதான் அந்தத் திருமண யோசனே வந்தது...

* * *

ராஜனும் பேபியும் அதிகாலேயிலேயே கிளம்பினர்கள். புத்தனற்றங்கரை அங்கிருந்து முப்பது மைல் தொலேவு. பஸ்ஸிலேயே சுமார் இருபத்திதேழு மைல் போகவேண்டும். பிறகு மூன்று மைல் நடைபாதை. இரண்டு படகுத்துறை கடக்க வேண்டும். இரண்டாவது படகுத்துறையைக் கடந்தால் மாதாகோவில் தெரியும். கோவிலுக்குப் பக்கத்தில்தான் பெண்ணின் வீடு. ஒன்றிரண்டு பேர்களிடம் வழியைக் கேட்டுக் கொண்டுதான் அவர்

கள் அந்த இடத்தை அடைந்தார்கள். தோட்ட வாயிலை அடைந்த போது கம்பீரமே உருவான ஒரு நடுத்தர வயதுக்காரர் முற்றத்தில் இறங்கிவந்து விசாரித்தார்.

''வழி தெரிஞ்சுவரக் கஷ்டமா இருக்கலியே?''

பேபி சொன்னான்:

''இல்லை.''

வேலை முழுதாக முடிவடையவில்லை என்றாலும் மொத்தத்தில் அது நல்ல வீடுதான். இன்னும் காரை பூசியபாடில்லை. வரவேற்பு அறையின் கதவருகில் ஒரு பெண்மணி வந்து நின்றாள். ராஜன் உள்ளூற எண்ணினான்: 'அம்மா போல இருக்கு' பையன் யாரென்று தெரியாதவள் போல் அவள் இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள். அதைப் புரிந்துகொண்ட பேபி சொன்னான்:

''நான் தோழன். என் பெயர் பேபி. இதோ இருக்கிறானே இவன் தான்.....''

கம்பீரத் தோற்றமுடையவரும், தாயும் புன்முறுவல் புரிந்தார்கள். தாய் எண்ணியிருப்பாள்: 'பரவாயில்லையே! தோழன் நல்ல ரசிகன் தான்!'

அந்தப் பெரியவர் சொன்னார்:

''நான் இவள் அண்ணன். என் வீடு இங்கிருந்து பத்து மைல் தூரத்தில் இருக்கிறது. இந்த மாதாகோவிலைச் சார்ந்த பள்ளிக்கூடத்தில்தான் மச்சான் வேலை பார்த்து வந்தார். மனை வாங்கி வீட்டைக் கட்ட இருந்தார்; கட்டிமுடிக்க முடியவில்லை...''

பேபி கேட்டான்:

''மாமாவுக்கு எங்கே வேலை?''

''நானும் ஆசிரியன்தான்.''

''நினைச்சேன்.''

''அதெப்படி?''

''பேசும் தோரணைதான் காட்டிக் கொடுத்து விடுகிறதே!''

அவர் சிரித்தார். மறுகணமே தம் கம்பீர பாவத்தை மறுபடியும் முகத்தில் வரவழைத்துக்கொண்டு ராஜனிடம் கேட்டார்:

''எத்தனை நாளைக்கு லீவு இருக்கு?''

''இரண்டு மாதம்.''

''அறுபது நாளா?''

''இல்லே. ஐம்பத்தாறு நாள் லீவும், ஜர்னிபீரியடும்.''

''அதுசரி, ஜர்னி பிரியட் எத்தனை நாள்?''

''ஒன் வே- ஆறு நாள் கிடைக்கும். அஞ்சு நாள் போதும்.''

''உம். பேபிக்கு இப்போ எதாவது சொல்றதுக்கு இருக்கா?''

''இருக்கு.''

''என்ன?''

''மாமாவும் பட்டாளத்திலே இருந்திருக்கார்.''

சிரிப்பின் முழக்கம் அங்கே மாற்றொலி கொண்டது. ராஜனும் அதில் பங்கு கொண்டான்.

''சரிதான். நான் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தி மூன்றில் பட்டாளத்தில் சேர்ந்தேன். நாற்பத்தேழில் அதை விட்டு வந்தேன்.''

''கை கழுவுங்க. கொஞ்சம் காப்பி......'' என்றாள் தாய்.

''ஆஹா! அதுக்கென்ன? சாப்பிட்டால் போச்சு!'' என்றவாறே பேபி எழுந்தான்.

காப்பிக்கான ஏற்பாடு ஒரு தனி அறையில் செய்திருந்தார்கள். இருவரும் கை கழுவி மேஜைமுன் அமர்ந்தனர். உட்புறக் கதவு திறந்தது. இதோ ஓர் ஒளி! பாவாடை, தாவணி, கையில் பலகாரத்தட்டு; சற்றே குனிந்த முகம்; மைதீட்டிய நீல விழிகள்; இமைகள் படபடத்தன கைகள் சற்று நடுங்கின. ஒளி திரும்பிச் சென்றது.

ஒளி மீண்டும் வந்தது. பலகாரத்தட்டு. டிரேயில் கோப்பைகள் நிரம்பக் காப்பி. இப்பொழுது நீண்டு மெலிந்த அந்தத் தளிர் விரல்கள் நடுங்கவில்லை. கலவரம் முற்றும் தணிந்திருந்தது.

''காப்பி குடியுங்கள்.''—அம்மா.

''உம்......''

''அப்பா இல்லாத குழந்தை.''

''தெரியும்,''

''இவள் நாலு மாதம் கர்பத்தில் இருந்தபோது, அவர் காலமானர்.''

''உம்...''

''மூன்று பெண்கள் எனக்கு. மூத்தவர்கள் இரண்டு பேரையும் கல்யாணம் கட்டி 'அனுப்பியாச்சு.''

''உம்...''

''அவள் அப்பா மட்டும் இருந்திருந்தால்...'' தாய் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்.

இருவரும் காப்பி குடித்துவிட்டு எழுந்தனர். தாயின் சைகை போலும்! ஒளி மீண்டும் கதவருகில் வந்தது. அப்போது அந்த அறையில் ராஜன் மட்டுமே தனித்திருந்தான்.

அவள் விரல்கள் தாவணியின் முன்தானையை முறுக்கிக் கொண்டிருந்தன. அழுகை வரும்போன்ற ஒரு முகபாவம்.

''உன் பேர் என்ன?''

''......''

''ஏ...?''

''சாந்தா.''—அவள் முணுமுணுத்தாள்.

''எந்த வகுப்பில் படிக்கிறாய்?''

''ஸிக்ஸ்த் ஃபார்மில்.''

''இப்போ அப்படியொரு வகுப்பில்லையே?''

''டென்த் ஸ்டாண்டர்டில்.''

''பள்ளிக்கூடம் இங்கிருந்து எவ்வளவு தூரம்?''

''ஒரு மைல்.''

''இப்போ மைல் கிடையாதே?''

அவள் சற்றே கலவரமடைந்தவளாய்

''பின்னே?'' என்று கேட்டாள்.

''கிலோ மீட்டர்.''

சிறிய புன்னகை ஒன்று அவள் உதடுகளில் தோன்றி மறைந்தது, சொட்டவிருக்கும் பனித்துளியின் பளிச்சிடும் கண நேர ஒளி போன்று!

தாய் கதவருகில் வந்தாள்.

''வரதட்சிணை என்று தருவதற்கு எங்களிடம் ஒண்ணும் இல்லை தம்பி, மூணு பெண்கள்தான் என் சொத்து.''

''உம்.''

''அவளால் உனக்கு வருத்தம் ஏற்படும் நிலை வராது. அப்படி நான் எல்லாப் பெண்களையும் வளர்த்திருக்கிறேன்.''

இனம் பிரிக்க முடியாத ஏதோ ஓர் உணர்ச்சி அவனுடைய உள்ளத்தில் குமுழியிட்டது. அவன் சட்டெனத் தாவி, சாந்தாவின் கையைப் பிடித்தான். அவள் வெடவெடத்துப் போய்த் தாயை நோக்கினாள். தாயின் முகத்தில் அனுகூல பாவம் தெரிந்தது.

''சாந்தா!''

“என்ன?”

“என்னைப் பிடிச்சிருக்கா?”

அவள் நாணிக் கண்புதைத்தாள். பிடிச்சிருக்கு என்று எப்படிச் சொல்வது?

“சொல்லு.”

அவள் முணுமுணுத்தாள் :

“அத்தானுக்கு......”

தாயின் உள்ளம் குளிர்ந்தது. இக்கட்டான இந்த நொடியில் அத்தான் என்று அழைக்க உனக்கு விவேகமிருந்ததே! அவன் சொல்லவும் செய்தான்!

“ஆமாம், உனக்கு அவர் அத்தான்தான்.”

“...என்னைப் பிடிச்சிருக்கா?”

அவளது கையைப் பலமாக அழுத்திக்கொண்டு ராஜன் கேட்டான்.

“உம் .”

“அவளுக்குப் பிடிக்காமல் இருக்குமா? சொல்றதுக்குச் சங்கோசப் படறாள். ஆண்டவருக்கு எதிரில் நீங்கள் இரண்டு பேரும் இணைந்துவிட்டீர்கள். இனி நடக்கவேண்டியதெல்லாம் வெறும் சடங்குதான்.”

விடைபெற்றுக் கிளம்பும் போது பேபி சொன்னாள்:

“அடுத்த வாரம் இங்கிருந்து யாராவது அங்கே வாங்க. அப்புறம் தேதி தீர்மானம் செய்ய நாங்கள் இங்கே வர்றோம்.”

“சரி.”

புத்தனாற்றங்கரையிலிருந்து திரும்பி வந்தபிறகு ராஜன் முற்றிலும் ஒரு புது மனிதனாக மாறியிருந்தான். இனந்தெரியாத புல்லரிப்பு இவனை ஆட்டிப் படைத்தது. உள்ளத்தில் ஒரு புதுக் குரல், புது உருவம், புது மணம் ... அத்தானுக்கு என்னைப் பிடிச்சிருக்கா?

தீனம்மா கேட்டபோது ராஜன் சற்றும் தயங்காமல்

“எனக்குப் பிடிச்சிருக்கு, சித்தி,” என்றான்.

ராஜன் அவளைப் பார்த்துச் சொக்கிப் போனான் என்றுதான் தீனம்மா மற்றவர்களிடம் சொன்னாள்.

ஞாயிற்றுக்கிழமை புத்தனூற்றங்கரையிலிருந்து நான்கு பேர் வந்தார்கள். பெண்ணின் தாய்மாமன், இரண்டு சிற்றப்பாக்கள், திருச்சபையிலிருந்து ஒருவர். வரதட்சிணைபற்றித் தெளிவான முடிவில்லாமலே திருமணம் நிச்சயிக்க ஏற்பாடாயிற்று. தோட்டத்தில் மூன்றில் ஒரு பங்கும் வீடும் கிடைக்கும். இதைத் தவிரத் திருமணச் செலவிற்குக் கொஞ்சம் பணம் என்று தெரிவித்தனர். இதெல்லாம் போதாது என்று வாதாடினுன் மாத்யு. ஆனல் பையனுக்குப் பெண் பிடித்துவிட்டதால் விட்டுக் கொடுக்க வேண்டி வந்தது ....

இந்நிலையில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி நடந்தது. அடுத்த ஞாயிற்றுக்கிழமை மாதாகோவிலில் பிரார்த்தனை முடிந்து மக்கள் பிரிந்து செல்கையில் ஒரு கிழவர் மேலைத் தொழுத்திற்கு வந்தார். அவருக்கு வயது எழுபதோ எழுபத்தைந்தோ இருக்கும். வெயிலில் நடந்ததனுல் அவர் மிகவும் களைத்துப் போயிருந்தார். முற்றத்தில் நின்றபடியே அவர் கூப்பிட்டுக் கேட்டார் :

''குஞ்சுநைனு இருக்காரா ?''

ராஜன் அப்போது வீட்டில் இல்லை. இடப்போரூரில் உள்ள அவனுடைய மாமா வீட்டிற்குப் போயிருந்தான். தீனம்மா வெளியே வந்து அவரை வரவேற்ருள்.

''வாங்க !''

கிழவர் திண்ணையில் இருந்த சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தார்.

''தூங்கருரா ?''

''ஆமாம். களைப்பினுலே மயக்கமாப் படுத்திருக்கார்.''

''தொண்ணூறு வயசாவது இருக்கும் இல்லையா ?''

''ஆமாம்.''

''முன்னே நான் ஆலப்புழையிலே மிளகு வியாபாரம் பண்ணிக்கிட்டிருந்தேன். அப்போ குஞ்சுநைனு மிளகுவிற்க வருவார். அப்போதைய பழக்கம். எத்தனையோ தடவை இங்கே வந்திருக்கேன்—பல வருஷங்களுக்கு முன்னுலே.''

''உம்....''

''நீ...பேத்தியா ?''

தீனம்மா சற்று நாணினுள்.

''இல்லை. கடைசி மகனின் மனைவி.''

''அப்படியா ? அப்போ கல்யாணம் யாருக்கு ?''

''என் பிள்ளைக்குத்தான். அவன் அம்மா காலமாயிட்டாள்.

''அப்போ நீ இரண்டாம் தாரமா ?''

''ஆமாம்.''

''உம். என்பெண்ணைப்பக்கத்துஊர் வேலங்காவில்தான் கட்டிக் கொடுத்திருக்கேன். நான் அங்கேதான் போய்க்கிட்டிருக்கேன். அப்படியே, போற வழியிலே குஞ்சுநைநுவையும் பார்த்து ஒரு விஷயம் சொல்லிப் போகலாமுன்னு வந்தேன்.''

''மாமாவைக் கூப்பிடட்டுமா ?''

''உம். கூப்பிடு. எனக்குச் சீக்கிரம் போகணும்.''

''மாமா !''

குஞ்சுநைநு அசையவில்லை. எனவே, தீனும்மா அவரை உலுக்கிக் கூப்பிட்டாள்.

''மாமா பாருங்க. யாரோ ஒருத்தர் உங்களைப் பார்க்க வந்திருக் கார்.

''யாரு ?''

''கண்ணைத் திறந்து பாருங்க !''

''என்னைத் தெரியுமா ? கோதைச் சிறை லோனுன் ?''

''யாரு, மிளகு லோனுனு ?''

லோனுன் சிரித்தார் :

''ஆமாம்.''

''பொண்ணு ! கொஞ்சம் கஞ்சித்தண்ணி கொடு.''

தீனும்மா கொண்டுவந்த சூடான கஞ்சியைக் குடித்துவிட்டுக் குஞ்சுநைநு லோனுனை உற்றுப் பார்த்தார்.

''என்னை ஞாபகம் இருக்கா ?''

''இருக்கு...''

''ரொம்ப நாளாச்சே பார்த்து.''

''உடம்பு சரியில்லை; கொஞ்சம் அயர்ச்சி......''

''இனிக் களைப்பு வரக்கூடாதுன்னு சொன்னுல், நடக்கிற காரியமா ?''

''உன் ஒரு பெண்ணை வேலங்காவில்தானே கட்டிக் கொடுத் திருக்கே, இல்லையா ?''

''ஆமாம், அங்கே போகத்தான் கிளம்பினேன். எங்க பக்கத்திலிருந்து ஏதோ சம்பந்தம் செய்யப் போறதாகக் கேள்விப் பட்டேனே?''

''எப்படித் தெரிஞ்சுது ?''

''எங்க ஊரிலிருந்து நாலு மைல்தானே புத்தனுற்றங்கரைக்கு? கல்யாண விஷயமாச்சே, பேச்சு வாக்கிலே காதில் விழாமல் போகுமா ? நாங்களும் அந்தப் பெண்வீட்டாரும் ஒரே திருச்சபையில்தான் இருந்தோம். அப்புறம் நாங்க கோவிலே மாற்றினோம்.''

''இடம் எப்படி ?''

லோனன் சிறிது நேரம் யோசித்தார். பிறகு இளநகை புரிந்தவாறே கேட்டார் :

''எது எப்படின்னு கேட்கிறீங்க ?''

''பெண் வீட்டார் எல்லாம்தான்.''

''ஆஹா, நல்ல பெண். வீட்டார்களும் தேவலே.''

''அப்பா இல்லே. இல்லேயா ? இந்தப் பெண்ணை நாலோ அஞ்சோ மாசம் கர்ப்பமாக இருந்தபோது இறந்து போனதாகக் கேள்விப் பட்டேன்.''

சற்று நேரம் கழித்து லோனன் சொன்னன் :

''அப்பா இருக்கார் !''

''என்ன ?''

''அப்பா இருக்கார்; ஒரு சாமியார்.''

எதிர்பாராத வகையில் யாரோ கழுத்தைப் பிடித்து நெரித்து விட்டாற்போல் தீனம்மா திணறிப் போனள்.

''என்ன ?''

''இருபது வருஷங்களுக்கு முன்னல் புத்தனுற்றங்கரை மாதா கோவிலில், கார்த்திகைப்பள்ளிக்காரர் ஒரு சாமியார் ஊழியம் செய்துகொண்டிருந்தார். அந்தச் சாமியாரின் மகள்தான் அந்தப் பெண்.''

குஞ்சுனைநனு கலவரத்துடன் தீனம்மாவைப் பார்த்தார். தாம் எழுந்து உட்கார விரும்புவதாகச் சைகை காட்டினர். தீனம்மா அவரைத் தூக்கி உட்கார வைத்தாள்.

''என்ன ஐயா சொல்றே ?''

''நான் சொன்னது நிஜம்தான். குஞ்சுநைனு. அந்தச் சாமியாரைத் தெரியுமா ?''

''சாமியார் என் அண்ணன் அல்ல, அக்காவின் கணவர்'' என்று சொல்ல வேண்டும்போல் இருந்தது தீனும்மாவிற்கு. ஆனல் அவள் கூறியது இதுதான் :

''இந்த வயசு காலத்திலே அதையும் இதையும் அனுவசியமாச் சொல்லிக்கிட்டுத் திரியாதீங்க.''

லோனுனின் முகம் வெளுத்தது.

''குழந்தே! உனக்கு என் மகள் வயசுகூட இருக்காது. கல்யாணத்தை நிறுத்தறதைத் தொழிலா வைச்சுக்கிட்டு நடக்கிருங்களே சில பேரு, அவங்களில் ஒருத்தனு என்னையும் நினைக்காதே. வேணுமுன்னு விசாரிச்சுப் பார். எனக்கும் குஞ்சு நைனுவுக்கும் இருக்கிற பழைய நட்பாலே எனக்குத் தெரிஞ்ச ஒரு செய்தியை இங்கே வந்து சொன்னேன். அந்த வாத்தியார் காலமாய் ஒரு வருஷத்துக்குப் பிறகுதான் அந்தப் பெண்ணின் அம்மா அவளைப் பிரசவிச்சாள். சாமியார் அப்பொவெல்லாம் அங்கேதான் இருந்தார். அவள் கர்ப்பமானது தெரிஞ்சதும் சாமியார் மாற்றல் வாங்கிக்கிட்டுப் போய்விட்டார். இந்தச் சேதி தெரியாதவர்கள் அந்த ஊரில் யாரும் இல்லே. சாமியாரை 'முடக்கணும்' என்றெல்லாம் ஜனங்கள் ரகளைப் பண்ணிப் பெரிய சாமியாரைக் கொண்டு வந்தாங்க. கடைசியில் அந்த அம்மாள் தான் காப்பாற்றினுள்.''

குஞ்சுநைனுவின் முகத்தில் படர்ந்திருந்த சோக பாவத்தைக் கண்ட லோனுன் சொன்னுர் :

''இதெல்லாம் நடந்து எத்தனையோ வருஷங்ளாச்சே! வேணு முன்னு நம் சௌகரியத்துக்கு மறந்து விடலாம். ஆனுல் இதுக்காக அந்தப் பெண் வீட்டுக்கு ஏற்றவள் அல்ல; மோசமானவள் என் றெல்லாம் நான் சொல்ல மாட்டேன். இருந்தாலும் எனக்குத் தெரிஞ்ச ஒரு சேதியைச் சொன்னேன்; அவ்வளவுதான்.''

நிசப்தம்.

தீனும்மாவின் உள்ளம் கூறியது : உண்மையாவிருக்கும். இல்லாவிட்டால் சாமியாருக்கு ஏன் இவ்வளவு அக்கறை? ஆண்டவரே!

லோனுக்கு அங்கிருந்து எப்படியாவது போனால் போதும் என்றிருந்தது.

"அப்போ நான் வரட்டுமா, குஞ்சுநைனா?"

பதிலில்லை.

"போய் வர்றேம்மா!"

மௌனம்.

லோனன் எழுந்துபோனபிறகு குஞ்சுநைனா தீனம்மாவைக் கூப்பிட்டார் :

"பொண்ணு!"

"என்ன?"

தீனம்மா பதில் கூறவில்லை. குஞ்சுநைனா நினைத்தார். லோனன் சொன்னது மட்டும் உண்மையாக இருந்தால் அண்ணனுக்கும் தங்கைக்கும் திருமணம்! சாமியாரின் வைப்பாட்டி மகள்-பெண். தம்பியின் மகன்-பையன். மாமியின் பிள்ளை ஒரு விதத்தில் தம்பிதானே? பழைய ஏற்பாடு காலத்திலே......சகோதரியின் மீது ஆசைகொண்டு அவளை அடைந்தவனை அடித்துக் கொல்வதுதானே வழக்கம்! தாவீதின் குமாரனாகிய அம்னோன், அப்சலோமின் சகோதரியாகிய தாமரிடத்தில் மையல் கொண்டான். அவன் தந்திரக்காரனான யோனதாபின் பேச்சைக் கேட்டு வியாதிக்காரனைப் போன்று படுத்துக்கொண்டான். அவன் தந்தை அவனைப் பார்க்க வந்தபோது சகோதரியின் கைகளால் செய்த பணியாரத்தைத் தான் சாப்பிட விரும்புவதாகச் சொன்னான். அதன்படி தாமர் வந்து மாவெடுத்துப் பிசைந்து அவன் எதிரிலேயே பணியாரங்களைச் சுட்டாள். மற்றவர் யாருக்கும் தெரியாமல் உண்பதற்காக அவன் தாமரிடம் அந்தப் பணியாரங்களை உள்ளே எடுத்துவரச் சொன்னான். அவனது அறைக்குள் சென்றபோது அவன் அவளிடம் செய்யத் தகாததைச் செய்தான். இரண்டு வருஷங்களுக்குப் பிறகானாலும் அப்சலோம் தன் சகோதரிக்கு நேர்ந்த அவமானத்திற்கு வஞ்சம் தீர்த்தான். எப்பிராயிமுக்குச் சமீபமான பாலாத்சோரில் ஆடுகளுக்கு ரோமம் வெட்டும்போது நடக்கும் விருந்தில், அம்னோன் மது உண்டு போதையுடன் இருக்கையில் அப்சலோமின் வேலைக்காரர்கள் அவனை அடித்துக் கொன்றார்கள்......

''அடித்துக் கொல்லு.''

''மாமா''

''ஏ...?''

''யாரை அடித்துக் கொல்லணுமுன்னு சொன்னீங்க ?''

''ஆ . உண்மையாயிருக்கும். நீ என்ன சொல்றே ?''

''...... ''

''அவன் போலிச்சாமியாராக இருப்பான்; புலித்தோல் போர்த்திய பசு.''

''எனக்கு எதுவும் தெரியாது மாமா, என்னிடத்தில் ஒன்றும் கேட்காதீங்க. என்னிடத்திலே... ''

தீனும்மா தேம்பித் தேம்பி அழுதாள்.

''இந்தக் கல்யாணம் நடக்கக் கூடாது. உடனே கடிதம் எழுதி விடு. 'திடீரென்று கட்டளை வந்ததனுல் பையன் புறப்பட்டுப் போகும்படியாகிவிட்டது. நாம் அன்று சந்தித்து நிச்சயித்தபடி...''

''அவன் அப்பா வந்தபிறகு எழுதினுல் போதாதா, மாமா ?''

''எதுக்கு ?''

''ஊருக்குத் தெரிஞ்சால் தலைக்குனிவுதானே ?''

''என்னடி தலைக்குனிவு ? அந்தப் போலிச்சாமியார் அயோக்கியத்தனம்தானே செய்தான் ? அவன் உன் அக்கா புருஷன் சரி. எனக்கும்தானே உறவு ? என் மச்சான் மகன் உன் வீட்டுக்காரனுக்கு மாமா பிள்ளை. தலைக்குனிவும் அவமானமும் எல்லாருக்கும் ஒரே மாதிரிதான். பெரியவனை வரச்சொல்லி ஆள் அனுப்பு. மேலைத்தொழுத்துக் குஞ்சுநைனு பேரன், அப்பன் இல்லாத பெண்ணைக் கட்டிக்க மாட்டான்னு தெரிஞ்சுக்கோ!''

''பேசாம இருங்க, மாமா !''

மாலையில் மாத்யு வந்தான். மூன்று அண்ணன்களையும் குஞ்சப்பியையும் வரும்படி சொல்லி ஆளை அனுப்பினுர்கள். வர்கீஸும் குஞ்சப்பியும் மட்டும் வந்தார்கள். செய்தி தெரிந்த போது வர்கீஸ் சொன்னுன் :

''கல்யாணத்தை நிறுத்தறதுக்குன்னு சிலவங்க இருக்கிருங்க. அவங்க வேலையாகவும் இருக்கலாம். ஒரு வேளை இங்கே வந்து

சொன்னவரின் பையனுக்குப் பெண்ணை கேட்டு, அவங்க தர மறுத்திருக்கலாம்.''

''என்ன ஆனாலும் இவ்வளவெல்லாம் காதில் விழுந்தபிறகு தீர விசாரிச்சுத் தெரிஞ்சுக்கிறதுதான் நல்லது.'' — குஞ்சப்பி.

மாத்யு சொன்னான் :

''இதில் என்னவோ சூது இருக்கு; சந்தேகமில்லை. இல்லாவிட்டால் சாமியார் ஏன் இவ்வளவு தொலைவிலிருந்து ஒரு கல்யாணப் பேச்சுக் கொண்டு வரணும்?''

குஞ்சுறைநன சொன்னார் :

''அதைச் சொல்லுடா! சாமியாராம் சாமியார். இங்கே வரட்டும் அவன். சரியாத் திட்டி அனுப்பறேனா இல்லையா, பார்!''

வர்கீஸ் தந்தையைத் தடுத்தான் :

''சும்மா ஏதாவது பேசாமல் இருங்க, அப்பா !''

மறுநாள் உண்மையை விசாரித்தறியப் புத்தனூற்றங்கரைக்கு ஆள் அனுப்பினார்கள். இதையெல்லாம் நேராகக் கேட்க முடியுமா? பலரிடத்தில் மறைமுகமாக விசாரித்ததில் சந்தேகம் வலுத்தது. எனவே கடிதம் எழுதிவிடுவது என்று முடிவெடுத்தார்கள். அந்த நேரத்தில் மாமா வீட்டிற்குப் போயிருந்த ராஜன் திரும்பி வந்தான். வீட்டிற்கு வருவதற்கு முன்னதாகவே நிகழ்ந்தவைகளையெல்லாம் பேபி சொல்லி அவன் அறிந்திருந்தான். செய்தி தெரிந்தபோது அவன் திடுக்கிட்டான். ஆசையுடனும் அன்புடனும் அவன் கட்டிய மனக்கோட்டை அவன் கண்களுக்கு எதிரிலேயே விழுந்து சுக்கு நூறுகியது போலத் தோன்றியது. கேட்கும்போது திருப்பித் தருவதாகச் சொல்லி வாங்கிவைத்த ஒரு பொருளைத் தேவையென்று கேட்டுச் செல்லும்போது ஒருவன் கொடுக்காமல் மறைத்து வைத்தால் உள்ளம் என்ன பாடுபடும்? அத்தகைய மனக்குமுறலில், அவன் உண்ணவும் இல்லை; உறங்கவும் இல்லை. அவனுடைய உள்ளத்தில் பெரும் போர் மூண்டது. முடிவை நிர்ணயிக்க முழுமுச்சுடன் நடத்தும் கடைசிப் போராட்டம் போல! ஆன்மா அலங்கோலமான ஒரு வீடுபோல் இருந்தது. இப்போது அது துப்புரவு செய்து சுத்தமாகியிருந்தது. அதன் வாயிலில் ஒருத்தி எரிகிற மெழுகு

வத்தியைக் கையில் ஏந்தியவாறு வந்து நின்ருள். மை தீட்டிருற் போன்ற அழகிய அகன்ற நீலவண்ணக் கண்கள், அவளுடைய முகத்தைச் சுற்றிலும் ஒளி படர்ந்திருந்தது. இதயத்துள் மறைத்து வைத்துள்ள காதலெனும் மதுவில் ஊறிய இதழ்கள்.

''ஏன் வரத் தாமதமாயிற்று ?''

''என்ன ?''

''எவ்வளவு நேரமாக நான் காத்திருக்கேன் ? நீங்கள் வராமல் நான் சாப்பிடமாட்டேன் என்று தெரியாதா ?''

''நான் உன்னை இத்தகையவள் என்று நினைக்கவில்லை.''

''என்ன ?''

''நான் உன்னை முதன் முதலில் சந்தித்தபோது நீ ஒரு முகமூடி அணிந்திருந்தாய்.''

''இல்லவே இல்லை, அத்தான்! இல்லவே இல்லை. நீங்கள் என்னைத் தொட்டுப் பாருங்கள்.''

''உன் அப்பா யார் ?''

அவள் திடுக்கிட்டாள் அவளுடைய கண்கள் குளமாயின.

அப்பா !

''ஆம், அவர் யாரென்று எனக்குத் தெரியணும் ! கார்த்திகைப் பள்ளி......''

அவள் வாய் பொத்தினுள். அப்படியெல்லாம் சொல்லாதீர்கள் என்று அவள் விழிகள் மன்ருடின.

''அத்தான் !''

''உம்.''

''இந்த ஒளியைப் பாருங்கள்.''

''உம்.''

''இது தூய்மையானதா ?''

''ஆம்.''

''இந்த மெழுகு ?''

''தெரியாது.''

''அப்படியானுல் நான் இந்த ஒளிதான். என் கையைப் பிடித்து நீங்கள் எனக்கு உறுதியளிக்கவில்லையா ?''

''.........''

''சொல்லுங்கள் அத்தான். என்னைப் பிடிச்சிருக்கு என்று சொன்னீர்களே ?''

திருமணம் நிச்சயிப்பதற்காக வரவேண்டாம் என்று எழுதிய கடிதத்தை மாத்யு, குஞ்சுநைனுவிற்குப் படித்துக் காட்டிக்கொண்டிருக்கையில்தான் ராஜன் வந்தான். அவன் கேட்டான் :

''கடிதம் எழுதியாச்சா ?''

குஞ்சுநைனு சொன்னார் :

''எல்லாம் சரியா இருக்கு. இன்னைக்கே அனுப்பிவிடு.''

''கடிதத்தை இப்படிக் கொஞ்சம் கொடுங்க. நானும் கொஞ்சம் பார்க்கிறேன்.''

சற்றுச் சந்தேகம் பட்டாலும் மாத்யு கடிதத்தை ராஜனிடம் கொடுத்தான். அதைப் படித்தபின் அவன் கூறினான் :

''இதை அனுப்ப வேண்டாம். எனக்கு இந்தப் பெண் போதும். நாம் பெண்ணை மட்டும் பார்த்தால் போதும். எனக்கு அவளைப் பிடிச்சிருக்கு.''

''என்னடா சொன்னே மானம் கெட்டவனே ? கடிதத்தை இப்படிக் கொடுடா !''

''இதை அனுப்ப வேண்டாம்.''

ராஜன் அதைக் கிழித்து முற்றத்தில் எறிந்தான். மறுகணமே மாத்யு மகனுடைய கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறை விட்டான்.

''உனக்கு அவளைப் போதுமாடா, போதுமா ?''

மாத்யு கோபத்தால் நடுங்கிக்கொண்டிருந்தான். ராஜன் தந்தையின் கண்களை உற்றுப் பார்த்தபடி நின்றான். பிறகு சொன்னான் :

''அதிலே உங்களுக்கு இன்னும் சந்தேகமா ? எனக்குப் பிடித்த பெண்ணை நான் கல்யாணம் செய்து கொள்வேன்.''

''கல்யாணம் செய்து கொள்வாயா ....''

தந்தை மகனைத் திட்டக்கூடாத—தாயின் கற்பைப் பற்றிய ஒரு தரக்குறைவான வார்த்தை மாத்யுவின் வாயிலிருந்து வந்தது. மறுபடியும் தன்னை அடிக்க ஓங்கிய தந்தையின் கரத்தைச் சட்டென்று பிடித்தான் ராஜன்.

''என்னை அடிக்கிறதுக்கு நான் என்ன, திருடினேனா ? யார் பொருளையாவது வழிப்பறி செய்தேனா ?''

தீனும்மா குறுக்கிட்டுப் பிள்ளையின் பிடியிலிருந்து கணவனை விடுவித்தவாறே, ''என்ன இது? அப்பாவுக்கும் பிள்ளைக்கும் புத்தி தடுமாறிப் போச்சா?'' என்று கேட்டாள்.

குஞ்சுநைனு கட்டிலிலிருந்து அடித்துப் பிடித்துக்கொண்டு எழுந்தவாறே கத்தினர் :

''பையனை அடிக்காதேடா! ஏதோ விவரம் தெரியாமல் பேசினதற்காக அவனை அடிச்சுக் கொல்லப்போறயா, என்ன?''

ஸிஸிலி அம்மாவைக் கட்டிப்பிடித்துக்கொண்டு அழலானுள்.

''போடா வெளியே! நீ எனக்கு யாரும் அல்ல. போ, இப்பவே போ!''

'' நீங்க சம்பாதிச்சதொண்ணும் எனக்குத் தரவேண்டாம். இது என்னுடைய தாத்தா வீடு.''

தீனும்மா உரத்த குரலில் -

''சும்மா இரு ராஜா! என்னவானுலும் அவர் உன் அப்பா தானே?'' என்று கேட்டாள்.

''அப்பா பிள்ளையை இப்படித்தான் அடிக்கிறதா? அப்பா பிள்ளையைத் திட்டற வார்த்தையா அவர் வாயிலிருந்து வந்தது?''

குஞ்சுநைனு சொன்னர் :

''அப்பன் அடிப்பான், திட்டவும் செய்வான். அப்பாவை நிந்தனை செய்கிறவனுக்கு ஆண்டவர் தண்டனை கொடுப்பார். என் வீடு என் பிள்ளைக்கு. நீ போ, போடா!''

குஞ்சுநைனுவிற்கு மூச்சு வாங்கியது. ராஜன் பிறகு அங்கே நிற்கவில்லை. வீட்டை விட்டு வெளியே இறங்கி வேகமாக நடந்தான். அப்போது பாத்யுவின் கோபம் தீனும்மா பக்கம் திரும்பியது.

''அந்தப் பையன் இப்படியானதற்கு நீதாண்டி காரணம். ஆமாம், நீதான் காரணம்!''

தீனும்மா பதில் கூறவில்லை. தீ சற்றுத் தணியட்டும்! தீனும்மாவின் உள்ளத்தில் அச்சம் குடிகொண்டது. அது இலேசில் முடியப் போவதில்லை. அவன் நினைத்ததை முடிப்பதற்காக உயிரை விடக் கூடத் தயங்க மாட்டான்.

''அந்தப் பெண் சொக்குப் பொடி போட்டு இவனை மயக்கியிருப்பாள்!''

குஞ்சுநைநஞ கேட்டார் :

''என்ன, என்ன ?''

யாரும் பதில் கூறவில்லை. அமைதி ஆவலைத் தூண்டுவதாக இருந்தது. பரவ இருந்த தீயை உரிய காலத்தில் கண்டுபிடித்து அணைத்ததுபோல்...

வர்கீஸும் குஞ்சப்பியும் மறுபடியும் வந்தார்கள். இந்தத் தடவை குஞ்சுச்செறுக்கன்கூட வந்திருந்தான். பிலிப்பு தோட்டம் வாங்குவதற்கு மலபாருக்குப் போயிருந்தான்.

புதிய நிகழ்ச்சிகளைப்பற்றி எல்லோரும் கலந்து ஆலோசித்தார்கள். கிழித்துப் போட்ட கடிதத்திற்குப் பதிலாக வேறொன்று அனுப்ப வேண்டுமென்று மாத்யு வற்புறுத்தினான். குஞ்சுச்செறுக்கன் அதைத் தடுத்தான். நாலு பேர் சொல்வதை எதிர்ப்பதுதானே அவன் வழக்கம்.

''சரியல்ல. சாமியாரைப்பற்றி யாரோ புறம் சொன்னால் அதை வைச்சுக்கிட்டு நாம் நெறி தவறி நடக்கக்கூடாது!''

வர்கீஸ் கேட்டான் :

''நீ என்னடா சொல்றே ?''

''சொன்னதேதான்.''

''சாமியார் கொண்டுவந்த திருமணப் பேச்சென்றால் நமக்கு விருப்பமில்லாவிட்டால்கூடக் கல்யாணம் நடத்தணுமா ?''

''ஏன் அண்ணா விருப்பமில்லை. காரணம் சொல்லு.''

''ஓ ! காரணம் சொல்லணுமாம்.''

குஞ்சப்பி நியாயம் சொல்லலானான் :

''அதிருக்கட்டும் சித்தப்பா ! கல்யாணம் நாம் வேண்டாமுன்னு வைக்கிறோம். ஆனால் அவன் அந்தப் பெண்ணைத்தான் கட்டிப்பேன்னு பிடிவாதமா இருந்தால் என்ன செய்யறது ? அவன் பெண்ணையும் அழைச்சுக்கிட்டு ரெஜிஸ்தர் ஆபீஸுக்கு போனால் என்ன செய்ய முடியும் ?''

''அப்புறம் அவனுக்கு இந்த வீட்டில் இடமில்லை.''

''அதனாலே அவனுக்கு ஒரு நஷ்டமும் வரப்போறதில்லை. அவன் அரசாங்கச் சம்பளத்திலேதான் வாழறான். உங்கள் யார் தயவும் அவனுக்கு வேண்டாம்.''

''அதுக்காக அவனுக்குப் பயப்படணுமா ?''

''பயப்படணும், காலம் மாறிப் போச்சு.''

எந்த முடிவும் செய்யாமலேயே கூடியவர்கள் பிரிந்தார்கள்.

ராஜன் மறுபடியும் இடப்போருரிலுள்ள அவனுடைய மாமா வீட்டுக்குப் போனான். அவனுக்கு நான்கு தாய் மாமன்கள் இருந்தார்கள். நால்வருமே கெட்டிக்காரர்கள். தொழில் செய்து நிறையப் பணம் சம்பாதித்திருந்தார்கள். திருமணமாயிருந்த போதிலும் எல்லோரும் சேர்ந்து, ஒற்றுமையுடன் வசித்து வந்தார்கள். சீட்டு, வங்கி முதலியன இருந்தன. நல்ல வரும்படி. காலம் சென்ற சகோதரியின் ஒரே பிள்ளை என்பதால் ராஜன் அனைவருக்கும் கண்ணியமாகத் திகழ்ந்தான். முன் எப்போதும் கண்டிராத அளவிற்குக் கவலை தோய்ந்த முகத்துடன் அவனைக் காண்கையில் ஒவ்வொருவரும் தனித்தனியாக விசாரித்தனர் :

''என்ன ?''

''என்னடா விஷயம் ராஜாக் கண்ணு ?''

தன்னைக் கட்டுப்படுத்த முடியாமல் ராஜன் விக்கி விக்கி அழலானான். தனது வலிவின்மையை ராஜன் அப்பொழுதுதான் உணர்ந்தான். நடந்தவைகளைச் சரியாகச் சொல்ல அவனால் இயலவில்லை. கன்னம் வீங்கியிருப்பதைக் கண்டபோது பெரிய மாமா கொச்சுக்குட்டி சொன்னார் :

''வாடா, நானும் வர்றேன். என்ன விஷயமுன்னு தெரியணுமே!''

மாமனும் மருமகனும் சேர்ந்து வந்தார்கள். மாத்யுவைப் பார்ப்பதற்கு மாலைவரையிலும் கொச்சுக்குட்டி காத்திருக்க வேண்டியிருந்தது இதற்கிடையில் குஞ்சுநைனுவிடத்திலோ தீனும்மாவிடத்திலோ மனம்விட்டுப் பேசவில்லை. தணிய வைப்பதற்கான தீனும்மாவின் முயற்சிகள் வீணாயின. மாத்யு வந்தபோது கொச்சுக்குட்டி திண்ணையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான் ; அவன் இதைச் சற்றும் எதிர்பார்த்திருக்கவில்லை.

''மச்சான் ! எப்போ வந்தாய் ?''

''மத்தியான்னம் வந்தேன்.''

மாத்யு வேறொன்றும் கூறாமல், சமையலறைக்குப் போனான். ஏதாவது பேச்சு நடந்ததாவென்று மனைவியிடத்தில் ரகசியமாகக்

கேட்டான். மாத்யுவும் கொச்சுக்குட்டியும் சம வயதினர். வெகு நாட்களுக்கு முன்னால் இருவரும் உற்ற நண்பர்களாக இருந்தனர். மாத்யு வெளியே வந்தான்.

''என்ன சேதி ?''

''இங்குள்ள சேதியைத் தெரிஞ்சுக்கத்தான் வந்தேன்.''

''அதை அவன் சொல்லியிருப்பானே ?''

''அவன் வாய் திறந்து எதுவும் சொல்லலே. ஆனால் கன்னம் வீங்கி இருப்பதைப் பார்த்தேன்.''

''ஓ ! அந்த விஷயத்தைத்தான் கேட்க வந்தாயா ?''

''இல்லே. அவன் உன் பிள்ளை. நீ அடித்துக் கொன்று போட்டால்கூட யாரும் கேட்க வரப்போறதில்லே.''

''பின்னே ?''

''நாங்களும் உங்கள் சொந்தக்காரங்கத்தானே ? நீங்கள் அவனுக்கு ஒரு கல்யாணம் செய்து வைக்க முயல்வதாகவும் கேள்விப்பட்டோம். அது இப்போ அடி உதை வரைக்கும் போயிருப்பதாகவும் கேள்விப்பட்டோம்.''

''முயல்கின்ற கல்யாணங்களெல்லாமே முடிந்துவிடுகின்றனவா ?''

''இல்லே இருந்தாலும் நீங்கள் சொல்லித்தான் அவன் பெண்ணைப் பார்த்து வந்தான். பெண் அவனுக்குப் பிடிச்சுப் போச்சு. அப்புறம் என்ன தகராறு நடந்தது ?''

குஞ்சுநைனு சொன்னார் :

''டேய் கொச்சுக்குட்டி ! அவள் அம்மா சரியில்லே.''

''என்ன சரியில்லே ? அம்மாவையா கல்யாணம் செய்து கொள்ளப் போறான் ? பெண்ணைத்தானே ?''

மாத்யு நயமாகப் போக எண்ணினான். எனவே பிரச்னைக்குத் தீர்வுக்காணும் முறையை மாற்றும் வகையில் பேசினான் :

''மச்சான் ! மனசிலே தப்பா ஒன்றும் நினைச்சுக்காதே. எல்லாம் தெரிஞ்சு வைச்சுக்கிட்டா நாம் கல்யாணம் பேசுகிறோம் ? நாலு இடத்திலே விசாரிச்சுப் பார்க்கிறோம். எல்லாம் சரிப்பட்டு வந்தால் நடத்தறோம். உன் பிள்ளை கல்யாணமாயிருந்தாலும் இப்படியெல்லாம்தானே செய்யமுடியும் ?''

இந்த வாய்ப்பைப் பயன் படுத்திக்கொண்டு கணவனை ஆதரிக்க முற்பட்டாள் தீனும்மா :

"ராஜனுக்குக் கெடுதலான எந்தக் காரியமாவது நாங்க செய்வோமா ?"

"அதெல்லாம் சரிதான், மச்சானுடைய மாமன் மகன் கார்த்திகைப்பள்ளிச் சாமியார்தானே இந்தச் சம்பந்தத்தையே கொண்டு வந்தார் ? அந்தப் பட்டயக்காரருக்குத் திருப்தியான இடம் அது. நீங்களும் போய்ப் பார்த்தீங்க. உங்களுக்கும் பிடிச்சுது, இப்போ திடீரென்று அம்மா நடத்தை சரியில்லை என்று உங்களுக்குத் தோன்ற என்ன காரணம்? தெளிவாகச் சொல்லுங்க!"

சொல்வதறியாது மாத்யு தவித்தான். தீனும்மாவும் தவித்தாள். அந்தப் பெண், சாமியார் மகள்தான் என்று சொல்ல முடியுமா? அப்படிச் சொல்வது குறைச்சல் என்பது ஒருபுறமிருக்கட்டும்; எந்த ருசுவை வைத்துக்கொண்டு மாசு கற்பிப்பது? எவனே சொன்னன் என்பதைத்தவிர வேறு சாட்சியம் இருக்கா? மாத்யு விஷயத்தைக் குழப்ப முயன்றன் :

"அந்த அம்மாள் வாலிப வயதிலேயே விதவையானங்க. வீட்டிலே கேட்கக் கொள்ள பெரியவங்க யாரும் இல்லே. அப்படிப் பட்ட ஒரு சூழ்நிலையிலே வழி தவறிப்போக வாய்ப்புகள் இருக்காதா ?"

"மச்சான் ! நீயுமா இப்படிப் பேசறே ? அந்தத் திருச்சபையிலே கைங்கர்யம் செய்துகொண்டிருந்த ஒரு சாமியார்—உன் மாமன் மகன்-தருகிற நற்சாட்சிப் பத்திரம் போதாதா ? அவங்க சுபாவம் நல்லா இருக்கு என்பதற்கு வேறு ருசு வேண்டுமா ?"

"சாமியாருக்கு எல்லாம் தெரிஞ்சுதுன்னு வருமா ?"

"அவ்வளவெல்லாம் தெரிஞ்சால் போதும். அவனுக்குப் பிடிச்ச பெண். அதனலே, இந்தக் கல்யாணம் நடக்கட்டும்."

மாத்யு கொச்சுக்குட்டியைக் கூர்ந்து கவனித்தான். சண்டை போடுவதற்கு ஆயத்தமாக வந்திருக்கான்போல் இருக்கே? இனி நயமாகப் பேசிப் பயனில்லே.. ...

குஞ்சுறைநை கேட்டார் :

"கொச்சுக்குட்டி ! நீ என்ன சொன்னே ?"

''இந்தக் கல்யாணம் நடக்கட்டுமுன்னு.......''

''நடக்காது.''

மாத்யு சொன்னான் :

''மச்சான்! இந்த இடம் இல்லேன்னா என்ன? வேறு எத்தனையோ இடம்! பெண் கிடைக்காமல் போகாது. அவனுக்கு அப்படியொண்ணும் வயதாகலே."

''அப்போ, நான் சொன்னதுக்குப் பதில் சொல்லு, மச்சான்.''

தீனம்மா சொன்னாள் :

''ராஜனுடைய அப்பாவும் பெரியப்பாக்களும்......''

''போடி, அந்தப் பக்கம்.''

''அவன் அந்தப் பெண்ணையே கட்டிக்கணுமுன்னு ஆசைப் படறான்.''

மாத்யு ஏளனமாகச் சிரித்தான்.

''மனிதன் நினைக்கிறதெல்லாம் நடக்குமா? அப்படி நடந்தால் உலகத்திலே குழப்பம் ஏது?''

''சரி. அவன் போகிற இடத்திலிருந்து ஒரு பெண்ணை அழைச்சிட்டு வந்தால் என்ன செய்வீங்க?''

''போகாத ஊருக்கு ஏன் வழி சொல்லணும்? அப்படி ஏதாவது நடந்தால் அப்போ பார்த்துக்கலாம். என் பிள்ளை என்னை மீறி எதுவும் செய்யமாட்டான். ஏன் என்றால் நான் என் அப்பா கிழிச்ச கோட்டைத் தாண்டினதில்லை. என்னைப்போல் என் பிள்ளையும் இருப்பான்.''

''அதையெல்லாம் இப்போ யார் கேட்டார்கள்? உன்னைப் பற்றி எல்லோருக்கும் தெரியுமே!''

''என்ன தெரியும்?''

''நான் ஏன் சொல்லணும்?''

''சொல்லு, நானும் தெரிஞ்சுக்கிறேன்.''

''அப்பா சொல்லித்தானா முப்பத்தி ஏழாவது வயசிலே, வயது வந்த பையனுக்கு அப்பன் ஆகியிருந்தும்கூட, நீ பதினெட்டு வயது நிரம்பாத ஒரு பெண்ணைக் காதலிச்சுக் கல்யாணம் செய்து கொண்டு வந்தே?''

''அப்போ, உன் தங்கை செத்துப் போயிட்டாள் என்பதற்காக நான் சன்னியாசியாய்ப் போயிருக்கணுமா?''

தீனும்மா கதவின் மறைவிலிருந்து வெளியே வந்தாள்.

"அதெல்லாம் அவங்க அவங்க இஷ்டம். இதைச் சொல்கிற வருடைய மகள், படிக்கப்போன இடத்திலிருந்து ஒருவனைக் கூட்டி வந்தது யாருக்கும் தெரியாதா?"

மாத்யு மனைவியின் கன்னத்தில் பளாரென்று ஓங்கி அறைந் தான்.

''திமிர் பிடிச்சவளே! போடி உள்ளே!''

''ஹும், இந்தத் திண்ணையிலே வந்து உட்கார்ந்து என்னைப் பற்றிச் சொல்லத்தகாத வார்த்தை சொன்னால் கேட்டுக்கிட்டுச் சும்மா இருக்கணுமா?''

''நான் அப்படிச் சொல்லத்தகாத வார்த்தை என்ன சொன்னேன்?''

''விசாரணையெல்லாம் எதுக்கு?''

''சரி, வேண்டாம்.''

குஞ்சுனைனு கைத்தடியை ஊன்றி எழுந்தார்.

''எனக்குக் கஞ்சி காய்ச்சித் தருகிற பெண்ணை ஏசுறதுக்குத்தான் நீ வந்தியா?''

கொச்சுக்குட்டி அங்கிருந்து எழுந்தான்; நடந்தவாறே சொன்னான்:

''மரியாதையாகப் போனால் எல்லாருக்கும் நல்லது. மரியாதை விட்டு நடக்கிறதாயிருந்தாலும் எனக்குப் பயமில்லை."

மறுபடியும் கலந்தாலோசித்தல், வாத விவாதங்கள், வீண் பேச்சுக்கள் எல்லாம் நடந்தன. வாழ்க்கையில் வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை என்று ராஜன் தெள்ளத் தெளிவாக எல்லோருக்கும் புரியும் வகையில் சொன்னான். மிரட்டல், உருட்டல் எதற்கும் அவன் மசியவில்லை. 'இதுவரையில் அவனுடைய எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றி வந்தேன், ஆனால் இந்த விஷயத்தில் மட்டும் சிறிதும் விட்டுக் கொடுக்க முடியாது' என்ற முடிவுக்கு வந்தான் மாத்யு.

ஒரு நாள் அதிகாலையில் வர்கீஸ் மாத்யுவைத் தட்டி எழுப் பினான். குஞ்சுனைனு விழித்துக்கொண்டு படுத்திருந்தார். கல்யாணப் பிரச்னை வந்ததிலிருந்து அவருக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. தாம் அடக்கியாண்ட நாட்டைப் பகைவர்கள் பங்கு போட்டுக்கொண்டு செல்கையில் கைகட்டி வாளா இருக்க

வேண்டிய நிலையை அடைந்த அரசனைப்போல் அவர் களைத்துப் போயிருந்தார். தாம் படுத்த படுக்கையாக இருப்பதனால்தானே இப்படியெல்லாம் நிகழ்ந்தது? தம்முடைய நல்ல நாட்களிலே இப்படி ஒரு சூது செய்ய யாருக்காவது துணிச்சல் இருந்திருக்குமா? இப்படியெல்லாம் எண்ணி எண்ணி அவர் மறுகினார்.

வர்கீஸ் சொன்னான் :

''அப்பா! நான் உங்கள் பிள்ளைகளில் பெரியவன். உங்களுக்கு உடம்பு தள்ளவில்லை. அதனால், உங்கள் பொறுப்புகளை நடத்த நான் கடமைப்பட்டவன். என்னுடைய தீர்மானம் எதுவானாலும் நீங்கள் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். மாத்யு, நீயும் மறுத்துப் பேசாதே.''

''என்ன அண்ணா ?''

''ராஜன் அந்தப் பெண்ணையே கட்டிக்கொள்ளட்டும். கனவிலே ஆண்டவர் எனக்கு இட்ட கட்டளை.''

குஞ்சுவைநனா சொன்னார் :

''அண்ணாவும் தங்கையும் ஆச்சேடா?''

''சும்மா இருங்க அப்பா! அப்படியே இருந்தாலும் கல்யாணம் செய்யக் கூடாத அளவுக்கு நெருங்கிய உறவு ஒன்றும் இல்லை !''

தீனம்மா சொன்னாள் ;

''ராஜன் மாமா இங்கே வந்து பேசிய பேச்செல்லாம் உங்களுக்குத் தெரியுமா?'',

''எல்லாம் தெரியும்? நம் பல்லையே குத்தி நாமே ஏன் மோந்து பார்க்கணும்? இதுவரையிலும் இந்த விஷயம் நம்மோடு தான் இருந்தது. இனி ஊரெல்லாம் தெரிஞ்சு சிரிக்கணுமா? இன்னொரு சங்கதிகூட ஞாபகம் இருக்கட்டும், அவன் பத்தோ அம்பதோ அனுப்புவதனால்தானே நீ கெட்டிக்காரனாக நடக்கிறாய் ? அவனைச் சண்டை போட்டு அனுப்பினால் நீ என்ன செய்வாய் ?''

மாத்யு முழங்கால்களுக்கிடையில் தலையை மறைத்துக் குனிந்தபடி உட்கார்ந்திருந்தான். அவன் முகத்தைத் தூக்கவே இல்லை. இப்போது அங்கே நடந்த பேச்சு எதுவும் தமக்குப் புரிய வில்லை என்பதுபோல் விழித்த கண்களும் பாதி திறந்த வாயுமாகப் படுத்துக்கொண் டிருந்தார், குஞ்சுவைநனா. தீனம்மா கதவில்

நகத்தால் கிறுக்கியபடி தொலைவில் எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அப்பா!''

''ஏ...?''

''நான் சொன்னது சரிதானே?''

''என்னாலே நம்ப முடியலையேடா.''

''ஏன்?''

''அண்ணா! நீங்க அப்பாவிடம் இப்படிக் கேட்கிறதுக்கு என்ன அர்த்தம்? உங்களுக்குச் சரின்னு பட்டால் நடத்துங்க!''

குஞ்சுநைனா ஒன்றும் பேசவில்லை. தீனம்மாவும் வாய் திறக்கவில்லை. மௌனமாக அவர்கள் இருவரும் அடிபணிந்தனர்.

# ஏழு

திருமணத்திற்கான ஆயத்தங்கள் நடந்துகொண்டிருந்தன. ஆனால் யார் முகத்திலும் மகிழ்ச்சியில்லை மொத்தத்திலுள்ள ஒரே மகிழ்ச்சிச் சுடராக லிஸிலி திகழ்ந்தாள். அவளுக்கு இரண்டு மூன்று கூட்டாளிகள் கிடைத்திருந்தார்கள்; ராஜுவின் மூன்றாவது மாமாவின் மகள் ஸூஸி, எள்ளுப்பறம்பு வீட்டு எலியாவின் மகள் ரோஸி, குஞ்சப்பியின் மகன் அஜயன். நால்வரும் தோட்டத்திலே யும், பந்தலிலேயும் வீட்டிற்குள்ளேயுமாக ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்தார்கள். திருமணத்திற்கான முன்னேற்பாடுகள் செய்வதற்காகக் குஞ்சப்பியின் தாயாரும், வர்கீஸின் மனைவியும், குஞ்சுச்செறுக்களின் மனைவியும் வந்திருந்தார்கள். இவர்களைத் தவிர நான்கு வீடுகளையும் சார்ந்த மற்ற பெண்களும் வந்து போய்க்கொண்டிருந்தார்கள். இன்று செவ்வாய், நாளை புதன், நாளை மறுநாள் கல்யாணம். புதன்கிழமையன்று விருந்தினருக்குக் காபி-பலகாரம் கொடுப்பதற்கு ஏற்பாடாகியிருந்தது. பெண் வீட்டைச் சார்ந்தவர்கள் ஐம்பது பேர்களாவது திருமணத்திற்கு வருவார்கள். அவர்களுக்கு விருந்து வைக்க வேண்டும். திருமணம் நிச்சயிப்பதற்கும், கடிதங்களைப் பரிவர்த்தனை செய்து கொள்வதற்குமாக, புத்தனுற்றங்கரைக்கு இரண்டு கார் பதினொரு

பேர்கள் சென்றிருந்தார்கள். திருச்சபைச் சாமியார், குடும்பத்தின் சார்பாக வர்கீஸ், பிலிப்பு, குஞ்சப்பி, திருச்சபையைச் சார்ந்த ஆறுபேர்கள். கார்த்திகைப்பள்ளிச் சாமியாரை அழைக்கவில்லை. அவரை அழைக்காததைக் குஞ்சுச்செறுக்கன் கடுமையாக எதிர்த்தான். ஆனால் யாரும் அதைப் பொருட்படுத்தவில்லை. திருமணம் நிச்சயிக்கச் சென்ற இடத்தில் தகராறு ஏற்படும்போல் இருந்தது. வர்கீஸ்தான் தொடங்கி வைத்தான்.

''நல்ல கௌரவமான குடும்பத்துப் பையன். அரசாங்கச் சம்பளம் வாங்குகிறவன். வேறு பெண் கிடைக்கவில்லை என்றெல்லாம் நினைக்க வேண்டாம்.''

''எங்கள் குடும்பமும் சோடையானதல்ல. வேண்டுமென்றால் விசாரித்துப் பாருங்கள்.''

''விசாரித்துப் பார்த்தோம்.''

''அப்புறம்?''

''அதெல்லாம் எதற்கு? எங்களுக்குப் பெண் பிடிச்சிருக்கு. அதுபோதும்.''

அப்போது குஞ்சப்பி இடைமறித்தான் :

''என் வீணாகப் பேச்சை வளர்த்தணும்? வந்த காரியத்தை முடிப்போம்.''

''அப்படி மறைமுகமாக ஒன்றும் தாக்க வேண்டாம். ஏதாவது மனஸ்தாபம் இருந்தால் சொல்லுங்கள். இந்தக் கல்யாணம் நடந்துதான் ஆகணும் என்கிற கட்டாயம் எங்களுக்கு இல்லை.''

''கல்யாணம் தடைப்படாமல் இருப்பதற்கான ஏற்பாடுகள் தான் முன்னதாகவே செய்துவிட்டீர்களே!''

''என்ன ஏற்பாடு?''

'கசமுச' வென்று பேசினார்கள். ஒருவரையொருவர் தாக்கினார்கள். பேச்சு முற்றியது. சாமியாரும் மற்றவர்களும் தலையிட்டு நிலைமை மோசமாகாமல் நிச்சய தாம்பூலம் மாற்றிக்கொள்ள வகை செய்தார்கள். காபி, டிபன், சாப்பாட்டுக்குப் பிறகு எல்லோரும்திரும்பினார்கள்...

கிழக்கு முற்றத்தில் பந்தல் போட்டிருந்தது. பிலிப்ஸின் வீட்டிலிருந்து கொண்டுவந்த ஸோபா செட்டும், நாற்காலிகளும் பந்தலில் போடப்பட்டிருந்தன. குஞ்சுநைநு ஒரு சாய்வு நாற்

காலியில் ஹாய்யாகப் படுத்துக்கொண் டிருந்தார். தென் பக்கம் போட்டிருந்த பந்தலில் பெண்கள் விருந்திற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண் டிருந்தார்கள். சாவிக் கொத்து தீனும்மாவின் கையில்தான். அவள் எல்லாவற்றையும் மேற்பார்வை செய்து கொண்டிருந்தாள்.

''ஸிஸிலீ! கூச்சல் போடாதேன்னு சொல்லலேயா? போங்க, எல்லாரும் பலா மரத்துக்கடியில் போய் விளையாடுங்க; உம்!''

''பெருஞ்சீரகம் எங்கே தீனும்மா?''

''இதோ கொண்டு வர்றேன், அக்கர! ஆஹா, இது யாரு வந்திருக்காங்க! அம்பாடி சித்தியா! வந்த காலிலேயே நிற்கிறீங் களே. உட்காருங்க, சித்தி!''

''முல்லைத்தரை வீட்டிலிருந்து பெரிய உருளி கொண்டு வந்தாச்சா?''

''கொண்டு வர, ஆள் போயிருக்கு.''

மாத்யு ஏதோ முகம் காட்ட வேண்டும் என்பதற்காக அங்கே இருந்தானே தவிர, அவனுக்குச் சிறிதுகூட உற்சாகமில்லை அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவன் தன் மகனுடைய முகத்தை நேருக்கு நேர் பார்க்கவில்லை. பெரிய அண்ணே சொன்னெரன்று சம்மதித்தாலும், அதொரு சரணாகதியென்றே அவனுக்குப் பின்னர் தோன்றியது. பிள்ளை ஏதோ பணம் அனுப்புகிறான் என்பதற்காக இப்படிக் கதி கெட்டுப் போயிருக்க வேண்டாம்; அவனுடைய தாய் இறந்த பின் மறுமணம் புரிந்து கொண்டாலும் அவனிடம் பாசத் திற்குக் குறைவு வைக்கவில்லை. மிகவும் சிரமப்பட்டு, கடன் வாங்கி அவனைப் படிக்க வைத்தான். அப்படியிருந்தும், சமயம் வந்த போது எதிர்த்தல்லவா பேசினான் என்று நினைத்தவுடன் மாத்யுவின் உள்ளமே பொங்கியது. அந்த ஆற்றாமையும் தனக்கு வேறு யாருமில்லையே என்ற எண்ணமுமாகச் சேர்ந்து மனைவியின்பால் கோபமாக மாறிற்று.........

''மாமா!''

''ஏ...?''

''கஞ்சியோ காபியோ வேணுமுன்னாச் சொல்லுங்க!''

''இப்போ வேண்டாம். பையன் எங்கே?''

''ராஜனு? அவன் மாமா வீட்டுக்குப் போயிருக்கிருன். இன்னும் வரலே.''

''கல்யாணத்துக்கு அங்கே போய் அழைச்சிட்டு வரணுமா?''

தீனம்மா பதிலேதும் கூறவில்லை. அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவன் அனேகமாக மாமா வீட்டில்தான் இருக்கிருன். நேற்று வரை வெந்நீர் வேண்டுமா, தண்ணீர் வேண்டுமா, டீ வேண்டுமா, காபி வேண்டுமா என்றெல்லாம் விசாரித்த சித்தி, இன்று அவனுக்கு யாருமல்ல ! நினைத்துப் பார்த்தால் அவனுக்கு அவள் யார்? அவனுக்குப் பதினுறு வயதாகி யிருக்கும்போது அவனுடைய அப்பா எங்கிருந்தோ அழைத்துக்கொண்டு வந்த ஒருத்திதானே? பிறகு எல்லாம் நெருங்கிய பழக்கத்தினுல் உண்டான பந்தபாசம் தானே !

எல்லாக் குழப்பத்திற்கும் காரணம் இந்தத் திருமணப் பேச்சு தான். கடவுள் விருப்பமும் அதுதான் என்றெண்ணி ஆறுதல் கொள்ளத்தான் வேண்டும். அவனுக்கென்று நிச்சயிக்கப்பட்டவள் அவள். கடவுள் விருப்பத்திற்கு எதிராகப் போக நாம் யார்? யோபுவின் புத்தகத்தில் சொல்லியிருப்பதுபோல் 'என் கால்களைத் தொழுவடித்துப் போட்டு, என் வழிகளையெல்லாம் காவல் பண்ணு கிறீர்; என் காலடிகளில் அடையாளத்தைப் போடுகிறீர். ஸ்திரீயி னிடத்தில் பிறந்த மனுஷன் வாழ்நாள் குறுகினவனும் சஞ்சலம் நிறைந்தவனுமாக இருக்கிருன் ..'

'கியாஸ்லைட்' விளக்கு வந்தது. 'வாலில் வீட்டு' அவருன்தான் கொண்டு வந்தான். கூடவே, எள்ளுப்பறம்பு வர்கீஸ் மகன் அச்சன்குஞ்சும், குஞ்சுச்செறுக்கன் மகன் ஸண்ணியும். பிலிப்பின் மகன் ஸாம்குட்டியும் வந்தார்கள்,

ஸண்ணி கேட்டான் :

''ராஜண்ணு எங்கே; தாத்தா?''

''அவன் இங்கே இல்லையே.''

''எங்கே போயிருக்கார்?''

''ஆ...உன் அப்பா எங்கே இருக்கிருன்?''

''காளை அறுக்கும் இடத்தில் இருக்கிருர்.''

''ஏ...?''

''கடா அறுக்கும் இடத்தில் இருக்கார்.''

''உம் பதினைந்தோ பதினாறோ கோழி இருக்கு. பெண் வீட்டாருக்குக் கோழி, கடா இரண்டுமே பிடிக்காதாம்.''

''உம்.''

''என் கல்யாணத்துக்கு இருபது கோழிகளையும், முப்பது வாத்துகளையும் அறுத்தாங்க. கன்றை அறுக்கலே. அந்த நாளிலே கோழி என்ன விலை தெரியுமா? நாலு சக்கரம்.''

''அவ்வளவுதானா?''

''ஆமாம். கன்றை அறுக்க வேண்டாமுன்னு நான்தான் சொன்னேன். அப்போ நம் வம்சத்தில் மூத்தவர் யார் தெரியுமா? சூரியன் மாமா. இறந்து போய் விட்டார். எடுத்ததற்கெல்லாம் 'லா' பேசுவார். எங்கே கல்யாணமாயிருந்தாலும் தவறாமல் போவார். என் கல்யாணத்துக்கும் வந்திருந்தார். வந்ததும், அரிசி இவ்வளவு போடு, கறி இவ்வளவு வேணும் என்றெல்லாம் என்னிடம் கணக்குச் சொல்ல ஆரம்பித்தார். 'உங்களுக்கு எதுக்கு மாமா இதெல்லாம்? அதுக்கு வேறு ஆட்கள் இருக்காங்களே!' என்று நான் சொன்னேன். மாமாவுக்குக் கோபம் வந்தது. 'அப்போ, சாப்பிட மட்டுமாடா என்னை வரச் சொல்றே? அதுக்கு வேறு ஆளைப் பார்' என்று சொன்னார், அன்னைக்குப் போனவர், அப்புறம் வரவே இல்லை; என் கல்யாணத்துக்கு மட்டும் அல்ல, எந்தக் கல்யாணத்துக்கும் வரவில்லை.''

நான்கு கிழவர்கள் பந்தலுக்குள் வந்தார்கள், ஸ்ணியும் மற்றவர்களும் தாத்தாவிடமிருந்து நழுவினார்கள்.

''என்ன ஐயா! முற்றத்திலே இறக்கியாச்சா?''

குஞ்சுநைனா கூர்ந்து கவனித்தார். அவருக்கு யாரென்று தெரிந்தது. நேர்மையாளன் கொச்சுப்பாப்பி. கூட வேறு யாரெல்லாம் வந்திருக்கிறார்கள்? ஆ... ஆந்திராளம் குஞ்சப்பன், பெண்ணுக்கரை மச்சான், கோளாம்பி மத்தாயி...

''இனி விதிக்கு வரவேண்டியதுதான்.''

''அப்புறம் யாத்திரை...''

''நேரமாச்சா?''

''ஓஹோ, அந்தி வேளை. இனி அதிகமானால் அரை நாழிகை நேரம்.''

"உட்காருங்க...டேய் பயல்களா?"

"என்ன தாத்தா!"

"வெற்றிலைப் பெட்டி வந்தது. கோளாம்பி மத்தாயி வெற்றிலைப் பெட்டியைப் பக்கத்தில் வைத்து வெற்றிலை போடுவதற்குத் தயாரானுன். மத்தாயிக்கு உணவைவிட முக்கியம் வெற்றிலை போடுவதாம். வெற்றிலை போட்டபடியேதான் இரவில் தூங்குவானும். வெகு நாட்களுக்கு முன்னுல் எருமை வியாபாரம் செய்து வந்தான். நல்ல லாபமும் கிடைத்திருந்தது. வயதாயிற்று. எனவே, எருமை வியாபாரத்தை விட்டுவிட்டான். பிட்டு வியாபாரம் செய்யும் இரண்டாம் தாரத்திற்குக் கட்டுப்பட்டு வாழ்கிறுன்.

கொச்சுப்பாப்பி கேட்டான் :

"கல்யாண ஏற்பாடுகளெல்லாம் எவ்வளவு தூரத்தில் இருக்கு?"

"என்ன?"

"கல்யாண ஏற்பாடுகளெல்லாம் எவ்வளவு தூரத்தில் இருக்கு? உனக்குக் காது சரியாக் கேட்காதா?"—குஞ்சப்பன்.

குப்பென்று கள்ளின் நாற்றம் அடித்தது. நால்வருக்குள் குஞ்சப்பன்தான் பெரியவன். எண்பத்து ஐந்து வயதிருக்கும். நல்ல ஆரோக்கியமான உடல். வேடிக்கையாகப் பேசுவான். மாலையில் கொஞ்சம் 'தண்ணி' போடுவான். பிறகு, கள்ளுக்கடையிலிருந்து வீடு வரும் வரை மத சம்பந்தமான நாட்டுப்பாடல் பாடிக்கொண்டே போவான் :

ஆதாமை ஏமாற்ற, சைத்தான்-
செய்தானய்யா ஒரு தந்திரம்தான்.
ஏவாளின் உள்ளத்தில் புகுந்தான்—அந்த
ஆதாமதை ஏமாற்றி வஞ்சித்தானே!

பெண்ணுக்கரை மச்சான் சொன்னுன் :

"நாங்க முச்சந்தியிலே நின்னுகிட்டு இருந்தோம். அப்போ நம்ம குஞ்சப்பன் பாட்டுப் பாடிக்கிட்டே வந்துகொண்டிருந்தான். எல்லாருமாக, 'குஞ்சுநைனுவைப் போய்ப் பார்த்து வரலாம்'னு தீர்மானம் பண்ணினேம்."

மெதுவாகத்தான் மச்சான் பேசுவான். எதிலேயும் சமாதான மாகப் போவான். அவர்களுக்குள்ளே எப்போதாவது சண்டை சச்சரவு வந்தால் மச்சான்தான் மத்யஸ்தம் செய்து வைப்பது வழக்கம். எல்லாருக்கும் மச்சான்தானே !

மச்சான் சொன்னன் :

''என்னுடைய அண்ணன் மகளைப் புத்தனுற்றங்கரையில்தான் கட்டிக் கொடுத்திருக்கு. உங்கள் வீட்டுக்கு வரப்போகிற மருமகளை யும், அவள் அம்மாவையும், மற்றவர்களையும் அவளுக்குத் தெரியு மாம்.''

''தெரியுமா?''

''நல்லாத் தெரியும். மாதா கோவிலுக்குப் பக்கத்தில்தான் அவர்கள் வீடும் இருக்கு.''

''இடம் எப்படி ?''

''கடவுள் பக்தி இருக்கிறவங்கன்னுதான் அவள் சொன்னள்.''

''அப்படியானல், பெண்ணுக்கு அடக்கம், மட்டு மரியாதை எல்லாம் இருக்கும்.''

''நமக்கு அது போதும்.''

வதந்தி உண்மைதான என்று தெரிந்துகொள்ளக் குஞ்சுநைன விற்கு உள்ளூற விருப்பம்தான். ஆனல் இப்போது ஏதாவது கேட்டு வைப்பது, ஆபத்தாக முடியும். சந்தேகம் ஏற்படக் கூடாதே. எவ்வளவுதான் நெருங்கிய நண்பராக இருந்தாலும் இந்த மாதிரி விஷயங்களில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் புயலிடம் சிக்கிய நெருப்பாக முடியும்......

''குஞ்சுநைன ! சேதி தெரியுமா ?''

''ஏ ?''

''முல்லத்தறைச் சின்ன எசமான் காலமாயிட்டார்.''

''சின்ன எசமான்... ?''

''காலமாயிட்டார்.''

மெதுவாகத்தான் மச்சான் பேசுவான் எதிலேயும்.

''எப்போ ?''

''இன்னிக்குக் காலையிலேதான் தந்தி வந்தது. வேலூர் ஆஸ்பத்திரியில்தான் இறந்தார்.''

“நோய்வாய்ப்பட்டு ரொம்ப நாளாச்சே ?”

‘‘கன்னத்திலே வீக்கம்.’’

‘‘கண்டமாலே.’’

“இரண்டும் ஒரே வியாதிதான். அந்த வியாதி வந்தால் அப்புறம் பிழைக்கறதே கஷ்டம்.’’

‘‘நல்லவர். வயது நாற்பதோ நாற்பத்து ஐந்தோதான் இருக்கும். பெரியவர் காலமானதிலிருந்து அவர்தான் காரியங்களைக் கவனிச்சு வந்தார்.’’

‘‘நல்லவன் கெட்டவன் என்பதையெல்லாம் வியாதி எங்கே பார்க்குது ? இன்னும் சொல்லப் போனல் நல்லவங்களுக்குத்தான் முதலிலே வருது ’’

‘‘மாத்யு எங்கே காணோம் ?’’

‘‘இங்கே இருந்தானே; அந்தப் பக்கம் எங்கேயாவது இருப்பான்.’’

இப்படி அவர்கள் பேசிக்கொண் டிருக்கும்போது இரண்டு பெண்கள் தோட்டவாயிலேக் கடந்து உள்ளே வத்துகொண்டிருந் தார்கள். கிழவர்கள் எழுந்தனர். குஞ்சப்பன் கூறினன் :

‘‘நாங்க போய் வர்ரேம். சும்மாவாவது எதற்குக் கூட்டம் போடணும்?’’

தீனும்மா பந்தலுக்குள் வந்து சொன்னள் :

‘‘ மாமா ! கொஞ்சம் காபி குடித்துவிட்டுப் போகலாம்.’’

‘‘ வேண்டாம்மா ! இதென்ன காபி குடிக்கிற நேரமா ?’’

கோளாம்பி மச்சான் சொன்னன் :

‘‘நாங்கள் போய் வர்ரேம்.’’

‘‘குஞ்சுநைனு! வர்ரேம்.’’

பெண்கள் இருவரும் நேராகக் குஞ்சுநைனு இருக்குமிடத்தை நோக்கி வந்தனர் :

‘‘மாமாவுக்கு என்னேத் தெரியலியா?’’

இல்லே என்று பொருள்படக் குஞ்சுநைனு தலையை அசைத்தார்.

‘‘ ராஜனுடைய சின்னம்மா.’’

‘‘ பத்தளம் திட்டிற்குக் கட்டிக் கொடுத்தவளா?’’

"ஆமாம். இவள் என் மூத்த நாத்தனார்."

"யாரு ? கொச்சுக் குட்டியின் வீட்டுக்காரியா ?"

"ஆமாம்."

"சரி, அந்தப் பக்கம் போங்க, எல்லாரும் அங்கே இருக் காங்க."

"மாமா...சௌக்கியம்தானே?"

"ஏதோ இருக்கேன்."

பெண்கள் இருவரும் அந்தப் பக்கம் போனார்கள். 'சௌக்கியம் தானே?' ஏதாவது கேட்க வேண்டுமே என்பதற்காகக் கேட்ட கேள்வி...

"அப்பா!"

"யாரு?"

"நான்தான் குஞ்சுச்செறுக்கன்."

"என்னடா?"

"காபியோ கஞ்சியோ குடிச்சீங்களா?"

"காப்பி குடிச்சேன்."

"கல்யாணத்துக்கு வேண்டியவர்கள் எல்லோரையும் அழைச் சிருக்காங்களா?"

"அழைச்சிருப்பாங்க."

"கார்த்திகைப்பள்ளிச் சாமியாருக்குத் தெரிவிச்சாங்களா?"

"இல்லே."

"ஏன்?"

"ஏனோ?"

"இதுதான் எனக்குப் பிடிக்காது. அண்ணாவிடம் கேட்டால் அவருக்குத் தெரியாது. மாத்யுவிடம் கேட்டால் அவனுக்கும் தெரியாது. அப்போ யாருக்குத்தான் தெரியும்? இந்தப் பொறுப்பு எல்லாம் யாரைச் சேர்ந்தது? சாமியார் நம் குடும்பத்தைச் சார்ந்த ஒரு மதகுரு. அவரைக் கல்யாணத்துக்கு அழைக்காமல் இருக்கிற துக்கு என்ன நியாயம் இருக்கு? எல்லாருடைய பெண்கள் கல்யாணத்திற்கும் வந்து, பத்தோ ஐம்பதோ தந்திருக்கிறார். என் இரண்டு பெண்கள் கல்யாணத்திற்கும் சாமியார் வந்திருந்தார்...."

"அதுக்கென்ன. உங்கள் பையன்கள் கல்யாணத்துக்கு அழையுங்களேன்?"

குஞ்சுச்செறுக்கன் திரும்பி, பிலிப்பு நின்றுகொண்டி ருப்பதைக் கண்டான். இவனிடம் பேசும்போது ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

''அப்படியானால் எல்லாரும் வேறுவேரு?''

'' அல்லாமல், நாமென்ன ஒண்ணு?''

'' அப்பா ! பிலிப்பு சொல்றது சரிதானு?''

''எழுந்திருக்க முடியாமல் இருக்கும் அப்பாவை ஏன் இதுக் கெல்லாம் கூப்பிடணும்?''

'' அப்பாவுக்கு எழுந்திருக்க முடியலே, அவ்வளவு தான். இன்னும் உயிரோடுதான் இருக்கார். அப்பா உயிரோடு இருக்கிற வரைக்கும் நாமெல்லாம் வேறு வேறு என்கிற எண்ணம் எனக்கும் வராது. அண்ணுவுக்கும் வராது ..''

''ஏன் அந்தப் பழைய கதையெல்லாம் சொல்றீங்க? கேட்டுக் கேட்டுச் சலிச்சுப் போச்சு. எல்லாம் தெரிஞ்சிருந்துதானே இந்தப் பேச்சுப் பேசுறீங்க:''

குஞ்சுநைநு சொன்னுர் :

''போங்கடா போங்க. போதும். போய் வேலையைப் பாருங்க.''

''நான் போறேன். ஆனுல் சாமியாரைக் கூப்பிடாவிட்டால் கல்யாணம் முடிகிறவரையில் நான் இந்த வீட்டுக்கு வரமாட்டேன். இங்கே தண்ணீர்கூடக் குடிக்க மாட்டேன்.

அப்போது மாத்யு அங்கே வந்தான் :

''வருவதும் வராததும் அவர்கள் விருப்பம். சேவல் கூவாட்டாப் பொழுது விடியாதா?''

பேச்சு முற்றும்போல் இருந்தது. அப்போது திருச்சபைச் சாமியாரும், 'கிழக்கு வீட்டு' உண்ணூண்ணியும் அங்கே வந்தார்கள்.

மாத்யு சொன்னுன் :

''காலையில் தேடினேன். சாமி அங்கே இருக்கவில்லை.''

''காயங்குளம்வரை போயிருந்தேன். கல்யாண ஏற்பாடுகள் எல்லாம் எதுவரைஆச்சு?''

''கொஞ்சம் பேருக்கு விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யணும்.''

உண்ணூண்ணி கேட்டான் :

''வ்...வ்...வே. வேறு ஒண்ணும் வேண்டாமா ?''

''வேறு — பையன் பெண் கழுத்திலே தாலி கட்டணும்.''

''அ...அ...அப்படிச் சொ...சொ...சொல்லு.''

எல்லாரும் சிரித்தார்கள். சாமியாரும் சிரிப்பில் கலந்து கொண்டார்.

''குஞ்சுநைனு ஏன் பேசாமல் படுத்துக்கொண்டிருக்கிறார்?''

''என்ன சாமி?''

''இங்கே பேசிக்கொண்டிருந்ததெல்லாம் கேட்கலியா ?''

''காது நல்லாக் கேட்காது.''

''கல்யாணத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். நான் நாளை வர்றேன். வேலைகளெல்லாம் எப்படி மும்முரமாக நடக்கிறது என்பதை விசாரிச்சுப் போகலாமுன்னு வந்தேன்.''

சாமியாரும் உண்ணூண்ணியும் போனார்கள். கறி நறுக்குவதற்கு நாலைந்து பேர்கள் பந்தலுக்கு வந்தார்கள். வேறு சிலர் கூடையில் தேங்காய்களுடன் வந்து தேங்காய் துருவலானார்கள். அவர்களுடைய வேடிக்கைப் பேச்சும், சிரிப்புமாகப் பந்தலில் கலகலப்புக் கூடியது. எதையாவது பேசி அவர்கள் சிரிக்கும்போது 'என்ன என்ன' என்று குஞ்சுநைனு கேட்பார். 'ஒன்றுமில்லை மாமா', என்று அவர்கள் பதில் கூறுவார்கள். பிறகு தாழ்ந்த குரலில் 'பெரியவர் கொஞ்சம் சும்மாப் படுக்கக் கூடாதா?' என்றும் கூறுவார்கள்.

ஒன்பது மணி இருக்கும். பிலிப்பின் மனைவி அன்னம்மா வந்து குஞ்சுநைனுவைக் கூப்பிட்டாள் :

''மாமா !''

''என்ன ?''

''சாப்பிட வாங்க, மேற்குத் திண்ணையிலே கட்டில் போட்டிருக்கு. சாப்பிட்ட பிறகு அங்கே படுத்துக்குங்க.''

:''நான் இங்கேயே படுத்துக்கிறேன் பொண்ணு.''

''இந்த வெளிச்சத்தில் படுத்தா எப்படித் தூக்கம் வரும் ? வாங்க.''

குஞ்சுநைனு எழுந்தார். அன்னம்மா அவர் கையைப் பிடித்து, அவரை மேற்கு வராந்தாவிற்கு அழைத்துப் போனாள். கட்டிலில் உட்கார வைத்தாள். பிறகு உணவைத் தட்டில் பரிமாறி எடுத்து வந்தாள்.

''நீ எப்போ வந்தே?''

''ரொம்ப நேரமாச்சு.''

''உன் பெண்கள் யாரும் வரலையா?''

''ரோஸம்மா வந்திருக்கிருள்.''

''மூத்தவளுக்கு மூன்று குழந்தைகள் தானே?''

''ஆமாம், அவளும் மாப்பிள்ளையும் இந்த மாசத்திலே வரப் போறதாகக் கடிதம் வந்தது. இன்னும் வரலே.''

''உனக்கும் உன் வீட்டுக்காரனுக்கும் சண்டை தீர்ந்ததா?''

''... ... ... ''

''ஏன் பேசாமல் இருக்கே?''

''அது இந்தப் பிறவியிலே கிடையாது.''

''ஏழு எழுபது தரம் மன்னிக்க வேண்டும் என்று கர்த்தர் சொல்லியிருக்கார்.''

''எழுநூறுதரம் மன்னித்தாயிற்று. இனி மன்னிக்க முடியாது. நான் மன்னித்தாலும் மன்னிக்காவிட்டாலும் அவருக்கு அதனுலே ஒண்ணும் ஆகப்போறதில்லே. கடவுள் மன்னிப்பதைப்பற்றிய பயமும் அவருக்கு இப்போ இருக்கிறதாகத் தெரியவில்லே.''

''அந்தப் பெண் போய்விட்டாளா?''

''போய் விட்டாள்; ஆனுல்...இப்போ அவள் இருக்கிற இடத்தைத் தேடிப் போகிறதாகக் கேள்விப்பட்டேன்.''

''வாலிபப் பையன்கள். இரண்டுமூணு குழந்தைகளைப் பெற்ற பெண்கள் வேறு. இவ்வளவு ஆனபிறகும் அவனுக்கு வாலிபன்னு நினைப்புபோல் இருக்கு.''

அப்படிச் சொன்ன பிறகு ஏண்டா முட்டாள்தனமாக உளறி வைத்தோம் என்று வருந்தினுர் குஞ்சுநைனு. தெரியாத்தனமாக முள்ளை மிதித்துவிட்டோமே......

''இப்படிச் சொன்னவரும் வஞ்சனை செய்திருக்கிருரே...''

''போடி.''

''நான் போறேன் மாமா! மற்றவர்களெல்லாம் அங்கே வேலை செய்துகொண்டு இருக்கும்போது நான் மட்டும் இங்கே இருக்கிறது சரியா ?''

'' சரி...போ,''

" படுத்துக்குங்க. தூங்காவிட்டால் அப்புறம் களைப்பாக இருக்கும்."

"உம்."

குஞ்சுநைனு படுத்தார். பந்தலிலிருந்து மங்கலான வெளிச்சம் வந்து படிந்திருந்தது. தரையில் விரித்திருந்த பாயில் நாலைந்து குழந்தைகள் தூங்கிக்கொண் டிருந்தார்கள். பல இடங்களிலிருந்து வாங்கிவந்த பெரிய உருளிகளும், செப்புப் பாத்திரங்களும் கட்டி லுக்கடியில் வைக்கப்பட்டிருந்தன.

குஞ்சுநைனுவிற்குத் தூக்கம் வரவில்லை. பகலில் தூங்கினல் இரவில் தூக்கம் வராது. சற்று நேரம் கண்ணயர்ந்தால் அதுவே பெரிய காரியம்.........

ஆவணித் திங்கள். ஆறுகளும் வாய்க்கால்களும் நிரம்பி வழிந்துகொண் டிருந்தன. குட்டியானைகள் போன்ற இரண்டு காளைகளை ஓட்டிக்கொண்டு பம்பையாற்றைக் கடக்க வேண்டும். ஒன்று மயிலை. மற்றொன்று புள்ளி. ஒவ்வொன்றிற்கும் இரண் டிரண்டு கயிறு. துறையை அடைந்தபோது வண்டிகள், மிருகங்கள் போன்றவைகளை ஆற்றைக் கடத்திவிடப் பயன்படும் மிதவை—'சங்காட்டம்' மறுகரையில் இருந்தது. அது திரும்பும் வரையில் காத்திருக்கப் பொறுமை இல்லை. எனவே காளைகளின் கயிற்றைப் பிடித்தபடி படகில் ஏறிக்கொண்டேன். படகு நிறைய ஆட்கள். நட்டாற்றை அடைந்தபோது படகை இழுத்துக் கொண்டு காளைகள் கீழ்நோக்கி நீந்தலாயின. மூக்கணாங்கயிற்றை இழுத் தேன், பயனில்லை. இதற்குள் படகும் கீழ்நோக்கிப் போக லாயிற்று. பயணிகள் 'குய்யோ முறையோ' என்று கூக்குரலிட்டனர். "யோவ்! காளையை விடய்யா!" என்றெல்லாம் சொல்ல ஆரம்பித் தார்கள். அப்படி விட்டுவிட முடியுமா? ஆற்றில் குதித்து நீந்தி னேன். ஆறு சுழித்துக் கொண்டு ஓடியது. குளிர் வேறு. எப்படியோ ஒருவிதமாகக் கரையை அடைந்தேன். அதுவும் எங்கே? மூன்றோ நான்கோ மைல்கள் தள்ளி ஓரிடத்தில். அதைப் பற்றி நினைக்கையில் இப்போதும் மெய்சிலிர்க்கிறது. வேட்டியைப் பிழிந்து உடுத்தினேன். முன்பின் பழக்கமில்லாத இடம். யாரோ ஒருவன் காட்டிய சந்து வழியாக நடந்தேன். சிவந்த மண். இரு

மருங்கிலும் முந்திரித் தோப்புகள். சின்னஞ்சிறு குன்றுகள். குறுங்காடுகள்...

அவ்வழியே நடந்தேன். நெடுஞ்சாலையை அடைய ஆறோ ஏழோ மைல்கள் நடக்கவேண்டுமென்று தெரியவந்தது. "அலைச்சலாய்ப்போச்சே!'' இரண்டு நாழிகைப் பகல்தான் இருந்தது. என்ன செய்யலாம்? அந்தி நெருங்கியபோது ஒரு வீட்டின் தோட்ட வாயிலை அடைந்தேன். ஓடு வேய்ந்த நல்ல வீடு. தொழுவமும் இருந்தது. முற்றத்தில் ஒரு பெரிய பலாமரம். கூப்பிட்டேன் :

''ஐயா! ஐயா!''

பதிலில்லை.

வருவது வரட்டும் என்று எண்ணி மாடுகளைப் பலாமரத்தில் கட்டினேன். அப்போது ஒருத்தி தோட்டவாயிலைக் கடந்து வந்தாள். அப்பொழுதுதான் குளித்திருந்தாள். கையில் துவைத்த துணிகள். ஈரத்துணியைப் போர்த்தியிருந்தாள் முப்பத்து ஐந்து வயதிருக்கலாம். இல்லாவிட்டால் முப்பத்து எட்டிருக்கும். எப்படி இருந்தாலும் நாற்பதுக்குக் குறைவுதான். சிவந்த முகம். அடர்ந்த கருங்கூந்தல் கணுக்கால் வரையிலும் நீண்டிருந்தது. சிறிது நேரம் அவள் முகத்தை வைத்தகண் வாங்காமல் பார்த்துக்கொண்டே இருந்தேன். அவளும் அப்படியே என்னை நோக்கினாள்....

''யாரு? என்ன வேணும்?''

விஷயத்தைச் சொன்னேன் :

''இராப்பொழுதைக் கழிக்கணும். காளைகளைக் கட்டணும்.''

''உள்ளே வாங்க!''

''வீட்டுக்காரர் இல்லையா?''

அவள் பதில் கூறவில்லை; உள்ளே சென்றாள். துவைத்த துணிகளை உலரப் போட்டபின் வேறு துணிகளை உடுத்தி வந்து சொன்னாள் :

''காளைகளைத் தொழுவத்திலே கட்டிட்டு வாங்க. அங்கேயே வைக்கோலும் இருக்கு.''

காளைகளைத் தொழுவத்தில் கட்டித் தீனி போட்டு விட்டுத் திரும்பி வந்த போது ஒரு டம்ளர் சூடான காபி மேஜைமீது தயாராகக் காத்திருந்தது. திண்ணையில் வேறு ஒருத்தியும் உட்கார்ந்திருந்தாள். அவள் கேட்டாள் :

''பெண்ணம்மா! இவர்தான் உன் பெரிய அண்ணாவா?''

"ஆமாம் அத்தை! அண்ணு ரொம்ப நாளாக வெளியூருக்குப் போயிருந்தார்."

"சந்தையிலிருந்து திரும்பும்போதாவது உங்களுக்குத் தங்கை ஞாபகம் வந்ததே. எத்தனை குழந்தைகள் ?"

"ஆறு."

"எத்தனை பையன்கள்? எத்தனை பெண்கள்?"

"ஐந்து பையன்கள். ஒரு பெண்."

"உங்கள் தம்பியை எனக்குத் தெரியும். இங்கே வந்திருக்கையில் பார்த்திருக்கிறேன்."

"உம்."

"அவருக்கு இப்போதும் துணிக்கடை தானே?"

வியர்த்துக் கொட்டியது. இதென்ன மாயமடா !

"சின்ன அண்ணு எந்தத் தொழிலும் நிலையாய்ச் செய்யமாட்டார். அவருக்கு மலையிலே கொஞ்சம் நிலம் கிடைச்சிருக்கு. இப்போ அதில் விவசாயம் செய்கிருர்."

அப்பாடா, பிழைத்தேன் !

"பெண்ணம்மா ! நான் போய் வர்றேன்."

"சரி அத்தை! இருட்டறதுக்கு முன்ஞலேயே போங்க. அது தான் நல்லது."

அத்தை போனுள்.

"குளிக்க வேண்டாமா?"

"ஏ...?"

அவள் நிலாக்கீற்றைப் போன்று புன்முறுவல் செய்தாள்.

அன்று எனக்கு வயது நாற்பத்து ஐந்து. ஆனுல் பார்ப்பவர்கள் அவ்வளவு மதிப்பிட மாட்டார்கள். மூத்தமகனுக்குத் திருமணமாகி இருந்தது. குழந்தைகள் இருந்ததா? ஞாபகம் இல்லை. அவன் தனிக்குடித்தனம் பண்ணிக்கொண்டிருந்தான்.......

"ஏன் பொய் சொன்னீங்க?"

அவள் நகைத்தாள்.

"நான் பொய்யா சொன்னேன்? அண்ணன்னுதானே சொன்னேன். அது பாவமா ?"

"இல்லை" என்றவன் மனத்துள் சொல்லிக் கொண்டேன் : ஆனுல் உன் நிலை ஆதாம் ஏவாளின் கதையில் வரும் முதற் பாவம் உருவெடுத்தாற்போல் அல்லவா இருக்கிறது ?

"வென்னீர் போட்டிருக்கேன். குளிச்சுட்டு வாங்க."

குளித்துவிட்டு வந்தபிறகு இருவரும் பேசிக்கொண் டிருந்தோம். அவள் கணவன் மலைத்தோட்டத்தில் மேஸ்திரியாம். மாதத்தில் ஒருமுறைதான் வருவானும். குழந்தைகள் இல்லை.

அவள் உணவு பரிமாறினுள், பல்சுவை உண்டி, எதிர்பார்த்துச் சமைத்ததுபோல், எல்லாவற்றையும் வற்புறுத்தி ஊட்டினுள். நடப் பவை அனைத்தும் பகற்கனவுபோல் இருந்தன, பிரிந்தவர் கூடினுற் போன்றதோர் அனுபவம். வெகு நேரம் வரையில் பேசிக்கொண் டிருந்தோம். நினைத்ததைச் சொல்ல முடியவில்லை. பேசுவ தொன்று, எண்ணங்கள் வேறு. மொத்தத்தில் ஒரு நிம்மதியின்மை; ஏதோ ஓர் ஆபத்து எதிர்நோக்கியுள்ளது போன்ற ஐயம்.....

பத்தோ பன்னிரண்டோ நாழிகை இரவானபோது ஓர் அறை யில் மெத்தை விரித்துத் தந்தாள்.

''படுத்துக்குங்க.''

''திண்ணையில் ஒரு பாய் போட்டுத் தந்தால் போதும்.''

''ஊஹூம். இந்தக் குளிரில் திண்ணையில் படுக்கக் கூடாது.''

குளிராம் குளிர்! உள்ளே தகதகவென்றல்லவா அனல் அடித்துக்கொண் டிருந்தது! வியர்வை; மூச்சுத் திணறல். இத்தனை நாள் பயணத்திலேயும் இப்படி ஓர் அனுபவம் ஏற்பட்டதில்லை...

இருவர் படுப்பதற்கான, வேலைப்பாடுகள் நிறைந்த கட்டில் கனமான பஞ்சணை, அழகான விரிப்பு.

சாலொமோன் பாடியதுபோல், அரசகுமாரி! உன் பாதங்கள் எவ்வளவு அழகானவை! உன் இடையின் வடிவு பொற்கொல்லன் செய்த நகைபோல் இருக்கிறது. உன் உதரம் தாமரைப் பூக்கள் சூழ்ந்த கோதுமை அம்பாரம் போலிருக்கிறது. உன் கொங்கை யிரண்டும் இரட்டை மான்குட்டிகளுக்குச் சமம்; உன் கழுத்து யானைத் தந்தத்தால் செய்த கோபுரம் போலவும், உன் கண்கள் 'எஸ்போனிலே பத்ரபீம்' வாசலருகில் இருக்கும் தடாகம் போலவும் உன் மூக்கு தமஸ்குப் பட்டணத்தை நோக்கியிருக்கும் லிபனேன் நாட்டுக் கோபுரம் போலவும் இருக்கின்றன, உன் கூந்தல் செவ் வந்தி வானம்...

என் அன்பே! இன்ப வேளைகளில் நீ பேரழகி! உன் உடற்கட்டு பனைமரம் போன்றும்...

இந்தத் தொண்ணூறுவது வயதில்கூட அதைப்பற்றி நினைக்கும்போது போதை ஏறுகிறது. வாழ்நாளில் ஒரே ஒரு தடவை மட்டும் அனுபவித்த போதை. எருசலேம் நாட்டு அழகியைப் போலவே, வெள்ளி முளைக்கையில் உன் உள்ளம் கூறியிருக்கலாம் ;

''என் ஆடைகளை நான் களைந்துள்ளேன்,
அவைகளை நான் எப்படித் திரும்ப அணிவேன்?
என் கால்களை நான் கழுவியுள்ளேன்.
அவைகளை மீண்டும் எப்படி அழுக்காக்குவேன்?''

பொழுதுவிடிவதற்கு முன்னதாகவே எழுந்தேன். அவள் கடுங் காபி செய்து பருகத் தந்தாள். ''ஒரு அத்தையை ஏமாற்றி அனுப்ப முடிந்தது. வேறு யாராவது பார்ப்பதற்கு முன்னால் போய் விடுங்கள்'' என்று கூறி முத்தமிட்டாள்.

''பெண்ணம்மா! உனக்குத் தருவதற்கு என்னிடத்தில் ஒண்ணுமில்லே.''

''பலே. நல்லாயிருக்கே! அப்போ, நீங்க எனக்குத் தந்தது என்னவாம்? நான் இதுவரையில் அறியாத, இதுவரையில் அனுபவிக்காத ஒண்ணைத் தந்தீங்களே...?''

என் கழுத்தில் தன் கைகளைச் சுற்றிக்கொண்டு குழந்தைபோல் அவள் அழுதாள்.

இப்படித்தான் அது ஆரம்பித்தது. வழிப்பயணத்தின்போது தாகம் தணிக்க ஒரு தென்னந்தோப்பில் புகுந்து இளநீரைப் பறித்துப் பருகினாற் போன்ற நிகழ்ச்சி என்றெண்ணி அதையும் மறந்திருக்க வேண்டும். ஆனால் முடியவில்லை. மீண்டும் அவளைக் காணவேண்டும் என்று உள்ளம் துடித்தது. பற்பல காரணங்களைச் சொல்லிப் போகலானேன். மடிக்கனம் குறைந்தது. ஆரோக்கியம் குன்றியது.

ஒன்றிரண்டு மாதங்களுக்குப் பிறகு, ஒருநாள் போனபோது இன்பம் கலந்த கவலையுடன் அவள் சொன்னாள் :

''ஆகாது என்று சொன்னது ஆகியிருக்கு.''

''என்ன?''

''பயப்படுவதற்கு ஒண்ணும் இல்லே. அவரும் இதற்குள் இரண்டு மூணு தடவை வந்து போனார்.''

''ஓ!''

நிம்மதியாயிற்று ! இப்படிச் சில நாட்கள் சென்ற பின் பகல் வேளைகளில் போனால் ஆபத்து என்றாயிற்று. அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் சந்தேகப்படுகிறார்களாம். எனவே இரவில் கள்வனைப் போல் போகலானேன். பொழுது விடிவதற்கு முன்னதாகவே இடத்தைவிட்டுக் கிளம்புவேன்.

ஒருநாள் மனைவி சொல்கிறாள் :

''இப்படிச் சொன்னவரும் வஞ்சனை செய்திருக்கிறாரே !''

'.......''

''புதுசாக எனக்கு ஒரு தங்கை உண்டான சங்கதி தெரிஞ்சுது,''

அவள் அத்தையென்று சொன்னவள்தான் குழப்பத்திற்கெல்லாம் காரணம். அந்த அத்தை எப்படியோ கேட்டுத் தெரிந்து கொண்டு வீட்டிற்கு வந்திருக்கிறாள். எல்லாவற்றையும் சொல்லிக் கோள்மூட்டிப் போயிருக்கிறாள் ! விஷயம் இத்துடன் முடியவில்லை. ஏதோ ஒரு வெறி. ஒரு தடவை போனபோது அவள் கணவன் அங்கே இருந்தான். வகையாக அவனிடம் மாட்டிக் கொண்டேன்! அப்போது அவளுடைய தந்திரத்தின் மறுபக்கத்தையும் காண முடிந்தது. முன்பின் பாராதவள்போல் அவள் கேட்டாள் :

''யார்? என்ன வேணும்?''

''செம்பழஞ்சி வீடு இதுதானா?''

அப்படி ஒரு வீட்டுப் பெயர் தான் அப்பொழுது ஞாபகம் வந்தது.

கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் பார்த்தார்கள். செம்பழஞ்சி வீடாவது ? அவனுக்கு எற்கனவே சந்தேகம். எப்படியோ அங்கிருந்து ஒருவாறு தப்பித்துக் கொண்டேன். ஆனால் நேராக வீட்டிற்குப் போக முடியவில்லை. அதாவது போகத் தோன்றவில்லை. இரண்டு மைல் தொலைவில் ஒரு கள்ளுக்கடை இருந்தது. அங்கே போய் நன்றாகக் குடித்தேன். இழந்த துணிச்சலைத் திரும்பப் பெற்றேன். அதுதானே கள்ளின் மகிமை! அவன் கையிலிருந்து தட்டியெடுத்து அனுபவிக்க வேண்டும் என்ற ஒரு பிடிவாதம். வேறு வழியில்லாவிட்டாலும், 'நீ யார்?' என்று கேட்டுவிட்டாளே! அதுவும் என் கருவைச் சுமந்து நிற்பவள். நீதிமொழிகளில் கூறியுள்ளது எவ்வளவு உண்மை! ''பரஸ்திரீயின் உதடுகள் தேன்கூடு போல் ஒழுகும். அவள் வாய் எண்ணெயிலும் மிருதுவாக

இருக்கும். அடுத்தது, எட்டியைப்போல் கசப்பும், இருபுறமும் கூர்மையான பட்டயம் போன்றவள்தானே அவள்?''

அப்படிப் போதை ஏறித் தலை கிறுகிறுத்திருக்கையில் கள்ளுக் கடை எதிரில் இருந்த நெடுஞ்சாலையில் நான்கைந்து பேர்கள் ஓடிவருவதைத் தட்டி இடுக்குவழியாகப் பார்த்தேன். அவர்களில் ஒருவன் வெற்றிலை பாக்குக் கடைக்காரனிடம் கேட்டான் :

''தெற்கத்தியான் ஒருத்தன் இந்தப் பக்கம் வந்தானா ?''

''கட்டுமஸ்தான ஒருத்தனா ?''

''ஆமாம்.''

''கடைக்குள்ளே இருக்கிறான்.''

அவர்கள் கடையை நோக்கி வருவதைப் பார்த்தேன்.

''டேய், வெளியே வாடா !''

மடக்குக்கத்தியைக் கையில் எடுத்துக் கொண்டேன். எங்கே போகும்போதும் அதைக் கொண்டு போகத் தவறியதில்லை. கடைக் காரன் சொன்னான் :

''இங்கே வேண்டாம், வெளியே போங்க''

உள்ளே கள்ளிருந்தாலும் கொஞ்சம் பயமாகத்தான் இருந்தது. நன்றாகப் பழக்கமில்லாத இடம். தயாராக வந்துள்ள எதிரிகள். சிக்கிக் கொண்டேனா ? ஆயினும் அதை வெளியே காட்டவில்லை.

''என்ன வேணும் ?''

கிடைத்த பதில் அடிதான். அதைத் தடுத்தேன். கத்தியை நிமிர்த்தினேன். அதைப் பிடுங்க வந்தவனின் கையைக் கிழித் தேன். வேறொருவன் தடியால் அடிக்க, கத்தி கையிலிருந்து தெறித்துத் தூர விழுந்தது. அதற்குப்பின் நடந்தவை ஞாபகம் இல்லை. அடி வாங்கினேன். கொடுத்தேன். மண்ணைக் கவ்வ வேண்டியதுதான் என்ற நிலையில் இருளின் மறைவில் ஓடித் தப்பித்துக் கொண்டேன்.

ஏழெட்டு நாட்களுக்குப் பிறகு ஒருநாள் எங்கிருந்தோ வீடு திரும்புகையில் பெண்ணம்மா வீட்டுத் திண்ணையில் உட்கார்ந் திருந்தாள். கூட்டம் வேறு சேர்ந்திருந்தது.

கணவன் அடித்தும், எட்டி உதைத்தும் அவள் கருவைச் சிதைத்தானாம். பிறகு வீட்டைவிட்டுத் துரத்தியிருக்கிறான். இவ் வுலகில் அவளுக்கு வேறு புகலிடம் இல்லை. எனவே தஞ்சம் என

வந்திருந்தாள். சேதி தெரிந்ததும் மூத்த பையன் வந்து சொன்ன வார்த்தை இப்பொழுதும் நினைவில் இருக்கிறது.

''நல்ல பேருதான் அப்பா பிள்ளைகளுக்குச் சம்பாதிச்சுத் தந்திருக்கிருர் ! போதும்.''

நேர்மையாளன் கொச்சுப்பாப்பியும், கோளாம்பி மத்தாயியும் அவளை எப்படியோ அங்கிருந்து அழைத்துப் போனுர்கள். எங்கோ தங்கவைத்து மறுநாள் அனுப்பினுர்கள். கொஞ்சம் பணமும் கொடுத்ததாக ஞாபகம். பிறகு அவளைப் பார்த்ததில்லை. எட்டோ பத்தோ ஆண்டுகளுக்குப் பிறகு அவள் இறந்ததாகக் கேள்விப்பட்டேன்...

கோழி கூவியது; ஜாமக்கோழியாக இருக்கலாம். குஞ்சுனைநனுவிற்கு ஒரே தாகம். நிம்மதியின்மை...

''பொண்ணு !''

சத்தமில்லை.

எல்லாரும் தூங்கி விட்டார்களா ? பந்தலில் கியாஸ் லைட் எரிந்துகொண் டிருந்தது.

''தாத்தா !''

''யாரு ?''

''நான்தான், குட்டியம்மா.''

''நீ எப்போ வந்தே ?''

''நல்லா இருட்டின பிறகுதான் வரமுடிஞ்சுது. அம்மா தலைச்சுற்றலாப் படுத்துக்கிட்டு இருந்தாள். இராவுக்குச் சமைத்து, எல்லாருக்கும் போட்டுவிட்டு வர வேண்டியிருந்தது.

''எனக்குக் குடிக்கிறதுக்கு ஏதாவது வேணும். கஞ்சித்தண்ணி ஆனுலும் போதும்.''

குட்டியம்மா அங்கிருந்து போனுள். தென்புறச் சாய்ப்புப் பந்தலில் போய் விளக்கை ஏற்றினுள். பிறகு விளக்குடன் திரும்பி வந்தாள்.

''கஞ்சி சூடாக இல்லை. காபி போட்டுக்கொண்டு வர்றேன்.''

''சர்க்கரையும் காபித்தூளும் இருக்கிற இடம் உனக்குத் தெரியுமா?''

''நான் தேடி எடுத்துக்கிறேன்.''

குட்டியம்மா மறுபடியும் தென்புறப் பந்தலுக்குப் போனாள். பாத்திரங்கள் உருளும் சத்தம் கேட்டது. தீயின் செந்நிற வெளிச்சம்! பாவம், ஒரு தடவை கூப்பிட்டேன், எழுந்திருந்து வந்தாள். திருமணமாகப் போகிற பையன் அவளைவிட எட்டு வயதாவது சிறியவனாகயிருப்பான். குடும்பத்தில் பத்தோ பன்னிரண்டோ கல்யாணங்கள் நடந்திருக்கும். அத்தனையிலும் அவள் பங்கெடுத் திருப்பாள். அப்போதெல்லாம் எவ்வளவு மனத்துயரம் அடைந் திருப்பாள். அவள் கனிதரும் மரமானதால் வந்த வினைதானே ? என்ன சுயநலம்! வேலைசெய்து சம்பாதிப்பவளாக இருப்பதால் இப்பொழுது ஒன்றும் தெரிவதில்லை. பத்துநாள் படுத்த படுக்கையாக இருந்தால் கஞ்சியோ தண்ணியோ கொடுக்க யார் இருக்கிறார்கள் ? தம்பியுடன்கூட வசிப்பதாக வைத்துக் கொள்வோம். சில நாட் களுக்குப் பிறகு அவளுடைய தம்பி மனைவி - அவளுக்கு ஒரு மகள் இருந்திருந்தால் அந்தப் பெண்ணின் வயதுதான் இருக்கும்—கண வனின் காதில் முணுமுணுப்பாள் :

''கதி கெட்ட அக்கா ஒருத்தி இங்கே இப்படி எத்தனை நாள் தான் இருப்பாளோ ?''

தம்பி சொல்வான் :

''அப்படிச் சொல்லாதே. இந்த அக்கா மட்டும் இல்லாதிருந் தால் எங்கள் குடும்பம் தெருவில் அனாதையாக அலைஞ்சிருக்கும்.''

''நான் ஒண்ணும் சொல்லலே. இங்கே கொண்டு வர்ற காசை வைச்சுக்கிட்டு எப்படிக் குடும்பம் நடத்தறேன்னு எனக்குத்தானே தெரியும்.''

அவள் கண்ணீர் விடுவாள். கணவன் உள்ளம் கரைந்துவிடும். சின்ன வயதில் துணிச்சல்காரனாக இருந்தாலும், அப்போது அவன் மகா சாதுவாக இருப்பான். 'அவள் சொல்வது சரிதானே?, அக்கா கொஞ்ச காலம் வேறு யார் வீட்டிலாவது இருக்கக் கூடாதா? என்றெல்லாம் நினைப்பான். உள்ளத்தில் இந்த எண்ணம் எழுந் தால் அதன் பிரதிபலிப்பு வெறுப்பாகச் செயலில் தெரியும். பேச்சில் நிந்தனை; தாய்தந்தையரைப் பார்த்துக் குழந்தைகளும் நிந்தனை செய்வார்கள். சிறிது காலம் எல்லாவற்றையும் பல்லைக் கடித்துக்கொண்டு சகித்திருப்பாள். கடைசியில் வேறு வழியில்லாமல்

ஒரு தங்கையின் வீட்டிற்குக் கிளம்புவாள். வழியிலே பேரன் பேத்தி எடுத்த தோழி ஒருத்தியைச் சந்திப்பாள்.

''குட்டியம்மா! எங்கே போறே?''

'' தங்கம்மா வீடு வரைக்கும்.''

'' இரண்டுமூணு வருஷங்களாகத் தம்பிகூடத்தானே இருந்து கொண்டிருந்தாய்?''

''ஆமாம்.''

பேச்சை வளரவிடாமல், களைப்பையும் பொருட்படுத்தாமல் நீ நடப்பாய். ஆயிரமாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் இரண்டு பிள்ளைகளின் தாயான அந்த அதிருஷ்டதேவதையின் அனுதாபம் உனக்கு எதற்கு?...

'' தாத்தா, காப்பி.''

'' உம்.''

'' சூடு சரியாக இருக்கான்னு பாருங்க.''

குஞ்சுநைனு காப்பியில் விரலை வைத்துப் பார்த்தார்.

''சூடு கொஞ்சம் அதிகம்.''

பேத்தி காபியைக் கொஞ்சம் கொஞ்சமாக ஆற்றிக் கொடுக்க, குஞ்சுநைனு அதைச் சுவையாகக் குடித்தார். சூடு உள்ளே மெது வாக இறங்கும்போது இதமாக இருந்தது.

''நீ ஏன் இன்னமும் தூங்கலே?''

''நல்லா இருட்டினுல்தான் எனக்குத் தூக்கம் வரும்.

''அப்போ, எனக்குத் துணைதான் நீயும்.''

''உங்களுக்கு வயதானதனுல்தான் தூக்கம் வர்றதில்லே. வய தானுல் தூக்கம் குறையும் என்று கேள்விப்பட்டிருக்கேன்.

''சரி, இப்படிக் கட்டிலிலே உட்காரு.''

''கால் பிடிச்சு விடணுமா?"

''உம், பிடிச்சு விடு.''

''நான் குழந்தையாக இருக்கும்போது கால் பிடிச்சு விட்டால் காசு தருவீங்க. நானும் சித்தப்பா பிள்ளை தானியலும், காலாய் ஜோணியும் எப்பவுமே இதுக்குப் போட்டி போடுவோம். ஆனுல் நான்தான் ஜயிப்பேன்.''

''தானியல் சாதுவாக இருந்தான். காலாய் வீட்டுப் பையன் குறும்புக்காரன். அப்படித்தானே?''

''அதெல்லாம் சின்னப் பையனுக இருக்கும்போது. இப்போ அவனும் சாதுதான்.''

''உனக்கு அப்புறம் ஏதாவது பேச்சு வந்ததா?''

''......''

''என்ன, பொண்ணு?''

''உம்.''

''எங்கிருந்து ?''

குட்டியம்மா பேசாமல் கால் பிடித்துவிட்டுக்கொண்டிருந்தாள்.

''என்ன பேசாமல் இருக்கிறே?''

''பேச்சு ஒண்ணும் இல்லே தாத்தா, என்கூட வேலை பார்க்கிற ஓர் ஆசிரியர்.''

''யாரு ? எந்த ஊர்?''

''அப்படி ஓர் ஆசை இருக்குன்னுதான் சொன்னேன்.''

''என்ன சொன்னுன் ?''

குட்டியம்மா கலவரமடைந்தாள். தாத்தாவிடம் இதைச் சொல்லியிருக்க வேண்டாம் என்று அவளுக்குத் தோன்றியது.

'' பொண்ணு ! ''

''என்ன, தாத்தா ?''

'' விஷயம் என்னுன்னு சொல்லுடி.''

குட்டியம்மா தைரியத்தை வரவழைத்துக் கொண்டாள்.

''தொடுபுழைக்காரர். தாமஸ் என்று பெயர். முதல் மனைவி இறந்து போனுள்; குழந்தைகள் இல்லை...''

''அப்புறம்?''

'' அம்மாவிடம் சொன்னேன். என் முகத்தைப் பார்த்தபடி அம்மா வெகுநேரம் அழுதுகொண் டிருந்தாள். தாமஸ் ஸார் சாலைக்கல் வீட்டுக் கோபாலன் நாயரை விட்டு அப்பாவிடத்தில் கேட்டார். அவரை இனி திட்டாத வார்த்தை இல்லை . . . ''

''உன் அப்பாவிடம் பணம் இருக்காது. அதனுல்தான்.''

'' பணம் எதுக்கு ? வரதட்சிணை ஒண்ணும் கொடுக்க வேண்டாம். கல்யாணச் செலவுக்கு நான் கொடுக்கிறேன்.''

'' நீ கொடுக்கிறுயா ?''

'' உம்.''

'' எந்தச் சபை ?''

'' அதெல்லாம் நான் கேட்கவில்லை ''

குஞ்சுநைனு மனத்துள் கூறிக் கொண்டார். எதற்காகக் கேட்கணும்? வீடு, குடும்பம், சபை எல்லாம் நல்லா இருக்கிற வரனைப் பார்த்து அவளைக் கட்டிக்கொடுக்க வேண்டியது தந்தையின் கடமை. அவன் அதைச் செய்யவில்லை. எனவே இப்போது இவளை விரும்பிக் கல்யாணம் கட்ட முன்வந்தவன்தான் நல்ல வரன் . . . .

'' தாத்தா! நான் ஒரு முடிவு செய்திருக்கேன்.''

'' என்ன ?''

சூடான இரண்டு துளி கண்ணீர் குஞ்சுநைனுவின் காலில் விழுந்தது.

'' பொண்ணு ! ''

'' என்ன ? ''

'' அழறயா ? ''

'' வந்து கூப்பிட்டால், அவர் [illegible] போகப் போறேன், தாத்தா ! ''

'' அதெல்லாம் வேண்டாம் அம்மா. உன் அப்பா வரட்டும். நான் சொல்கிறேன். ஏதாவது வழி உண்டாகாமல் போகாது.''

'' இது வரையில் உண்டாகாத வழியா இனி உண்டாகப் போகிறது? அக்கா தங்கைகள் யாராவது கணவரோடு வீட்டுக்கு வந்தால் அப்புறம் எனக்குப் படுக்க இடம் இல்லை. ஆட்டைக்கட்டுற சின்னத் திண்ணையிலே தான் படுக்க வேண்டியிருக்கும். மழை பெய்தால் சாரல் அடிக்கும். இப்படி ஒருத்தி அங்கே இருக்கிற தாக யாருக்கும் நினைவில்லை. . . . . . ''

தாத்தாவின் கால்களில் விழுந்த கண்ணீரைக் குட்டியம்மா முன்தானையால் துடைத்தாள்.

''போ. படுத்துத் தூங்கு. இனி பொழுது விடிய ஆறோ ஏழோ நாழிகைதான் இருக்கும். ''

கம்பளியால் தாத்தாவைப் போர்த்திவிட்டுக் குட்டியம்மா எழுந்து போனாள். மறுகணமே திரும்பி வந்து கேட்டாள் :

'' இன்னும் கொஞ்சம் காபி வேணுமா தாத்தா?''

'' வேண்டாம். நீ போய்த் தூங்கு.''

அவள் போனபிறகும் அவள் உருவம் அவர் கண்முன் நின்றது. அவள் கூறியதெல்லாம் பசுமரத்தாணிபோல் நெஞ்சில் பதிந்தது.

'வந்து கூப்பிட்டால் போவேன்' என்ருள் அவள். கேட்கையில் ஒரு சாகசக்காரியின் பேச்சுப்போல் இருந்தாலும் எல்லா வழிகளும் அடைபட்டுப் போனதால்தானே அவள் அப்படிக் கூறினள்! முன்காலத்திலும் பெண்கள் இப்படித்தான் இருந்திருக்கிருர்கள். யூதாவின் மருமகளான 'தாமர்' செய்ததும் இதுதானே? யூதாவின் தலைமகனை 'ஏர்' இறந்தபோது இரண்டாவது மகனை 'ஓனு'னிடம் 'நீ உன் தமையன் மனைவியை மைத்துன சுதந்திரமாய் அடைந்து, உன் தமையனுக்குச் சந்ததியை உண்டாக்கு' என்ருன். ஓனன் அதைக் கேட்கவில்லை. எனவே கர்த்தர் கோபித்து அவனை அழித்தார். அதன் பின் யூதா, தாமரிடம் 'என் இளையபிள்ளையான சேலா பெரியவனுகும் வரையில் நீ உன் தகப்பன் வீட்டில் தங்கி விதவையாக இரு' என்ருன். அப்படியே தாமர் தன் தகப்பன் வீட்டில் தங்கி இருந்தாள். ஆனல் சேலா பெரியவனை பின்னரும் அவளை யூதா அழைத்துக்கொண்டு போகவில்லை. இதற்கிடையில் யூதா ஆடுகளின் உரோமம் கத்திரிக்கத் திம்னவுக்குப் போனன். தாமர் இந்தச் செய்தியை அறிந்தாள். அவள் விதவைக்குரிய ஆடைகளைக் களைந்து, முக்காடணிந்து திம்னவுக்குப் போகிற வழியிலுள்ள நீரூற்றுக்கு முன்னல் உட்கார்ந்திருந்தாள். அவள் முக்காடணிந்திருந்தபடியால், யூதா அவளை ஒரு வேசி என்று நினைத்தான். தன் மருமகள் என்று அறியாமல் அவளிடம் 'நான் உன்னிடம் வரலாமா' என்று கேட்டான். அதற்கு அவள் 'உன்னிடம் வந்தால் என்ன தருவாய்' என்று கேட்டாள். 'ஆட்டு மந்தையிலிருந்து ஒரு நல்ல வெள்ளாட்டைக் கொடுத்தனுப்புகிறேன்' என்ருன் யூதா. அதற்கு அவள் 'நீ அதை அனுப்புகிறவரையில் ஓர் அடையாளம் கொடுப்பாயா' என்று கேட்டாள் 'என்ன அடையாளம் வேண்டும்' என்று அவன் கேட்டதற்கு, அவள் 'உன்னுடைய முத்திரை மோதிரமும் கைக்கோலும் வேண்டும்' என்ருள். அவன் அவற்றை அவளுக்குக் கொடுத்து அவளைப் புணர்ந்தான். அவள் கருத்தரித்தாள். யூதா ஒரு வெள்ளாட்டைக் கொடுத்துத் தன் அடையாளங்களை வாங்கி வரும்படி ஒருவனை அனுப்பினன். ஆனல் அவள் கோபுரத்தருகில் இருக்கவில்லை. சுமார் மூன்று மாதங்களுக்குப் பிறகு, தன் மருமகள் கருத்தரித்திருக்கிருள் என்று யூதாவிற்குத் தெரியவந்தது

அப்போது யூதா 'அவளைக் கொண்டு வாருங்கள், சுட்டெரிக்க வேண்டும்' என்றான். தாமர் அந்த ரகசியத்தை வெளிப்படுத்தினாள். யூதா தன் தவற்றுக்கு வருந்தினான். 'அவள் என்னைவிட நீதியுள்ளவள். அநீதி செய்தவன் நான்தான்' என்று கூறினான். தாமர் இரட்டைக் குழந்தைகளைப் பெற்றாள். அவர்களுக்கு, 'பாரேஸ்' என்றும் 'சேரா' என்றும் பெயர் சூட்டினாள்.....

இவ்வாறு ஏதேதோ யோசித்தபடி படுத்துக்கொண் டிருக்கையில் குஞ்சுநைனா வானத்தில் ஒரு பேரொளியைக் கண்டார். வானத்தின் கதவுகள் திறந்திருந்தன. தங்கப் பதக்கங்கள் பதித்த வானத்தின் கோபுரம் தெரிந்தது. காப்ரியேல், மிக்கேயேல் என்னும் தேவதூதர்கள் கோபுரத்தைக் காவல் புரிந்துகொண் டிருந்தனர். தங்கப்படிகளில் அடியெடுத்து வைத்து ஒருவர் பூமியை நோக்கி வந்துகொண் டிருந்தார். சூர்ய ஒளியினால் செய்த மேலங்கி. பனிபோல் வெண்மையான நரைத்ததாடி அவர் இன்னும் கீழே இறங்கி வந்தார். நெடுநாளைய நண்பனைப்போல் புன்னகை புரிந்தார், அவர் நடுவானத்தில் வந்து நின்றால் 'தாங்கள் யாரோ?'என்று கேட்க விரும்பினார் குஞ்சுநைனா. நா எழவில்லை. குஞ்சுநைனாவின் எண்ணத்தைப் புரிந்துகொண்டவர்போல் அவர் வினவினார் :

'' என்னைத் தெரியவில்லையா ?''

சற்று சங்கோசத்துடன் குஞ்சுநைனா சொன்னார் :

''தெரியவில்லையே ?''

''நான்தான் சாலொமோன். தாவீதின் குமாரன்.''

குஞ்சுநைனா துண்டை இடுப்பில் கட்டி வாய் பொத்தி நின்றார். ''ஞானிகளின் அரசன்!''

''வருகிறாயா? கொண்டு போகிறேன்.''

''சாமி!''

''என்ன ?''

''பையனின் திருமணம்....''

அவர் சிரித்தார். என்ன முழக்கம் !

''திருமணங்கள் நடந்துகொண்டே இருக்கும். அதெல்லாம் பார்க்க முடியுமா ?''

''உண்மைதானுங்க.''

,,இந்த மகிழ்ச்சியிலும் விருந்திலும் அப்படி என்ன இருக்கிறது? விருந்துவீட்டுக்குப் போவதிலும் துக்கவீட்டுக்குப் போவது நலம். இதிலே எல்லா மனுஷரின் முடிவும் காணப்படும். களிப்பைக் காட்டிலும் துயரம் நலம். துயரத்திஞல் இதயம் சீர்படும். ஞானிகளின் இதயம் துக்கவீட்டில் இருக்கும். மூடனின் இதயம் களிப்பு வீட்டில் இருக்கும்...''

''தாத்தா !''

''ஏ...ஏ...?''

''தூக்கமா ?''

''உம்...கொஞ்சம் கண்ணயர்ந்தேன்.''

''காபி கொண்டுவரட்டுமா ?''

''கொண்டு வா.''

பொழுது இன்னும் ...கப் புலரவில்லே ; இருளும் ஒளியும் கலந்திருந்தது. வெளிச்ச... ...டிக் கூடி வருவதைப் பார்த்தே தெரிந்து கொள்ளலாம்.

குட்டியம்மா கொண்டுவந்து கொடுத்த காபியைக் குஞ்சுநைஞு குடித்தார். சிறுவர்களும் பெண்களும் எப்பொழுதோ எழுந்திருந்தார்கள்! பந்தலில் கறி நறுக்கிக்கொண் டிருந்தவர்கள் தூங்கிக்கொண் டிருந்தார்கள். பொழுதுவிடிய இரண்டு நாழிகை இருக்கும்போதுதான் அவர்கள் தூங்கிஞர்கள் போல் இருக்கிறது. வெயில் வந்ததும் குஞ்சுநைஞு பந்தலில் போட்டிருந்த சாய்வு நாற்காலியில் போய் உட்கார்ந்தார். உற்ருரும் உறவினரும் ஒவ்வொருவராக வந்துபோய்க்கொண் டிருந்தார்கள். திருவிழா பார்ப்பதைப் போல எல்லாவற்றையும் பார்த்து ரசித்துக்கொண்டு குஞ்சுநைஞு அமர்ந்திருந்தார். திடமான வாலிபர்கள் ஓடியாடி வேலே செய்வதை ஆர்வத்தோடும் ஆவலோடும் பார்த்துக்கொண் டிருத்தார். அவருக்கும் ஏதாவது வேலேசெய்ய வேண்டும்போல் இருந்தது. ஆஞல் எழுந்திருக்க முடியாதவர் ஆசைப்படுவதில் என்ன அர்த்தம் ?

பிற்பகலில், அழைப்புக்குரிய விருந்தினர் வரலாஞர்கள். பெரும்பாலோர் வேறு மதத்தினர். 'அல்வா', 'அல்ஷேஸ்', 'அச்சப்பம்', வெள்ளேயப்பம், அவல், பழம் இவையெல்லாம்தான்

சிற்றுண்டி. வந்தவர்கள் அனைவரும் குஞ்சுநைனவை நலம் விசாரித்தார்கள். கூட்டத்திலிருந்து ஒரு குரல் கேட்டது.

''குஞ்சுநைனு ! இங்கேதான் உட்கார்ந்திருக்கிறீர்களா ?''

சிவராம குறுப்பு ! பார்த்து இரண்டு வாரங்களாவது ஆகியிருக்கும்.

''வாங்கோ, குறுப்பு !''

குறுப்பு குஞ்சுநைனுவிற்குப் பக்கத்தில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான்.

''எங்கே! பார்த்து ரொம்ப நாளாச்சே ?''

''எரணுகுளம் வரையில் போயிருந்தேன். கணக்குச் சரிப்படுத்த வேண்டியிருந்தது. மருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தேனே கிடைக்கவில்லையா?''

''கிடைச்சது.''

''எப்படி விசேஷமெல்லாம் ? உடம்புக்கு ஒன்றும் இல்லையே?''

''எல்லாம் சரிப்பட்டு வருது.''

கேட்டதற்கல்ல பதில். இருப்பினும் குறுப்பு வேறு எதுவும் கேட்கவில்லை. சமய சந்தர்ப்பம் பார்க்கவேணுமே! திருமண வீட்டில் நலன் விசாரிப்பதற்கும் தெரிந்துகொள்வதற்கும் யாருக்கு நேரமிருக்கிறது ?

குஞ்சப்பி குறுப்பிடம் வந்து சொன்னான் :

''வாங்க, ஒரு டப்ளர் காபி குடிக்கலாம்.''

''ஆஹா ! அதுக்கென்ன? ஆகட்டும்.''

பழையகுளம் ராமகிருஷ்ணன், பனைச்சவிளை வாசு குறுப்பின் மருமகன் ஸ்ரீதரன் பிள்ளை ஆகியவர்களுடன் உட்கார்ந்து குறுப்பு சிற்றுண்டி அருந்தினான். வாசு குறுப்பு குடும்ப விரோதியானலும் அவன் மருமகன் ஸ்ரீதரன் பிள்ளை ராஜனின் உற்ற நண்பன். பரிமாறுகிறவர்களுக்குத் தலைவன் கசாப்புக்கடை மாத்தனின் மகன் அவரான். அவன் அதிகாலையிலேயே வந்திருக்கிறான். சமயம் வந்தபோது அவன் பரோபகாரி என்பதை நிரூபித்து விட்டானே ! ஒரு நல்ல சமையற்காரனைப் போல வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு பம்பரம்போல் சுழன்று வேலை செய்துகொண் டிருந்தான்.

முன்னொரு தடவை அவனைக் கடிந்து பேசினதற்காகக் குஞ்சுகைநனு வருந்தினார் தந்தை கசாப்புக் கடைக்காரனாகப் போய்விட்டான் என்பதுதான் ஒரு குறை. அதற்கு அவனை நிந்தனை செய்வதில் என்ன அர்த்தமிருக்கிறது? 'திராட்சைத் தோட்டத்து வேலைக் காரனைத் தேடிப்போன வீட்டுக்காரன்' உவமையில் கர்த்தர் கூறியதுபோல் 'முந்தினோர் பிந்தினோராயும், பிந்தினோர் முந்தி னோராயும் இருப்பார்கள். அரசர்களும் சேனைத் தலைவர்களும் நொடிப்பொழுதில் சாய்ந்திடுவார்கள். சிறுமதி படைத்த மனிதன் அதை நினைப்பதில்லை...

சிற்றுண்டிக்குப் பிறகு சிவராம குறுப்பும் மற்றவர்களும் விடை பெற்றுப் போனார்கள். இரவு விருந்திற்கான ஏற்பாடுகள் ஆரம்ப மாயின.

''மாத்யு !''

''என்ன அப்பா ?''

''குஞ்சுச்செறுக்கன் வரவில்லையா ?''

மாத்யு பதில் கூறாமல் வேறு வேலையாகப் போனான்.

''பொண்ணு...தீனம்மா !''

வர்கீஸின் மனைவி குஞ்சுமரியாள் குஞ்சுநைநனுவிடத்தில் சென்று கேட்டாள்:

''மாமாவுக்கு என்ன வேணும் ? தீனம்மா உள்ளே வேலையாக இருக்காபோல் இருக்கே ?''

''கல்லுவெளியிலிருந்து பெண்கள் குழந்தைகள் எவரும் வரவில்லையா ?''

பதில் கூறியவன் [illegible]:

''வந்தாலும் வ்ராவிட்டாலும் உங்களுக்கென்ன ? வேண்டிய வர்கள் வருவார்கள். அவங்க வந்தாங்களா ? இவங்க வந்தாங் களா ?''

இரவு விருந்து முடிந்தது, தேவை இருந்தாலும் இல்லா விட்டாலும் கட்டளைகள் பிறப்பித்தவாறும், குற்றம் குறைகளை எடுத்துக் கூறியவாறும் குஞ்சுநைநனு நாற்காலியில் உட்கார்ந்திருந் தார். நள்ளிரவானபோது மேற்குத் திண்ணையில் போட்டிருந்த

கட்டிலில் போய்ப் படுத்தார். பொழுது விடிவதற்குச் சற்றுநேரம் முன்பு கண்ணயர்ந்தார். அப்போதும் சமையற்காரர்கள் மும்முரமாக வேலை செய்துகொண் டிருந்த ார்கள்.

விடிந்து எட்டு நாழிகை ஆனபோது மாதாகோவிலுக்குச் செல்லவேண்டிய ஏற்பாடுகள் ஆரம்பமாயின. பெண்களும் குழந்தைகளும் ஆண்களும் ஒரே பந்தியில் உட்கார்ந்து சிற்றுண்டி அருந்தினார்கள். ராஜனின் மூன்று சகோதரிகள், குஞ்சுமரியாள், ராஜனின் பெரிய மாமாவின் மனைவி, ஏனைய பெண்கள் உடையுடுத்திக் கோவிலுக்குப் போவதற்குத் தயாரானார்கள். அப்போது திருச்சபைச் சாமியார் அங்கே வந்தார்.

''உட்காருங்க சாமி!''

''பெண் வீட்டார்கள் எப்போது வருவதாகச் சொல்லியிருக்கிறார்கள் ?''

''விடியற்காலையிலேயே புறப்பட்டிருப்பார்கள். பதினொரு மணிக்காவது வந்து சேர்வார்கள்.''

''ராகுகாலம் எப்போது ?''

''இன்றைக்கு வியாழக்கிழமைதானே? நண்பகலுக்குப் பிறகு தான்.''

''அப்படியானால் நமக்கு ஜெபம் பண்ணிக் கிளம்ப வேண்டிய நேரமாச்சே ?''

''அவர்கள் கோவிலுக்கு வந்தபிறகு கிளம்பினால் போதாதா ?''

''போதும், தயாராக இருப்போம்.''

''கை கழுவுங்க சாமி ! கொஞ்சம் காபி குடிச்சிட்டுப் போகலாம்.''

''காபி மட்டும் போதும். என்ன குஞ்சுநைனா! நீங்க கோவிலுக்கு வரல்லையா ?''

''தள்ளலே, சாமி!''

''அப்பாவுக்குக் கோவிலிலே வந்து நிற்கவெல்லாம் முடியாது.''

''வேண்டாம். நான் ஏதோ கேட்டேன், அவ்வளவுதான்.''

பேபி, ராஜனைப் பந்தலுக்குள் அழைத்து வந்தான்.

ஜெபம் முடிந்ததும் அவனுக்காகப் போடப்பட்டிருந்த நாற்காலியில் உட்கார வைத்தான்.

சாமியார் சொன்னர் :

''இனி தட்சிணை வாங்குகிறதும், கொடுக்கிறதும் எல்லாம் நடக்கட்டும். முதலில் தாத்தாவுக்கு.''

''அப்பா !''

''ஏ...?''

''தட்சிணை வாங்குங்க.''

அவருன் குஞ்சுறைநறைவைக் கை கொடுத்து எழுப்பினன். ராஜன் வெற்றிலை பாக்கைத் தாத்தா கையில் வைத்தான். குஞ்சு நைநறு அதை வாங்கிய பிறகு, அவனுடைய நெற்றியில் முத்த மிட்டார். பிறகு அவன் தலையில் கை வைத்து விண்ணை நோக்கிப் பிரார்த்தனை செய்தார்: ஆண்டவரே! உம் தயவுக்குத் தகுந்த வாறு இவனிடம் இரக்கம் காட்டும். உம் கருணையின் வலிமை யினுல் இவன் குற்றங்களைத் துடைத்துவிடும். நானே சாயப் போகிற மரம். என் வழியாக உண்டான இளம் தளிர் இவன். புயலிலிருந்தும் பெருமழையிலிருந்தும் இவனைக் காப்பாற்றும். நீர் அருள்கூர்ந்து சொன்னதன் பிரகாரம் முகத்தில் வியர்வையுடன், உணவிற்காக முள்ளையும், வயலிலே செடிகளையும் தேடி, நீர் இவனுக்கு விதித்த பெண்ணையும் அழைத்துக்கொண்டு இவன் புறப்படுகிருன். அவள் இவனுக்குப் பலமாக இருக்க வேண்டுமே!

ஒரு துளி கண்ணீர் ராஜனுடைய தலையில் விழுந்தது.

''குஞ்சுநைநறு! உட்காருங்க.''

மற்றவர்களுக்கும் தட்சிணை கொடுத்தாயிற்று. அப்பொழுது காலாய்வீட்டு ஸாம்குட்டி சைக்கிளில் வந்து சொன்னன் :

''பெண்வீட்டார் வந்தாச்சு, மூணு காரில்.''

''அப்போ, நாம் புறப்படுவோம்.''

தீனும்மா அங்கே வந்தாள். உள்ளே வேலையாக இருந்ததால், உடம்பு குளித்து உடை மாற்றி வருவதற்கு நேரமாயிற்று.

''போய் வர்றேன், சித்தி.''

பெற்றதாயின் பாசத்துடன் தீனும்மா ராஜனைக் கட்டியணைத் தாள். அவளுடைய கண்களிலிருந்து நீர் வழிந்தது.

''அழறதுக்கு இதுதான் நேரமா ?''

குஞ்சுநைநு சொன்னார் :

''பொண்ணு ! அவன் போய் வரட்டும்.''

சந்தோஷமாக இருக்க வேண்டிய நேரம்தான். இருந்தாலும் பெற்ற அன்னையைப் பொறுத்தவரையில் அது ஐயம் கலந்த ஆவலைத் தூண்டும் வேளைகூட, அது ஒரு திருப்பம் என்பதே காரணம். செல்லமாகத் தாலாட்டி, வளர்த்து, ஆளாக்கிய பிறகு, எங்கிருந்தோ ஒருத்தி உரிமை கொண்டாட வருகிறாள். இனிமேல் அவர்கள் இருவரும் ஒன்று இருவரும் தூங்குவது வேறொரு கூரை யின்கீழ். சம்பாத்தியம், சேமிப்பு எல்லாம் வேறு. அவன் பிஞ்சுக் கைகளும் பிஞ்சுக்கால்களும் வளர்ந்துவருவதைக் காணத் தவமிருந்த நான் தனியாகி விடுவேனு; இறக்கும் தறுவாயில் ஒரு சொட்டுத் தண்ணீர் வாயில் ஊற்றித்தர அவன் என்னருகில் இருக்கமாட்டானு என்றெல்லாம் அன்னையானவள் எண்ணுவாள்.

எல்லோரும் தோட்டவாயிலைக் கடந்து போவதைத் தீனும்மா வும் மற்றவர்களும் பார்த்துக்கொண்டு நின்றார்கள். சிறிதுநேரம் கழித்துக் கோவில் மணியோசை கேட்டது.

சமையற்காரர்களில் ஒருவன் சொன்னான் :

''மணி அடிக்குது. சீக்கிரமாகட்டும். அரை நாழிகைக்குள் அவர்கள் வந்துவிடுவார்கள்.''

குஞ்சுநைநு நினைத்துப் பார்த்தார் :

தோழனும் தோழியும், மணமகனுக்கும் மணமகளுக்கும் இரு பக்கங்களிலுமாக நின்றுகொண் டிருப்பார்கள். உண்மையில் கர்த்தர்தானே மணமகன், சபை மணமகள். பெருமையின் வஸ்திரத்தை நீர் அதற்கு அணிவித்தீர். தண்ணீராலும் ஆவியாலும் திருமணம் நிச்சயிக்கப்பட்டது என்று எழுதியுள்ளது......

''யார் அங்கே ? செரியன்தானே ?''

''என்ன மாமா ?''

''ஜமக்காளமும் துணியும் விரி. அவங்க இப்போ வந்து விடுவாங்க.''

மோதிரம் அணிவிக்கும் சடங்கு ஆரம்பமாயிருக்கும். மோதிரத் தின் மீது கையை வைத்துக்கொண்டு பரிசுத்தத் திருச்சபையின் சந்தானங்களின் சந்தோஷத்திற்காக என்னும் ஆசீர்வாதத்துடன்

மணமகனின் வலதுகை மோதிரவிரலில் 'பட்டக்காரர்' மோதிரம் அணிவிக்கிறார் — பெண்களே! கர்த்தருக்குக் கீழ்ப்படிவது போல உங்கள் சொந்தப் புருஷருக்கும் கீழ்ப்படியுங்கள். கிறிஸ்து சபைக்குத் தலையாயிருப்பதுபோல் புருஷனும் மனைவிக்குத் தலையாயிருக்கிறான். அவரே சரீரத்திற்கும் இரட்சகராயிருக்கிறார். ஆகையால். சபையானது கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படிகிறதுபோல் மனைவிகளும் தங்கள் சொந்தப் புருஷர்களுக்கு எந்தக் காரியத்திலும் கீழ்ப்படிந்திருக்க வேண்டும்...

''தீனம்மா!''

''எல்லாம் சரியாக இருக்கா?''

''ரஸ்தாளிப்பழம் போதாதுன்னு சந்தேகம்.''

''அப்புறம்?''

''ஸண்ணியைச் சைக்கிளில் அனுப்பியிருக்கேன். அவன் இப்போ கொண்டுவருவான்.''

''அப்பா!''

''என்னடா?''

''காபி, டீ ஏதாவது வேணுமா?''

''வேண்டாம்.''

''சாப்பிடறதுக்கு எவ்வளவு நேரமாகுமோ தெரியாது.''

''பரவாயில்லே.''

இப்போது மகுடம் அணிவிக்கும் சடங்காக இருக்கும் பையன் தலைவணங்கி நிற்பான். தங்கச் சங்கிலியிலுள்ள சிலுவையைச் சாமியார் இடதுகரத்தில் பிடித்துக்கொண்டு தம் வலது கரத்தைப் பையன் தலைமீது வைப்பார். பிறகு 'க்லீலோபீ தேது மோரேன்' சொல்வார்.

தாலிகட்டுவதற்காகப் பெண்ணைப் பின்னால் சற்றுத் தள்ளி நிறுத்துகிறார்கள். தாலிகட்டும்போது ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். 'பெண் முடிச்சாக' இருக்கக் கூடாது. சாமியார் அதை அவிழ்த்து மறுபடியும் சரியாகக் கட்டுகிறார். ஐயே! வெட்கம்! முகூர்த்தப் புடவையைப் போர்த்துகிறார்கள். அடுத்தபடியாக மணப் பெண்ணிடம் பையனின் சகோதரிக்குள்ள உரிமை. சகோதரிகள்

மணப் பெண்ணைத் தொடுகிறார்கள்; முதுகைத் தடவுகிறார்கள். முகூர்த்தப் புடவையைச் சரிவரப் போர்த்துகிறார்கள்.

"இது நம் தந்தையர்களிடமிருந்து நமக்குக் கிடைத்ததும் முன்னோர்கள் நம்மிடம் ஒப்படைத்துள்ளதுமான ஒரு பொறுப் பாகும். இப்போது நீங்கள் கடவுள் சன்னிதானத்திலும், நம் கர்த்தரது சிங்காதனமான 'ஜீவ மேசை'க்கும் 'ஸ்லீபாவிற்கும்' பரிசுத்தமான 'ஏவன் கோலியோ'விற்கும் இந்த ஜனங்களுக்கும் முன்னால்தான் நிற்கிறீர்கள் என்பதைக் கவனத்தில் வையுங்கள். இந்த நேரத்திலிருந்து நான் உங்களை ஒருவருக்கொருவர் பொறுப் பில் விடுகிறேன். எனக்கும் உங்களுக்கும் நடுவில் ஆண்டவர் மத்தியஸ்தராக இருப்பாராக. சட்ட திட்டங்களுக்கு மாறாக நீங்கள் செய்வதனைத்திலும் நான் நிரபராதியாக இருப்பேன்......'

''பன்னீர் தெளிக்க இரண்டு பெண்குழந்தைகள் வேணும்.''

''ஒருத்தி குஞ்சப்பி மகள். இன்னொருத்தி...?''

''நானும் தெளிக்கிறேன், அப்பா !''

''கெட்டிக்காரி. அவர்கள் வரும்போது இதோ இங்கே வாயி லுக்குப் பக்கத்தில் நிற்கணும்.''

''எலுமிச்சம் பழம், சாம்பிராணி, சந்தனம் – எல்லாம் எடுத்து வை.''

அச்சன்குஞ்சு மாதாகோவிலிலிருந்து வியர்க்க வியர்க்க ஓடி வந்தான்.

''என்னடா கண்ணு ?''

''கல்யாணம் முடியப்போகுது.''

''நீ வரும்போது என்னடா நடந்துகிட்டிருந்தது ?''

''ராஜண்ணையும் மணப் பெண்ணையும் கை பிடிக்க வைச்சுக் கிட்டிருந்தாங்க.''

''அப்படிச் சொல்லு.''

குஞ்சுநைநா கேட்டார் :

''என்ன ?''

''கையைப் பிடிச்சாச்சு.''

''ஆ... இனி ஓர் உபதேசந்தான் இருக்குடா.''

"இவள் தன் உறவினர்களிடமிருந்து பிரிந்து கணவரோடு சேர்க்கப்பட்டுள்ளாள். எனவே அவன் அவளை மகிழ வைக்க வேண்டும், அவளுடன் இரக்கமுள்ளவனாக நடந்துகொள்ள வேண்டும். அவனுக்கு உடுக்க ஆடையில்லாவிட்டாலும் அவளுக்கு உடுக்க ஆடை கொடுக்க வேண்டும். அவன் பசியோடிருந்தாலும் அவளுக்குப் புசிக்கக் கொடுக்க வேண்டும். அவன் தாகமாக இருந்தாலும் அவளுக்குப் பருகக் கொடுக்க வேண்டும். அவளும் சட்டப்படி அவனுக்குத் தொண்டு புரியக் கடமைப் பட்டவள்..."

கார் ஒன்று வாசல் பக்கம் வந்து நின்றது. குழந்தைகள் வாசலுக்கு ஓடினார்கள். பெண்கள் எட்டிப் பார்த்தார்கள்.

"அவங்களேதான்!"

குஞ்சுநைனா நாற்காலியிலிருந்து எழுந்தார். கையைப் பிடித்துக்கொள்ள யாராவது பக்கத்தில் இருக்கிறார்களா என்று பார்த்தார். எல்லோரும் மணப் பெண்ணைப் பார்க்கப் போய்விட்டார்கள். கைத்தடி எங்கே? பெண் வீட்டாரில் பெரியவர் யார்? நரைத்த தாடிக்காரனா? அங்கவஸ்திரக்காரனா? கால்கள் தரையில் ஊன்ற முடியவில்லையே. பந்தல் தலைகீழாகச் சரிகிறதே!

"பசங்களா!"

"............"

"கொஞ்சம் பிடியுங்கடா!"

யாரோ அவரைப் பிடிக்க ஓடி வந்தார். அதற்குள் குஞ்சுநைனா கீழே விழுந்தார்.

# எட்டு

பொழுது இன்னும் புலரவில்லை. அரிக்கேன் விளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. ராஜன் பெட்டியை மீண்டுமொருமுறை திறந்து பார்த்தான். ஏதாவது மறந்து போச்சா? 'பே புக்', 'ரெயில்வே வாரண்டு', 'லீவு ஸர்டிஃபிகேட்' எல்லாமே இருக்கின்றன. பெட்டியைப் பூட்டிய பிறகு மறுபடியும் வாயிற் பக்கம்

பார்த்தான். பேபி மச்சான் இன்னும் வரக் காணேமே? வந்த பிறகுதான் போகலாம் என்று அவன் சொல்லியிருந்தான். பெட்டி படுக்கையைத் தூக்கி வர, சாத்தப்புலையன் முற்றத்திலே நின்று கொண்டிருந்தான்.

ராஜன் கடிகாரத்தைப் பார்த்தான். ஐந்தரை மணி. ஆறு நாற்பதுக்கு ரெயில்.

தீனும்மா கூறினள் :

''பிரார்த்தனை செய்வோம் கண்ணு. அதற்குள் பேபி வந்து விடுவான்.''

குஞ்சுநைநு படுத்தபடியே சொன்னர் :

''மாத்யு இன்னமும் வரவில்லையே!''

''ராத்திரியானுலும் நேற்றைக்கே வர்றதாகச் சொல்லிப் போனவர். இனியும் அவருக்காகக் காத்திருந்தால் அவன் இன்னைக்குப் போக முடியுமா?''

''சின்னப் பொண்ணு. வேதப் புத்தகம் படியம்மா—சங்கீதம்.''

சாந்தா கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். கலங்கிய கண்களும், கண்ணீர் உலர்ந்த கன்னங்களும் யார் கண்ணிலும் படக்கூடாது என்று நினைத்திருந்தாள்; இரவு சற்றுக் கூடக் கண்ணயர முடியவில்லை.

''திறக்கிற இடத்தைப் படி. பலன் தெரியும்.''

வேதப் புத்தகம் திறந்தபோது திரும்பவும் விழிகள் நிரம்பினதை மற்றவர்களுக்குத் தெரிவிக்காமல், படித்தாள் :

''கர்த்தாவே! உம்மை நம்பியிருக்கிறேன். நான் ஒருகாலும் வெட்கமடையாதபடி செய்யும். உமது நீதியின் நிமித்தம் என்னை விடுவியும். உமது செவியை எனக்குச் சாய்த்து, சீக்கிரமாய் என்னைத் தப்புவியும். நீர் எனக்குப் பலத்த துருகமும், எனக்கு அரணுமாயிரும்......''

அப்போது அவளால் தன் கண்ணீரை மறைக்க முடியவில்லை. வேதப் புத்தகத்தின் தாளில்கூட ஒன்றிரண்டு துளிகள் விழுந்தன. எழுத்துக்கள் தெரியவில்லை.

குஞ்சுநைநு சொன்னர் :

''பயப்படுவதற்கு எதுவும் இல்லை. கர்த்தர் துணை இருப்பார்'' உமது கையில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன். சத்திய பரனாகிய கர்த்தாவே ! நீர் என்னை மீட்டுக் கொண்டீர்......

''ஜெபம் பண்ணுவோம், மாமா !"

பிரார்த்தனை முடிந்தபோது பேபி வந்தான். பெட்டியும் படுக்கையும் தூக்கிக்கொண்டு சாத்தன் ரெயிலடிக்குப் புறப்பட்டான்.

''போய் வரட்டுமா, தாத்தா !''

''போய் வா, கர்த்தர் காப்பார்.''

''போய் வரட்டுமா, சித்தி ?''

''போய் வா, கண்ணு. போய்ச் சேர்ந்ததும் கடிதம் போடு.''

சாந்தா கதவைப் பிடித்தவாறு நின்றுகொண்டிருந்தாள். ராஜன் அருகில் சென்றபோது அறைக்குள் சற்று ஒதுங்கி நின்றாள். ராஜன் அவளை கட்டிப்பிடித்து அவள் நனைந்த கன்னங்களில் முத்தமிட்டான். அந்த அணைப்பிலிருந்து விடுபட மனமில்லாதவள்போல் அவள் நின்றாள்.

ஸிஸிலி தூங்கிக்கொண்டிருந்தாள். தீனம்மா அவளை எழுப்பினாள் :

''சின்னக்குட்டி, ராஜண்ணா ஊருக்குப் போகப் போகிறார்.''

''போயிட்டுச் சீக்கிரமாத் திரும்பி வர்றேன், கண்ணு.''

தீனம்மா சொன்னாள் :

''தபால் போடு. மறக்காதே."

''உம்.''

ராஜன் வாசலைத் தாண்டியபோது, சாந்தா தேம்பித் தேம்பி அழுதாள்.

குஞ்சுநைனா சொன்னார் :

''அழாதே, பொண்ணு.''

தீனம்மா ஆறுதல் கூறினாள் ,

''ஆறு மாதம் கழிச்சு லீவு எடுத்துக்கொண்டு வர்றேன்னுதானே போயிருக்கிறான். அதுவரை பிரார்த்திக்துக்கொண்டே காத்திரு, அம்மா.''

சொல்வது எளிது. ஆனல் உள்ளம் கேட்பதில்லையே! காடானலும் பாலைவனமானலும் என்னையும் கூடவே அழைத்துப் போகணும் — இனி எனக்கு யார் இருக்கிருர் அத்தான், உங்களைத் தவிர? நீங்கள் மட்டும்தான் எனக்கு — இப்படியெல்லாம் அவள் கெஞ்சிக் கேட்டாள். உண்மைதானே! பிறந்த வீட்டிற்குப் போனல் அவள் விருந்தினள். உறவினர்களும் அண்டை வீட்டார் களும் சொல்வார்கள் : "பனைச்சமேட்டிலிருந்து சாந்தா வந்திருக் கிருள்," காண்பவர் நலன் விசாரித்த பிறகு கேட்பார்கள் : "என்னிக் குப் போகிறே?" இங்கே வந்த பிறகு அவள் யார்? ராஜனின் மனைவி. அந்த மூன்று எழுத்துக்கள்தாம் அவளை வீட்டுடன் இணைத்துள்ளன, ராஜன்! அவர் எப்பேர்ப்பட்டவர், அவரது விருப்பு வெறுப்புகள் என்ன என்றெல்லாம் தெரிந்துகொள்ளக் கூட வாய்ப்புக் கிட்டவில்லை. சரியாக ஒன்றைப் போல்... ஒன்பது இரவு பகல்கள் ஒரு நொடி போலப் பறந்து சென்றன...

"இனி தூங்கு நள்ளிரவாச்சு."

"தூக்கம் வரல்லே."

"இரவு முழுவதும் கண் விழிக்கப் போறியா?"

"இன்று மட்டும்..."

"அழாதே, தூங்கும்மா."

எந்தப் புயலிலிருந்தும், காட்டுத் தீயிலிருந்தும் உன்னைக் காப் பாற்ற வலிமை இந்தக் கைகளுக்கு உண்டு என்று தெரிவிப்பதைப் போல என்னை நெஞ்சோடு சேர்த்து அழுத்தினர். அப்படியும் இமை களை மூட முடியவில்லை......

"சாந்தா!"

"என்ன?"

"வா, கொஞ்சம் காபி குடி."

"வேண்டாம்."

"ஏன் வேண்டாம்? நான் சொன்னேனே. துக்கத்தை மனசிலே அடக்கி வை. அதெல்லாம் பெண்கள் விதி—இந்தா குடி, ஒரு டம்ளர் தாத்தாவுக்கும் கொண்டுபோய்க் கொடு."

அப்புறம் அவள் வேண்டாம் என்று சொல்லவில்லே. ஒருவாய் மட்டும் குடித்தாள். பிறகு காபி டம்ளருடன் தாத்தாவிடம் சென்ருள்.

''தாத்தா!''

''ஏ...?''

''காபி.''

அவள் குரல் கம்மியிருப்பதைக் குஞ்சுநைனு கவனித்தார். எழுந்திருந்து அவள் கையிலிருந்து காபியை வாங்கிக்கொண்டு சொன்ஞர்:

''வருத்தப்படாதே. குணசாலியான ஸ்திரீ தன் புருஷனுக்குக் கிரீடமாயிருக்கிருள். அவள் புத்தியால் தன் வீட்டைக் கட்டுகிருள் மதிகேடாய் நடக்கும் அழகுள்ள ஸ்திரீ, பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்குச் சமானம் — படிச்சிருக்கியா? ''

''படிச்சிருக்கேன்.''

''நீதி மொழிகள்...?''

''ஆ-அதுவேதான்.''

''வேதப் புத்தகம் முழுவதையும் இரண்டு தடவை படிச்சிருக் கேன், தாத்தா! 'ஸண்டே ஸ்கூலிலே நான் வகுப்பெடுத்துக் கொண்டிருந்தேன்.''

''அப்படியா?''

''அம்மா மாதர் சங்கத்தின் செயலாளர். காலேயிலேயும் மாலே யிலேயும் பிரார்த்தனே செய்யாமல் இருந்ததில்லே, ஒரு நாள்கூட !''

''கார்த்திகைப்பள்ளிச் சாமியார் அங்கே வருவதுண்டா?''

''எப்போதாவது வருவார்.''

''சாமியாருக்கு உன்னேப் பிடிக்குமா?''

''ஆமாம். மகளேன்னுதான் கூப்பிடுவார். சாமியார் கொஞ்ச நாள் எங்க வீட்டிலே தங்கி இருந்திருக்கார், ஆனுல் எனக்கு ஞாபகம் இல்லே. அப்போ நான் சின்னக் குழந்தை.''

உம், தங்க மட்டுமா செய்தான்? பொண்ணு! நீ அந்தச் சாமியார் மகள். கூர்ந்து கவனித்தால் நல்லாத் தெரியும். அதே வளேந்த மூக்கு, சுருட்டை மயிர். அப்படி ஒவ்வொன்ருகக் கவனித்தால் தெரியும், கையும் களவுமாகக் கண்டு பிடித்த திருட்டுப் பொருள்

என்று. ஆனால் இங்கே நான் திருடன் பக்கத்தைச் சார்ந்தவன். அதனால் வெளியே சொல்லக் கூடாது. சரி போகட்டும், இதனால் யாருக்கு நஷ்டம்? சாமியாருக்குத்தான். இதுவரையிலும் இந்தக் குடும்பத்தைச் சார்ந்த சாமியார் என்று தீனம்மாவுக்குப் பெருமை. பேச்சு வாக்கில் 'என் அக்கா வீட்டுக்காரர் ஒரு பட்டக்காரர்' என்றெல்லாம் சொல்லி வந்தாள். ஆனால் இப்போது? பயிர் முற்றி நிற்கும் வயல் வரப்பிலோ அல்லது, புதுசாக் கட்டும் வீட்டெதிரில் திருஷ்டிப் பரிகாரத்துக்காக வைத்திருக்கும் தாடியும் மீசையும் வரைந்த சோளப் பொம்மை அந்தப் பொம்மைக்குப் போட்டிருக்கும் கிழிந்த துணி அவன் அணிந்திருக்கும் அங்கி. நன்மை தீமைகளின் அறிவின் கனியைப் புசித்த ஆதாம், கர்த்தரின் எதிரில் குற்றவாளி யாகப் பிடிபட்டு நின்றது போல அவன் எதிரில் நிற்கிறான். எனக்கும் என் சந்ததியருக்கும் இதனால் கிடைத்தது என்ன? பைங்கிளி போன்ற ஒரு பெண். ஞானமும் கடவுள் பக்தியும் உள்ளவள். பையனோடு நடக்கத் தகுதியுள்ளவள்...........

''தாத்தா!''

''ஏ..?''

''காபி குடியுங்க. ஆறிவிடப் போகுது.''

''குஞ்சுச்செறுக்கன் வீட்டைத் தவிர மற்றவங்க வீடுகளுக்கெல்லாம் விருந்துக்குப் போனாய், இல்லையா?''

''ஆமாம். ஒரு பெரியப்பா வீட்டுக்குப் போகவில்லை.''

''உன் மாமனாருடைய இரண்டாவது அண்ணா வீடு.''

''அந்த வீட்டு நாத்தனார்களெல்லாம்கூட என்னைப் பார்க்க வந்தாங்க.''

அவனுக்கு மனத்தாங்கல் போலிருக்குது. கல்யாணத்துக்கு வந்தான். ஆனாலும் எதுவும் சாப்பிடவில்லை அது மட்டுமா, இரண்டு காசு செலவாகிற காரியம் என்றால் அவனை எதிர் பார்க்க வேண்டாம்! இதைப்பற்றிக் கேட்டால் நான் ஏழை; யாராவது வந்தால் உட்காரவைக்க இடம்கூட இல்லை என்றெல்லாம் சொல்வான், அதுவும் உண்மைதான். அவன் இருப்பதோ குடிசையைவிட மோசமான இடத்திலே.

ரெயில் போகிற சத்தம் கேட்டது.

''ரெயில்தானே போகுது?''

''ஆமாம்.''

''ராஜன் அதிலே இருப்பான்.''

அவர் ரெயிலில் உட்கார்ந்துகொண்டு ஏதேதோ யோசனையில் மூழ்கியிருப்பார். நாளைக் காலையில் சென்னையை அடைவார். அங்கிருந்து இரண்டு நாள் பயணம், டில்லிக்கு. அடுத்தநாள் அமிர்தஸரஸ். நண்பர்களெல்லாம் சுற்றி உட்கார்ந்து கிண்டல் செய்வார்களாம்; போட்டோவைப் பார்த்துவிட்டுக் கருத்தைக் கூறுவார்களாம்..............

''சாந்தா!''

''என்ன?''

''என்னை முதல்முதலாகப் பார்த்தபோது என் அத்தான்னு கூப்பிட்டே?''

''இதற்கு முன்னாலேயே உங்களைப் பார்த்திருக்கிறதாக என் உள்ளம் கூறியது. இப்படி ஓர் உருவம் என் இதயத்தில் இருந்தது.''

''பொய்.''

''நிஜமாக, அத்தான்.''

அப்புறம் எதுவுமே பேசவிடவில்லை. எப்போதும் வேடிக்கையும் விஷமமும்தான் அவருக்கு. ஓர் இடத்திலே உட்கார்ந்து எந்தக் காரியமும் செய்ய விடமாட்டார். முறைப்பாக இருந்து பார்த்தேன். கோபித்துப் பார்த்தேன். அப்போது வேடிக்கையாகப் பேசியோ, விஷமம் பண்ணியோ சிரிக்கவைப்பார். இப்பொழுது ரெயிலிலே உட்கார்ந்துக்கொண்டு இதெல்லாம்பற்றி யோசித்துக்கொண்டிருப்பார்..... .........

காபி டம்ளரை எடுத்துக்கொண்டு சமையலறைக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள் சாந்தா. ஒருவன் வீட்டிற்குள் வந்தான்; வாலிபன். அவன் சாந்தாவை உற்று நோக்கினான். பிறகு புன்முறுவலித்தான். சாந்தா தலை குனிந்தவாறு சமையலறைக்குள் போனாள்.

''தாத்தா!''

''யாரு?''

''நான்தான்.''

''நான்தான்னு சொன்னால் ?''

தீனும்மா வெளியே வந்தாள் :

''அட. இது யாரு ? மாமாவுக்குத் தெரியலையா ?''

''யாரு, பொண்ணு?''

''மாமா ! காலாய்வீட்டு ஜோணி.''

''ராஜன் போய்விட்டான் இல்லையா ?''

''பொழுது விடியும்போதே போய்விட்டான்.''

''நேற்றுக்காலையிலே அவனைக்கடைத்தெருவிலே பார்த்தேன்.''

''டேய், பக்கத்தில் வாடா.''

ஜோணி தாத்தாவிற்கு அருகில் சென்றான்.

''நான் இன்னைக்கு வயநாட்டுக்குப் போறேன், தாத்தா ?''

''வளைந்த வட்டத்துக்கா ?''

தீனும்மா சிரித்தாள் :

''வயநாட்டுக்கு மாமா, மலபாரிலே இருக்கு அந்த இடம்.''

''ஏண்டா அங்கே போறே ?''

''அங்கே நூறு ஏக்கர் எஸ்டேட்டு வாங்கியிருக்கோம்.''

''எதுக்கு ?''

''நான் அங்கே போய் இருக்கப் போறேன். இப்போ ஒண்ணும் திரும்ப மாட்டேன்.''

தீனும்மா கேட்டாள் :

''அதென்ன ஜோணி ! நீ அங்கே போய்த் தனியாகவா இருக்கப் போறே ?''

''தனியாக இருக்கிறதுதான் நல்லது, சித்தி. ஒரு வேலைக்காரனை வைச்சுக்கப் போறேன்.''

''விஷயம் என்னன்னு சொல்லு, ஜோணி!'''

''நானும் அப்பாவும் இனி ஒண்ணாக இருக்கிறது என்பது நடக்காத காரியம்.''

''ஏதாவது சண்டையா ?''

''சண்டையெல்லாம் தான் தெரியுமே. இனி, கொலை நடக்க வேண்டியதுதான் பாக்கி. அது நடக்கிறதுக்கு முன்னாலேயே அங்கிருந்து போகிறதுதானே நல்லது ?''

குஞ்சுநைனு கேட்டார் :

''என்ன...என்ன ?

''ஒண்ணுமில்லே மாமா!...உங்க அம்மா என்ன சொன்னுங்க ?''

''அம்மா என்ன சொல்வாள் ? சொல்ல விட்டால்தானே ? அம்மாவுக்கு இப்போ உடம்பு வேறு சரியில்லே.''

குஞ்சுநைனு கேட்டார் :

''உங்க அப்பா விஷயம்தானேடா ? அவனுக்குக் கட்டளே இட நீ யாருடா ?''

''நான் ஒண்ணும் கட்டளே இடவில்லே. ஆனுல் இந்த ஊரில் வாழணுமே.''

''பெரிய ஊர் ! நான் பார்க்காத ஊராடா இது ? யாருடா இந்த ஊரிலே யோக்கியன் ?''

''மெதுவாகப் பேசுங்க. மருமகள் அந்தப் பக்கம் இருக்காளே. மாமாவுக்கு இன்னேக்கு இது போதும் !''

குஞ்சுநைனு அவள் சொன்னதைச் சட்டை செய்யவில்லே !

''அப்புறம், ஒருவன் தெரிந்து செய்கிற பாவம். அதுக்குக் கடவுள் தண்டனே கொடுப்பார்.''

''ஆனுல், ஊர்ப் பழிக்காவது பயப்பட வேண்டாமா?''

''இந்தக் காலத்திலே சாமியார்களுக்குக்கூட ஒழுக்கம் இல்லே. அப்புறம்தானே...''

தீனும்மா அவசர அவசரமாகச் சொன்னுள் :

''கொஞ்சம் சும்மா இருங்க, மாமா.''

''போய் வர்றேன், தாத்தா.''

''போய் வா''

''வரட்டுமா, சித்தி?''

''போய் வா, ஜோணி!''

ஜோணி போன பிறகு தீனும்மா சொன்னுள் :

''மாமா!''

''ஏ...?''

'' என்ன சொல்றீங்க என்பது உங்களுக்கு நினேவு இருக்கா?''

''ஏன்?''

"வீட்டு மருமகள் அந்தப் பக்கம் இருக்கிருள் என்பதை மறந்து போய்விட்டீங்களா ?''

''ஏன் ?

''சாமியார்களையும் மற்றவங்களையும்பற்றிச் சொல்லி வந்த போது, நான் பயந்தே போனேன் . ''

''சின்னப் பொண்ணு இருக்கிறதை நான் மறந்து போனேன்.''

''இப்படி நினைவில்லாமல் அதுவும் இதுவும் பேசினல் எப்படி? ...என்னவானலும் மானக்கேடாப் போச்சு.''

"எது ?''

''ஜோணி அப்பா சமாசாரம்.''

''சகித்துக் கொள்ளத்தான் வேணும். உன் உடம்பில் ஒரு புண் வந்தால் அதை நீதானே சகிக்கணும் ? அதைத் தவிர வேறு வழி இருக்கா?''

"நடந்தது நடந்துபோச்சு. இனி ஏதாவது யோசிச்சுப் படுத்து கிட்டு உளறிக் கொட்டாமல் இருந்தால் போதும்.''

தீரும்மா உள்ளே போனபிறகு குஞ்ஞநைனு எண்ணினர் :

நான் இனிமேல் யாரிடமும் எதுவும் சொல்லப் போவதில்லை. யார் எப்படிப் போனல் எனக்கென்ன? வினை விதைத்தவன் வினை அறுப்பான். நியாயப் பிரமாண நாட்களில் அவன் கணக்குச் சொல்லாமல் தப்பிவிட முடியாது. 'எனக்குத் தெரியாது, நான் பார்க்கவில்லை' என்றெல்லாம் சொல்லி ஏமாற்ற முடியாது நல்ல வேடிக்கை! கர்த்தரின் புத்தகத்தில் எல்லாம் விவரமாகக் கூறப் பட்டுள்ளது. 'நான் என் வீட்டின் ஜன்னலருகே நின்று, பலகணி வழியாகப் பார்த்தபோது, பேதையர்களாகிய வாலிபருக்குள்ளே, ஒரு புத்தியீன வாலிபனைக் கண்டு அவனைக் கவனித்தேன். அவன் மாலை மயங்கும் அஸ்தமன நேரத்தில், அவள் இருக்கும் தெருவில் சென்று, அவள் வீட்டு வழியாய் நடந்து போனன். அப்பொழுது, இதோ வேசியின் ஆடையாபரணம் தரித்த ஒரு தந்தி ரக்காரி அவனுக்கு எதிர்ப்பட்டாள். அவள் வாயாடியும் அடங்காத வளுமானவள். அவள் நாணமில்லாமல் அவனைப் பார்த்து, சமா தான பலிகள் என்மேல் சுமந்திருந்தன. இன்றைக்குத்தான் என்

பொருத்தனைகளை நிறைவேற்றினேன். ஆதலால், உன்னைச் சந்திக்கப் புறப்பட்டு, உன் முகத்தை ஆவலோடு தேடினேன். இப்பொழுது உன்னைக் கண்டு பிடித்தேன். என் மஞ்சத்தை இரத்தின கம்பளங்களாலும், எகிப்து தேசத்து விசித்திரமான மெல்லிய வஸ்திரங்களாலும் சிங்காரித்தேன். புருஷன் வீட்டில் இல்லை. தூரப் பிரயாணம் போயிருக்கிறான். வா... என்றாள்.

அவள் பின்னால் போகிறவன் நியாயப் பிரமாண நாட்களில் கணக்கைச் சொல்லாமல் தப்பிவிட முடியாது...

வீட்டுப் பின் பக்கம் புலையப் பெண்களின் குரல் கேட்டது. ஸிஸிலி ஓடிவந்து சொன்னாள் :

"அக்காவைப் பார்க்கிறதுக்குச் சாத்தப் புலையனுடைய அம்மாவும் மற்றவங்களும் வந்திருக்காங்க."

"அம்மாவா ?"

"ஆமாம். என்னைப் பெரிய எசமானின்னு கூப்பிடுவாளே, அதே அழகிப் புலச்சிதான்.

"உம்...."

"அழகிப் புலச்சி சொல்றாள். சாந்தக்காதான் நல்லவங்களாம்."

"அப்போ நீ என்ன, மோசமா ?"

"சாந்தக்காவுக்குப் பாடத் தெரியும்."

"பாடத் தெரியுமா ?"

"உம், நீங்க பாடச் சொன்னால் பாடுவாங்க."

"பெரிய எசமான் !"

"யாரு, அழகியா ?"

"ஆமாம். சின்ன எசமானியைப் பார்க்கலாமுன்னு வந்தேனுங்க. நான் வயலுக்கு அறுக்கப் போயிருந்தேனுங்க. இறந்து போன சின்ன எசமானி மாதிரி லச்சணமான கொழந்தே.

"குஞ்சம்மாவைப் போல ?"

"ஆமாங்க. மொகத்தைப் பார்த்தாலே தெரியும், எசமான்."

"உம்."

' இறந்துபோன சின்ன எசமானியைப்பற்றி நினைச்சாலே ஒரே துக்கமுங்க. வேலை செஞ்சு திரும்பும்போது 'ஏன் அழகி ! இவ்வளவு

சீக்கிரமாத் திரும்பினே. எவ்வளவு வேலே செய்திருக்கேன்னு பார்த்துத்தான் கூலி தருவேன்...அப்படின்னு சொல்லுவாங்க...''

''அவள் என் வீட்டுக்கு விளக்காக இருந்தாள். அவள் இருக்கும் போது சம்பாதித்ததுதான். விளக்கை ஏற்றி ஆசைகாட்டி அணேத்து விட்டார்.''

''நெசம்தான், எசமான்.''

''உன் பிள்ளே உனக்கு ஏதாவது தர்ருனு ?''

''அவனுக்குப் பெண்சாதி, நாலஞ்சு கொழந்தேங்க எல்லாம் இருக்கே எசமான். அதுங்களுக்குக் கஞ்சி ஊற்றறதுக்கே படாத பாடு படருன், பாவம்.''

''உம். நீ போ! சாத்தனேக் கொஞ்சம் வரச் சொல்லு.''

குஞ்சுநைனு நினேக்கலானர் : தேவன் அழகியைக் கொண்டு வரும்போது அவளுக்குப் பன்னிரண்டோ பதினுன்கோ வயது இருக்கும். நல்ல சுறுசுறுப்பான பெண்ணுக இருந்தாள். நடவு நடுதல், களே பறித்தல், அறுவடை செய்தல், கதிர் அடித்தல் போன்ற எல்லா வேலேகளும் செய்வதில் கெட்டிக்காரி. பார்ப்பதற்கும் நன்ருக இருந்தாள். இந்த வீட்டிற்காக எவ்வளவு வேலே செய்திருக்கிருள்! அதெல்லாம் இப்போதுள்ளவர்களுக்கு நினேவு இருக்காது. இந்தக் காலத்தில் வேலே செய்தால் கணக்குச் சொல்வாங்க. அதில் என்ன தவறு இருக்கு ? இரவென்றும் பகலென்றும் பாராமல் வயலில் வேலே செய்தும், வரப்பில் தூங்கியும், வாழைத்தோட்டத்தைக் காவல் காத்தும் அவர்கள் என்ன சுகத்தைக் கண்டார்கள். நல்ல உணவின்றி, கடுமையாக உழைத்து அவர்களில் எத்தனேயோ பேர் அற்ப ஆயுளுடன் இவ்வுலகை விட்டுப் போனுர்கள். பக்கத்துக் கிராமத்திலிருந்து எருச் சுமந்து வரும்போது வழியில் 'தடார்' என்று விழுந்து தேவனுடைய தம்பி கண்டங்காளி செத்தான் ! இரத்தமெல்லாம் வியர்வையாக்கி அவர்கள் உழைத்தார்கள். பலனே அனுபவிப்பதோ வேறு சிலர். நினேத்துப் பார்த்தால் அநியாயம். ஆனுல் கர்த்தரின் புத்தகத்தில் அது நீதியாக்கப் பட்டுள்ளது. பழைய ஏற்பாடு காலத்திலேயே பாடுபடுபவர்களும் சுகம் அனுபவிப்பவர்களும் இருந்தார்கள். இல்லாதவனுடையதைக்கூட இருப்பவனுக்குக் கொடுக்கப்படும் என்று கூறப்பட்டுள்ளது. அது போகட்டும்,

ஐந்து விரல்களும் ஒரே மாதிரியாக இருக்கின்றனவா ? பத்து நேந்திர வாழை நட்டால் எல்லாக் குலைகளிலுமா பன்னிரண்டு சீப்புகள் இருக்கும்? இருக்காது. பெரியவனையும் சின்னவனையும் படைத்தவர் கடவுள்தான்......

''தாத்தா ! பல் தேயுங்க, காபி குடிக்கலாம்.''

குஞ்சுநைனு கண் திறந்து பார்த்தார். சாந்தா நின்றுகொண்டிருந்தாள். முகத்தில் கவலை குடிகொண்டிருந்ததென்றாலும் பெரும் துயரத்தை அவள் மனத்துள் அடக்கி வைத்திருந்தாள்.

காபியும் பலகாரமும் சாப்பிட்டுக்கொண் டிருக்கும்போது அவரது தேவைகளைக் கவனித்தறியச் சாந்தா கதவருகில் நின்று கொண்டிருந்தாள், நாலைந்து நாட்களாகக் குறுப்பைக் காணோமே என்று குஞ்சுநைனு மனத்துள் எண்ணினர். திருமணத்திற்குப் பிறகு ஒரு தடவைதான் வந்தான். ஒரு வேளை இன்று மத்தியானம் வருவான்.

அன்று நண்பகலுக்குப் பிறகும் குறுப்பு வரவில்லை, பேச்சுத் துணைக்கு யாரும் இல்லாதிருந்ததனுல் பற்பல எண்ணங்களில் மனத்தை அலையவிட்டுப் பொழுதைப் போக்கினர், நள்ளிரவுக்குப் பிறகுதான் சிறிது கண்ணயர முடிந்தது, அப்படி மயங்கிப் படுத்துக் கொண்டிருக்கும்போது கட்டிலுக்கருகில் யாரோ வந்து கூப்பிடும் குரல் கேட்டது,

''சித்தப்பா இல்லையா ?''

''யாரு ?''

''நான்தான், தாத்தா''

''பொண்ணுா !''

''என்ன ?''

''விளக்கை ஏற்று.''

சாந்தாவும் தீனும்மாவும் விழித்துக் கொண்டார்கள், தீனும்மா விளக்கை ஏற்றிவிட்டு, அதை எடுத்துக்கொண்டு திண்ணைக்கு வந்தாள். அவள் பயந்தாள் தாடிமீசையுடன் ஒருவன் திண்ணையில் நின்றுகொண் டிருந்தான்.

''சித்திக்கு என்னைத் தெரியவில்லையா ?''

தீனும்மா உற்று நோக்கினள்.

''தானியல்......!''

''ஆமாம்.''

''ஆண்டவரே! ஆளை அடையாளமே தெரியவில்லையே? இந்தத் தாடியையும் மீசையையும் பார்த்து, நான் பயந்தே போனேன்.''

தானியல் சிரித்தான் :

''சித்தப்பா எங்கே ?''

''கொல்லத்துக்குப் போயிருக்கிறார்...... மாமா! ஆளைத் தெரியவில்லையா? கல்லுவெளியில் தானியல்...''

''யாரு ?''

''குஞ்சுச்செறுக்க மச்சான் மகன்...''

''விளக்கை இப்படிக் கொண்டுவா, பார்க்கட்டும்.''

தீறம்மா விளக்கைக் காட்ட, வந்தவனை ஏற இறங்கப் பார்த்தார். சாம்சனைப் போன்ற உருவம், கூரையில் தலை இடிக்குமளவிற்கு. கால் சட்டையும், கோட்டும், பெட்டியும்...

''நீ எங்கிருந்துடா வர்றே, இந்த நேரத்திலே ?''

''பம்பாயிலிருந்து, தாத்தா !''

''எங்கிருந்து ?''

தீறம்மா உரத்த குரலில் சொன்னாள் :

''பம்பாயிலிருந்து.''

''அந்தி நேரத்திலேயா கிளம்பினே ''

தானியல் சிரித்துக்கொண்டே சொன்னான் :

''கிளம்பி இரண்டு நாளாச்சு, பம்பாய்க்கு இங்கிருந்து இரண்டு நாள் இரயிலில் போகணும்.''

''இத்தனை நாளைக்குப்பிறகு வந்த நீ இரண்டு நாளுக்குள்ளேயே போகப் போறாயா ?''

தானியல் மேலும் கீழும் பார்த்தான். தீறம்மா சொன்னாள் :

''காது சரியாகக் கேட்காது. போதாக் குறைக்குத் தூக்கக் கலக்கம்.''

''நீ உன் அப்பாவுக்கு எதுவும் அனுப்புவதில்லையா ?''

''யார் இல்லைன்னு சொன்னது ?''

''அவன் ரொம்பக் கஷ்டப் படறான். என்ன என்ன செப்பிடு வித்தைகள் எல்லாம் செய்து அவன் உங்களைப் பெரியவங்களாக்கினான்! அவனுக்கு இன்னும் கஷ்டம் ஓய்ந்த பாடில்லை. இப்போ வயசும் ஆச்சு, மண் வெட்டறதுக்கும், எருச் சுமக்கிறதுக்கும் போக முடியுமா ?''

''அப்பா சும்மா சொல்றார், தாத்தா ! உங்களை ஏமாற்றறார்.''

''ஏ...?''

''ஒவ்வொரு மாசமும் செலவுக்கு இருநூற்று ஐம்பது, அல்லது முந்நூறு ரூபாய் அனுப்பறேனே. போதாதா ?''

குஞ்சுநைனா திருதிருவென்று விழித்தார்.

''பதினைந்தாயிரம் ரூபாய் செலவில் கட்டி முடிக்கக் கூடிய ஒரு வீட்டினுடைய 'பிளான்' சரிபண்ணி வைக்கிறதுக்கும் எழுதியிருந்தேன்.''

தீனம்மா சொன்னாள் :

''நான் அன்னைக்கே மாமாவிடம் சொன்னேனே ; ஞாபகம் இருக்கா, கல்லுவெளி மச்சான் வீடு கட்டப் போகிற காரியம்?''

தானியல் தொடர்ந்து சொன்னான் :

''எவ்வளவு இருந்தாலும் இல்லேன்னுதான் சொல்வார் அப்பா. அதுதான் அவர் படிச்ச பாடம்.''

''அவன் இந்தச் சங்கதியெல்லாம் என்னிடம் சொல்லவே இல்லையடா !''

''நிஜத்தை யாரிடமும் சொல்ல மாட்டார்.''

தீனம்மா சொன்னாள் :

''எப்போவாவது கோவிச்சாலும் மாமாவுக்குப் பிள்ளைகளிடம் உயிர்.''

''நான் ரொம்ப நாளாகத் தாத்தாவைப் பார்க்க வரணும்னு நினைச்சுக்கிட்டு இருந்தேன். தாத்தா தள்ளாமல் படுத்திருக்கிறதாக ஒருநாள் கனவு கண்டேன்.''

''நாள் போகப்போகக் களைப்பு அதிகமாகிக்கிட்டே வருது.''

தானியல் சராய்ப் பையிலிருந்து நூறு ரூபாய் நோட்டுக் கட்டு ஒன்றை வெளியே எடுத்தான். அதிலிருந்து ஐந்து நோட்டுகள் எடுத்து, தீனம்மாவிடம் நீட்டியவாறு சொன்னான் :

''சித்தி, இதை வைச்சுக்குங்க, தாத்தா செலவுக்கு தேவைப் படும்போது எடுத்துக்குங்க.''

''வேண்டாம் கண்ணு.''

''ஏன்? நான் வேற்றுமனிதனு? தள்ளாமல் படுத்திருக்கிற தாத்தா பக்கத்திலிருந்து பணிவிடை செய்யக் கடமைப்பட்டவர்களில் நானும் ஒருவன், அதற்கு நேரமில்லை, அதனுல் என் கையில் இருக்கிற பணத்திலிருந்து ஒரு பங்கு கொடுக்கிறேன்,''

அப்போதும் தீனும்மா பணம் வாங்குவதற்குத் தயங்கினுள்,

''சித்தி! யோசனை பண்ணுதீங்க. என்னிடம் இருந்தால் ஐநூறல்ல, ஐயாயிரம் ரூபாய்கூடத் தாத்தாவிற்காகச் செலவு செய்ய நான் தயங்க மாட்டேன்.''

தீனும்மா அந்த நோட்டுகளை வாங்கிக் கையில் வைத்துக் கொண்டாள்.

''தாத்தா!''

''ஏ...?''

''நான் போறேன்.''

தானியல் மண்டியிட்டுத் தாத்தாவின் காலடிகளில் உட்கார்ந்தான்.

''தாத்தா! என்னை ஆசீர்வாதம் பண்ணுங்க.''

தானியலின் தலைமீது கையை வைத்துக் குஞ்சுநைனு வானத்தை நோக்கினுர். பிள்ளைகளோ, பேரன் பேத்திகளோ இந்நாள் வரையில் கேட்காத ஒன்றை அவன் கேட்கிருன். அவர் மனத்துள் பிரார்த்தித்தார்: சேனைகளின் தெய்வமான கர்த்தரே! இவனிடம் கருணை காட்டும். துன்மார்க்கிகளின் சதியிலிருந்தும், கொடியவர்களின் கலகத்திலிருந்தும் இவனைக் காப்பாற்ற வேண்டும்! ஆற்றங்கரைப் பூங்கா போன்றும், கர்த்தர் நட்டுள்ள சந்தன மரம் போன்றும், ஏரிக்கரையிலுள்ள தேவதாரு மரம் போன்றும் இவனை வளர்க்க வேண்டும்!

''உனக்கு எந்தக் கெடுதலும் வராது - போய்வா.''

தாத்தாவின் கால்களை முத்தமிட்டு எழுந்தான் தானியல். பிறகு விடைபெற்று நடந்தான். தீனும்மா நோட்டுகளை எண்ணிப் பார்த்தாள். இது கனவா நனவா? இவ்வளவு பெரிய ஒரு தொகையை இதுவரையில் அவள் ஒன்ருகப் பார்த்ததில்லை.

ஸிஸிலி அப்பாவிடம் சொல்லணுமா ? வேண்டாம். மாமாவுக்கும் எனக்கும் மட்டும்தானே தெரியும். துணிப்பெட்டியின் அடியின் மறைத்து வைக்கலாம். தேவைப்படும்போது அவரிடம் கொடுத்து வியப்பில் மூழ்கடிக்க வேண்டும்.

தானியலின் பை நிறைய நூறு ரூபாய் நோட்டுகள் ! அப்படியென்றால் வதந்தி உண்மைதான். கப்பலில் வருகிற பொருள்களை அரசாங்கத்திற்குத் தெரியாமல் கடத்திக்கொண்டு வந்து விற்கிறானும். ஓரிரண்டு மாதங்களுக்கு ஒருமுறை இரவு வேளையில் வீட்டிற்கு வந்து போகிறானும். எப்படியோ தொலையட்டும். இதெல்லாம் தெரிந்து என்ன ஆக வேண்டியிருக்குது ! என்னவானாலும், தானியல் பாசமுள்ளவன். அதனால்தானே நள்ளிரவிலே வந்து தாத்தாவிற்கு ரூபாய் கொடுத்துப் போனான்.........

''பொண்ணு !''

''என்ன ?''

''எவ்வளவு ?''

''ஐநூறு ?''

''உம். இருக்கிறவங்களிலேயே பாசமிருக்கிறவன்.''

''பிள்ளையிடம் சொல்லணுமா ?''

''ஏ...?''

''உங்க பிள்ளையிடம் சொல்லணுமா ?"

''வேண்டாம். உன்னை ஏமாற்றி வாங்கிக்கிட்டுப் போவான். அப்புறம் கண்டபடி செலவு செய்வான்.''

''துணிப்பெட்டிக்கு அடியில் வைக்கிறேன். பெரிய தேவை ஏதாவது வந்தால், எடுத்துக் கொடுக்கிறேன்.''

''அதுதான் நல்லது. பெரிய பெரிய செலவெல்லாம் வரப் போகுது.''

''என்ன செலவு ?''

''குழி. வெட்டணும். கல்லறை கட்டணும், நாற்பத்தோராவது நாளன்னைக்கு வேறு செலவு இருக்கு.''

''எப்பப் பார்த்தாலும் மாமாவுக்கு இதே ஞாபகம்தான். அப்போ செலவழிக்கிறதற்கு ஆயிரம்பேர் இருப்பாங்க.''

''இருந்தாலும் நாலுகாசு கையில் இருக்கிறதுதான் நல்லது, அம்மா! எது எப்படியானாலும் கல்லறை கட்டணும். அது பெரிய பெரிய ஆட்கள் கல்லறைகளுக்குப் பக்கத்திலே ஒண்ணும் வேண்டாம். தொலைவிலே தனியாக ஒரு இடத்திலே போதும். நான் யார் உதவியும் இல்லாமல் தன்னந்தனியாக வளர்ந்தவன். இருந்தாலும் என்னை அடக்கம் செய்கிற இடம் எதிர்காலத் தலைமுறையினர் காணும்படியான இடத்தில் இருக்கணும். கர்த்தர் பிறந்த திருநாள் திருவிழாவிற்கும் உயிர்த்தெழுதல் திருநாளன்றும் கல்லறையிலே மெழுகுவத்தி ஏற்றணும். கர்த்தர் இரண்டாவதாக எழுந்தருளும் போது 'தொண்டன் இதோ உள்ளேன்' என்று கூறி எழுந்திருந்து போக வசதியாக இருக்கணும் .''

''மாமா! கொஞ்சம் படுத்துத் தூங்குங்க. பொழுது விடிய இனி அதிக நேரமில்லை.''

தீனம்மா உள்ளே போனாள். துணிப்பெட்டி திறக்கும் சத்தம் கேட்டது. பெட்டிக்கு மணிப்பூட்டு. திறக்கும்போதும் பூட்டும் போதும் மணியடிக்கும். அவள் பிறந்த வீட்டிலிருந்து கொண்டு வந்த பெட்டி...... ...

கடவுளின் செயல்கள் எவ்வளவு வியக்கத்தக்கவை! அவருடைய வழிகள் அறிந்தவர் யார்? அபின் வாங்குவதற்குக் காசில்லையே என்று நினைத்திருக்கும்போது ஐந்நூறு ரூபாய் கிடைத்தது! இன்றைய நாள்வரை வழி அடைபட்டதில்லை! வாழ்க்கையில் அதிசய அனுபவங்கள் எத்தனை? தாவீது அறுபத்து இரண்டாவது சங்கீதத்தில் பாடியுள்ளது போல, 'எக்காலமும் என் ஆத்துமா தேவனை நோக்கி அமர்ந்துள்ளது. நான் நம்புகிறது அவராலே வரும். அவரே என் கன்மலையும், என் உயர்ந்த அடைக்கலமுமானவர். நான் அசைக்கப் படுவதில்லை..... .

''போ, விளக்கை அணைச்சுட்டுப் படுத்துத் தூங்கு.''

''................ ...''

''சொன்னது காதில் விழவில்லையா?''

''சிரிக்கிறாயா?...ஏ? யார் நீ?''

''நான்தான் அப்பா! குஞ்சம்மா.''

''கச்சைமுண்டு 'சட்டை, 'கவிணி' உடுத்தி நிற்பவள் வேறு யாருமல்ல; அவளேதான்!

"இத்தனை நாளாக நீ எங்கே ஒளிந்துகொண்டிருந்தே?"

"நித்திய ராஜ்யத்திலே. அப்பா, என்னுடன் யார் வந்திருக்கிறார்னு பாருங்க."

"எங்கே?"

"முற்றத்திலே நின்னுகிட்டு இருக்காங்க."

"யாரு?"

"அம்மா."

"உன் அம்மாவா?"

"ஆமாம் நாங்கள் உங்களை அழைச்சுக்கிட்டுப் போகத்தான் வந்திருக்கோம். இங்கே உங்களைக் கவனிக்க யார் இருக்காங்க? இங்கே இனிக்க இனிக்கப் பேசுகிறவங்களையெல்லாம் நம்பாதீங்க. எல்லாரும் வஞ்சனைக்காரங்க. எழுந்து வாங்க அப்பா, நம் வீட்டுக்குப் போவோம், வாங்க."

"எந்த வீடு?"

"அழிவில்லாத வீடு."

"உன் அம்மா ஏன் வெளியே நின்னுகொண்டிருக்கிறாள்?"

"உள்ளே வரமாட்டாளாம்."

"ஏன்?"

"அதையெல்லாம் போகும்போது அம்மாவிடம் கேளுங்க."

"நீண்டதூரப் பயணமா?"

"பக்கத்திலேதான் இருக்கு அப்பா, அதோ பாருங்க. கப்ரியேல் தூதன் உங்களை இறக்கையில் வைத்து அழைத்துப் போவான், காவல் தூதர்கள் ஒளி வஸ்திரத்தை உடுத்து நிற்கிறதைப் பார்த்தீங்களா?"

குஞ்சுதுறை பார்த்தார். வானத்தின் நடுவே கதவு திறந்திருந்தது. ரத்தினக்கம்பளம் விரித்தபடியன்... ...

"அப்பா உங்களுக்கு அணிவதற்கான அங்கியை நான் கொண்டு வந்திருக்கிறேன்."

சொல்லி முடிப்பதற்குள், அவள் புது அங்கியை அணிவித்தாள். புத்தொளி! புத்துயிர்! அவரால் எழுந்து நடக்க முடிகிறது.

"தைத்தடி வேணுமா?"

"வேண்டாம், அப்பா."

குஞ்சுநைனு எழுந்து நடந்தார். கைத்தடி எதற்கு? தேவையில்லையே! அவருக்கு ஒரே உற்சாகம்! குழந்தைகள்போல் ஓடுவதற்கு. அவள் அவருடைய தோளைப் பிடித்தாள். அட! இவ்வளவு வேகத்தில் வளர்ந்து விட்டாளே! முற்றத்தில் இறங்கிய போது அவர் கேட்டார்:

"எங்கே உன் அம்மா?"

குஞ்சுநைனு சுற்றும்முற்றும் பார்த்தார்.

"அவளைக் காணுமே, குஞ்சம்மா?"

குஞ்சம்மா பதில் பேசவில்லை. குஞ்சுநைனு அவள் முகத்தைப் பார்த்தார் இவள் குஞ்சம்மவா? இல்லையே! அட, இவள் பெண்ணம்மா அல்லவா? காதல் லீலையால் மயக்கினவள்!

"நான் இருக்கும் இடத்தில் அவர்கள் வருவார்களா?"

"நீ......"

"எத்தனை நாட்களாக உங்கள் வருகையை நோக்கிக் காத்துக்கொண் டிருக்கிறேன். நாம் முதல்முதலில் சந்தித்தது நினைவிருக்கா?"

"இருக்கு"

"வாரும், என் நேசரே! வயல்வெளியில் போய், கிராமங்களில் தங்குவோம். அதிகாலையில் திராட்சைத் தோட்டத்திற்குப் போவோம். திராட்சைக் கொடி துளிர்த்து, அதன் பூக்கள் மலர்ந்திருக்கின்றனவா என்றும், மாதுளைச் செடிகளின் பூக்கள் மலர்ந்திருக்கின்றனவா என்றும் பார்ப்போம். அங்கே என் நேசத்தை உமக்குத் தருகிறேன்......"

"பெண்ணம்மா! நான் கிழவயதை அடைந்திருப்பதை நீ பார்க்கவில்லையா?"

"யார் சொன்னது? நித்ய வாலிபம் நமக்குத் திரும்பக் கிடைத்திருக்கிறதே. என்னைப் பாருங்கள். என் கன்னங்களைப் பாருங்கள் ராணிகள் அறுபது பேர்களும், மறுமனையாட்டிகள் எண்பது பேர்களும், எண்ணற்ற கன்னியர்களும் என்னை 'அதிருஷ்டக்காரி' என்று அழைக்கிருர்கள். என் நேசரே! என்னை முத்தமிடும்......"

முத்தமிடுவதற்காக நெருங்கினார்.

புகைபோல், மேகம்போல் அவள் கையிலிருந்து நழுவிப் போனாள்.

வெற்றுவெளி.

.........

குஞ்சுநைனா திடுக்கிட்டு எழுந்தார். பரபரப்போடு சுற்று முற்றும் பார்த்தார். யாரெல்லாமோ அவரருகில் நின்றுகொண்டிருந்தார்கள். குஞ்சம்மாவையோ பெண்ணம்மாவையோ காணவில்லை.

ஓலமிட்டு அழும் குரல்.

இப்போது ஆட்களைப் புரிந்து கொள்ள முடிந்தது. தீனும்மா, சாந்தா, சின்னக்குட்டி ...அப்புறம்-

குஞ்சுச்செறுக்கன் மனைவி, அவள் சின்னப் பையன்.

"மாமா !"

"ஏ...?"

"தானியலைப் போலிசார் கைது செய்துக்கிட்டுப் போனாங்களாம். குஞ்சுச்செறுக்க மச்சானையும் பிடிச்சுக்கிட்டுப் போயிருக்காங்களாம்."

"கைது செய்தா ?"

"என் பிள்ளையைப் பிடிச்சுக்கிட்டுப் போனாங்களே. எனக்கு இனி யார் துணையிருக்கா, தீனும்மா !

"அக்கா ! கொஞ்சம் அழாமல் இருங்க."

தீனும்மா அக்காவின் கையைப் பிடித்து உள்ளே கொண்டு போனாள்.

குஞ்சுநைனா கண் விழித்தபடி படுத்துக்கொண்டிருந்தார். காலை இன்னும் மலர்ந்திருக்கவில்லை. கனவும் நனவும் ஒன்றையொன்று கலந்திருந்தன. மெய் எது, பொய் எது என்று தெரியவில்லை. அப்படி யோசித்தவாறு படுத்துக்கொண்டிருக்கும்போது வெளியே கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. அண்ணன் தம்பிகள் நால்வரும் காரிலிருந்து இறங்கினார்கள். எல்லாருக்கும் முன்னால்

வர்கீஸ் இருந்தான். பிடிபட்ட கள்வனைப்போல் குஞ்சுச்செறுக்கன் எல்லாருக்கும் பின்னால் வந்துகொண் டிருந்தான்.

வர்கீஸ் சொன்னான் :

“பிறர் பொருள் உனக்கு எதுக்கடா? கொண்டு போகட்டும். வினை விதைக்கிறவன் வினை அறுப்பான் – மகனாயிருந்தாலும் சரி, மருமகனாயிருந்தாலும் சரி.”

பிலிப்பு கூறினான் :

“வித்தையும் புத்தியும் மிதமிஞ்சி இருக்கக் கூடாது. குறுக்கு வழியிலே பணக்காரனாகி, பங்களா கட்டிவிட நினைச்சதன் பலன்!”

வர்கீஸ் சொன்னான் :

“செத்த பாம்பை ஏண்டா அடிக்கிறே ?”

பதில் சொன்னவன் மாத்யு :

“செத்த பாம்பை அடிக்கிறதாகாது. டி. எஸ் பி. சீஃப் இஞ்சினியருக்கு நண்பரானதினாலே, சீஃப் இன்சினியர் பிலிப்பண்ணனுக்குத் தெரிந்தவரானதினாலே விடுதலை செய்து கொண்டுவர முடிந்தது. இல்லாவிட்டால், பிள்ளை செய்த குற்றத்துக்கு அப்பாவும் லாக்கப்பில் கிடக்க வேண்டியிருந்திருக்கும்.”

குஞ்சுச்செறுக்கன பதில் ஏதும் கூறவில்லை. தோளில் போட்டிருந்த துண்டை அப்பாவின் கட்டிலருகில் விரித்து, ‘தொப்’ என்று விழுந்தான்.

“தானியல் எங்கே, வர்கீஸ் மச்சான் ?”

“அவனைப் பம்பாய்க்குக் கொண்டு போயிருக்காங்க. அங்கே அவன் பேரில் வழக்குத் தொடுப்பாங்க.”

“என் ஆண்டவரே !”

தீனாம்மாவும் சாந்தாவும் சொல்லி, செய்திகளை ஒருவாறு தெரிந்து கொண்டபின் குஞ்சுநைனா கேட்டார் :

அவனையும் விடுவிச்சுக்கிட்டு வர்றதுதானேடா ?”

பிலிப்பு சொன்னான் :

“அவ்வளவு அக்கறையிருந்தா நீங்க போய் அழைச்சுக்கிட்டு வாங்க. இப்ப அழுது புலம்பி லாபமில்லை. திருடியும் கொள்ளையடிச்சும் கொண்டு வந்து கொடுக்கிற பொருள்களை வாங்கி

வைக்கும்போது யோசிக்கணும். பத்தாயிரம் ரூபாய் விலை மதிக்கிற கள்ளக்கடத்தல் சாமான்களை எடுத்துக்கிட்டுப் போறாங்க, தெரியுமா?”

வர்கீஸ் சாந்தமாகச் சொன்னான்:

“அதெல்லாம் தெரிஞ்சாடா அவன் அவைகளை வாங்கி வைத்தான்? இப்படி ஏதாவது வருமுன்னு அவன் நினைத்தானா?

எதுவும் கூறாமல் பிலிப்பு காரில் ஏறிப்போனான்.

பரிதாபமான குரலில் குஞ்சுச்செறுக்கன் சொன்னான்:

“இதையெல்லாம் அனுபவிக்க நான் என்ன பாவம் பண்ணினேன், அப்பா?”

“உம். பாவமாம். நீ கொஞ்சம் பேசாமல் இரு. எப்படியாவது அவனை விடுதலை செய்ய வைக்கலாம்.”

இவ்வாறு ஆறுதல் கூறிய வர்கீஸும் அங்கிருந்து போனான்.

குஞ்சுநைனா கைத்தடியை ஊன்றி மெதுவாக எழுந்தார். பிறகு சாந்தாவின் கையைப் பிடித்துக்கொண்டு முற்றத்தில் இறங்கினார். தடியை ஊன்றிப் பிரயாசையோடு, முற்றத்தில் சிறிது நேரம் நடந்தார். பிறகு, தீனும்மாவைக் கூப்பிட்டு, அவள் காதோடு சொன்னார். “துணிப்பெட்டியில் வைத்திருக்கிற ரூபாயை எடுத்து, குஞ்சுச்செறுக்கனுக்குக் கொடு. பாவம்! அதாவது அவனுக்கு இருக்கட்டும்.”

## ஒன்பது

சாந்தா பலகையில் பத்துக் கோடுகள் போட்டாள். பிறகு ஸிஸிலியிடம் கேட்டாள்:

“எத்தனை கோடுகள்?”

ஸிஸிலி யோசித்தாள். விரலை விட்டுக் கூட்டிப் பார்த்தாள். முணுமுணுத்தாள். பிறகு சொன்னாள்:

“பத்து.”

சாந்தா நான்கு கோடுகளை அழித்தாள். பிறகு கேட்டாள்:

''இப்போ எத்தனை கோடுகள் ? சொல், பார்க்கலாம்.''

''ஆறு.''

''சமர்த்து. இனி ஒன்றிலிருந்து நூறுவரை எழுது,''

கைக்குழந்தையை எடுப்பதுபோல், பலகையை நெஞ்சோடு சேர்த்துப் பிடித்துக்கொண்டு, ஸிஸிலி எழுத ஆரம்பித்தாள். சாந்தா மறுபடியும் கடிதத்தை எடுத்துப் படித்தாள், நான்காவது தடவையாக. ஒரு வாரம் காத்திருந்த பிறகு கிடைக்கும் விலை மதிக்க முடியாத பொக்கிஷம், ஒரு கடிதம். அது அமைத்துத் தரும் ஆறுதல் என்னும் கூடாரத்தில் இரண்டு நாட்களைக் கழிப்பாள். பிறகு, அடுத்த கடிதத்தை எதிர்பார்த்து வழிமேல் விழிவைத்துக் காத்திருப்பாள்.

ஸிஸிலி முணுமுணுத்தாள் :

''ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து...''

பிரிவின் துயரம் தெரியக்கூடாது என்று நான்கைந்து பக்கங்கள் எழுதி அனுப்புவார். தினமும் சாப்பிட்ட பிறகு படுக்கப்போவதற்கு முன் டயரி போன்று ஏதேதோ குறிப்புகள் எழுதி வைப்பாராம். பிறகு, எல்லாம் சேர்த்து எழுதி அனுப்புவாராம்.

''...எதற்கும் கவலைப்படாதே.'' கடிதத்தில் ஐந்தாறு இடங்களில் திரும்பத் திரும்ப எழுதியிருக்கிறார்.

பாவம் !

அந்தச் செய்தி தெரிந்தால் அவர் தாங்க மாட்டார்.

''பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது......''

எவரும் தாங்கமாட்டார். மனிதப் பிறவியைப் பொறுத்த வரையில் இதைவிட வேறு அவமானம் இருக்க முடியாது.

என்ன காரணமோ, கார்த்திகைப்பள்ளிச் சாமியார், திருமணத்திற்கு வரவில்லை என்றுதான் எண்ணினாள். வேறு எந்தவிதமான சந்தேகத்திற்கும் இடமிருக்கவில்லை.

ஆனால், தெரிந்துவரும்போது.......

இன்றுவரை யாரைத் தந்தையென்று நினைத்து, வணங்கி வந்தாளோ, அவர் மகள் அல்லவாம், அவள்; கணவன் இறந்த பிறகு தாய் தன்னிச்சையாக நடந்ததன் பலனும். அப்புறம்

இன்னும் ஏதேதோ! உண்மையில், கார்த்திகைப்பள்ளிச் சாமி யாரைத்தான் அப்பா என்று அழைக்க வேண்டும். இந்தச் செய்தியை வெளியே தெரியவிடாமல் தந்திரமாகத் திருமணத்தை முடிக்கப் பார்த்தார் சாமியார். மற்றவர்களுக்கு விவரம் தெரிந்த போது மெதுவாக நழுவினர்.........ஓ...நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

அன்று இரவு முழுவதும் கண்ணீர் வடித்தாள். கட்டிலில் உட்கார்ந்துகொண்டு, தோளைப் பிடித்தவாறு மாமி அவளுக்கு ஆறுதல் கூறினள்; அவளிடம் அந்தச் சேதியைச் சொன்னவர்களைக் குறை கூறினள். அவள் எல்லா விஷயங்களையும் அவருக்கு எழுதி அனுப்பவேண்டும் என்றுதான் விரும்பினள். ஆனல், மாமி புத்திமதி கூறினள் :

''எழுதாதே கண்ணு. ராஜன் உனக்காக எதுவும் செய்யக் கூடியவன். உன்னிடம் இதைச் சொல்லி, உன் நிம்மதியைக் குலைத்தவர்களைக் கொலை செய்யவும் அவன் தயங்கமாட்டான்... ''

......அடுத்த மாதம் ஸ்கீமுக்குப் போகணும். ஜூலை மாதத்தில் லீவு தருவதாகச் சொல்லியிருக்கிருர்கள். உதகமண்டலத்துக்கு மாற்றலுக்காகவும் முயற்சி செய்கிறேன். எல்லாம் உன் அதிருஷ்டத்தைப் பொறுத்தது. ஆண்டவரிடம் வேண்டு......

அதுதானே இந்த உள்ளத்தில் இருக்கும் ஒரே ஆசை. ஆண்டவரிடம் வேண்டுவதற்கு வேறு என்ன இருக்கு? அவருடன் இருக்கணும், பணிவிடை செய்யணும் ..

''சாந்தக்கா !''

''உம்.''

''யோசனை பண்ணிக்கிட்டே இருக்கீங்களே ?''

''ஒண்ணுமில்லை. நீ எழுதினயா ?''

''எப்பவோ எழுதியாச்சு.''

சாந்தா பலகையை வாங்கிப் பார்த்தாள்.

''கெட்டிக்காரி.''

''இனி எழுத்தால் எழுதட்டுமா ?''

''உம்.''

''நேற்றைக்கு டிக்டேஷனில் சிரிதேவிக்கு எல்லாமே தப்பு.''

''சிரிதேவியல்ல; ஸ்ரீதேவி.''

''சிரி தேவி.''

அப்போது முற்றத்தில் யாரோ பாடும் ஒலி கேட்டது. அத்துடன், மெதுவாக நடந்துவரும் காலடியோசையும் கேட்டது,

''மழைக்கால வானவில்லின் சாரமாம்
அழகே! மெல்ல மெல்ல நீ அகன்றுபோய்
அழலைத் தந்திடாதே எமக்கு, கேளாய்
எழில்மிகு நதியின் சிற்றலையே, புருவே !''

சிறிது நேரத்துக்கெல்லாம் சிவராம குறுப்பு உள்ளே வந்தான். சாந்தா எழுந்து நின்ருள்.

''உட்காரம்மா உட்கார். ஸிஸிலிக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிருயா ?''

சாந்தா பதில் கூறவில்லை.

ஸிஸிலி சொன்னுள் :

''நான் நூறுவரை எழுதினேனே, குறுப்பு மாமா.''

''பலே! கெட்டிக்காரி! உன் அம்மா எங்கே ?''

சாந்தாதான் பதில் கூறினுள் :

''சென்னித்தலைக்குப் போயிருக்காங்க. அவங்க மாமா பெண்ணை அங்கேதான் கட்டிக்கொடுத்திருக்காங்க. இப்போ வந்திடுவாங்க.''

''சும்மா கேட்டேன். நான் குஞ்சுநைனு பக்கத்தில் உட்கார்ந்திருக்கேன். ஸிஸிலி! நீ நன்ருய் படிக்கணும்; கல்லூரிக்குப் போகணும், அப்புறம் எம்.பி.பி.எஸ் படித்து டாக்டராகணும்.''

''சாந்தா அக்கா போல நான் பெரியவளானல், கல்லூரிக்குப் போவேன். அப்போ சேலை கட்டுவேன்.''

குறுப்பு உரக்கச் சிரித்தான். சாந்தா புன்னகை புரிந்தாள்.

சிரிப்பொலி கேட்டபோது, திண்ணையில் படுத்திருந்த குஞ்சு நைனு கேட்டார் :

''யாரது, அந்தப் பக்கம்? குறுப்பா ?''

''ஆமாம், குஞ்சுநைனு! உங்களை ஒன்றிரண்டு தடவை

கூப்பிட்டேன். மயக்கமாக இருந்தீர்கள். அதனால்தான் இந்தப் பக்கம் வந்தேன்.''

''நான் முழிச்சுக்கிட்டுத்தான் இருக்கேன். வாங்க.''

குறுப்பு, குஞ்சுநைநா படுத்திருக்குமிடம் சென்றான்.

''பேச்சுத் துணைக்கு யாரும் இல்லையேன்னு கவலையாப் படுத்துக்கிட்டிருந்தேன்.''

''உங்கள் மகனது சேதியெல்லாம் தெரிந்தது. கலிகாலம்! வேறு என்ன சொல்ல ?''

''என்ன ?''

''குஞ்சுச்செறுக்கனையும் அவர் மகனையும் கைது செய்தது...''

''ஓ...!''

''குடும்பத்துக்கு இதைவிட அவமானம் வேறு என்ன வருவதற்கு இருக்கிறது ?''

''.........''

''உங்கள் நாலு பிள்ளைகளிலேயும் — நான் சொல்கிறேன் என்று தப்பாக நினைக்காதீர்கள் — இவ்வளவு போட்டியும், பொறாமையும் எனனமும் வேறு யாருக்கும் இல்லை. நான் சொல்வது சரிதானே?''

அதற்கும் குஞ்சுநைநா பதில் கூறவில்லை. அவர் குறுப்பை உற்று நோக்கினார்.

''கொஞ்ச நாளாவது லாக்கப்பிலே இருந்திருக்கவேணும்.''

''குறுப்பு ! உங்களுக்குப் பிள்ளை குட்டி இல்லையோ ?''

''இல்லை. உங்களுக்குத் தெரியாதா என்ன ?''

''அதனால்தான் அப்படிச் சொல்றீங்க, இல்லாவிட்டால் அப்படிச் சொல்ல மாட்டீங்க.''

''அது .....''

'ஒரு தந்தைக்குத் தன் எல்லாப் பிள்ளைகளும் ஒன்று போல, ஒரு வேளை அதிகமான பாசம் மந்தையில் இருக்கிற நொண்டி ஆட்டிடம் இருக்கலாம். கர்த்தர் சொன்னது போல நூறு ஆடுகளுடைய ஓர் ஆட்டிடையன், அவைகளில் ஒன்று காணமல் போனால், தொண்ணூற்று ஒன்பது ஆடுகளையும் வனாந்தரத்திலே விட்டு, காணமல் போன ஆட்டைத் தேடிப் போகிறான். எந்த ஒரு

தந்தையும் தன் பிள்ளைகளிடம் குற்றம் குறை கூறமாட்டான், குறுப்பு! பிள்ளை தறுதலையாக இருக்கலாம், ஊர் சுற்றியாகவோ ா சூதாடியாகவோ இருக்கலாம். ஆனால், தந்தையைப் பொறுத்த மட்டில் அவன் மகன்தான். 'நீ எனக்குப் பிள்ளையல்ல; என் முகத்தில் விழிக்காதே, எக்கேடு கெட்டாவது போய்த் தொலை' என்றெல்லாம் சில வேளைகளில் தந்தை சொல்வதுண்டு. ஊதாரியான தன் மகன் திரும்பி வரும்போது மகிழ்கிற தந்தையைப் பற்றிய ஓர் உவமையைக் கர்த்தர் கூறியிருக்கிறார் : சண்டை போட்டு, ஆஸ்தியைப் பங்கிட்டு வாங்கி, அதையும் கொண்டு தூரதேசத்துக்குப் போனான் இளையமகன். மூத்தமகன் தந்தையுடன் இருந்து, வீட்டைக் கவனித்தான்; தந்தைக்குப் பணிவிடை செய்தான். சில நாட்களுக்குப் பிறகு கையிலிருந்த பணத்தையெல்லாம் ஊதாரித்தனமாகச் செலவழித்து, வருந்தி, அவமானத்துடன் இளையமகன் தந்தையிடம் திரும்பி வந்தான். அவன் தந்தையிடம் 'அப்பா! நான் உங்களுக்கும், பரத்திற்கும் விரோதமாகப் பாவம் செய்திருக்கிறேன்; இனிமேல் உங்கள் மகன் என்று சொல்லிக்கொள்ள எனக்குத் தகுதியில்லை. உங்கள் கூலியாட்களில் ஒருவனாக என்னையும் வைத்துக் கொள்ளுங்கள்' என்றான்......

''தந்தை அவனைக் கட்டியணைத்து, உயர்ந்த ரக ஆடைகளை அவனுக்கு அணிவித்தான். கொழுத்த கன்றை அவனுக்காக அறுத்தான்......''

''குறுப்பு! இதுதான் தந்தையின் உள்ளம்......''

குறுப்பு முகத்தில் அசடு வழிந்தது. அவன் ஒரு முட்டாளைப் போல் சிரித்தான் :

''இதெல்லாம் எனக்கும் தெரியும். இருந்தாலும் குடும்ப கௌரவம்......''

தீனம்மா படபடக்கத் தோட்ட வாயிலைக் கடந்து வேகமாக வந்தாள்; நடக்கக் கூடாத ஏதோ ஒன்று நடந்ததைப் போன்ற முக பாவம்.

'' மாமா !''

'' ஏ... ?''

''கேள்விப் பட்டீங்களா ?''

'எள்ளுப்பறம்புக் குட்டியம்மா நேற்றைக்குப் பள்ளிக்கூடம் போனவள்; இன்னமும் வீட்டுக்குத் திரும்பவில்லே.''

''பள்ளிக்கூடத்துக்குப் போனவள், இன்னமும் வரலேயா ?''

''வரவில்லே.''

''ஏன் ? ஓ...அவள் வருவாள்.''

''ஆமாம் ! மூலே முடுக்கெல்லாம் இதே பேச்சுத்தான் ! அவள் தன்னுடன் வேலே செய்கிற யாரோ ஒரு வாத்தியார்கூடப் போனுளாம். பதிவுத் திருமணம் செய்து கொண்டதாகக்கூடப் பேசிக்கிருங்க !''

குறுப்பு கேட்டான் :

''குட்டியம்மா வர்கீஸ் மகள்தானே ?''

தீனும்மா அசட்டையாகப் பதில் கூறிஞள் :

''ஆமாம்.''

குஞ்சுநைனு சொன்னுர் :

''அந்த வாத்தியார் ஒரு கத்தோலிக்கர்.''

''மாமா, உங்களுக்கு அந்த வாத்தியாரைத் தெரியுமா ?''

''நான் நேரில் பார்த்ததில்லே. முதல் தாரம் இறந்து போனவன். பிள்ளே குட்டிகள் கிடையாது.''

''உங்களுக்கு இதெல்லாம் எப்படித் தெரிஞ்சுது ?''

''எப்படித் தெரிஞ்சுதுன்னு கேட்கிறே ?''

''ஆமாம்.''

''அவள் என்னிடம் எல்லாம் சொன்ஞள். அழைத்தால் அவருடன் போவேன் என்றும் சொன்ஞள்.''

''ஆண்டவரே ! இவ்வளவும் தெரிஞ்சிருந்தும் ஏன் மாமா, யாரிடமும் சொல்லலே ?''

''யாரிடம் சொல்லணும் ? என்ன சொல்லணும் ? பெண் பெரியவளாஞல் கல்யாணம் கட்டிக் கொடுக்க வேண்டியது அப்பனின் கடமை. நான் சொல்வது சரிதானே, குறுப்பு ?''

''முற்றிலும் சரி. எங்கள் சமூகத்தில் பெண்ணேத் தேடி வருவார்கள். கட்டிக் கொடுக்கிறதும் கொடுக்காததும் நம் இஷ்டம்.''

''ஆ...இங்கேயும்தான் பெண்கேட்டு வந்தாங்க. ஆனால் நெருங்க விட்டால்தானே. வர்கீஸிடம் கேட்டால், 'என்னப்பா அவசரம்? அப்புறம் யோசிப்போம்' என்றெல்லாம் சொல்வான். அவசரப்படாவிட்டால் இப்படியெல்லாம்தான் நடக்கும். பரவா யில்லையடி! ஓர் ஆணுடன்தானே அவள் போனாள்; அவன் அவளைக் காப்பாற்றுவான்.''

தீனும்மா கூறினாள் :

''கர்த்தரே! கண்மூடுவதற்கு முன்னே இப்படி என்னவெல் லாம் காண வேண்டியிருக்குமோ?''

''எல்லாம் காணத்தான் வேணும். வேறு வழி? தொண்ணூறு ஆண்டுகளாக நான் பார்க்காதது இல்லை. அனுபவிக்காதது இல்லை. மனைவி இறந்தாள். செல்லமாக வளர்த்த மகள் என்னை விட்டுப் பிரிந்தாள். துணையாக இருந்த தலைமகனும் இறந்தான். இறக்கை ஒடிந்த பறவையைப் போல நீரால் ஆழப்பட்ட தீவில், எல்லாமே பார்த்தும், கேட்டும், நிர்க்கதியாக நான் இங்கே இருக்கேன். கொடுப்பவரும் எடுப்பவரும் மேலே இருக்கார். நீதிமானை யோபு கேட்பது போல, குடியேற்றமற்ற நிலத்திலும், மானிடரற்ற வனாந்தரத்திலும், மழை பெய்து, பாழ் நிலத்தையும் அவாந்தரத் தரையையும் திருப்தி செய்து, பசும்புல்லை அங்கு முளைப்பித்து, பெரு மழைக்கு வாய்க்கால்களை வெட்டி வைத்து, முழங்கும் மின்னலுக்கு வழிகாட்டினவர் யார்? மழைக்குத் தகப்பன் உண்டோ? பனித் துளிகளைத் தோற்றுவித்தவர் யார்? நாம் எதுவும் அறிவதில்லை. சரிதானே குறுப்பு?''

''சரிதான், நாம் புல்லுக்கும் புழுவுக்கும் சமம். எல்லாம் பரா சக்தியின் மகிமை ஆக்கலும் அழித்தலும் அதன் கைக்குள். அனைத்தையும் அழிக்கின்ற மரணம். அனைத்துப் பிராணிகளின் படைப்பு எல்லாம் அந்தச் சக்தியின் லீலைதான்!

ம்ருத்யு ஸர்வ ஹரஸ்சாஹ
முத்பவஸ்ச பவிஷ்யதாம்
கீர்த்தி : ஸ்ரீ வாக் ச நாரீணாம்
ஸ்ம்ருதிர்மேதா த்ருதி ! க்ஷமா

ப்ருஹத் ஸாமா ததா ஸாம்னும்
காயத்ரீ சந்தஸா மஹம்
மாஸானும் மார்க்க சீர்ஷோஹ—
ம்ருதூனும் குஸுமாகர''.

''தாவீத் அரசர் பிரார்த்தனையில் கூறுகிறுர் : என் தைவமான கர்த்தரே! நீரே மிகப் பெரியவர். பெருமையையும் பேரொளியை யையும் நீர் அணிந்துள்ளீர். வஸ்திரத்தை உடுப்பதுபோல் நீர் பிரகாசத்தை அணிகின்றீர். திரையைப் போல ஆகாயத்தைப் போட்டிருக்கிறீர் ''

''அப்பா!''

'' யாரு?''

வர்கீஸ்! தந்தையின் முகத்தைப் பார்த்தவாறு அவன் கட்டி லருகில் நின்றுகொண்டிருந்தான்.

தான் இனி அங்கே தேவையில்லாதவன் என்று புரிந்து கொண்ட குறுப்பு அங்கிருந்து போவதுதான் நல்லது என்பதை உணர்ந்தான். அவன் சொன்னுன் :

''நான் போய் வருகிறேன், குஞ்சுநைனு!''

யாரும் பதில் கூறவில்லை. குறுப்பு போனுன்.

தீனும்மா கதவருகில் வந்து நின்ருள். வர்கீஸ் கேட்டான் :

''அப்பா! உங்களுக்குத் தெரிஞ்சுதா?''

குஞ்சுநைனு எதுவும் பேசவில்லை.

''குட்டியம்மா நேற்றைக்குப் பள்ளிக்கூடம் போனவள் இன்ன மும் திரும்பி வரலே.''

'' உம்.''

'' இப்போ நான் என்ன செய்யணும்?''

'' ஏ...?''

'' நான் என்ன செய்யணும்?''

'' டேய்! இதையெல்லாம் முன்னுலேயே யோசிச்சிருக்கணும். அந்தப் பெண்ணைக் கல்யாணம் கட்டி, ஒருவன் பின்னுலே அனுப்பு டான்னு நான் எத்தனை தடவை சொல்லியிருப்பேன்? நீ கேட்டியா? அப்பவெல்லாம் நீ என்மீது எரிஞ்சு விழுந்தே!''

தீனும்மா சொன்னாள் :

"ஏன் மாமா ! இதையெல்லாம் இப்போ சொல்றீங்க ?"

"வேறு எப்போ சொல்லணுமடி ? காலாகாலத்தில் செய்ய வேண்டியதைச் செய்யணும்."

"உங்கள் பார்வையிலும் நான் குற்றவாளியாகப் போய் விட்டேன். அவள் எனக்கு ஒரு துணையாக இருப்பாளேன்னு நினைச்சேன். அவ்வளவுதான். பட்டினியிலும், அவள் சம்பளத்திலிருந்து ஒரு சீட்டுக் கட்டிக்கிட்டு வர்றேன். அதையெடுத்து அவளைக் கட்டிக் கொடுக்கலாமுன்னு நினைச்சேன்."

"தொடுபுழைக்காரன் அந்த வாத்தியார் அவளைக் கட்டிக்க விரும்புகிறதாகக் கோபாலன் நாயர் உன்னிடம் சொன்னானா ? நீ அவனைத் திட்டி அனுப்பினே !"

"இரண்டாம் தாரம். கத்தோலிக்கன். நமக்குச் சேர்ந்த இடமா, அப்பா ?"

"டேய், அதை மரியாதையாச் சொல்கிறதுக்கென்ன ? அந்தப் பாடம் நீ படிக்கலே. பிள்ளைகளை எப்பவும் கட்டிப்போட்டு வீட்டிலேயே வைக்கலாமுன்னு நினைக்காதே. பிள்ளைகளானாலும், மனைவியானாலும், சொந்த அப்பாவாயிருந்தாலும்—ஏதாவது பேசினால் நீ கடிச்சுத் தின்ன வருவாய்."

வர்கீஸ் தலையைத் தொங்க விட்டுக்கொண்டு நின்றிருந்தான்.

"அவள் தங்கைகளுக்குக்கூடக் குழந்தைகளாச்சு. எல்லாருக்கும் துணை இருக்கிறார்கள். ஆனால் அவள் மட்டும் தனியாக இருக்கிறாள். நீ கண்ணை மூடினால் அப்புறம் அவளுக்கு யார் துணை என்று யோசித்துப் பாரு !"

மாமா சொன்னது உண்மைதானே என்று தீனும்மா மனத்துள் எண்ணிக்கொண்டாள். குட்டியம்மா எப்போதோ சொன்ன ஒரு விஷயம் அவள் நினைவிற்கு வந்தது. கடைசித் தங்கை, லீலா திருமணம் முடிந்து வீட்டிற்குக் கணவனோடு வந்திருந்தாள். மற்ற சகோதரிகளும் அவர்களுடைய கணவர்களும் வீட்டில் இருந்தார்கள். எல்லாருக்கும் வசதியாகப் படுத்துறங்க இடமில்லை. இருக்கிற இடத்தைப் பங்குபோட்டு வந்தபோது குட்டியம்மாவிற்குக்

கிடைத்தது சமையலறை. அன்று அதிகாலையிலேயே எழுந்து காப்பி போட்டாள். அவள் அப்பாவிற்கு எழுந்தஉடனே காப்பி வேண்டும். காப்பியை எடுத்துக்கொண்டு வராந்தாவிற்குப் போகும் போது அவள் கண்ட காட்சியை எப்படிச் சொல்வது? கண்ணராவி-அவளைவிடப் பத்துவயது சின்னவளான தங்கை பிறந்தமேரியுடன் கட்டிலில் குறட்டைவிட்டுத் தூங்கிக்கொண்டி ருந்தாள். கூடப் படுத்திருந்த ஆணும் அதே கோலம்! அவள் குன்றிப் போனாளாம்! என்ன செய்வது? யாரிடம் சொல்வது? கதவருகில் நின்று கூப்பிட்டுப் பார்த்தாளாம். யாராவது எழுந்திருந்தால்தானே? அப்பா அம்மா கண்ணில் பட்டால் என்ன ஆகும்? என்ன வந்தாலும் சரி என்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, கட்டில ருகில் சென்று தங்கையின் காலைக் கிள்ளினாளாம்...

வர்கீஸ் சொன்னான் :

''நான் செய்த தவறுகளுக்கு ஆண்டவர் என்னைத் தண்டிக் கட்டும். ஆனால், இப்போ நான் என்ன செய்யணும்? எப்படியோ தொலையட்டுமுன்னு விட்டு விடட்டுமா ?''

அதைக் கேட்டுக் கொண்டு உள்ளே வந்த மாத்யு சொன்னான்:

''வழக்குத் தொடுக்கணும். அதுக்கு இவ்வளவு யோசனை செய் வதற்கு என்ன இருக்கு? இப்படியெல்லாம் நடந்ததற்கு வேறு யார் மீதும் குற்றம் சுமத்த வேண்டாம் : அண்ணாவும் மன்னியும்தான் காரணம். பெண்களை அன்பாக வளர்க்கணும். வேண்டாமுன்னு சொல்லவில்லை. ஆனால், உதவாக்கரைன்னு தெரிஞ்சால் முட்டியை ஒடிச்சு வீட்டிற்குள்ளே அடைச்சுப் பூட்டணும். ஊரே நாற்றமடிக் குதே !''

மாத்யுவுடன் தாழைச்செரு குஞ்சப்பியும் வந்திருந்தான். குஞ்சப்பி சொனனான் :

''எப்படி வழக்குத் தொடுக்க முடியும்? வயதான பெண் அவ ளுக்குப் பிடித்தவன்கூடப் போனதற்காக வழக்குத் தொடுக்க முடி யாது. இருவரும் ஒரு ரெஜிஸ்த்ரார் முன்னால் போனால் போதும்; வாழ்நாள் முழுவதும் கணவன் மனைவியாக வாழலாம்.''

''பொய் வழக்குத் தொடுக்கணும்-பெண் கழுத்திலிருந்த பத்துப்

பவுன் நகையைத் திருடினுன். அவளைப் பலவந்தமாக இழுத்துக் கொண்டு போனுன்—அப்போ?''

குஞ்சப்பி அமைதியாகச் சொன்னுன் :

''பலவந்தமாக இழுத்துக்கொண்டு போனுன் என்றெல்லாம் கேசு கொடுத்தால் மட்டும் போதாது. அவள் கோர்ட்டில் சாட்சியமும் சொல்லணும். அவள் ஒண்ணும் சின்னக்குழந்தையல்ல.''

''சாட்சியம் சொல்லாவிட்டால் சொல்லவைக்கணும். நீ அதைப்பற்றியெல்லாம் கவலைப்படாதே. வக்கீலிடம் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டுதான் வர்றேன். அதுக்கெல்லாம் சட்டங்கள் இருக்கு.''

''எதுக்குச் சித்தப்பா பொய்க்கேசுக்கெல்லாம் போகணும?''

''டேய், இப்பவே ஊரில் மூலைமுடுக்கெல்லாம் பேசிக்கிருங்க. மானமாக வாழமுடியாவிட்டால் அப்புறம் இருந்து என்னடா காரியம்?''

''கேசுக்குப் போகிறதா இருந்தால் நிறையப் பணம் வேண்டாமா? அவன் கையில் ஏதுடா பணம்?''

''கையில் இல்லாவிட்டால் பிச்சை எடுக்கணும். பணம் இல்லையாம், பணம்!''

குஞ்சப்பி மறுபடியும் சமாதானமாகப் போக முயன்றுன் :

''முன்பின் யோசிக்காமல் எதையாவது செய்வதில் அர்த்தமில்லை, சித்தப்பா. ஆனது ஆச்சு.''

''நீ கொஞ்சம் சும்மா இருடா குஞ்சப்பி. என் வீட்டுப் பெண்ணுயிருந்தால், எங்கே போயிருந்தாலும் அவளைப் பிடித்து இழுத்து வந்து, உதைச்சு நார்நாராகப் போட்டிருப்பேன். தெரியுமா? என்ன நினைச்சே என்னை?''

நிச்சப்தம்.

தீனும்மா தாடையைக் கையால் தாங்கியவாறு, கதவருகில் நின்றுகொண் டிருந்தாள். குஞ்சுநைநு எழுந்து உட்கார்ந்திருந்தார். கைகளால் முகத்தை மறைத்தவாறு வர்கீஸ் கட்டிலருகில் உட்கார்ந்துகொண் டிருந்தான்.

''வர்கீஸ் சித்தப்பா! நீங்க ஏன் எதுவும் பேசாமல் உட்கார்ந்திருக்கீங்க?''

''வேணுமுன்னு வழக்குத் தொடுக்கலாம்.''

''யாருக்கு வேணுமுன்னு? எனக்காக வழக்குத் தொடுக்க வேண்டாம்.''

''உனக்கு வேண்டி மட்டுமல்ல. உன் அண்ணன் முச்சந்தியிலே என்னை அடிக்கவில்லை, மற்றபடி இனி சொல்லாத வார்த்தை இல்லை. நீ சொன்னது போலத்தான் அவனும் சொல்றான். வெளியே தலைகாட்ட முடியாமல் ஆகிவிட்டதாம். என்ன செய்வது? எனக்குப் பலமும் இல்லை. துணையும் இல்லை. வயது வந்த ஒரு மகன் எனக்கு உதவிக்கு இல்லாமல் போயிட்டானே!''

குஞ்சுநைநு சொன்னார் :

''பெரிய மானஸ்தன் அவன்! அவனுக்குத் தலைகாட்ட முடியாமல் ஆயிப்போச்சா? தன்னளவு வளர்ந்த பையன்கள்! அவன் வேலைக்காரியையே அல்ல வைப்பாட்டியாக வைச்சிருக்கான்? தலை தூக்க முடியாமல் அவன் பிள்ளைதானே ஊரையே விட்டுப் போனான்!''

தீனும்மா கடிந்தவாறு சொன்னாள் :

''சும்மா இருங்க மாமா! இதைப்பற்றி யாராவது கேட்டாங்களா? மாமாவுக்கு எதெதை எப்பப்போ பேசணும் என்கிறது கிடையாது''

''இதையெல்லாம் எப்படியடி சொல்லாமல் இருக்க முடியும்?''

''யானையைப் பற்றிப் பேசும்போதுதான் பூனையைப் பற்றிச் சொல்வாங்களா?'' — மாத்யு,

குஞ்சப்பி மறுபடியும் சொன்னான் :

''தாத்தா சொன்னது உண்மைதானே? அது போகட்டும் குஞ்சுச்செறுக்க சித்தப்பா மகனைப் போலீசு பிடிச்சிட்டுப்போனது மானமா?''

''நீ சொல்வதெல்லாம் சரி. ஆனால், வீட்டுப் பெண்கள் நடத்தை சரியில்லை என்கிற அவமானம் பொறுக்க முடியாதுடா! காலையிலிருந்து மாலைவரை நீ ஆபீசுக்குள்ளேயே அடைபட்டுக்

கிடக்கிறவன், அதனுல் உனக்கு அதெல்லம் தெரிய நியாயமில்லே. நான் அப்படியல்ல, நாலு இடத்துக்குப் போகிறவன்...''

இவ்வாறு அவர்கள் உரையாடிக்கொண் டிருக்கையில் ஒரு டாக்ஸி வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து இரண்டு பேர் இறங்கினுர்கள். எல்லாருமே வியந்தார்கள்; குட்டியம்மாவும் தொடுபுழைக்காரர் வாத்தியாரும்!

வர்கீஸ் எழுந்தான். குஞ்சப்பியும் தீனும்மாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். மாத்யு வர்கீஸைப் பார்த்தான். இதற்குள் முற்றத்தில் ஒரு சிறு கூட்டமே கூடியது. தாமஸ் வாத்தியார் பின் தொடர, பயந்தவாறு மெல்ல மெல்ல அடியெடுத்து வைத்து, குட்டியம்மா உள்ளே வந்தாள். யாரும் எதுவும் பேச வில்லே. குட்டியம்மா குஞ்சுறைநு கட்டிலருகில் வந்து, மருண்ட விழிகளோடு எல்லாரையும் பார்த்தாள். கொலேயாளிகளேப் பார்க்கிற கண்கள்!

குட்டியம்மா, வர்கீஸின் கால்களேக் கட்டிப் பிடித்துக்கொண்டு கண்ணீர் பெருக்கினுள்.

''என்னுல் இது பொறுக்க முடியாது, அப்பா! பொறுக்க முடியாது......''

வர்கீஸ் எதுவும் பேசாமல் மகளேப் பிடித்து எழுப்பினுன்.

மாத்யு, தாமஸ் வாத்தியாருக்கு அருகில் சென்று கேட்டான்:

''நீ செய்ததை மானமான குடும்பத்தில் பிறந்தவன் செய்வானு? என்ன துணிச்சல் இருந்தால் இந்த வேலியைத் தாண்டி நீ உள்ளே வந்திருப்பாய்? போடா வெளியே... .''

குஞ்சப்பி முன்னுல் வந்தான்.

''பேசாதீங்க சித்தப்பா. சும்மா இருங்க.''

தாமஸ் வாத்தியார் சொன்னுர்:

''என்னேத் திட்டவோ அடிக்கவோ செய்யுங்கள். குட்டியம்மாவுக்காக அதையெல்லாம் சகிப்பதற்குத் தயாராகத்தான் நான் வந்திருக்கிறேன். பள்ளிக்கூடத்திலிருந்து குட்டியம்மாவை என் வீட்டிற்கு அழைத்துப் போனது உண்மைதான். உடல் நலமில்லாமல் படுத்திருக்கும் என் அம்மாவைக் காட்டத்தான் அவளே

அழைத்துப் போனேன். வேறு எந்தத் தவறும் செய்யவில்லை. ஆனால் ஒன்று மட்டும் உறுதி. நாங்கள் இருவரும் ஒன்றாக வாழத் தீர்மானித்திருக்கிறோம். அதற்குச் சம்மதம் தந்து எங்களை ஆசீர் வதிக்க வேண்டும்..... ...''

மறுபடியும் வெகுநேரம் வரையில் அங்கே மௌனம் குடி கொண்டது. சிறிது நேரத்திற்குப் பிறகு வர்கீஸ் சொன்னான் :

''அப்பாவிடம் மன்னிப்புக் கேளடி.''

குட்டியம்மா மண்டியிட்டாள். அவள் தாத்தாவின் கால்களை முத்தமிட்டாள்; கண்ணீரால் கழுவினாள். பிறகு தலையைத் தூக்கிப் பார்த்தாள் : 'என் உள்ளம் மற்றெல்லோரையும்விட உங்களுக்குத் தெரியுமே ? நான் தவறேதும் செய்யவில்லை. வெகுநேரம் பறந்த பின் தளர்ந்து திரும்பி வரும்போது, விழுந்து கண்ணயருவதற்கு ஒரு கூட்டைத் தேடிப்போனேன், அவ்வளவுதான்.' இவ்வாறு அவள் துயரம் நிறைந்த முகத்தில் எழுதியிருந்தது. குஞ்சுநைனா அதைப் படித்தார். பிறகு சொன்னார் :

''வர்கீஸ் !''

''என்ன அப்பா ?''

''பந்துக்களையும், வேண்டியவர்களையும் அழைத்து இவளை இந்த வாத்தியாருடன் மானமாக அனுப்பு.''

மாத்யு ஏளனமாகச் சொன்னான் :

''அவளை அனுப்புவதற்கு என்ன இருக்கு? அவள்தான் போய் வந்தாச்சே!''

''வாயை மூடுடா, தறுதலை ! நீ வீட்டுக்குப் போ அம்மா.''

தந்தையுடன் குட்டியம்மா சென்றாள். டாக்ஸியில் தோமஸ் வாத்தியாரும் திரும்பிப் போனார். கூடியிருந்தவர்களும் ஒவ்வொரு வராகப் பிரிந்து போனார்கள். குஞ்சுநைனா மட்டும் அப்படியே உட்கார்ந்திருந்தார். தாங்க முடியாத ஏதோ ஒரு சுமை அவர் உள்ளத்தை அழுத்துவது போன்றதோர் உணர்ச்சி; ஓர் ஈயக் கட்டியைப் போன்று இருந்தது அது.

''பொண்ணு ! கொஞ்சம் கஞ்சித்தண்ணி கொடு.''

''மருந்து சாப்பிடறதுக்கா, மாமா ?''

''உம்...''

சிறிதளவு அபினை எடுத்து விழுங்கியபின், வெதுவெதுப்பான கஞ்சியைக் குடித்தார். 'அப்பாடா!' சிறிது நேரத்திற்கெல்லாம் நரம்புகள் தளர்ந்தன. ஈயக்கட்டி உருகியது. மெல்ல மெல்லச் சற்றுமுன் நடந்தவை மீண்டும் தெளிவாகத் தெரியலாயின. பயந்து பயந்து அவள் அடியெடுத்து வருகிறுள்; புகலிடம் தேடுவது போன்றதொரு பார்வை !......பொண்ணு ! என்னவாறுலும் நீ அப்படிச் செய்திருக்க வேண்டாம்......எதிர்காலத்தில் உனக்கு இது கெடுதல் செய்யும். கோழி நெல்லைச் சீந்தி இறைத்தால் அண்டை வீட்டுக்காரியுடன் சண்டை முற்றும்போது, அவள் சொல்வாள் :

''நான் நாலுபேருக்குத் தெரிய ஒருவன்கூட வந்தவள். யார் பின்னேயும் ஓடிப்போகலே.''

உன் மகள் பெரியவளான பிறகு யாரையாவது பார்த்துச் சிரித்தால் ஒரு கோள்மூட்டிக்காரி சொல்வாள் :

''எந்த அம்மாவின் பெண் தெரியுமா இவள் ?''

உன் பெண்ணிற்குத் திருமணப் பேச்சு வரும்போதும் இந்தக் கரும்புள்ளியைச் சுட்டிக் காட்டத்தான் செய்வார்கள். நீ அனுபவித்த மனத்துயரத்தை எவரும் நினைத்துக்கூடப் பார்க்கமாட்டார்கள். அதுதான் உலக வழக்கம். சொல்பவர்கள் சொல்லித் திரியட்டும், உன் உள்ளம் தூய்மையாகத்தானே இருக்கிறது ! அது போதும். இந்த வாழ்க்கையில் இப்படி ஏதாவதொன்று கேட்காதவர்கள் யார் இருக்கிறுர் ?

பாவம் வர்கீஸ் ! அவன் இப்படி ஏதாவது நடக்கும் என்று நினைத்தானு ? தோள் கொடுக்க அவனுக்கு ஓர் ஆண்பிள்ளை இல்லையென்று சொன்னது முற்றிலும் சரிதான். மற்ற நால்வரும் வாலிபப் பருவத்தில் ஆண்குழந்தைகளைப் பெற்றெடுத்தார்கள். இவனுக்கு மட்டும் பெண்......

''எல்லாம் கடவுள் விருப்பம்.''

பஞ்சைப் போன்ற தம் நரைத்த தாடியைத் தடவிக்கொண்டு ஒரு முதியவர் எதிரில் நின்றுகொண் டிருந்தார். அவர் சிரித்துக் கொண்டிருந்தார். அவர் குஞ்சுநைனுவிற்குப் பக்கத்தில் இருந்த சாய்வு நாற்காலியில் அலட்சியமாக உட்கார்ந்தார்.

''எனக்குப் பன்னிரண்டு பிள்ளைகள் இருந்தார்கள்.''

''பன்னிரண்டா ?''

''ஆமாம். சொன்னால் உனக்குத் தெரியவரும். மூத்தவன் பெயர் ரூபேன். இளையவன் பன்யாமின்.''

குஞ்சுநைனா எழுந்து, வாய்பொத்தியவாறு பணிவுடன் கேட்டார் :

''தாங்கள்தானே பன்னிரண்டு ஈஸ்ராயேல் கோத்திரங்களின் தந்தை யாக்கோபு ?''

''ஆமாம்.''

''தாங்கள் எழுந்தருளியது எதற்காகவோ ?''

''உன்னைப் பார்க்கத்தான் வந்தேன். இந்தத் தள்ளாத வயதில் பிள்ளைகளையும், பேரன் பேத்திகளையும் நினைத்துக் கவலைப்படுவதாகத் தெரிந்தது.''

''தந்தையே ! ஒவ்வொரு பிள்ளைக்கும் ஒவ்வொரு துக்கம்.''

''அதற்கு நீ என்ன செய்ய முடியும்? நீ வெறும் கையுடன் தானே போருக்கு வந்தாய் ? பகைவனிடமிருந்து வாளையும் ஈட்டியையும் பிடித்துப் பறித்து, நீ போர் புரிந்தாய். கடுமையான காயம் பட்டும் நீ கீழே விழாமல் முழு மூச்சுடன் போர் புரிந்தாய். இனி, உன் பிள்ளைகள் போர் செய்யட்டும். வலிமையிருந்தால் எதிர்த்து நிற்பார்கள்; அல்லது மடிவார்கள்.''

''சரிதான், தந்தையே !''

''ஆதிஆகமம் நாற்பத்து ஒன்பதாவது அதிகாரத்தைப் படித்ததில்லையா ? தலைமகனான ரூபேன், என் வலிமையின் முதற் பலன். ஆனால் அவன் என் படுக்கையில் ஏறி, அதை அசுத்தப் படுத்தினான். கதை தெரியுமா ?''

''தெரியும்.''

''இரண்டாவது மகனான 'சிமியோ'னும் மூன்றாவது மகனான 'லேவி'யும் கோபக்காரர்கள், துணிச்சல்காரர்கள். நான்காவது மகன் 'யூதா' இளஞ்சிங்கம். செங்கோலையும், ஆட்சியையும் நான் அவனிடம் ஒப்படைத்தேன். 'செபுலோன்' கப்பலோட்டி. 'இசக்கர்' எலும்பு பலமுள்ள கழுதை, புத்தியில்லாதவன். 'தான்' நேர்மையாளன், 'காத்'தைக் கொள்ளையர்கள் படை நசுக்கிவிட்டது.

'ஆசேர்' அறுசுவை உண்டி உண்பவன்...இவ்வாறு பன்னிரண்டு பேர்களும் அவரவர்களுக்குத் தகுந்தவாறு வாழ்ந்தார்கள்; கோத் திரங்களை நிறுவினார்கள். பிள்ளை பேரன்களைப் பெற்றெடுத்தார்கள். வமிசம் வளர்ந்தது......''

''இதெல்லாம் இந்த எளியவனுக்கும் தெரியும், தந்தையே!''

''ஆ...அப்படியானால் தயாராக இருந்துகொள். இனி உனக்கு இந்த உலகில் என்ன வேலை?''

''அடியேன் தயாராகத்தான் இருக்கிறேன்.''

'பஞ்சுபோன்ற நரைத்த தாடியைக் கொண்ட முட்டாளே! நீ எங்கே தயாராக இருக்கிறாய்? என்னையா ஏமாற்றப் பார்க்கிறாய்?' என்று சொல்வதைப்போல் புன்னகை புரிந்தார் முதியவர்.

''அதோ ஒரு சாமியார் வருகிறாரே? யார் அவர்?''

குஞ்சுநைநா திரும்பிப் பார்த்தார்.

''என் மைத்துனன் மகன். ஆனால் அயோக்கியன். புரோகிதர் அங்கியை அசுத்தமாக்கியவன். விதவையைப் புணர்ந்து ஒரு பெண்ணைப் பெற்றவன்......''

''அப்படியா! பிறகு ஏன் அவனை வீட்டிற்குள் விடுகிறாய்?''

''போடா வெளியே. போலி! டேய் வர்கீஸ்! குஞ்சுச் செறுக்கா...வாங்கடா. இந்த அயோக்கியனைப் பிடிச்சுக் கட்டிப் போடுங்க. மேலைத் தொழுத்துக் குஞ்சுநைநாவின்...''

எப்பொழுதையும் போல சாமியார் எள்ளி நகைத்தார். குஞ்சு நைநாவுக்குக் கோபம் தாளமுடியவில்லை. கையை ஓங்கி ஓர் அறை விட்டார்......

''ஆ...!''

சாந்தாவும் தீனம்மாவும் ஓடிவந்தார்கள். குஞ்சுநைநா கட்டிலி லிருந்து விழ்இருந்தார். அவர் கால்கள் கீழே இருந்தன; கைகளால் கட்டிலைப் பிடித்திருந்தார்.

இருவரும் குஞ்சுநைநாவைக் கட்டிலில் படுக்க வைத்தார்கள்.

''மாமா! என்ன ஆச்சு உங்களுக்கு?''

''.........''

''தாத்தா!''

''கனவு கண்டீங்களா ?''

''இல்லே. கார்த்திகைப்பள்ளிச் சாமியார் இங்கே வந்தாரே?''

தீனம்மா சொன்னுள் :

''இங்கே சாமியாரும் வரலே; சன்னியாசியும் வரலே !''

# பத்து

மாத்யு தீனம்மாவின் தலைமயிரைப் பற்றிப் பிடித்து இழுத்தான்.

''—மவன் மகளே ! சொல்லு. எனக்குத் தெரியாமல் இன்னெருத்தனிடம் ஏன் பணம் வாங்கினே ?''

கொஞ்சமும் பயப்படாமல் தீனம்மா சொன்னுள் :

''நான் யாரிடமிருந்தும் பணம் வாங்கலே.''

''அப்படியானல் உன் துணிப்பெட்டியில் எப்படிப் பணம் வந்தது?''

''மாமா என்னிடம் கொடுத்தாருன்னு சொன்னேனே ?''

''அப்போ, நான் வந்ததும் ஏன் அதைப் பற்றிச் சொல்லலே ?''

தீனம்மாவிடம் இதற்குப் பதில் இல்லே. இப்படி ஏதாவது நடக்குமென்று அவள் நினைத்தாளா ? பணமுடை ஏற்பட்டால் அந்தத் தொகையைக் கொடுத்து, அவரை வியப்பில் மூழ்கடிக்க வேண்டும் என்றுதானே எண்ணினுள்.

கோபத்தினுல் மாத்யுவின் உடல் நடுங்கிக்கொண் டிருந்தது. இதைவிடப் பெரியதோர் அவமானம் இருக்க முடியுமா? மனைவியின் கழுத்தைப் பிடித்து நெரித்துக் கொல்ல வேண்டும் என்ற ஆவேசத்துடன்தான், அவன் வீட்டிற்கு வந்தான். குஞ்சுநைனு பயந்து போனுர். கட்டிலில் உட்கார்ந்து, ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் ஏதேதோ உளறிக்கொண்டிருந்தார்.

''டேய், அவள் எந்தத் தப்பும் செய்யவில்லே. சும்மா ஏண்டா அவள்மீது எரிஞ்சு விழறே ?''

“நீங்க பேசாமல் இருங்க. எனக்கு என்......தொண்ணூறு வயசாச்சு. இன்னமும் அறிவில்லே? இல்லே, புத்திதான் சரியில்லேயா? ஏண்டி? நான் கேட்டதுக்குப் பதில் சொல்லடி!”

அடிவிழும் என்ற நிலேவந்தபோது, அதுவரையில் கதவருகில் மறைந்து நின்றுகொண் டிருந்த சாந்தா எதிரில் வந்து, உறுதியான குரலில் சொன்ஞள் :

“ஏன் மாமா, மாமியை அடிக்கிறீங்க? ரூபாய் கொடுக்கிறதை நானும் பார்த்தேன். கல்லுவெளி தானியல்லண்ணன் கொடுத்த பணத்தைத்தான் மாமி எடுத்து வெச்சாங்க.”

ஓங்கிய கை இறங்கியது. இன்றுவரை நேருக்குநேர் பார்க்காத, தலேநிமிர்ந்து பேசாத மருமகள்...

“அடி, அந்த விவரத்தை என்னிடம் சொல்ல வேண்டாமா ?”

“சொல்லாமல் இருந்தது தவறுதான், மாமா. முடை வரும் போது தருவதற்காக வெச்சிருந்தாங்க.”

மாத்யு தன் பிடியிலிருந்து மனேவியை விட்டான். இன்று வரை அவன், மனேவி மீது துரும்புகூட எடுத்துப் போட்டதில்லே. எவ்வளவு தொல்லேகள் இருந்தாலும் பண விஷயத்தில் இருவருக்கும் மனவருத்தம் ஏற்பட்டதில்லே. பெரும்பாலும் வீட்டுக்காரியங்களேக் கவனித்து வந்தது அவளே, ஆஞல் இப்படி மடத்தனமாக நடந்துகொண்டால் !

குஞ்சுநைஞ கேட்டார் :

“வேறு நான் என்னடா செய்யணும் ? பையன்கள் இரண்டு காசு தந்தால் அதை வாங்கக் கூடாதா ? அது என் செலவுக்குப் பயன்படாதா ?”

“வாங்குங்க, வேண்டாமுன்னு சொல்லலே. ஆஞல் தகுதி இருக்கிறவனிடமிருந்துதான் வாங்கலாம். சந்துமுனேயில் நிற்க வைச்சு, அவர் என்னவெல்லாம் பேசிஞருன்னு உங்களுக்குத் தெரியுமா ? இத்தனே காலமாக அவர் மகனுடைய பணத்தை இங்கே இருக்கிறவங்க பறிச்சு வெச்சுக்கிட்டிருந்தாங்களாம்; போதுமா ?”

''நாக்கில் நரம்பில்லாதவன், தாய் தந்தையரிடம் பாசமில்லா தவன் !''

''இதை இங்கே உட்கார்ந்து சொல்லுங்க. அது போகட்டும். தானியல் ரூபாய் கொண்டுவந்து தந்தான். வாங்கினீங்க. அப்புறம் எதற்காக அதைத் திருப்பிக் கொடுக்கணும் ?''

''நான் சொன்னதனால்தான் அவள் கொடுத்தாள். போலீஸ் அவன் மகனைக் கைது செய்து கொண்டுபோன போது, அவனுடைய துயரத்தை என்னால் சகிக்க முடியவில்லை. அதனால்தான் கொடுக்கச் சொன்னேன்.''

''உங்க இந்தப் பலவீனம்தான் அவங்களை இந்த நிலைக்குக் கீழே தள்ளியது.''

தீனம்மா சொன்னாள் :

''இப்போ இதையெல்லாம் ஏன் சொல்றீங்க. தலைவிதி. இந்தக் கஷ்டங்களை அனுபவிக்கிறதுக்கான கூலி.''

''பொண்ணு ! இது என் தலைவிதியடி. குற்றவாளி நான் தான். இரவென்றும் பகலென்றும் பாராமல் வீட்டைக் கட்டிக் காக்கிற உனக்கு இந்தக் கெட்ட பெயர் வாங்கி வெச்சேனே? ஆண்டவர் என் பாவத்திற்கு ஏற்றபடி தரும் கூலி. யோபு கதறியது போல், அவர் என் தலையிலிருந்து கிரீடத்தை எடுத்து விட்டார். என் நம்பிக்கையைச் செடிபோல் பிடுங்கிப் போட்டார். என் பந்து ஜனங்கள் விலகிப் போனார்கள். என் சிநேகிதர்கள் என்னை மறந்து விட்டார்கள். என் வீட்டு ஜனங்கள் என்னை அந்நியனாக எண்ணுகிறார்கள்.......''

''பேசாமல் இருங்க, மாமா!''

தாயின் அதட்டலைக் கேட்டுத் திடுக்கிட்ட ஒரு குழந்தைபோல் குஞ்சுனைநன பேச்சை நிறுத்தினார். பயந்த கண்களோடு அவர் சுற்றுமுற்றும் பார்த்தார். மாத்யு கூறியதுபோல், புத்திதான் சரியில்லையா? மனஉறுதி சுக்கு நூறாகி விட்டதா ? யார் வேண்டுமென்றாலும் ஆக்கிரமித்து வசப்படுத்தக் கூடிய புறம்போக்கு நிலம் போல் அனாதை ஆகி விட்டேனா ? பாசறையில் எனக்கு எதிராகப் படை திரட்டுகிறார்கள் !

''எனக்குத் தெரியாமல் இனி எவனுவது இந்த வேலிக்குள் கால் வைக்கட்டும், தெரியும்.''

மாத்யு வெளியே சென்ருன். ஏதோ நியாயம் பேசினுலும் தன்னிடமும் தவறு இருக்கிறது என்பதைத் தீனும்மா உணர்ந்தாள். தெரியாமல் செய்தாலும் தவறு, தவறுதானே? எந்த ஆண்மகனும் இப்படி ஓர் அவமானத்தைச் சகிக்க மாட்டான். சற்றும் எதிர் பாராமல், ஐந்நூறு ரூபாய் கிடைத்தபோது குஞ்சுச்செறுக்கன் ஆச்சரியம் கொண்டான். இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு வீட்டுப்பெண்கள் 'எவ்வளவு கொடுத்தானே, ஐந்நூரு, ஆயிரமா? யாருக்குத் தெரியும்?' என்றெல்லாம் பேசிக்கொண்டார்கள். இதை வளரவிடக் கூடாது, முளையிலேயே கிள்ளியெறிய வேண்டும், உண்மையை நிரூபிக்க வேண்டும் என்று தீனும்மா எண்ணினுள். எனவே, ஒருநாள் அவள் குஞ்சுச்செறுக்க மச்சான் வீட்டிற்குப் போனுள். சோசாம்மா 'உம்' என்று முகத்தை வைத்துக் கொண்டிருந்தாள். மூத்தமகள் செல்லம்மாவும் அப்போது அங்கே இருந்தாள். தானியல் பணம் தந்த கதையைத் தீனும்மா சொல்ல ஆரம்பித்தபோதே தாய், மகள் இருவர் முகத்திலும் ஏளனமும் அவநம்பிக்கையும் கலந்த அசட்டை பிரதிபலித்தது...

''நடு ராத்திரி இருக்கும், அக்கா. தானியல் வந்து தாத்தாவைக் கூப்பிட்டான். நான் பாதித் தூக்கத்திலிருந்து எழுந்து போனேன். எனக்கு ஆளை அடையாளமே தெரியலை...''

செல்லம்மாவின் கேள்வி :

'' ஏன் சித்தி, அடையாளம் தெரியலை ? தானியலண்ணனை நீங்க பார்த்ததில்லையா ?"

'' தானியலை நான் மூணுநாலு வருஷங்களுக்குப் பிறகுதானே பார்க்கிறேன் ?''

தூக்கி எறிந்ததுபோல் சோசாம்மாவின் பதில் :

'' சும்மா இருடி, தீனு. போன தடவை வந்தபோது கூட அங்கே வந்ததாகச் சொன்னுனே ?''

''தானியலா?''

“அங்கே போனால் அதில் தவறேதும் இல்லையே, அம்மா? பிறத்தியார் வீடா ?''

“அதுக்குப் போய், பொய் சொல்லணுமா?''

இவ்வளவுக்கும் தீனம்மா தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டே சொன்னாள் :

''யாரும் பொய் சொல்லலை. பொய் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை.''

''அவசியம் இல்லைன்னு சொல்லாதே. உண்மையைச் சொன்னால், வீட்டுக்குள் கொண்டு போய்ப் பணத்தைப் பிடுங்கி வைச்ச சங்கதி எல்லோருக்கும் தெரிஞ்சுவிடாதா ?''

அப்போது தீனம்மாவால் தன்னைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

''அது நீங்க படிச்ச படிப்பு.''

''ப்பு.... போடி, மானம் கெட்டவளே !''

அதற்குப் பின் என்ன சொன்னாள், என்ன கேட்டாள் என்பதெல்லாம் நினைவில்லை. சொல்ல வேண்டியதெல்லாம் சொன்னாள், இவ்வளவு முற்றிய பிறகு விட்டுக் கொடுக்க முடியுமா ?

வீட்டிற்கு வந்தபின் மாமாவிடம் முகம் கோணியே அந்தச் செய்தியைச் சொன்னாள்.

அதைக் கேட்ட குஞ்சுநைனா திடுக்கிட்டார்! தள்ளாடிப் போனார் !

''வழியிலே போகிற சனியனை விலைக்கு வாங்கின கதையாப் போச்சே, பொண்ணு.''

''எல்லாவற்றையும் பொறுத்துக்கலாம், ஸிஸிலி அப்பாவுக்குத் தெரிஞ்சால் கொன்னு போடுவார். இவங்க நடுவிலே நிம்மதியாக வாழ முடியாது.''

அன்று மாலையில் மாத்யு வரும்போது எல்லாவற்றையும் விவரமாகச் சொல்ல வேண்டும் என்றுதான் நினைத்திருந்தாள். ஆனால் அது எப்படி முடியும் ? அரை மணி நேரமாவது வீட்டில் இருந்தால் தானே இதைப் போன்ற விஷயங்களைச் சொல்லலாம்? அவர் வரும் போதெல்லாம் கூடவே நான்கு ‘ஆமாம் சாமிக’ளும் இருப்பார்கள்! எங்கே போனாலும் பின்னால் நான்கைந்து பேர்கள் ! ராஜன் கூறி

ஞற்போல் ஊரையல்லவா கட்டி ஆளுகிருர் ! எரணுகுளத்திற்கோ திருவனந்தபுரத்திற்கோ போவதற்காக உடையை மாற்ற வந்தார். அரைமணிக்குள் திரும்பிப் போனுர். அதற்கிடையில் இதை எப்படிச் சொல்வது ?......

சாந்தா சொன்னுள் :

''நடந்ததை ஒரு பாடமாக நினேச்சால் போதும். இனி அதைப் பற்றி வருந்துவதில் என்ன லாபம்? கடவுள் எல்லாத்தையும் பார்த்துக்கொண்டிருக்கிருர்.''

''மனசால்கூட நினேக்காத ஒரு காரியத்துக்கு இப்படியொரு கெட்டபெயர் கேட்கவேண்டி வந்ததே, குழந்தே !''

'' மனசால்கூட நினேக்காத காரியத்துக்கு இதைவிட அவமானத்தைச் சகிக்கிறவங்களும் இருக்காங்க, மாமி. எல்லாம் தனக்கு வந்தால்தான் தெரியும்.''

எதை மனத்தில் வைத்துக்கொண்டு சாந்தா அவ்வாறு கூறினுள் என்று தீனும்மாவிற்குத் தெரிந்தது. ஆனுல் பதில் ஏதும் கூறவில்லே. கட்டிலில் சென்று படுத்தாள். எவ்வளவுதான் விழிப்புடன் நடந்துகொண்டாலும் சில நேரங்களில் சிக்கலில் மாட்டிக் கொண்டு விடுகிறேம். தானியல் நோட்டுகளே நீட்டியபோது இப்படி ஏதாவது நடக்குமென்று கனவு கண்டாளா ? அவள் படும் அல்லல்களுக்குச் சிறிது ஆறுதலாயிருக்கும் என்றுதானே எண்ணினுள். மாமாவிற்கு எண்ணெயும், தைலமும், அபினும் வாங்குவதற்கு யாரையும் தொந்தரவு செய்யவேண்டாம் என்று தானே நினேத்தாள் ! கல்லுவெளி அக்கா புறம்சொன்னுல் மற்றவர்கள் அதை நம்புவதிலும் நியாயம் இருக்கிறது. 'ஐந்நூறுதான் தந்ததாகச் சொல்கிருள்—என்ன சாட்சியம்? ஒரு தடவைதான் வந்ததாகச் சொல்கிருள்—என்ன சாட்சியம்?'

சாந்தா ஸிஸிலியைக் குளிப்பாட்டினுள். அவளுக்கு மட்டும் செய்துவைத்திருந்த பலகாரத்தையும் காப்பியையும் கொடுத்தாள். சலவை செய்த கவுனே அணிவித்து அவளேப் பள்ளிக்கு அனுப்பினுள். உலேயில் வைத்திருந்த கஞ்சி வெந்ததா என்று பதம் பார்த்தாள். மாங்காய்த் துவையல் அரைத்தாள். அப்பளம் பொரித்தாள். தாத்தா

விற்குப் பல் தேய்க்க உமிக்கரியையும் நீரையும் கொண்டு வைத்தாள். அவரைக் கைகொடுத்து எழுப்பி உட்கார வைத்தாள். பிறகு எதுவுமே நடக்காததுபோல் மாமியிடம் சென்று, ''கஞ்சி குடிக்க எழுந்து வாங்க, மாமி!'' என்று அழைத்தாள்.

''என் உடம்பு தள்ளலே, கண்ணு. தாத்தாவுக்குக் கஞ்சி கொடுத்து, நீயும் குடி.''

''எழுந்திருங்க மாமி, வயசான தாத்தா - அவர் மனசு நோக வைக்கலாமா ?''

அவளுடைய வற்புறுத்தலுக்காகத் தீனும்மா முகம் கழுவிச் சமையலறைக்குச் சென்று கஞ்சி பரிமாறினாள்.

சாந்தா கஞ்சியைக் கொண்டு செல்லும்போது, குஞ்சுநைனா மீண்டும் கட்டிலில் படுத்துக்கொண்டிருந்தார். முகம் விகாரமடைந்து எப்படியோ இருந்தது, எதிர்பாராமல், காரணமில்லாமல் 'பளார்' என்று அடித்ததுபோல்.

''தாத்தா !''

''ஏ...?''

''கஞ்சி குடிக்க எழுந்திருங்க''

''அவன் வரட்டும்.''

''யார்?''

''பெரியவன், காலையிலே போனவன். எதுவுமே சாப்பிடலே.''

சாந்தா திருதிருவென விழித்தாள்.

''குஞ்சுஅகமது ராவுத்தர் போனமாதம் பதினோராம் தேதி சந்தையிலிருந்து புள்ளிக் காளையை வாங்கிட்டுப் போனார். இன்னும் பணம் தரலே''.

''தாத்தா !''

பரிதாபமான பார்வை! கட்டிப் போட்டதொரு கிழக்காளை அடிவாங்கும்போது திமிறி ஓடும் முயற்சியில் தோல்வியடைந்ததைப் போல். நூறு காத தூரம் ஓடி வந்தவனைப்போல் மூச்சு வாங்குகிறது. வியர்த்துக் கொட்டுகிறது. சாந்தா பயந்து போனாள்.

''தாத்தா!''

மேகமூட்டமில்லாமல், மின்னாமல், முழங்காமல் பெய்யும் மழை போல் குஞ்சுநைனாவின் கண்கள் நிரம்பி வழிந்தன. பிறகு கண்களை மூடினார். சாந்தா கூச்சலிட்டாள் :

''மாமி! இங்கே வந்து பாருங்க.''

தீனம்மா ஓடி வந்தாள்.

''மாமா!''

''தாத்தா !''

குஞ்சுநைனா அசையாமல் படுத்திருந்தார். தன்னுணர்வில்லாத மயக்கம். கண்களைத் திறக்க முயன்றார். முடியவில்லை. பேச முயன்றார். நா எழவில்லை.

தீனம்மா மேலே பார்த்துக் கொண்டு ''ஆண்டவரே, இதென்ன சோதனை !'' என்று அரற்றினாள்.

சிறிது நேரத்திற்குப் பின் தூங்கி எழுந்திருப்பதைப் போன்று குஞ்சுநைனா கண்களைத் திறந்தார்.

''மாமா, உடம்புக்கென்ன ?''

''ஒண்ணுமில்லை.''

''ஒண்ணுமில்லையா ? சற்று முன்னால் என்னவெல்லாமோ சொன்னீங்களே ?''

''ஆ......''

''இருக்கிற கவலைகள் போதாதா ? நீங்களும் இப்படி ஆரம்பிச்சால் அப்புறம் என்ன ஆகும் ?''

''......''

''கஞ்சி கொண்டு வரட்டுமா ?''

''கொண்டு வா.''

ஆசையோடு கஞ்சியைக் குடித்தார், ஆனால் நான்கைந்து ஸ்பூன் குடித்ததுமே போதுமென்றாகிவிட்டது. மறுபடியும் வியர்வை! தள்ளாடியபடியே கட்டிலில் படுத்தார்.

குஞ்சுநைனாவைக் கம்பளியால் போர்த்திவிட்டு, தீனம்மாவும் சாந்தாவும் சமையலறைக்குச் சென்றார்கள். தீனம்மா சொன்னாள்:

''தாங்க முடியாத மனக்கவலை, மாமாவுக்கு.''

நண்பகல். சிவராம குறுப்பு, குஞ்சு நைனுவிடம் பேசிக் கொண்டிருந்தான். இரண்டுபேர் தோட்ட வாயிலைக் கடந்து வந்தார்கள். கார்த்திகைப்பள்ளிச் சாமியாரும், சாந்தாவின் தாயாரும்.

''வாருங்கள், சாமி! பார்த்து ரொம்ப நாளாச்சே!'' என்று குறுப்பு கூறுவதைக் கேட்டு, தீனும்மா வெளியே வந்தாள். என்ன ஆச்சரியம்! இருவரும் சேர்ந்தல்லவா வந்திருக்கிறார்கள், அச்சமில்லாமல். நான்கைந்து மாதங்களாவது ஆகியிருக்கும், சாமியாரைப் பார்த்து. திருமணத்திற்கு அழைக்கப் போகும்போது சாமியார் வீட்டிற்கு மட்டும் போகவில்லை. பக்கத்திலிருந்த பெரிய அக்கா வீட்டாரை மட்டும் அழைத்தாள்; 'சாமியார் வீட்டிற்குப் போகாதே' என்ற தடையுத்தரவு இருந்தது. இது பெரிய புகாருக்கும், மன வருத்தத்திற்கும் வழி வகுத்தது.

குறுப்பின் வரவேற்பிற்குப் பதில் கூறும் முறையில் சாமியார் புன்னகை மட்டும் புரிந்தார். பிறகு, திண்ணையில் ஏறி, குஞ்சுநைனு படுத்திருந்த கட்டிலுக்கு முன்னால் நின்றுகொண்டு, அவரை வெகு நேரம் கண் இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தார். சாந்தாவின் தாயாரும் அருகில் நின்றுகொண் டிருந்தாள்.

குறுப்பு சொன்னான் :

''குஞ்சுநைனுவிற்கு என்றுமில்லாத களைப்பு.''

''மாமா, என்னைத் தெரியவில்லையா?''

''யாரு?''

சாமியார் பதில் கூறவில்லை.

தீனும்மா சொன்னாள் :

''கார்த்திகைப்பள்ளிச் சாமி, மாமா!''

''எப்போ வந்தீங்க?''

''இப்போதுதான் வந்தேன், மாமா.''

''ஊரில் இல்லையா?''

''இருந்தேனே. பின்னே ஊரை விட்டு ஓடிப் போக முடியுமா?''

வருத்தத்தில் தோய்ந்ததென்றாலும் சாமியார் தமக்கே உரிய சிரிப்பினால் வீட்டை எதிரொலிக்கச் செய்தார்.

''கூட வேறு யார்?''

''சாந்தாவின் அம்மா.''

குறுப்பு சொன்னான் :

''பார்த்தபோதே நினைத்தேன். கேட்கலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தேன். சந்திக்க முடிந்ததில் மகிழ்ச்சி.''

தீனம்மா சொன்னாள் :

''மாமாவின் நண்பர், குறுப்பு.''

''சாந்தா எங்கே, தீனம்மா?''

''ஆற்றுக்குக் குளிக்கப் போயிருக்கிறாள்.''

சற்றுக் கவலையோடு சாந்தாவின் தாயார் கேட்டாள் :

''இந்த மத்தியான்ன வேளையிலேயா?''

''துணி தோய்க்கிறதுக்கு இருந்தது. துணையோடுதான் போனாள்.''

குறுப்பு சொன்னான் :

''பயப்படுவதற்கு ஒன்றும் இல்லை. இந்தச் சுற்று வட்டாரத்தில் குஞ்சுநைனாவின் உறவினர்களும், வேண்டியவர்களும்தான் இருக்கிறார்கள்''.

''மாமா ! உங்களுக்குக் களைப்பாய் இருக்குதா?''

''எனக்கா?''

''ஆமாம்.''

''ஒரு தலைமுறையின் பழுத்த இலை காம்பற்று விழஇருக்கிறது.''

''ஆமாம் மாமா, தயாராக இருங்கள்.''

''ஆகா ! என்ன வேதாந்த ஞானம் ! அபாரம் ! அபாரம் ! சாமி, உண்மையைச் சொல்லப் போனால் குஞ்சுநைனாவுடன் பழகினாலே போதும். எவருக்கும் கிறிஸ்துவ வேதத்தில் நம்பிக்கை பிறக்கும்.''

குஞ்சுநைனாவின் கவனம் வேறு எங்கோ இருந்தது :

''ஆனால் ஒண்ணு......''

''என்ன ?''

''கொடியவர்கள் வாழ்கிறார்கள். அவர்கள் மேலும் மேலும் வலிமை பெறுகிறார்கள். கடவுளின் பிரம்பு ஏன் அவர்கள் மீது

படுவதில்லே ? அது ஏன் ? யோபு கேட்டதுபோல், அதற்குக் காரணம் என்ன ?''

"யோபுவின் புத்தகத்திலேயே அதற்கான பதிலும் இருக்குது, மாமா. கடவுள் ஒருவனது தவறுகளே அவன் சந்ததியருக்காகச் சேர்த்து வைத்திருக்கிருர்.''

குஞ்சுனைநனு மறுபடியும் சொன்ஞர் :

''கர்த்தர் மோசேயிடம் கூறுகிருர் : ஆரோனின் குமாரர் களாகிய புரோகிதர்களிடம் இதைச் சொல். தன் சிரசில் அபிஷேக தைலம் வார்க்கப்பட்டவனும், அவனுக்குரிய வஸ்திரங்களேத் தரிக் கும்படி பிரதிஷ்டை பண்ணப் பட்டவனுமாயிருக்கிற புரோகிதன் கன்னிகையாயிருக்கிற பெண்ணேத்தான் விவாகம் பண்ண வேண்டும். விதவை, தள்ளப்பட்டவள், கற்புக்குலேந்தவள், வேசி போன்றவர்களே ஏற்றுக் கொள்ளலாகாது.''

''ஆம், சரிதான். மாமா, நீங்கள் இதை இப்போது சொல்லக் காரணம் ?''

''காரணமா ?''

''ஆம்.''

தீனும்மா அவசர அவசரமாகச் சொன்னுள் :

''சும்மா இருங்க மாமா. நீங்க சுயநினேவோடுதான் இதை யெல்லாம் சொல்றீங்களா ?''

சாமியார் சற்றுக் கடிந்தே சொன்ஞர் :

''உனக்கேன் இவ்வளவு பயம் ? மாமா என்னதான் சுயநினே வில்லாமல் பேசினுலும் அதை நானும் கேட்கலாம். அதனுல் ஒன்னும் ஆகிவிடப் போவதில்லே.''

இருப்பினும் தீனும்மாவிற்கு நிம்மதியில்லே.

''அப்படியாஞல், குறுப்பு போகட்டும்.''

அப்பொழுதும் சாமியார் விட்டுக் கொடுக்கவில்லே.

''எதற்காக அவர் போகணும்? குறுப்பு, நீங்க இருங்க. மாமா வின் உற்ற நண்பருக்கும் தெரிய வேண்டிய பல விஷயங்களே நான் சொல்ல வேண்டியிருக்குது. நீ கலவரப் படாதே தீனும்மா. இது என் அத்தையைக் கட்டிக் கொடுத்த வீடு.''

இவ்வளவாகியும் தீனும்மா தன் சமாதான முயற்சியைக் கை விடவில்லை.

“அத்தையைக் கட்டிக் கொடுத்த வீடு என்றெல்லாம் எனக்கும் தெரியும். ஆனல் புத்தி ஒரு நிலையாக இல்லாமல் இருக்கும் மாமா ஏதோ சொன்னல் அதை நீங்கள் ஒரு பொருட்டாக எடுத்துக்கக் கூடாது.''

“உம், அப்படியா ? மாமாவுக்குத்தானே புத்தி ஒரு நிலையாக இல்லை. உனக்கும், உன் கணவனுக்கும், அவன் அண்ணன்களுக் கும் புத்தி நிலையாகத்தானே இருக்குது ? நீங்கள் சொன்னதும், செய்ததும் எல்லாம் சரிதான ?''

சாமியாரை எதிர்த்து நிற்கக்கூடிய மனேதிடம் தீனும்மாவிடம் இல்லை. அலட்சியமாக அவனை நோக்கும் சாந்தாவின் தாயாரை ஏறெடுத்துப் பார்க்கவும் அவளால் இயலவில்லை.

“என் அத்தையின் பேரனின் கல்யாணம். அதிலேயும் புரோகி தனை நான் கொண்டுவந்த சம்பந்தம்! அந்தக் கல்யாணத்திற்கு என்னை அழைக்காமல் இருந்ததற்கான காரணம ?''

‘‘.........''

‘‘தீனும்மா ! உன்னிடம் இதற்கான பதிலில்லையா ?''

‘‘நான் என்ன சொல்ல ? ஆண்கள்தானே கல்யாணத்திற்கு அழைக்கிருங்க !''

“உன் பெரிய அக்காவையும், பிள்ளைகளையும் நீதானே அழைச்சே ? அதுவும் சண்டையில் வந்து ; அப்படியிருந்தும் ஏன் இன்னெரு அக்காவையும், பிள்ளைகளையும் அழைக்கவில்லை ?''

தீனும்மா அப்போதும் மௌனம் பூண்டாள்.

‘‘பதில் இல்லை. அப்படித்தானே ?''

‘‘யாரையெல்லாம் அழைக்கணும் என்பது என் விருப்பமா, சாமி ?''

‘‘உன் விருப்பப்படி எதுவும் செய்யாதே, ஆனல் அழைக்காமல் இருந்ததற்கான காரணம் உனக்குத் தெரியுமே. அதைச் சொல். நானும் தெரிஞ்சுக்கிறேன்.''

தீனும்மாவிற்கு வியர்த்துக் கொட்டியது.

''சங்கோசப்படாதே. மறைத்துவைத்துச் சிகச்சை செய்து குணப் படுத்தக்கூடிய கட்டத்தைத் தாண்டினால் நோய்க்கான காரணங்களை எல்லோரும் அறிந்துதான் ஆகணும்.''

''நடந்ததெல்லாம் நடந்துவிட்டது. சாமி. இனி அதையும் இதையும் சொல்லி......''

''என்ன நடந்துவிட்டது? மனத்தால் கூடத் தவறு செய்யாத ஒரு பெண்குழந்தை உன் வீட்டில் நெருப்பை உண்டுதானே வாழ்கிறாள்? தந்தையைக் காணக் கொடுத்து வைக்காத பெண்! இருந்தாலும் தந்தையின் ஓர் உருவத்தை மனத்தில் வைத்து வணங்கி வந்துகொண் டிருந்தாள். தீர்க்கதரிசி ஏலியாவிற்குத் தீர்க்கத்தரிசனம் உண்டானதுபோல் உங்களுக்கும் ஒரு தீர்க்கதரிசனம் உண்டாயிற்று—அவள் தந்தை வேறு ஒருவன் என்று. நான் சொன்னது சரிதானே?''

''இதையெல்லாம் உங்களிடம் யார் சொன்னது, சாமி?''

''ஹும், நீங்கள் திருச்சபைக்காரர்களை யெல்லாம் வைத்து விவாதித்த ஒரு சங்கதி வேறு யாருக்குமே தெரியாமல் போகும் என்று நினைக்கிறீங்க? நல்லா இருக்கு!''

அப்பொழுது முதல் முறையாகச் சாந்தாவின் தாயார் குறுக் கிட்டாள்:

''எனக்குண்டான அவமானத்தைப்பற்றி யாருமே கவலைப்பட வேண்டாம். எவ்வளவு கடவுள்பயத்தோடு வாழ்ந்தாலும் துணை யற்ற கைம்பெண்ணை ஒருத்தி, வீண்பழியிலிருந்து தப்புவது என்பது முடியாத காரியம் என்பதை நான் அனுபவத்திலிருந்து அறிந்திருக்கிறேன். கடவுளுக்கு எதிரில் குற்றமற்றவளாக இருக்க வேண்டுமே தவிர வேறு எதைப்பற்றியும் கவலைப்பட வேண்டாம். அப்புறம் வெயிலில் காய்ந்துவிடாமலும், தீயினால் சுருகிப் போகாமலும் என் மகளை நான் வளர்த்திருக்கிறேன். அதனால் இதைக் கேட்டு அவள் தற்கொலை செய்துகொள்ள மாட்டாள் என்பது உறுதி.''

குறுப்பு சொன்னான்:

''சாமி சொன்னதனுல்தான் நான் இங்கே நிற்கிறேன். உங்க குடும்ப விஷயம் பேசுகிற இடத்தில் எனக்கு வேலை கிடையாது. இருந்தாலும் கேட்டதை வைத்துக்கொண்டு சொல்கிறேன். எல்லாம் ஒருவரை ஒருவர் சரியாகப் புரிந்துகொள்ளாததனுல் வந்த வினை. ஸிஸிலி அம்மாவிற்கோ குஞ்சுநைனுவிற்கோ இதைப்பற்றி எதுவும் தெரியாது,''

சாமியார் குறுப்பின் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். எள்ளி நகைத்தார் :

''குறுப்பு ! நீங்கள் பரிந்து பேசுவதில் வியப்பில்லை ! நான் இவள் அக்காவைத் திருமணம் புரியும்போது இவளுக்கு நாலு வயது, என் சொந்தத் தங்கை மாதிரிதான் இவள் வளர்ந்தாள். ஆனுல், பிறரைக் குற்றம் சொல்லித் திரியும் ஒருவன் பேச்சைக் கேட்டு அவள் என்னைக் காட்டிக் கொடுத்தாள்.''

''அப்படி நடக்குமா?''

''சற்று முன்பு மாமா ஒரு புரோகிதன் உவமை சொன்னுரே! என்னைக் கருத்தில் கொண்டுதான். இல்லை என்ருல், மாமா சொல்லட்டும்.''

தீனும்மா கலவரத்துடன் சொன்னுள் :

''ஒண்ணுக்கொண்ணு சம்பந்தமில்லாமல் உளர்ற மாமாவிடம் ஏன் இதையெல்லாம் கேட்கறீங்க?''

''கோதச்சிறைக்காரன் ஒருவன் இங்கே வந்து சொன்னுன்.''

''ஆ...என்ன சொன்னுன் ? சொல்லுங்க, மாமா !''

தான்செய்த குற்றத்தை ஒப்புவதற்குக் கட்டாயப்படுத்தப் பட்ட குழந்தையைப்போல் குஞ்சுநைனு சுற்றுமுற்றும் பார்த்தார். ஊசி கீழே விழுந்தால் கேட்கும் அமைதி. ஆங்காங்கு நரைத்த தாடியுடன் நிற்கும் சாமியாருக்குச் சற்றேனும் அச்சமில்லை, பெரியதொரு குற்றம் சுமத்தப்பட்டு வழக்குமன்றத்தில் நிற்கும் நிரபராதியான ஒரு வீரனைப்போல் அவர் நின்று கொண்டிருந்தார். சாந்தாவின் தாயாரும் அதே அச்சமின்மையுடன் வருவதை எதிர்நோக்கியிருந்தாள் இடையிடையே பரிகாச நகைப்பு.

நினைக்காதிருக்கையில் மண்குடம் கீழே விழுந்து உடைந்தது போல் முற்றத்தில் பேச்சுக்குரல் கேட்டது; வர்கீஸும் மாத்யுவும்.

''சின்ன வயதிலிருந்தே உனக்கு அவன் குணம் தெரியுமே. கதிர்விடும்போது எருப் போட்டால் நல்ல விளைச்சல் உண்டாகுமா?''

''வேறு யாரையும் சொல்ல வேண்டாம். அப்பாவைச் சொன்னால் போதும். அப்புறம் இங்கே ஒருத்தி இருக்காளே, அவளையும். அந்தப் பையன் கொண்டுவந்து தந்த ரூபாயை வாங்கினார்கள். அப்புறம் எதற்காகத் திருப்பிக் கொடுக்கணும்? சும்மா இருக்கிற சங்கை ஊதி கெடுத்த மாதிரி.''

''டேய், அப்பாவுக்கு இவ்வளவு தள்ளாமலிருந்தும் பிள்ளைகளின் துயரம் கண்டால் நிம்மதியில்லை.''

விருந்தினரைப் பார்த்தபோது இருவரும் கலவரமடைந்தனர். அதை வெளியே காட்டாமல் வர்கீஸ் கேட்டான்:

''சாமி! எப்போ வந்தீங்க?''

''கொஞ்ச நேரத்துக்கு முன்னால்.''

''இருவரும் ஒன்றாகத்தான் வந்தீங்களா?''

''ஆமாம்.''

வேறு எதுவும் கேட்பதற்கில்லை. எனவே தந்தையிடம் கேட்டான்:

''அப்பா, உங்களுக்கு உடம்பு சரியில்லைனு கேள்விப்பட்டேனே?''

''யாரு, வர்கீஸா?''

''ஆமாம் அப்பா.''

''டேய், அந்தக் கோதைச்சிறைக்காரன் லோனன் இங்கே வந்து என்ன சொன்னான்னு சாமி கேட்கிறார். நீயே சொல்லு.''

சற்றும் எதிர்பாராது, துப்பாக்கி முனையில் நிற்பதைப் போன்றதோர் அனுபவம். வர்கீஸும் மாத்யுவும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். மாத்யு ஓரக்கண்ணால் சாந்தாவின் தாயாரைப் பார்த்தான். தீனம்மாவைப் பார்த்தான்.

இந்தப் பேராபத்தைச் சமாளிக்க வேண்டிய பொறுப்பு தன்னுடையதுதான் என்பதை உணர்ந்த வர்கீஸ் சொன்னான்:

''அப்பா, நீங்க என்ன சொல்றீங்க? கோதைச்சிறையாவது, லோனுவது! இப்பவும் ஏதேதோ பிதற்றறீங்களே! இன்னும் உடம்பு சரியாகலேபோல் இருக்கு.''

சாமியார் சொன்னுர் :

''வர்கீஸ்! நான் கேட்டேன் என்று மாமா சொன்னுரே அது உண்மைதான். அந்த விஷயத்தைத் தெரிந்துகொள்ளத்தான் நான் இங்கு வந்தேன்.''

தப்பித்துக்கொள்ள வழியில்லே! துப்பாக்கி இதோ வெடிக்கப் போகிறது. நெஞ்சிற்கு நேராகவே நீட்டப்பட்டுள்ளதே! இருப் பினும் மீண்டுமொரு முறை முயன்ருன்.

''ஆ...கேட்டீங்க, சொன்னுங்க. உங்களுக்கு வேறு வேலே இல்லே சாமி.''

''நீ சொல்வது சரியல்ல, வர்கீஸ், இதைக் கல்யாணத்துக்கு முன்னுலேயே வந்து கேட்டிருப்பேன் அதனுல் கல்யாணம் நின்று போகும். எனவே அது தவறு என்று நினேத்தேன். அதனுல்தான் வரவில்லே. இனியாவது அந்த உண்மை தெரிந்தாகணும்.''

இவ்வளவு நியாயவாதங்களேக் கேட்டபோது மாத்யுவுக்குக் கொஞ்சம் ரோஷம் வரத்தான் செய்தது :

''உண்மையும் பொய்யும் செய்தவங்களுக்குத் தெரியும். இனி அந்தக் குப்பையையெல்லாம் ஏன் கிளறணும்?''

சாமியாரும் விடவில்லே :

''சாமர்த்தியமாகப் பேசி, தப்பிச்சுக்காதே. கண்ணியமான வர்களேப்பற்றி வாயில் வந்ததையெல்லாம் பேசின பிறகு, குப்பையைக் கிளற வேண்டாமுன்னு சொல்றே?''

''என்ன வாயில் வந்ததைப் பேசினேம்?''

''எதுவும் பேசலேயா?''

சாந்தாவின் தாயார் சொன்னுள் :

''நீங்கள் என்ன பேசினுலும் அதற்காக நான் வருத்தப்படப் போவதில்லே. ஆனுல் ஒரு விஷயம். இந்தத் திருமணத்திற்கு விருப்பமில்லே என்று எள்ளளவாவது தெரிந்திருந்தால் நான் இதற்குச் சம்மதித்திருக்க மாட்டேன். இருபத்து நான்காவது வயதில் விதவையானவள் நான். என் குழந்தைகளே வளர்க்கவும்

படிக்க வைக்கவும் நான் பட்டினி கிடந்திருக்கேன். ஆனால் யாருக்கும் மனவருத்தம் உண்டாகும்படியாக எதுவும் செய்ததில்லை.''

பதற்ற நிலையைத் தணிய வைத்து, அமைதியை நிலைநாட்ட வர்கீஸ் மறுபடியும் முயன்றான்.

''உலை வாயை மூடலாம், ஊர் வாயை மூட முடியுமா?''

அதை கவனிக்காதவள்போல் சாந்தாவின் தாயார் சொன்னாள்

''உங்கள் மகள் வயதுதான் எனக்கிருக்கும். இனி மறைப்பதற்கு என்ன இருக்கிறது? கடவுள் நம்பிக்கை மிகுந்த வீட்டில், கடவுளுக்கு என்னைக் காணிக்கையாக்கி மணம் முடிந்து ஒரு வருஷம் வரை என் தெய்வ காரியங்களுக்குத் தடையேதும் வரக்கூடாதென்று, அண்ணன் தங்கையைப் போல வாழ விரதமெடுத்து, அதைக் கடைபிடித்தவள் நான். அத்தகைய நான், கணவன் இறந்த பிறகு ஒரு புரோகிதனைக் கள்ளக்காதலனாக வைத்திருந்தேன் என்றுதானே இங்கே வதந்தியைப் பரப்பினார்கள்?''

''யார் அப்படிச் சொன்னது?''

''யார் சொன்னார் என்பதெல்லாம் எனக்குத் தெரியாது.''

''யார் யாரோ எதை எதையோ சொல்லியிருப்பார்கள். அதற்கு நாங்களா பொறுப்பு?''

சாமியார் விட்டுக் கொடுக்கவில்லை.

''அப்படித் தூக்கியெறிந்து பேசாதே, மாத்யு. இந்தக் காரணத்தைச் சொல்லிக் கல்யாணம் வேண்டாமுன்னு சொல்ல நீங்க முயற்சி செய்யவில்லையா? பையனுடைய கட்டாயத்தினால் தானே, கல்யாணத்துக்கு ஒத்துக்கொண்டீர்கள்? இல்லையென்றால் கடவுள் சாட்சியாகச் சொல்லுங்கள்.''

வர்கீஸ் கூறினான்:

''சாமி, நீங்களும் மனத்தைக் கட்டுப்படுத்தாமல் பேசினால் என்னவாகும்?''

''வர்கீஸ்! என் இதயத்தில் இருக்கும் வேதனையை நீ அறிய மாட்டாய். இந்த வதந்திகளையெல்லாம் கேட்டு வாத நோயால் படுத்திருக்கும் என் மனைவி விஷம் குடித்துச் சாகத் துணிந்தாள். உங்களுக்கு இதெல்லாம் எங்கே தெரியப் போகிறது?''

தான் அங்கு இருப்பது சரியென்று நிரூபிக்கவும், தனது புத்திக் கூர்மையை வெளிப்படுத்தவும் குறுப்பு ஓர் அபிப்பிராயத்தை வெளியிட்டான் :

''இது உங்கள் குடும்ப விஷயம். சாமியார் சொன்னதனுல் தான் நான் இங்கே இருக்கிறேன். இதைப் போன்ற வீண் பழிகள் சொல்லித் திரிபவர், குஞ்சுறைநணு குடும்பத்திலேயே ஒருவர்தான் குஞ்சுச்செறுக்கன்!''

வெறுப்போடு மாத்யு சொன்ஞன் :

''யோவ் குறுப்பு, வாயை மூடு!''

அதைக் கவனிக்காமல் சாமியார் சொன்ஞர் :

''உங்களில் யாருக்காவது சந்தேகம் இருந்தால், என்னுடன் வாங்க. புத்தனுற்றங்கரையில் இருக்கும் தஸ்தாவேஜுகளைக் காட்டுகிறேன்.''

வர்கீஸ் அமைதியாகச் சொன்ஞன் :

''எந்த விதமான சந்தேகமும் இல்லை சாமி. இனி அதைப் பற்றி எதுவும் பேச வேண்டாம். எவஞே புறம் சொல்லித் திரிபவனின் பேச்சைக் கேட்டு எங்கள் சின்னப் புத்திக்குச் சந்தேகம் தோன்றியது. அதை நீங்கள் மறந்து போயிடணும்.''

பிறகு சாந்தாவின் தாயாரைப் பார்த்துச் சொன்ஞன்:

''என்னை உன் அப்பாவைப்போல் நினைத்து மன்னித்து விடு.''

சாமியார் சொன்ஞர் :

''ஆம், மன்னிக்கத்தான் வேண்டும். வேறு வழி ? உள்ளத்தில் துயரம் அடக்க முடியாமல் பொங்கி வந்ததால் வெளியிட்டேன். குடிக்கும் நீரில் நஞ்சு கலந்ததுபோல். இங்கே வந்து புறம் கூறிச் சென்றவன் யார் என்பதும் தெரிஞ்சுக்குங்க. புத்தனுற்றங்கரையில் பெரிய பணக்காரஞன பத்ரோஸ் முதலாளியின் கணக்குப்பிள்ளை அவன். பத்ரோஸ் முதலாளி சாந்தாவின் அம்மாவை எப்படியெல்லாம் துன்புறுத்தியிருக்கான் ! நான் அங்கே ஊழியம் செய்து கொண்டிருந்த நாட்களில் அவனுடைய அட்டூழியங்களை எதிர்த்துப் போராடினேன். நான் இவர்களது வீட்டில் சிறிது நாட்கள் தங்கி

யிருந்ததனால் எங்கள் இருவரையும் இணைத்து வதந்திகள் பரப்பினான். திருச்சபையில் கலகமுண்டாக்கினான்......''

சாந்தாவின் தாயார் சொன்னாள் :

''இனி அதைப்பற்றியெல்லாம் சொல்ல வேண்டாம். ஒரே ஒரு வேண்டுகோள். இந்தக் காரணத்திற்காக என் குழந்தை மறுபடியும் துயருருமல் நீங்கள் பார்த்துக் கொள்ளவேண்டும். அவள் சுகத்திற்காக வாழ்நாள் முழுவதும் துன்பங்களை அனுபவித்த என்னால் அதைமட்டும் தாங்க முடியாது.''

திரும்பிப் பார்த்தபோது கதவருகில் சாந்தா தன் பார்வையால் தாயைக் குற்றம் சாட்டியவாறு நிற்கக் கண்டாள்.

''நீ எப்போ வந்தே, கண்ணு?''

ஆற்றுத் துறையிலிருந்து தோய்த்த துணிகளுடன் வரும்போது தாத்தாவின் கட்டிலுக்கருகில் யாரோ உரத்த குரலில் பேசுவது சாந்தாவின் காதில் விழுந்தது – அம்மா ! கார்த்திகைப்பள்ளிச் சாமியார்!... நேராக வீட்டிற்குள் நுழையாமல் பின்பக்கமாக வேலியைத் தாண்டி வந்தாள். அவசரமாகத் துணிகளைக் கொடியில் உலர்த்தினாள் –

''இதையெல்லாம் கேட்கிறதுக்காகவா அம்மா, நீங்க வந்தீங்க ?'' என்று தாயின் கேள்விக்கு நேர் மறுமொழியின்றித் திருப்பிக் கேட்டாள் சாந்தா.

''வாழ்நாள் முழுவதும் இந்தப் பழியைச் சுமந்து உன்னால் இருக்க முடியுமா ?''

தீனம்மா சொன்னாள் :

''கேட்டுப் பாருங்கள். சொந்தத் தங்கையைப் போலத்தான் நான் அவளை நினைச்சிருக்கேன்.''

சாந்தாவின் தாய் மறுமொழியின்றி நின்றாள். உள்ளூற, 'நீ தங்கையைப்போல் நினைத்திருந்தால் வேறு ஒருத்தி இந்த வீட்டில் வந்து இப்படி ஒரு அவதூறு சொல்ல இடம் கொடுத்திருப்பாயா ? மத்தியான்ன வேளையில் ஆற்றுத்துறைக்கு அவளைத் துணி துவைப்பதற்கு அனுப்பியிருப்பாயா ?' என்றெல்லாம் மனம் எண்ணியது.

சாமியார் கிளம்பி விட்டார்.

"வர்கீஸ் ! நான் போய் வர்றேன்."

"காபிகூடக் குடிக்காமல்......"

"இந்த மத்தியான்ன நேரத்திலேயா காபி? எனக்குப் பத்தனம் திட்டு வரையில் போக வேண்டியிருக்கு."

"சாப்பிட்டுப் போகலாம் சாமி!" என்றாள் தீனம்மா.

"முன்னறிவிப்பு இல்லாமல் திடுதிப்பென்று வந்திருக்கிறோம். இரண்டு பேர்களுக்குச் சாப்பாடு போடுவாயா ?"

"இருக்கிறதில் ஒரு பங்கு."

"என்னவானாலும் இன்றைக்கு வேண்டாம்."

அதற்குப்பின் வற்புறுத்தவில்லை. அந்தச் சுதந்தரம் பறி போனாற்போல் அவள் உணர்ந்தாள். குடையை மறைத்து வைத்ததும் சம்மதத்திற்குக் காத்திராமல் முருங்கைக்கீரைக் கூட்டும், காராமணிப்பயிர் கறியும் சமைப்பதற்கு உள்ளே சென்றதும் அவள் நினைவில் வந்தன. தீனம்மாவின் மனத்துயரத்தைப் புரிந்துகொண் டவர்போல் சாமியார் சொன்னார் :

"எனக்கு உன்னிடம் கோவமுன்னு நினைக்காதே, அம்மா. இல்லாவிட்டாலும் உன்னிடம் நான் கோவிச்சுக்க முடியுமா ?"

"நானும் கிளம்பறேன், சாமி!" என்றாள் சாந்தாவின் தாயும்.

"இனி இன்றைக்குப் புத்தனாற்றங்கரைக்குப் பஸ் இருக்கா ? துறை வேறு கடக்க வேண்டியிருக்கும்!" என்று கேட்டான் மாத்யு.

"பஸ் இருக்கும், குளக்கடவு ஆலீஸ் வீட்டில் இன்றைக்கு ராத்தங்குவேன்."

"அப்படியானால் இன்றைக்கு இங்கேயே தங்கி நாளைக்குப் போகலாமே!" என்று மொழிந்தாள் தீனம்மா.

சாந்தாவும் "நாளைக்குப் போனால் போதும் அம்மா!" என்றாள்.

அதற்குப் பிறகு, சாந்தாவின் தாயார் மறுக்கவில்லை.

சாமியார் குஞ்சுநைனா அருகில் சென்றார் :

"நான் போய்வர்றேன் மாமா!"

குஞ்சுநைனா கண்களை மூடியவாறு படுத்திருந்தார்.

"அப்பா, சாமியார் போய் வருறாம்."

குஞ்சுநைனா திடுக்கிட்டு எழுந்தார் :

"போய் வர்றீங்களா சாமி ?"

"ஆமாம்."

"உம்."

குஞ்சுநைனவின் தலையில் கைவைத்து, பிரார்த்தனை செய்தபின் சாமியார் அங்கிருந்து அகன்றார்.

கண்களைத் திறந்தாரென்றாலும் மயக்கத்தின் பிடியிலிருந்து விடுதலை பெற முயன்றுகொண்டிருந்தார் குஞ்சுநைன.

"சாமி போய்விட்டாரா ?"

"போய்விட்டாரே, உங்கள் தலையில் கைவைத்துப் பிரார்த்தனைகூடச் செய்தாரே !"

"அப்படியா! தீனும்மா எங்கே ?"

"உள்ளே இருக்கிறாள்."

"ரொம்பக் களைப்பாயிருக்கு. குடிக்கிறதுக்குச் சூடா ஏதாவது வேணும்."

தீனும்மா காபி கொண்டுவந்தாள். குளிர்ந்த இரவுக்குப் பிறகு வரும் சூடான காலை போன்று, அதைக் குடித்தபின் சற்றுத் தெம்பு வந்தது.

"கல்யாணத்துக்குப் பிறகு உன் மகள் குட்டியம்மாவும் மாப்பிள்ளையும் வீட்டோடுதான் இருக்கிறாங்களா ?"

"ஆமாம்."

"வீட்டுச் செலவெல்லாம் யார் ஏற்பது ?"

"அவங்க இரண்டு பேரும்தான்."

"இனிமேல் உனக்கு நிம்மதியாக இருக்கலாம். பெண்களையெல்லாம் கட்டி அனுப்பியாச்சே! பையனுக்கு ஏதாவது வேலை கிடைச்சால், அவன் வழியை அவன் பார்த்துப்பான். அப்புறம் நீயும் உன் வீட்டுக்காரியும்தானே ?"

"எங்களுக்கு நீங்க கொடுத்த மண்ணிருக்கு, அதுபோதும்."

"குஞ்சுச்செறுக்கன் காரியம் எப்படியடா ? ஆழ்கடலில் வலை வீசினாலும் அவன் வலையிலே ஒரு மீன்கூட விழறதில்லையே !"

"கவலைப் படறதுக்கு ஒண்ணும் இல்லை."

"ஏ...?"

''பையனைப் போலீஸ் பிடிச்சுப் போயிருந்தாலும் கவலைப்படற துக்கு இல்லை. அவன் கொண்டுவந்து கொடுத்த ரூபாய் எல்லாமே போலீஸ் கையில் கிடைக்கலையாம்.''

''எவ்வளவு இருக்கு ?''

''யாருக்குத் தெரியும் ? இரண்டு மூணு நாள் முன்னால்கூடப் பையனின் கூட்டாளி ஒரு வடக்கத்தியான் ரூபாய் கொண்டுவந்து கொடுத்துப் போனானும் !''

''பிலிப்பு பணக்காரன் ; ஆனால் நடத்தை சரியில்லை.''

''உம், இனி அவனைச் சொல்லித் திருத்த முடியுமா ?''

''அப்புறம் உன் காரியம். மூத்தவள் வியாதிக்காரியாப் போயிட்டாள். அந்த டீச்சர் பெண்ணை யாருக்காவது கட்டி யனுப்புடா!''

''அப்பா !''

''ஏ...?''

''என்ன சொல்றீங்க ? வியாதிக்காரிப் பொண்ணுதான் இறந்து போய்விட்டாளே!''

''......''

''குட்டியம்மா கல்யாணம்தான் போன வாரம் நடந்தது. கொஞ்சம் முன்னால்தானே அதைப்பற்றிச் சொன்னேன். மறந்து விட்டீங்களா ?''

ஆழ்கடலில் நீந்தித் தத்தளிக்கும் ஒருவனின் முகத்தோற்றம் ! உதவியைத் தேடும் கண்கள் !

''அப்பா!''

கண்கள் திறந்திருந்தன என்றாலும் பேச முடியவில்லை.

''தீனும்மா, இப்படி வா.''

தீனும்மா வந்தாள்.

நெற்றியை நனைந்த துணியால் துடைத்தாள். கைகால்களைப் பிடித்துவிட்டாள்.

''வர்கீஸ் போய்விட்டானா?''

''நான் போகலை அப்பா, இங்கேயே இருக்கேன். என்ன வேணும் உங்களுக்கு?''

''கல்லறை கட்டணும். 'மேலேத்தொழுத்து மாத்தான் குஞ்சு நைநு' என்று கல்லிலே செதுக்கணும், இந்த உலகில் நான் வாழ்ந் திருந்தேன் என்று வருங்காலச் சந்ததியருக்கு நினைவிருப்பதற்காக. அல்லாமல் என்னிடம் என்ன இருக்கு?''

சாந்தாவும் அவளுடைய தாயும் கட்டிலுக்கருகில் வந்தனர்.

தீனும்மா கேட்டாள் :

''இதையெல்லாம் ஏன் மாமா, இப்போ சொல்றீங்க?''

''அந்த நேரத்தில் இவன் பக்கத்தில் இல்லாவிட்டால் என்ன செய்கிறது? வேளை நெருங்கின மாதிரி தோணுது.''

''நீங்க இதையெல்லாம் நினைச்சுக்கிட்டுப் படுத்தனுல்தான் அயர்ச்சியாக இருக்கு.''

''நம் குடும்பத்தில் நீதான் பெரியவனாக இருந்து எல்லாவற் றையும் கவனிக்கணும். சண்டைசச்சரவு இருந்தாலும் ஒற்றுமை குலையாமல் குடும்பத்தைக் கட்டிக் காக்கணும். இஸ்ரவேலர்கள் வேறு தெய்வங்களின் விக்கிரங்களைச் செய்து அவைகளை வணங் கினார்கள்; பலியிட்டார்கள். அப்படியிருந்தும் மோசே, அவர்களைச் சிதறுண்டு போகாமல் அழைத்துச் செல்லவில்லையா? அதைப் போல் நீயும் முன்யோசனையுள்ள ஒரு தலைவனாக இருக்கணும். உன் முன்கோபத்தை விட்டொழிக்கணும்.''

''அப்பா, இதை நீங்க எனக்குச் சொல்லித் தரணுமா?''

''சிறிய பெரிய விஷயங்களுக்குக் கணக்குச் சொல்லிச் சண்டை போட்டாலும் நீங்க ஆபத்து வரும்போது ஒன்றாக இருக்கணும். 'மா மோதிஸர' திருமணம், அடக்கம் போன்ற சடங்குகளை ஆரம்பம் முதல் கடைசி வரையில் நீ இருந்து நடத்தி வைக் கணும். ''

''மாமாவுக்கு இனியும் காபி வேணுமா?''

''கொடு. ஒரே களைப்பு.''

''அதிகமாய்ப் பேசாமல் இருங்க.''

''ஸாரம்மான்னுதானே பெயர்?''

''சாந்தா அம்மா பெயரா? — மாரியக்குட்டி.''

''மாரியக்குட்டி ! உன் மகளாலே குடும்பத்துக்குக் கௌரவம். கணவனுக்குப் பெருமை. சாலொமோன் கேட்கிறார் : குணசாலி யான மனைவி யாருக்குக் கிடைப்பாள் ? அவளுடைய விலை முத்து களைவிட உயர்ந்தது. மாரியக்குட்டி ! படிச்சிருக்கிறாயா ?''

''படிச்சிருக்கேன் மாமா-நீதி மொழிகள்.''

''புத்தகம் இருக்கு. அதைக் கொஞ்சம் படி; கேட்கிறேன்.''

வர்கீஸ் கேட்டான் :

''இப்பவே படிக்கணுமா, அப்பா ?''

''படிக்கட்டும். நீயும் கேள். இப்போ கட்டிக் கொடுத்த டீச்சரம்மா பெண்ணுக்குச் சொல்லிக்கொடு.''

சாந்தா வேத புத்தகத்தைக் கொண்டு வந்தாள். மாரியக்குட்டி அதைப் படித்தாள் :

அவள் இருட்டோடே எழுந்து தன் வீட்டாருக்கு ஆகாரம் கொடுத்து, தன் வேலைக்காரிகளுக்கும் படியளக்கிறாள். ஒரு வயலை விசாரித்து அதை வாங்குகிறாள்; தன் கைகளின் சம்பாத்தியத்தினால் திராட்சைத் தோட்டத்தை நாட்டுகிறாள். தன்னைப் பலத்தால் இடைகட்டிக் கொண்டு, தன் கைகளை முறுக்குகிறாள். தன் வியா பாரம் பிரயோஜனமுள்ளதென்று அறிந்திருக்கிறாள்; இரவிலே அவள் விளக்கு அணையாதிருக்கும். தன் கைகளை இராட்டினத்தில் வைக்கிறாள்; அவள் விரல்கள் கதிரைப் பிடிக்கும். சிறுமையானவர் களுக்குத் தன் கையைத் திறந்து, ஏழைகளுக்குத் தன் கரங்களை நீட்டுகிறாள். தன் வீட்டார் அனைவருக்கும் இரட்டைப்புரை உடுப் பிருக்கிறதால், தன் வீட்டாரினிமித்தம் குளிருக்குப் பயப்படாள். இரத்தின கம்பளங்களைத் தனக்கு உண்டுபண்ணுகிறாள். மெல்லிய புடைவையும், இரத்தாம்பரமும் அவள் உடுப்பு. அவள் புருஷன் தேசத்து மூப்பர்களோடே நியாயஸ்தலங்களில் உட்கார்ந்திருக்கை யில் பேர் பெற்றவனாயிருக்கிறான். மெல்லிய புடைவைகளை உண்டு பண்ணி விற்கிறாள்; கச்சைகளை வர்த்தகரிடத்தில் ஒப்புவிக்கிறாள். வருங்காலத்தைப் பற்றியும் மகிழ்கிறாள். தன் வாயை ஞானம் விளங்கத் திறக்கிறாள்; தயையுள்ள போதகம் அவள் நாவின்மேல் இருக்கிறது. அவள் சோம்பலின் அப்பத்தைப் புசியாமல், தன்

வீட்டுக் காரியம் எப்படி நடக்கிறது என்று கண்ணுங்கருத்துமாயிருக்கிறாள். அவள் பிள்ளைகள் எழும்பி அவளைப் பாக்கியவதி என்கிறார்கள்; அவள் புருஷனும் அவளைப் பார்த்து, ''அநேகம் பெண்கள் குணசாலிகளாயிருந்ததுண்டு; நீயோ அவர்கள் எல்லோருக்கும் மேற்பட்டவள்'' என்று அவளைப் புகழ்கிறான். சௌந்தரியம் வஞ்சனையுள்ளது, அழகும் வீண். கர்த்தருக்குப் பயப்படுகிற ஸ்திரீயே புகழப்படுவாள்....

வேத புத்தகத்தை மூடிவைத்துவிட்டுச் சாந்தாவின் தாயார் தலைநிமிர்ந்து பார்த்தாள்; குஞ்சுநைநா கண்களை மூடியவாறு படுத்துக்கொண் டிருந்தார்.

தீனம்மா சொன்னாள் :

''மாமா மறுபடியும் மயக்கமாயிட்டாரே !''

வர்கீஸ் சொன்னான் :

''ரொம்பக் களைப்பு போல இருக்கு.''

''இரண்டு நாளாச்சு. இன்றைக்குத்தான் இவ்வளவு அதிகம்.''

''ஜாக்கிரதையாக் கவனிக்கணும். இரவு விளக்கைச் சின்னதாகப் பண்ணிப் பக்கத்திலேயே வை.''

''தினமும் அப்படித்தான் செய்கிறேன்.''

''மாரியக்குட்டி! நான் போகட்டுமா? நாளைக்கு வர்றேன்.''

''நான் காலையிலேயே போய்விடுவேன்.''

''போவதற்கு முன்னால் வர்றேன்.''

வர்கீஸ் போனபின், ஒரு மணி நேரத்திற்கெல்லாம் குட்டியம்மாவும், அவள் கணவனும், பட்டணத்தில் பெரிய டாக்டரான வி. ஸி. ஜார்ஜும் காரில் வந்து இறங்கினார்கள். டாக்டர் வந்த போது. குஞ்சுநைநா மயக்கம் தெளிந்து படுத்திருந்தார். டாக்டர் குஞ்சுநைநாவைப் பார்த்துச் சிரித்தார். 'ஸ்டெதாஸ் கோப்பை'க் காதில் வைத்தார் :

''மாமா, என்னைத் தெரியுமா ?''

''என்ன? உரக்கச் சொல்லுங்க.''

''என்னைத் தெரியுமா?''

''நினைவில்லை. சொன்னால் தெரியும்.''

குட்டியம்மா சொன்னுள் :

"கொட்டாரத்தறை வீட்டு டாக்டர் ஜார்ஜ்."

"தோமா பணிக்கர் டாக்டர் மகனு?"

"ஆமாம், களைப்பாய் இருக்கா ?

டாக்டர் 'ஸ்டெதாஸ் கோப்'பைக் குஞ்சுநைனுவின் நெஞ்சில் வைத்துப் பரிசோதித்தார் :

"என்ன வயசு?"

"தொண்ணூறு."

"உம், வயசான களைப்புதான்."

கண்ணைப் பார்த்தார், நாடி பிடித்துப் பார்த்தார்.

"ஆகாரம் சரியாச் சாப்பிடறுரா?"

தீனும்மா சொன்னுள் ;

"கொஞ்சமானுலும் மூனுவேளையும் சாப்பிட்டு வந்தார். இரண்டு நாளாகக் கஞ்சியும் காபியும் மட்டும்தான் குடிக்கிறுர்."

"உம்."

"பணிக்கர் டாக்டருக்கு என்னை நல்லாத் தெரியும். அதுக்குக் காரணமும் இருக்கு."

"என்ன?"

"முப்பது வருஷங்களுக்கு முன்னுல்னு நினைக்கிறேன். ஐராணிக் குடி பாலத்துக்குப் பக்கத்திலே..."

அந்தக் கதையைத் தொடரவிட வேண்டாம் என்று நினைத்த டாக்டர் சொன்னுர் :

"நாக்கை நீட்டுங்க"

தீனும்மா சொன்னுள் :

"நினைவில்லாமல் ஏதாவது சொல்லிக்கொண் டிருப்பார். சில நேரத்திலே பேசிக்கொண் டிருக்கும்போதே மயக்கமாயிடுவார்."

"உம்."

"அபின் தின்கிற பழக்கம் இருக்கு."

"அப்படியா!"

குஞ்சுநைனுவை நன்ருகப் பரிசோதித்த பிறகு டாக்டர் சொன்னுர் :

''உடம்புக்குத் தெம்பைத் தரக்கூடிய சில மருந்துகள் சாப்பிடணும். வேளாவேளைக்கு ஆகாரங்கள் கொடுக்கணும். அதைப் போலவே மற்ற விஷயங்களும் முறைப்படி செய்யணும். அப்புறம் கவனிப்பு. வயதானவர்களைப் பொறுத்த வரையில் இதுதான் முக்கியம். அவர்களை அன்பாகக் கவனித்து அவர்களது மனத்தின் பலவீனத்தைப் போக்கணும்...யார் என்னுடன் வர்றீங்க? சில மருந்துகள் கொடுத்து அனுப்புகிறேன்.''

தாமஸ் ஸார் கேட்டார் :

''அபின் சாப்பிடறதனுல் கெடுதல் இருக்கா?''

டாக்டர் புன்முறுவலித்தார் .

''அபின் கெடுதல்தான். ஆனுல் இந்த வயசிலே அதை நிறுத்தினுல் கெடுதல்தான் செய்யும். விஷமானுலும் ஒரு குறிப்பிட்ட அளவு வெகு காலம் சாப்பிட்டு வந்தால் அது உடம்புக்குத் தேவையான ஒன்ருகிவிடுகிறது.''

''சரிதான்.''

''தாமஸ் ஸார்தான் என்னுடன் வரப்போறீங்களா ?''

''ஆமாம்.''

''வாங்க, போகலாம்.''

டாக்டருடன் தாமஸ் ஸாரும் காரில் ஏறிப் போனுர், சாந்தாவின் தாயாரின் தோளில் கை வைத்துக்கொண்டு குட்டியம்மா சொன்னுள் :

''நீங்க வந்திருக்கிறதாகக் கேள்விப்பட்டோம். நாங்கள் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பும்போது, வழியில் அப்பாவைப் பார்த்தோம். தாத்தாவுக்கு ரொம்ப அதிகமாச்சா ?''

''அப்படி ஒண்ணும் அதிகமாகலே. பேசிக்கொண்டே இருக்கும்போது மயக்கமாயிடருர். சில வேளைகளில் ஞாபகமில்லாமல் ஏதேதோ பேசருர்...''

'' தாத்தா!''

''ஏ...?''

நன்ருகக் கண்களைத் திறந்து பார்த்தார்.

''பொண்ணு ! நீ எதுக்காக டாக்டரை அழைச்சு வந்தே?

எனக்கு வியாதி ஒண்ணும் இல்லே. ஆயுளைப் பிடிச்சு நிறுத்த முடியுமா ?''

''உயிரோடு இருக்கிற வரைக்கும் சுகமாக இருக்க வேண்டாமா, தாத்தா ?''

''நீ என்னைக் காற்றின் மீது ஏற்றிக்கொண்டு போகிறாய். புயலில் என்னை இரண்டறக் கலக்கிறாய். மரணத்திற்கும், எல்லா உயிரினங்களும் போய்ச் சேரும் வீட்டிற்கும் நீ என்னை அழைத்துக் கொண்டு செல்வாய் என்று நான் அறிவேன்...''

''ஆரம்பித்து விட்டீங்களே! எதற்கெடுத்தாலும் இப்படி ஏதேதோ சொல்லுவீங்க. அதனால்தான் இந்த மயக்கமெல்லாம் வருது.''

''நம் குடும்பத்தில் நான் இனி ஒரு கல்யாணம் பார்க்க முடியுமா ? உன் கல்யாணம்தான் கடைசி. அப்படித்தானே பொண்ணு?''

''......''

''பொண்ணு!''

''என்ன?''

''நான் சொன்னது காதில் விழலையா?''

''காதில் விழுந்தது. நமக்கு யாருக்கும் தெரியாமல் நம் குடும்பத்தில் ஒரு கல்யாணம் நடந்ததாகவும் காதில் விழுந்தது.''

''யாருக்கு? எங்கே ?''

''உங்களிடம் சொல்லக் கூடாது. சொன்னால் அப்புறம் எல்லாரிடமும் சொல்லிக்கிட்டே இருப்பீங்க.''

''யாரிடமும் சொல்ல மாட்டேன், பொண்ணு.''

''அதையே யோசிச்சுக்கிட்டுப் படுத்திருப்பீங்க.''

''உன் அப்பா என்னிடம் எதுவும் சொல்லலயே?''

''ஏதோ காதில் விழுந்த செய்தி. காலாய் ஜோணி, அவங்க வீட்டில் வேலை செய்துகொண்டிருந்த வேலைக்காரப் பெண்ணை வயநாட்டுக்கு அழைத்துப்போய்க் கல்யாணம் கட்டிக்கிட்டானும்.''

''ஏ...?''

''அவள் இப்போ அவன்கூடத்தான் இருக்கிறாளாம்.''

குஞ்சுநைநனுவிற்கு எதுவும் சரியாக விளங்கவில்லே. திரும்பத் திரும்பக் கேட்டார்; பலவாருகக் கேட்டார். பிலிப்புடன் தொடர்பு இருந்ததாகச் சொன்ன பெண்ணே, அவன் மகன் கல்யாணம் செய்து கொண்டாஞ ? தந்தையின் மோசமான நடத் தையினுல் ஊரைவிட்டுப் போவதாகத்தானே அவன் சொன்னுன். இப்போ அதே பெண்ணேக் கட்டிக் கொண்டாஞ? என்ன மாயமோ?

''அவனுக்கும் அவளுக்கும் ஏற்கனவே தொடர்பு இருந்ததாம். அப்புறம் பணத்திற்கு ஆசைப்பட்டோ என்னவோ தான் சித்தப்பாவோடு . ...''

''இப்படியொரு சங்கதி நடந்தால் உன் அப்பா என்னிடம் சொல்லாமல் இருப்பாஞ?''

''நான் சொன்னேனே தாத்தா, சொல்லக் கேள்விதானென்று. நீங்க இதை யாரிடமும் சொல்லாதீங்க. மருந்து இப்போ வாங்கி வருவார். வேளாவேளேக்குச் சாப்பிடணும்.''

''உண்மையாயிருக்கும். அவன் அவளேக் கடத்திக்கிட்டுப் போயிருப்பான்.''

''ஆரம்பிச்சுட்டீங்களே. இதுதான், உங்களிடம் எதையும் சொல்லக்கூடாது. அந்தச் சங்கதியை மறந்துவிடுங்க...சரி நான் போய் வர்றேன்.''

மனத்தைவிட்டு அந்த நினேவு போவதில்லேயே! கணக்கைக் கூட்டிக் கழித்துப் பார்த்தால், குட்டியம்மா சொன்னது சரியென்று தோன்றுகிறது. அவனே வாலிபன். இருபத்தைந்து வயதிருக்கும். அவள் பருவமங்கை; பதினெட்டோ இருபதோ வயது. அவன் பணக்காரப்பிள்ளே. வாட்ட சாட்டமானவன். ஏழையாயினும் அவள் அழகி. பூஜை வேளேயில் புகுந்த கரடி இவன் அப்பா. பூரித்து நிற்கும் அவளேப் பார்த்தபோது அவன் அப்பா, தன் வயதை மறந்திருப்பான்; அவன் ஆசை காட்ட, அவள் இசைந் திருப்பாள். அல்லது, காலே நேரத்திலோ, அந்தி வேளே யிலேயோ கையைப் பிடித்து இழுத்தபோது அவள் திமிராமல் நின்றிருப்பாள். அப்புறம், கதையில் மாற்றமில்லே.

முன்னதாகவே யோசித்து முடிவு செய்தபடியே அவன் அவளை அழைத்துப் போகிருன், தந்தையின் நடத்தை சரியில்லையென்று பழியைப் போட்டு. நூறு ஏக்கர் ரப்பர்த் தோட்டம். அதன் நடுவில் ஒரு பங்களா. ஒரு சிற்றரசனைப்போல் ஆடம்பரமாக அவன் அவளுடன் வாழ்கிருன். அரசகுமாரன்; அரசகுமாரி.

இப்படியொரு நிலைமையில் அவனுடைய தந்தை அங்கே சென்ருல் என்ன நடக்கும்? ஏதாவது குழப்பம் உண்டாளுல் அதைச் சமாளிப்பதற்காக, பத்தோ பன்னிரண்டோ குண்டர்களை வேலைக்காரர்களிலிருந்து பொறுக்கியெடுத்துத் தயாராக வைத்திருப்பான்; பெண்ணை உள்ளே மறைத்துவைத்து வெளியே கதவெதிரில் நின்றுகொண் டிருப்பான். எங்குமே வெற்றிவாகை சூடிய தந்தை இப்பொழுது, சற்று ஐயத்துடன், பிள்ளையை ஏறெடுத்துப் பாராமல் கூறுவான் :

"நீ வீட்டுக்குப் போடா. நான் இங்கே வேறு ஆளை வைக்கிறேன்."

"நான் போகப் போவதில்லை."

"ஏன்?"

"நான் இந்தத் தோட்டத்தைக் கவனிச்சுக்கிட்டு இங்கேயே இருக்கிறேன். எனக்கு இந்தத் தோட்டம் போதும்."

"இந்தத் தோட்டம் உனக்கு மாமனர் வரதட்சிணையாகத் தந்ததா?"

"எப்படி வேண்டுமென்ருலும் வச்சுக்குங்க!"

அது ஒரு சவால்!

அப்பா யோசிக்கிருன்; என்ன செய்யலாம். பலப்பரீட்சை செய்து பார்க்க வேண்டுமா? போலீஸைக் கூப்பிடலாமா? பலப் பரீட்சை வேண்டாம். அவனை வெல்ல முடியாது. போதாக் குறைக்கு அப்பாவும் பிள்ளையும் அடித்துக்கொண்டார்கள் என்று ஏசுவார்கள். எப்படியாயினும் அந்த வேசியை அங்கிருந்து அப்புறப்படுத்திக்கொண்டு போக வேண்டும்.

"எங்கேடா அவள்?"

"இங்கே எவருமில்லை."

''வழியிலிருந்து தள்ளி நில்லு.''

''இங்கே எவருமில்லேன்னு சொன்னேனே.''

''தள்ளி நில்லுடா!''

''முடியாது.''

''நாயே...''

அடித்தான். அதைப் பிள்ளை தடுத்தான். மறுபடியும் அடிக்க ஓங்கிய கையைப் பிடித்து நெரித்தான். இப்போது, அவர்கள் அப்பாவும் பிள்ளையும் அல்ல. ஒரு பெண்ணிற்காக மற்போர் புரியும் இரண்டு ஆண்கள். அப்பன், மகனின் காலேத் தட்டிவிட்டு அவனைக் கீழே வீழ்த்துகிருன். அவன் நெஞ்சில் உட்கார்ந்து கழுத்தை நெரிக்கிருன். அப்போது, முன்னதாகவே தயாராக நின்றிருந்த குண்டர்கள், வெளியே வருகிருர்கள். பன்னிரண்டு பேர் ஒரு பக்கம்; மறு பக்கம் அப்பன் தனியாக. குண்டாந்தடி கத்தி, வாள், ஈட்டி...ஏ! ஏ! என் பிள்ளையை அடிக்கிருங்களே போதாக்குறைக்கு அவன் காச நோயாளி வேறு!

''ச்சீ. நிறுத்துங்கடா!''

''அப்பா! நீங்க தள்ளி நில்லுங்க. நான் ஒருத்தனே இவர்களை யெல்லாம் தீர்த்துக்கட்டுறேன்.''

''ஐயோ! மண்டையை நொறுக்கிட்டாங்களே...என் பிள்ளை யைக் கொன்னு போட்டுட்டாங்களே!...''

''பிடி அவனை...கொலேகாரப் பாவி!''

''..........''

''மாமா!''

''தாத்தா!''

குஞ்சுநைநு திடுக்கிட்டுக் கண் விழித்தார்.

''ஏ......! என்ன, என்ன?''

''ஏன் இப்படி எங்களைப் பயமுறுத்தறீங்க?''

''என்ன?''

''என்னவோ? உங்களுக்குத்தான் தெரியும்.''

''கொன்னு போட்டதாகக் கனவு கண்டேன்.''

''யாரை?''

''பிலிப்பை.''

''நீங்க சொல்றது எனக்குப் புரியவில்லை. இதோ, பேரனது கடிதம் வந்திருக்கு.''

"யாருது?''

''ராஜனது.''

"என்ன சேதி?''

"அடுத்த மாதம் பதினைந்தாம் தேதி லீவில் வர்ருனும். சாந்தாவை அழைத்துக்கொண்டு போகிறதுக்கு. நீலகிரிக்கு மாற்றல் கிடைத்திருக்காம்.''

''நீலகிரிக்கா?''

"ஆமாம். அங்கே குடும்பத்தோடு இருக்கிறதுக்கு வீடு கிடைக்கும்.''

''அவள் இங்கே இருக்கிறது உனக்கும் எனக்கும் ஒரு துணைதானே?''

"அதற்காக. எப்பவும் நம்முடன் இருக்க முடியுமா?''

"முடியாதுதான்.''

சாந்தாவின் தாயார் சொன்னுள் :

''போனுலும் ஒரு வருஷம்தானே அங்கே இருக்க முடியும். பிறகு இங்குதானே வரப்போகிருள்?''

அந்தி மயங்கியது. சாந்தாவின் தாயாரும், தீனும்மாவும் உள்ளே சென்றனர். சாந்தா சிம்னி விளக்கை ஏற்றித் தாத்தாவின் கட்டிலருகில் கொண்டு வந்து வைத்தாள். விளக்கின் சிவந்த ஒளி அவளுடைய கன்னத்தில் செம்மையொளி கூட்டியது.

''சின்னப் பொண்ணு!''

''என்ன?''

''நீ திரும்பி வரும்போது தாத்தா இருப்பேனு?''

''பின்னே, இருக்காமல்? நிச்சயமாக இருப்பீங்க.''

'அப்படி ஓர் ஆசை, ஆனுல் உள்ளம் மாருகச் சொல்கிறது. என் பெயர் செதுக்கிய கல்லறை இருக்கும்-மேலேத்தொழுத்து மாத்தன் குஞ்சு நைனு-திரும்பி வரும்போது நீ ஒரு தாயாக இருப்பாய். உன் மகன்...''

''தாத்தா!''

''ஏ...?''

''இப்படி எதைஎதையோ யோசிக்காதீங்க. அதனுல்தான் கெட்ட கனவு காணுறீங்க.''

குஞ்சுநைனு மனத்துள் எண்ணினுர்!

''சாந்தா சொன்னது உண்மைதான், திறந்து வைத்த சத்திர மாயிருக்கே மனம்! எண்ணங்கள் அழைக்காமலேயே! இதற்குள் புகுந்து விடுகின்றனவே!''

# பதினென்று

மாலை நேரம், தீனும்மா குஞ்சுநைனுவிற்குப் புட்டியிலிருந்து மருந்தை ஊற்றிக்கொடுத்துக்கொண் டிருந்தாள். அப்போது குஞ்சுச்செறுக்கன் அங்கே வந்தான். இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். தீனும்மா எதுவும் பேசவில்லை; மருந்துப் புட்டியுடன் உள்ளே போனுள். மூன்று வேளை மருந்து மாத்திரைகள் பாலில் கலந்து குடிப்பதற்கு ஓவல்டின். உடம்பில் தேய்ப்பதற்குத் தைலம். தாமஸ் ஸார் இவ்வளவையும் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்திருந்தார் மருந்தைச் சாப்பிட ஆரம்பித்ததிலிருந்து குஞ்சு நைனுவுக்கு உடல் நன்கு தேறியது. மயக்கம் வருவது நின்றது. பசி எடுத்தது; நாவிற்கு ருசி வந்தது; கைத்தடியை ஊன்றி முற்றத்தில் நடக்குமளவிற்கு அவருக்குத் தெம்பு பிறந்தது.

தினமும் காலையில் பள்ளிக்கூடம் போகும்போதும் மாலையில் வீடு திரும்பும்போதும் தாமஸ் ஸார், நலம் விசாரிக்க வருவார். தேவையானதை வாங்கி வருவார். எவ்வளவு வற்புறுத்தியும் பணம் வாங்கிக்கொள்ளவில்லை. தாமஸ் ஸார், மாப்பிள்ளையாக வந்ததி லிருந்து எள்ளுப்பறம்பு வீட்டில் முன்னெப்பொழுதும் கண்டிராத செழிப்பும் மகிழ்ச்சியும் நிலவின. வீட்டை வெள்ளையடித்தார்கள். புதிதாக ஒரு படுக்கையறைகூடக் கட்டினுர்கள். ஒரு மேஜையும் நான்கைந்து நாற்காலிகளும் வாங்கிப் போட்டார்கள்.

குஞ்சுநைனு யோசித்தார்:

கர்த்தரின் வழி எவ்வளவு ஆச்சரியமானது! அதைக் கண்டறிந் தவர் யார்? கர்ப்பிணியின் கருவில் எலும்புகள் உருவாவது எப்படி என்று நீ அறியாததைப்போல் தெய்வத்தின் செயல்களையும் நீ அறி வதில்லை. விதைப்பதில் எது, முளைக்கும் எது கனி தரும் எனறு நீ அறிவதில்லை. கால் தடுக்கி விழுந்த இடத்திலிருந்து உன்னை யார் தூக்கிவிடுகிறார் என்று உனக்குத் தெரியாது. இப்படியெல்லாம் நடக்குமென்று எவராகிலும் நினைத்தார்களா? மணவயதைத் தாண்டிய பெண்ணொருத்தியை அவன் மணம் புரிந்தான், இப் பொழுது அவளை மட்டுமல்ல, குடும்பத்தையே காப்பாற்றுகிறான், அடித்துக் கை காலை நொறுக்க வேண்டுமென்றும், பொய்வழக்குத் தொடுத்துச் சிறையில் தள்ளவேண்டுமென்றும் சதியாலோசனை செய்தது இவனுக்காகத்தான், என்றோ அணைந்துபோன ஆசியின் சுடரை ஏற்றிய இதே தாமஸ் ஸாருக்காகத்தான். கர்த்தரின் வழி எவ்வளவு ஆச்சரியமானது! அதைக் கண்டறிந்தவன் யார் ?

குஞ்சுச்செறுக்கன் கூப்பிட்டான்:

''தீனும்மா!''

''என்ன?''

''குடிக்கிறதுக்குக் கொஞ்சம் வெந்நீர் கொடு.... அப்பா!''

''ஏ...?''

''இப்போ உடம்புக்கு ஒண்ணும் இல்லையே?''

''இல்லை.''

''வெண்ணிக்குளத்து நாட்டு வைத்தியன் ஒருவனை இரண்டு நாள் முன்னால் பார்த்தேன். அழைச்சு வந்து உங்களைக் காட்ட லாமான்னு யோசிச்சேன், அப்பத்தான் டாக்டர் ஜார்ஜ் சிகிச்சை செய்கிறாருன்னு தெரியவந்தது.''

தீனும்மா பீங்கான் பாத்திரத்தில் கஞ்சி கொண்டு வந்து குஞ்சுச் செறுக்கனுக்குக் கொடுத்தாள்.

''மாத்யூ எங்கே?''

''எண்ணெய்க்காட்டிற்குப் போயிருக்கிறார்.''

'' மருமகள், புத்தனாற்றங்கரைக்குப் போயிருக்காளா?''

''ஆமாம். அவள் அம்மாவுடன் போனாள்,''

பேச்சை வளரவிடுவதற்கு இடம் கொடுக்காமல் தீனம்மா பீங்கான் தட்டுடன் உள்ளே செல்கையில் குஞ்சுச்செறுக்கன் மறு படியும் கேட்டான்:

''வெற்றிலை இருந்தால் கொடு, தீனம்மா!''

வெற்றிலைப் பெட்டியை எதிரில் வைத்துவிட்டு, தீனம்மா போனாள்.

பாக்கைச் சுரண்டிக் கொண்டே குஞ்சுச்செறுக்கன் தந்தை யிடம் சொன்னான்:

''நேற்றைக்குப் பம்பாயிலிருந்து பெரியவன் சொல்லியனுப்பி, ஒருத்தன் வந்திருந்தான்.''

''கொஞ்ச நாள் முன்னாலும் ஒரு வடக்கத்தியான் வந்திருந்தானே?''

''உங்களிடம் யார் சொன்னது?''

''யாரோ சொன்னாங்க, வந்தானா?''

''ஆமாம். உங்களிடம் சொல்லமுடியவில்லை, வழக்கு அப்படி யொண்ணும் பெரியதல்லவாம் தப்புவிக்கலாமுன்னு சொல்றான்."

''உம்.''

''இரண்டாவது பையன் கடிதம் வந்திருந்தது, அவன் அண்ணனைப் பார்க்கப் போயிருந்தானாம்.''

''பார்த்தானா?''

''பார்த்தான். நீங்க ரூபாய் திருப்பித் தந்ததைப்பற்றிப் பெரியவன் வருத்தப்பட்டானாம்.''

''நான் திருப்பித் தந்ததும், நீ வாங்கினதும் அவனுக்கு எப்படித் தெரிஞ்சுது?''

''அவன் அம்மா ஏதாவது எழுதியிருப்பாள். அதை அவன் பெரியவனிடம் சொல்லியிருப்பான்.''

''உம்.''

''அந்தப் பணத்தை உடனேயே கொண்டுபோய்க் கொடுக் கணும், தவறினால் அப்புறம் அவன் இல்லையென்று நினைக்கணும்

என்றெல்லாம் கண்டிப்பாகப் பெரியவன் சொன்னதாய் எழுதி இருக்கிறான்.''

''ஆ...''

''அது அப்பவே செலவாகிவிட்டது. உங்களுக்குத் தெரியுமே· ஊரெல்லாம் கடன்.''

''உம்.''

குஞ்சுச்செறுக்கன் மடியிலிருந்து வெகு ஜாக்கிரதையாக ஒரு பொட்டலத்தை வெளியே எடுத்தான். அதிலிருந்து நோட்டுகளை எடுத்து எண்ணினான்.

''ஐம்பது ரூபாய் இருக்கு, அப்பா. சின்னவன் அனுப்பித் தந்தது. உங்களுக்கு மருந்து வாங்குவதற்கு இருக்கட்டும்.''

''வேண்டாம். கடவுள் கருணையால் எனக்குப் பணமுடை இல்லை. ஒன்றும் தராவிட்டாலும், என் கையில் இருப்பதை வாங்கிக் கொண்டு போனாலும் நீ என் பிள்ளைதான். எனக்கு எல்லோரும் சமம். நீ போ.''

''நீங்க அப்படிச் சொல்லாதீங்க, அப்பா. இதை வாங்கிக் கொள்ளாவிட்டால் எனக்கு வருத்தமாக இருக்கும்.''

''வருத்தப்படாதே. தேவைப்படும்போது நான் ஆளை அனுப்பு கிறேன். இப்போ உன் கையிலேயே இருக்கட்டும்.''

''தீனும்மா! இதை வாங்கி வை.''

தந்தையும் தனயனும் பேசுவதைக் கேட்டவாறு தீனும்மா கதவருகில் நின்றுகொண் டிருந்தாள். எதுவும் பேசக்கூடாது என்றுதான் எண்ணியிருந்தாள். ஆனால் இதைக் கேட்டபோது பதில் கூறாமல் இருக்க முடியவில்லை.''

''ஒரு தடவைதானே தவறு செய்யலாம், மச்சான்! நீங்க யாரிடம் வேண்டுமானாலும் கொடுக்கவோ வாங்கவோ செய்யுங்கள். என்னிடம் தரவும் வேண்டாம், சொல்லவும் வேண்டாம்.''

''என்ன தவறு செய்தே? புத்தியில்லாத என் வீட்டுக்காரி, ஏதோ சொன்னதற்காகவா நீ வருத்தப்படறே? அதைச் சட்டை செய்யாதே.''

''அது போகட்டும். நீங்கள் முச்சந்தியில் என் வீட்டுக்காரரிடம் சொன்னது?''

''என்ன சொன்னேன்? நானும் மாத்யுவும் ஏதேதோ நடந்து போன விஷயங்களைப் பேசினோம். நல்ல வேடிக்கைதான், போ. இந்தா, இதை வாங்கி உள்ளே வை.''

''நான் வாங்கமாட்டேன். நீங்க என்ன சொன்னாலும், நான் வாங்க மாட்டேன்.''

''டேய், நீ போடா. அவள் எனக்குக் கஞ்சி காய்ச்சித் தரறதை நிறுத்திவிடாதே.''

''இப்படி இரக்கமில்லாமல் சொல்றீங்களே, அப்பா. நான் அந்தப் பணத்தை உங்களுக்குத் திருப்பித் தரவில்லேன்னு தெரிஞ்சால் அப்புறம் அவன் எனக்குக் கால் காசுகூட அனுப்ப மாட்டான். நான் என்ன செய்ய?''

''திருப்பிக் கொடுத்ததாகவே சொல்லிவிடு. யாருக்குத் தெரியப் போகிறது?''

''அவன் திரும்பி வரும்போது இங்கே வந்து கேட்டால்?''

''அன்னைக்கு நான் உயிரோடு இருக்க மாட்டேன். அப்படி இருந்தாலும் நீ தந்ததாகவே சொல்கிறேன். போதுமா?''

குஞ்ஞுச்செறுக்கன் யோசித்தான். அப்பா சொல்வதும் சரி தான். நோட்டுகளைத் திரும்பவும் பொட்டலத்தில் கட்டி மடியில் வைத்துக்கொண்டான். 'அப்பாடா, தப்பித்துக் கொண்டேன்' என்ற நிம்மதியுடன் தீனம்மா குஞ்சுநைனவிடம் கேட்டாள் :

''மாமாவுக்குப் பால் கொண்டு வரட்டுமா?''

''கொண்டு வா.''

குஞ்சுச்செறுக்கன் போவதற்கிருந்தான். அப்போது சிலர் தோட்ட வாயிலைக் கடந்து வந்துகொண்டிருந்தார்கள். அந்தி மயங்கியிருந்தது. பலாமரத்தின் கீழ் இருவர் நின்றார்கள். மூவர் திண்ணையை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். வர்கீஸ், பேபி, கசாப்புக்கடை அவரான். வர்கீஸ் தாழ்ந்த குரலில் தம்பியிடம் கேட்டான்:

''நீ எப்போ வந்தே?''

''ரொம்ப நேரமாச்சு.''

''மாத்யு எங்கே, தீனம்மா?''

''காலையில் எண்ணெய்க்காட்டிற்குப் போனவர்...''

''அப்பா!''

''ஏ...?''

பிறகு அங்கே மௌனம் குடி கொண்டது. மரத்தடியில் நின்று கொண்டிருந்தவர்கள் மெதுவாகப் பக்கத்தில் வந்தார்கள். இதற்கிடையில் தீனும்மா சிம்னி விளக்கை ஏற்றித் திண்ணையில் கொண்டு வந்து வைத்தாள். விளக்கின் வெளிச்சத்தில் இருவர் முகங்களும் தெரிந்தன. தாழைச்செரு குஞ்சப்பி, காலாய் வீட்டு ஸாம்குட்டி...

ஒவ்வொருவர் முகத்திலும் கருநிழல் போன்ற சாயை படிந்திருந்தது. யாரும் தலை நிமிர்ந்து பார்க்கவில்லை. எதையோ கண்டு பயந்தவர்களைப்போல் முகம் விகாரமடைந்தது.

தீனும்மா கலவரத்துடன் கேட்டாள் :

''சங்கதி என்ன, மச்சான்?''

கேள்விக்குப் பதில் வரவில்லை.

''மாத்யு எப்போ வருவதாகச் சொல்லிப் போனான்?''

''எதுவும் சொல்லலே.''

''சாந்தா புத்தனாற்றங்கரையிலிருந்து எப்போ வருவாள்?''

''யாராவது அழைச்சிட்டு வருவதற்குப் போகணும்.''

குஞ்சுனைனா கேட்டார்:

''என்னடா சங்கதி?''

''ஒண்ணுமில்லே, அப்பா''

''என்ன?''

வர்கீஸ் எதுவும் சொல்லவில்லை. குஞ்சுச்செறுக்கனைச் சற்றுத் தூரத்துக்கு அழைத்துப் போய்க் காதோடு ஏதோ சொன்னான். குஞ்சுச்செறுக்கன் கம்மிய குரலில், ''ஏமாற்றி விட்டாயேடா'' என்றான். இதற்குள் இன்னும் நான்கைந்துபேர் முற்றத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

தீனும்மா பொறுமை இழந்து கேட்டாள்:

''சங்கதி என்னான்னு சொல்லுங்க! மச்சான், ஏன் இப்படி வதைக்கிறீங்க?''

குஞ்சுனைனா கேட்டார் :

''சொல்லுடா...!''

வர்கீஸின் கண்கள் கலங்கின. இத்தனை நேரமும் அவன் தன்னைக் கட்டுப்படுத்தி வைத்திருந்தான். அந்தக் கட்டுப்பாடு கோட்டையின் மண்சுவராய்த் தகர்ந்தது. சுற்றுமுற்றும் கூடியிருந்தவர்களை நோக்கினான். என்ன சொல்வது ? எப்படிச் சொல்வது? அப்போது குட்டியம்மாவும் தாமஸ் ஸாரும் அங்கே விரைந்து வந்தனர். குட்டியம்மா கூக்குரலிட்டவாறே கதறினாள்:

''சித்தி!''

''என்ன, குட்டியம்மா? கடவுளே! யாரும் எதுவும் சொல்ல மாட்டேன் என்கிறார்களே!''

குஞ்சுனைநனும் கூச்சலிட்டார்:

''சொல்லுடா வர்கீஸ், என்ன விஷயம்?''

''அப்பா!''

''சொல்லு.''

''ராஜனின் பட்டாள ஆபீஸிலிருந்து ஒரு தந்தி வந்திருக்கு...''

அவரான் சொன்னான்:

''சிலபேர் பொய்த் தந்திகூட அடிப்பாங்க. அதனாலே பொய்யா மெய்யான்னு இப்போ சொல்ல முடியாது.''

வர்கீஸ் குரலைத் தணித்துக்கொண்டு சொன்னான் :

''அவன் விபத்தில் இறந்து விட்டதாகத் தந்தி வந்திருக்கு...''

வர்கீஸ் தன் கையிலிருந்த சிவப்புக் காகிதத்தைத் தாமஸ் ஸாரிடம் கொடுத்தான். ஒரு நிமிடப் அங்கே பயங்கரமான மௌனம் நிலவியது! மின்னலுக்குப் பின் இடி முழங்குவதற்கான அமைதி போல!

''ஆண்டவரே! இதென்ன, நான் கேட்பது?'' என்ற தீனம்மாவின் ஓலக்குரல் இடிமுழக்கம் போல ஒலித்தது. ஸிஸிலி அம்மாவைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அழ ஆரம்பித்தாள். அது ஓர் ஒப்பாரியாக மாறியது. யார் யாருக்கு ஆறுதல் கூறுவது? ஆறுதல் கூறத்தான் முடியுமா? இரண்டு மாதங்களுக்கு முன்னால் வந்து திருமணம் புரிந்துகொண்டு போனவன். இப்போது அவன் இறந்துவிட்டதாகச் சொல்கிறார்களே! எப்படி அதை நம்புவது? எப்படி இந்தத் துயரத்தைச் சகிப்பது?

வர்கீஸ் கூறியது குஞ்சுனைநனுவின் காதில் தெளிவாக விழ வில்லை. கூச்சலிட்டவாறு 'என்னடா' 'என்ன பொண்ணு' என்றெல் லாம் தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருந்தார். ஆனால் அதை யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை. ஏதோ ஒரு துயரச் சம்பவம் நடந்திருக்கும் என்று மட்டும் அவருக்குத் தெரிந்தது. அவர் கல வரத்துடன் எழுந்தார். இரண்டடி நடந்ததுமே அவர் கீழே விழுந் தார். தாமஸ் ஸார் அவரைத் தூக்கி விட்டார். செய்தி தெரிந்த போது திருதிருவென விழித்தார். ஒரு சொட்டுக் கண்ணீர்கூட வர வில்லை. அவரைப் பிடித்துக் கொண்டுபோய்ப் படுக்க வைத்தார்கள். நான்கு பக்கங்களிலிருந்தும் வேகமாக ஆட்கள் நடந்து வரும் காலடியோசை கேட்டு நடுங்கினார்.

பிறகு எல்லாம் நடுங்க வைக்கும் ஓசைகளே!

''என் தங்கமே......ராஜா!''

''நீ என் வயிற்றில் பிறக்கவில்லையே தவிர......''

''நீ அதிருஷ்டமில்லாதவளாய்ப் போய் விட்டாயேடி ஸிஸிலி......''

''சாந்தா இதை எப்படித் தாங்குவாள்?''

''சரியாக முப்பது நாள்கூட அவனுடன் வாழ முடியவில்லையே அவளுக்கு......''

செய்தி கேட்டுப் பிலிப்பு காரில் வந்தான். ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்களே தவிர யாரும் எதுவும் பேசவில்லை. சிறிது நேரம் கழித்து வர்கீஸ் கேட்டான்:

''மாத்யுவுக்கு ஆள் அனுப்ப வேண்டாமா?''

''அவனை எங்கே போய்த் தேடறது? எதுக்கும் காரை எடுத்துக் கொண்டு டிரைவரைப் போகச் சொல்லியிருக்கிறேன்.''

அப்புறம் யாரும் எதுவும் பேசவில்லை. செய்தியைக் கேட்டுத் தெரிந்துகொண்டு அங்கே வந்த உறவினர்கள், அண்டை வீட்டார் கள், எனையோரின் இரங்கலுரைகளைக் கேட்டவாறு பலாமரத்தடி யிலும், கிணற்றடியிலும் ஒவ்வொருவரும் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

''தங்கமான பையன்!''

"மேலேத்தொழுத்துக் குடும்பத்தில் அவனேப்போல் லட்சண மான பையன் யாருமில்லே.''

"மாத்யு கை ஒடிஞ்சு போச்சே!''

''ஆசையைக் காட்டி, பறித்து விட்டாரே, கடவுள்!''

''கடவுள் தருவதையெல்லாம் அனுபவிக்கத்தானே வேண்டும்!''

''புத்தனுற்றங்கரைக்கு ஆள் போயிருக்கா?''

''தெரியாது.''

''அந்தப் பெண்ணிடம் இதை எப்படிச் சொல்வது!''

"ஓ! இதை அவள் எப்படித் தாங்குவாள்?''

''விதி!''

''நினேச்சுப் பார்த்தால் அவள் விதியினுல்தான் இப்படி நடந்தது.''

"ஜாதகம், நாள் பொருத்தம் இதையெல்லாம் பொய்யின்னு சொல்ல முடியுமா?''

''இந்தத் தந்தியை நம்பக்கூடாது. ஒரு வேளே......''

''ஒரு வேளேயென்ன? இறந்தது என்னவோ உண்மைதான்.''

குட்டியம்மா, குஞ்சுநைநு படுத்திருந்த கட்டிலில் வந்து உட்கார்ந்தாள்.

"தாத்தா!''

குஞ்சுநைநு அசையவில்லே.

உலுக்கி அழைத்தாள், அப்படியும் எழுந்திருக்கவில்லே. வாய் திறந்திருந்தது. கண்கள் விழித்திருந்தன. முகத்தைப் பார்க்கவே பயமாக இருந்தது.

''தாத்தா!''

திடுக்கிட்டு எழுந்தார்.

''பெண்ணே போ. போய்விடு. கிழிந்த ஆடை உடுத்தி நான் புழுதி மண்ணில் படுத்திருக்கிறேன். என் நிர்வாணக் கோலத்தைப் பார்க்க ஏன் வந்திருக்கிருய்! போ......''

குட்டியம்மா செய்வதறியாது திகைத்தாள்.

''கடவுளே! என் கடவுளே! நீர் என்னே ஏன் கை விட்டீர் என்னைக் காப்பாற்ருமலும், என் முனகலேக் கேட்காமலும் நீர் ஏன்

தொலேவில் நிற்கிறீர்? இஸ்ரவேலர்களின் துதிப் பாடல்களில் வசிக்கிறவரே! நீர் பரிசுத்தமானவரன்ருே! எங்கள் தந்தையர்கள் உம்மைத் தஞ்சம் புகுந்தார்கள். நீர் அவர்களே விடுவித்தீர். நான் மனிதனல்ல-ஒரு புழு, ஜனங்கள் என்னே ஒதுக்கித் தள்ளியுள்ளார்கள். காண்பவரெல்லாம் என்னேப் பரிகாசம் செய்கிருர்கள். நீர்தானே எனக்குப் பிறவியைக் கொடுத்தவர்......''

''மாமா!''

''அப்பா!''

''தாத்தா!''

''இருக்கிற துயரமெல்லாம் போதாதா?''

''நான் என்னடா செய்யணும்? நான் எதற்காக இந்த உலகத் துக்குப் பாரமாய் உயிர் வாழணும்? எங்கேடா என் பையன். போய்க்கொண்டு வாங்கடா அவனே!''

''கொண்டு வர்ருேம். நீங்க பேசாமல் படுங்க.''

அப்பொழுது அங்கே மாத்யு வந்தான். காரில் அல்ல; நடந்தே. அவனுடன் திருச்சபையைச் சேர்ந்த சாமியாரைத் தவிர வேறு ஏழெட்டுப் பேர்களும் இருந்தார்கள். முற்றத்திலும் திண்ணேயிலும் நின்றிருந்த யாரையும் ஏறெடுத்துப் பார்க்கவில்லே. அவன், தந்தையின் கட்டிலருகில் வந்து தலே குனிந்து உட்கார்ந்திருந்தான்; கட்டிலில் தலே வைத்துத் தேம்பித் தேம்பி அழுதான். ஆனுல், சில நிமிடங்களுக்குள் அழுகையைக் கட்டுப் படுத்திக்கொண்டு தழதழத்த குரலில் சொன்னுன்:

''நாம் பிரார்த்தனே செய்வோம், சாமி.''

சாமியார், 'பிதா, குமாரர், பரிசுத்த ஆவி' என்று பிரார்த்தனே செய்ய ஆரம்பித்தார். ஆனுல் பெருமூச்சுகளுக்கும் அழுகைகளுக்கும் இடையே பிரார்த்தனே மூழ்கியது.

இராணுவ அலுவலகத்திலிருந்து அனுப்பிய ராஜனின் பெட்டியைச் சாந்தாதான் கையொப்பமிட்டு வாங்கினுள். இறந்து போன செய்தி கிடைத்த பத்தாவது நாள் பெட்டி வந்தது. இந்தக் கால அளவுக்குள் அப்படியொரு நிகழ்ச்சியைச் சமாளிக்கக் கூடிய மனத்திடத்தை, வியக்கத்தக்க வகையில் அவள் பெற்றிருந்தாள்.

குஞ்சுநைஞ கட்டிலருகில் மற்றவர் எதிரில் பெட்டியைத் திறந்து ஒவ்வொரு பொருளாக வெளியே எடுத்து வைத்தபோதும் அவளால் தன் அழுகையைக் கட்டுப்படுத்த முடிந்தது. ஸிஸிலி சாந்தாவை அணைத்தவாறு நின்றுகொண் டிருந்தாள். ஒவ்வொரு பெருளாக வெளியே எடுத்து வைத்தபோது ஸிஸிலி சொன்னாள்:

"இது ராஜண்ணு ஷேவு செய்யற பிரஷ்."

''ராஜண்ணு கறுப்புக் கண்ணுடி.''

''ராஜண்ணு......''

தீனும்மா சொன்னாள்:

"கொஞ்சம் சும்மா இரு, ஸிஸிலி......''

பெட்டிக்குள் சாந்தாவுக்கு ராஜன் எழுதிய அரைகுறையான கடிதம் ஒன்று இருந்தது. அதைக் கையில் எடுத்துப் பெட்டியை மூடிக் கட்டிலுக்கடியில் வைத்தாள். வெகு நேரம் வரையில் தலையணையில் முகத்தைப் புதைத்துப் படுத்தாள். எல்லாவற்றையும் தாங்கிக் கொள்ள முடிந்தது. ஆனுல், சீக்கிரமாகவே தள்ளாடிப்போய் விட்டாள்..........

துயரச் செய்தியைச் சொல்லப்போனவன் பேபிதான். அவள் கணவனின் ஆருயிர் நண்பன். முதல் முதலாக அவளைப் பெண் பார்க்க வந்தபோது கூடவந்திருந்த மாப்பிள்ளைத் தோழன்...

மகிழ்ச்சிப் பெருக்கால் பேபியை வரவேற்க அவள் ஓடோடி வந்தாள். தன் முகத்தில் பரவியிருந்த துயரத்தை மறைக்கப் பேபி மிகவும் பிரயாசைப்பட்டான். சாந்தா அதைக் கவனிக்கவில்லை.

''பேபி அண்ணு! உட்காருங்க, போன திங்கட்கிழமை அவர் கடிதம் வந்தது. இருபதாம் தேதி புறப்பட்டு வருகிருராம்.''

''சாந்தா!''

தாமாஷாகச் சிரித்து மகிழ்ந்து பேசிக்கொண் டிருக்கும்போது கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறை விழுந்தாற்போல் சாந்தா திடுக்கிட்டாள். பேபி அண்ணன் கண்களில் நீர்வழிகிறதா? பேபி என்ன சொன்ஞன்? அவள் என்ன கேட்டாள்? அவளால் எதையும் நினைத்துப் பார்க்கவும் முடியவில்லை, சற்றும் எதிர்பாரா்த வகையில் வானமே இடிந்து தலையில் விழுந்ததுபோல்......

பைத்தியம்போல் ஆனுள் அவள். அழுக்குப் படிந்த ஆடையோடு அவள் வெளியே ஓடினுள்.

பொய். கேட்டதெல்லாம் பொய். அத்தான் உயிருடன் இருக்கிருர். எந்த ஊரிலிருந்தாலும் அவரைத் தேடிக் கண்டு பிடிப்பேன். யார் உதவியும் வேண்டாம்.......

யாரெல்லாமோ ஒருவாறு அவளைக் காரில் உட்கார வைத்தார்கள். வழியில் ஓரிருமுறை வண்டியிலிருந்து வெளியே குதிக்கவும் முயன்ருள், கார் மேலேத் தொழுத்து வீட்டு வாசலில் நின்றபோது காரிலிருந்து இறங்கி வீட்டிற்குள் ஓடிப்போனுள். அவள் அத்தான் அங்கேதான் இருப்பார். வேறு எங்கே போவார்? .......பிறகு என்ன நடந்தது? எதுவும் நினைத்துப் பார்க்க முடியவில்லை.

தந்தி கிடைத்த ஐந்தாம் நாள் பிரதம மந்திரி, சேனைத் தலைவர் இருவர் சார்பிலுமாகக் கமான்டிங் ஆபீஸர் அனுப்பியிருந்த இரங்கல் செய்தி கிடைத்தது.

......உங்கள் கணவரின் எதிர்பாராத மரணத்திற்கு உண்மையிலேயே நாங்கள் மிகவும் வருந்துகிறேம். இந்தப் பெரும் துயரத்தைத் தாங்கக்கூடிய வலிமையும் மனத்திடமும் உங்களுக்குக் கொடுக்கும்படி கடவுளைப் பிரார்த்திக்கிறேம்....

எவ்வளவோ கட்டுப்படுத்தி வைத்திருந்தும் அவள் விழிகள் நிரம்பின. கண்களைத் துடைத்துக்கொண்டே அவள் கடிதத்தைப் படித்தாள்.

......நேற்று பூராவும் எனக்கு எதுவும் எழுத முடியவில்லை. பகல் முழுவதும் 'ஸ்டாண்ட்', இரவில் 'லைட் அவுட்'; நிஜமான போர் போலவேதான் எல்லாம். மலைக்கு அப்பால் பதினுவது 'பட்டாலியன்' அணி நிரந்து நிற்கிறது. இந்தப் பக்கம் எங்களது பட்டாளம் நேற்று அதிகாலையில் இலைகளையும் செடிகொடிகளையும் யூனிஃபாமிலும், இரும்புத் தொப்பியிலும் 'காமோஃப்ளாஜ்' செய்த பிறகுதான் இப்போதைய நிலைக்கு வந்திருக்கிறேம். மலை உச்சியியிலிருந்து 'ஆர்டிலரி' 'கவரிங் 'ஃபயர்' செய்துகொண் டிருந்தது. தரையிலிருந்தது இரண்டடி உயரம் தலை தூக்கினுலே போதும்,

குண்டு பாய்ந்துவிடும். அனந்தநாராயணன் வழியிலேயே விழுந்து விட்டான். பிறகு 'ஸ்ட்ரெச்சர்' கொண்டு வந்துதான் அவனைக் கொண்டு போனார்கள். பாவம்! வலிமை இல்லை. உன் கடிதம் இன்றைக்குக் கிடைத்திருக்க வேண்டியது. ஒரு வேளை வந்திருக்க லாம். இனி நாளைதான் கிடைக்கும்.

28 ஜுலை

அன்பே,

இன்னும் உன் கடிதம் கிடைக்கவில்லையே. என்ன நடந்தது? நீ எழுதாமல் இருக்க மாட்டாய் என்று எனக்குத் தெரியும். மூன்று நாட்களுக்கு ஒருமுறையாவது உன் கடிதத்தைக் கண்டால்தான் நிம்மதி. தாத்தாவுக்கு உடம்பு எதுவும் இல்லையே? அவரைக் கண் ணும் கருத்துமாகக் கவனி. 'பொண்ணு', 'பையா' என்றெல்லாம் தான் எல்லோரையும் அழைப்பார். தவருக, அவரைப் பாச மில்லாதவர் என்று எண்ணிவிடாதே. தமது பிள்ளைகளுக்கும், பேரன் பேத்திகளுக்குமாக வாழ்நாள் பூராவும் பாடுபட்டவர் தாத்தா. சின்னக் குழந்தையாக இருக்கும்போது எனக்கு அவரைக் கண்டால் ஒரே பயம்......

'ஸ்கீ'மின் மிக மிக ஆபத்தான பயிற்சி நாளைக்கும் நாளை மறு நாளும் நடக்கவிருக்கிறது. பகைவனின் ஒரு 'போஸ்'டைப் பிடிக்க வேண்டும். பகைவர்களாக நடிப்பது நம்மவர்களேதான். 'போஸ்'டைப் பிடிக்க என்னைத் தேர்ந்தெடுத்துள்ளார்கள். இதற்கு முன் நான் எழுதியிருந்தது போல், 'ஸ்கீம்' பதினைந்தாம் தேதி முடிந்தால் இருபதாம் தேதி இங்கிருந்து புறப்படலாம். என்னுடன் வரத் தயாராக இரு......

தயாராக இரு. அவள் அந்தக் கடிதத்தைக் கைக்குள் வைத்து நெரித்தாள்.........

"சின்னப் பொண்ணு!"

"என்ன ?"

"இங்கே வா"

சாந்தா எழுந்து தாத்தாவிற்கருகில் சென்றாள்.

"உட்காரு."

சாந்தா கட்டில் ஓரத்தில் உட்கார்ந்தாள்.

“கிளைகள் காய்ந்து போன, கனிதராத, பட்டுப்போன மரமான நான் இன்னமும் இருக்கிறேன். நிறையக் கனிதரும் மரம் சாய்ந்து விட்டதே, பொண்ணு.''

சாந்தா பதில் ஏதும் கூறவில்லை.

“மரத்தில் படர்ந்த திராட்சைக் கொடி, நீ. மரமோ வேருடன் சாய்ந்தது. அல்லும் பகலும் நான் உன்னைப்பற்றித்தான் யோசிக்கிறேன்.''

''............''

''உனக்கு இனி யார் துணை?''

''கடவுள்.''

''ஆம், கடவுளால் ஆகாதது எதுவுமில்லை. கடவுளே, என்னைக் காப்பாற்றும். தண்ணீர் என் உயிரைப் பற்றியுள்ளது. நான் சகதியில் சிக்கியுள்ளேன். ஆழமான நீரில் நான் மூழ்கப் போகிறேன்...''

''தாத்தா, துயரப்படாமல் இருங்க.''

''எப்படி நான் துயரப்படாமல் இருக்க முடியும், பொண்ணு? வாழ்க்கையின் கோட்டை வாயில் வரை உன்னை அழைத்து வந்து கதவை மூடிவிட்டார்களே. இனி நீ எங்கே போவாய்?''

''என் வழியை நான் கண்டு பிடித்துவிட்டேன், தாத்தா.''

குஞ்சுகைநனு அதைக் கேட்டதாகத் தெரியவில்லை.

''நான் எண்ணெயில்லாமல் படர்ந்தெரியும் விளக்கின் திரி, இனி அதிகமானுல் அரை நாழிகை நேரம். எனக்குப் பின்னுல் உன் மாமனுர் வருவார். அப்புறம் உனக்கு யார் துணை? உன் கழுத்தில் தாலி கட்டியவனைப்பற்றி எண்ணி வருந்த அவன் உனக்கு ஒரு பிள்ளையையாவது கொடுத்தானு?''

''தாத்தா!''

''எலீமலேக்கின் மனைவியான நகோமி தன் இரு மருமக்களிடமும் சொன்னதைப் போல நான் உன்னிடமும் சொல்கிறேன். இறந்தவனிடமும் என்னிடமும் நீ தயை செய்ததுபோல், கர்த்தர் உன்னிடமும் தயை செய்வாராக.''

''அது நடக்காது.''

''ஏ...?''

''என் கையை ஒருவர் பிடித்து இந்த வீட்டின் மணவறைக்கு அழைத்து வந்தார். இனி எனக்கு வேரேரு வீடில்லே.''

''இந்த இளம் வயதிலே நீ விதவையானதை நான் எப்படியம்மா பார்த்திருப்பேன்?''

பேச்சைக் கேட்டுத் தீனும்மா வெளியே வந்தாள்.

''கடவுளை நினைத்துக் கொஞ்சம் பேசாமல் இருங்களேன், மாமா! மருந்தெல்லாம் சாப்பிட்டு இப்பத்தான் உங்களுக்கு உடம்பு குணமாயிருக்கு. மறுபடியும் பழையபடி ஆரம்பிச்சுட்டீங்களே? சின்னப் பையன்கள் மாதிரி வாயில் வந்ததையெல்லாம் பேசிக்கிட்டே இருக்கீங்களே?''

குஞ்சுநைனு நினைத்துப் பார்த்தார்:

நான் என்ன வாயில் வந்ததைச் சொன்னேன்? உண்மையைச் சொன்னுல் யாருக்கும் பிடிக்காது. எதிர்க்காலத்தில் அவள் நிலைமை எப்படியிருக்கும் என்பதை நினைத்துப்பார். வெகு நாட்களுக்கு முன் கொற்றம்பள்ளியைச் சார்ந்த ஒரு சித்தி குத்தகை நெல்லை வசூல் செய்ய அலைந்து கொண்டிருந்தாள். அவள் ஒரு மலடு. தூரத்து உறவில் ஒரு சிற்றப்பாவின் மனைவி. கணவன் இறந்த போது தனது பங்கான பத்துப்பறை விதை விதைக்கக்கூடிய நிலத்தைச் சாகுபடி செய்ய மைந்துனரிடம் ஒப்படைத்து, கொற்றம் பள்ளியிலேயே ஒரு தங்கையுடன் வசிக்க ஆரம்பித்தாள் வருஷத்திற்கு ஒரு முறை குத்தகை நெல் வசூல் செய்ய வருவாள் ஒரு தடவை அப்படி வசூல் செய்ய வந்தபோது மகா கெட்டிக்காரனும், நாட்டாண்மைக்காரனுமான மைத்துனன் கேட்டான்:

''என்ன நிலம்? யாருடைய நிலம்? கஞ்சியோ கூழோ குடிச்சு! வேணுமுன்னு இங்கே படுத்துக் கிட''

புகார் சொல்ல வீடு வீடாக ஏறி இறங்கினுள். எங்கும் நிந்தனை! அவள் அப்பாவிடம் புகார் சொல்ல வந்தது நினைவிருக்கிறது. அப்பொழுது அப்பா கேட்டார்:

''கொச்சி வர்க்கி என்ன பொய்யா சொல்ருன்? படிஞ்சாறு தலைப்புக் குடும்பத்தார் நிலத்திலிருந்து கிடைக்கிற நெல் கொற்றம் பள்ளிக்காரர்களுக்குச் சாப்பாட்டுக்கல்ல.''

அப்படி அனுதையாக, தெருநாயைப்போல் அலைந்து அவன் இறந்தாள். யாரோ அவளுடைய சடலத்தைத் தூக்கிக்கொண்டு போய், மாதாகோவிலைச் சேர்ந்த இடுகாட்டில் அடக்கம் செய் தார்கள். இதையெல்லாம் பார்த்திருக்கிற நான் எப்படிப் பேசா மல் இருப்பேன்?

பதினெட்டு வயதுகூட நிரம்பாத பெண், நீங்கள் போகும் இடத்திற்கு நானும் வருவேன்; நீங்கள் தங்கும் இடத்தில் நானும் தங்குவேன்; உங்கள் ஜனம் என் ஜனம்; நீங்கள் மரணம் அடை யும் இடத்தில் நானும் மரணம் அடைந்து அங்கே அடக்கம் செய்யப்படுவேன் என்று கூறித் தன் மாமியாரான நகோமி யுடன் போன ரூத்தைப்போல் இந்தச் சின்னப் பெண் உன்னுடன் வந்தால் அவள் நிலை என்ன ஆகுமென்று சற்று யோசி. ரூத்தின் காலம் கடவுள் வரப்பிரசாதம் மிகுந்த காலம் கடவுள் தனது ஜனமான இஸ்ரவேலர்கள் கூடவே நடந்த காலம். நகோமிக்குப் போவாஸ் என்னும் பெரும் செல்வந்தஞன ஓர் உறவினன் இருந் தான். ரூத், நகோமியிடம் 'நான் வயல்வெளிக்குப் போய்க் கதிர் பொறுக்கிக்கொண்டு வரட்டுமா?'' என்று கேட்டாள். அதற்கு நகோமி 'போ மகளே' என்று கூறினுள். ரூத் அறுவடை செய்பவர் களின் பின் சென்று கதிர்களைப் பொறுக்கினுள். தற்செயலாக, அது போவாஸின் நிலமாக இருந்தது. அவன் அறுவடை செய் பவர்களின் தலைவனுன வேலைக்காரனிடம் 'இந்த மங்கை யார்? என்று கேட்டான். 'இவள் நகோமியுடன் வந்த மோவாபியப் பெண்' என்று அவன் பதில் கூறினுன். அப்பொழுது போவாஸ் ரூத்தியிடம் 'மகளே! கதிர் பொறுக்க நீ வேறு வயலுக்குப் போக வேண்டாம். இங்கே என் ஊழியக்காரப் பெண்களோடு கூடவே இரு' என்றுன், அப்பொழுது அவள் தரையிலே விழுந்து தண்ட னிட்டு என்னிடம் ஏன் உமக்கு இவ்வளவு தயை உண்டாயிற்று?' என்று கேட்டாள். அதற்குப் போவாஸ் அவனிடம் 'உன் கணவன் இறந்தபிறகு நீ உன் மாமியாருக்குச் செய்த தொண்டையும், உன் தாய்தந்தையரையும், பிறந்தநாட்டையும் விட்டு முன்பின் தெரியாத ஜனங்களிடத்தில் வாழ்ந்ததையும் மற்றதையும் நான் ஜீவரமாக அறிவேன். இஸ்ரவேலின் தேவனுகிய கர்த்தருடைய

இறக்கையின் கீழ் அடைக்கலமாய் வந்த உனக்கு அவரால் நிறைந்த பலன் கிடைக்கட்டும்!' என்ருன். மாமியாரான நகோமியின் புத்தி மதிக்கிணங்க அவள் குளித்து வாசனைத் தைலம் பூசி, நல்ல ஆடைகளை அணிந்து போவாஸிடம் சென்ருள். அவன் அவளை ஏற்றுக் கொண்டான். அவள் அவனுக்காக ஓர் ஆண் குழந்தையை ஈன்றெடுத்தாள். அந்தக் குழந்தையின் பெயர் ஓபேத். அந்த ஓபேதுதான். தாவீதின் தாத்தா. தாவீது சாலொமோனைப் பெற்ருன். சாலொமோன் ரெகொபெயாமைப் பெற்ருன். ரெகொபெயாம் அபியாவைப் பெற்ருன். அபியா ஆசாவைப் பெற்ருன். ஆசா யோசபாத்தைப் பெற்ருன். யோசபாத் யோராமைப் பெற்ருன். யோராம் உசியாவைப் பெற்ருன். உசியா யோதாமைப் பெற்ருன். யோதாம் ஆகாஸைப் பெற்ருன். ஆகாஸ் எசேக்கியாவைப் பெற்ருன்... ..இப்படியாக அந்த வமிசம் வளர்ந்து கடைசியில் மாத்தானின் மகனை யாக்கோபு மரியாளுடைய புருஷனை யோசேப்பைப் பெற்ருன்......

பிறவி கொடுக்கத்தான் மனிதனல் முடியும். ஆனல், உயிர் கர்த்தர் கையில் இருக்கிறது. தாம் விரும்பும்போது அதை அவர் திருப்பி எடுக்கிருர், இறந்தவருக்கு உயிர் கொடுக்க!.....முடியும். பழைய ஏற்பாடு காலத்தில் தீர்க்கதரிசிகள் அப்படிச் செய்திருக்கிருர்கள். புதிய ஏற்பாடு காலத்தில் கர்த்தரும் அப்படிச் செய்திருக்கிருரே! லாசருவைக் கல்லறையிலிருந்து உயிர்த்தெழச் செய்தார். யேசு மார்த்தாவிடம் 'நானே உயிர்த்தெழுதலும், ஜீவனுமாயிருக்கிறேன்' என்ருர். அதற்குப்பின் கல்லறைக்கு அருகில் சென்று வானை நோக்கிப் பிரார்த்தனை செய்தார். பிறகு 'லாசருவே, வெளியே வா' என்று உரத்த குரலில் கூப்பிட்டார். அவன் கல்லறையிலிருந்து வெளியே வந்தான்......

கர்த்தரின் அப்போதைய கம்பீரத் தோற்றத்தைப் பார்க்க வேண்டுமே! நினைக்கும்போதே பயமாக இருக்கிறது. ஒளி படைத்த முகம். கூசாத பார்வை. அதிகார தோரணை......

லாசருவே வெளியே வா!

''மாமா!''

"ஏ...?"

"என்ன சொல்றீங்க?"

"ஏதேதோ யோசனை."

"நேற்று ராத்திரியும் என்னவெல்லாமோ சொல்லிக் கிட்டிருந்தீங்க."

"ஆ...பொழுதுவிடியிற வரையில் உன் மாமியார் வாயிலில் காத்துக்கிட்டிருந்தாள். 'ஏன் இவ்வளவு தாமதம்? நான் இந்தப் பனியில் காத்துக்கிட்டு இருக்கிறது தெரியலையா? இந்த வயது காலத்திலுமா இவ்வளவு மோடியெல்லாம் வேண்டியிருக்கு'ன்னு அவள் கேட்டாள்....

"இங்கே வாடி..." என்றேன் நான்.

தீனும்மா சிரித்தாள்.

"இந்த மாமா என்ன என்னதான் சொல்கிறுரோ?"

"சின்னப் பொண்ணு எங்கே?"

"இங்கே இருக்காள்."

"உன் வீட்டுக்காரன்?"

"கடைத்தெருவுக்குப் போயிருக்கார்.. ஏன்?"

"வேளை நெருங்கிவிட்டாற் போலத் தோணுது. ஏழு நட்சத் திரங்களை வலது கையில் பிடித்தவாறு, தங்கக் குத்துவிளக்குகளுக்கு நடுவில் நிற்கும் தூதனை நான் பார்த்தேன்."

"மாமாவுக்குச் சும்மா அப்படியெல்லாம் தோணுது, அவ்வளவுதான்."

"அவளுக்கு விருப்பமாயிருந்தால் மறுமணம் செய்து கொள்ளட்டும். வரதட்சிணையா நாம் ஒண்ணும் வாங்கவில்லையே? அதனுல் கணக்கு எதுவும் சொல்றதுக்கு இல்லை. துணிமணிகளை எடுத்துக்கொண்டு விடைபெற்றுப் போகட்டும். மறுமணமா யிருந்தால்கூட, குழந்தைகள் இல்லாததனுலும் சின்ன வயதான தனுலும் எவனுவது அவளை விரும்பிக் கட்டிக்காமல் இருக்க மாட்டான்."

"மாமா, கொஞ்சம் சும்மா இருப்பீங்களா?"

"குஞ்சுநைநு என்ன சொல்கிருர்?"

தீனும்மா திரும்பிப் பார்த்தாள்.

குறுப்பு!

தீனும்மா சொன்னுள் :

"இதோ கூட்டாளி வந்தாச்சு. பேச்சுத்துணைக்கு யாரும் இல்லாததனுல்தான் இப்படியெல்லாம் ஒவ்வொண்ணுத் தோணுது."

"பத்து நாளைய பரிச்சயம். களைப்பாகச் சத்திரத்தில் உட்கார்ந்திருக்கும்போது கூட்டாளி வருகிருன். பொட்டலத்தை அவிழ்த்து வெற்றிலை போடுகிருர்கள். ஏதேதோ கதைகள் பேசிப் பயணத்தைத் தொடர்கிருர்கள். முச்சந்தியில் விடைபெறுகிருன். 'அப்போ, நான் வரட்டுமா?' எல்லாமே இவ்வளவுதானே, குறுப்பு?"

"அவ்வளவுதான் உண்மை. கண்ணபிரான் சொல்கிருர் : அதி அற்புதமானதும் மூன்று குணங்களை உடையதுமான என் மாயையின் வல்லமையை வெல்வது எளிதல்ல. இருப்பினும் என்னைத் தஞ்சமடைகிறவன் இந்த மாயையைக் கடக்கிருன்."

"எங்கே கடக்கிருன்? யார் கடக்கிருன்? இன்றுவரை யாரும் கடந்ததில்லை. நேர்மையாளனுக்கும் கொடியவனுக்கும், நல்லவனுக்கும் வல்லவனுக்கும், தூயவனுக்கும் தீயவனுக்கும் முடிவு ஒன்றே, வானத்தின் கீழ் நடப்பவற்றையெல்லாம் விசாரித்து ஞானமாய் ஆராய்வதற்கு என் மனத்தைச் செலுத்தினேன். மனிதர் வருந்தி உழைப்பதற்குக் கடவுள் நியமித்தது கடுந்தொல்லை தான். ஏனடா சரிதானே?"

"அடா!" என்று அழைப்பதைக் கேட்டபோது குறுப்பு திடுக்கிட்டான். இந்த நாள் வரையில் அப்படிக் கூப்பிட்டதில்லை. எனினும் அதைப் பொருட்படுத்தாமல் சொன்னுன் :

"ஆம், மாயைதான்."

"நாம் இரண்டுபேரும் பழக ஆரம்பிச்சு எத்தனை வருஷமாச்சு?"

"சுமார் இரண்டு வருஷம்."

"சரியான பைத்தியம் நீ. ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பத்தாவது ஆண்டு நாம் இரண்டு பேரும் பங்காக விவசாயம்

பண்ணினேமே, நீ அதை மறந்தே! அப்படித்தானேடா நேர்மையாளா?''

'சரிதான், ஏதோ கோளாறுபோல் தெரியுது' என்று மனத்துள் நினைத்துக்கொண்டான் குறுப்பு. 'வேறு யாரோ என்று நினைத்துக் கொண்டு பேசுகிறார். மனம் எங்கோ அலைகிறுப்போல் தெரியுது. ஆனால் என்னை முதலில் அடையாளம் தெரிந்துகொண்டாரே?'

''நீ என்னை மறந்திருக்க முடியாது. உன் மூத்த பெண்ணின் கல்யாணத்தின்போது வரதட்சிணை வாங்க வரன் வீட்டார் வந்த போது 'எனக்கு உதவி செய்ய யாருமில்லையே' என்று கூறி நீ மல்லாந்து விழுந்தாயே, அப்போது இந்தக் குஞ்சுநைனாதான் உனக்குக் கைகொடுத்து உதவினது. நீ அதையும் மறந்த விட்டாய்?''

''குஞ்சுநைனா !''

''ஏ...?''

''இது நான்தான் - சிவராம குறுப்பு.''

''..................''

''குஞ்சுநைனா!''

குஞ்சுநைனா அசையாமல் படுத்திருந்தார். பெரும் தூக்கம் தூங்குவதுபோல் அவர் குறட்டை விட்டுக்கொண்டிருந்தார்.

குஞ்சுநைனா கண்விழித்தபோது வீடு நிறைய ஆட்கள் நின்று கொண்டிருப்பதைக் கண்ணுற்றார். கறுப்பு அங்கியணிந்த சாமியார். சாம்பிராணியைப் புகைய விட்டுக்கொண்டிருந்த மத்தாயி. பெண்கள், குழந்தைகள்.

சாமியார் தலையைக் குனிந்துக் குஞ்சுநைனாவை உற்று நோக்கியபின் சொன்னார்:

''குஞ்சு நைனா! தைலப் பூச்சுச் சடங்கு நடத்தட்டுமா? தயாரா?''

''ஆம்'' என்று பொருள்படக் குஞ்சுநைனா தலையை அசைத்தார். சாமியார் அவர் தலையிலேயே கைவைத்துப் பிரார்த்தனை செய்தார்:

''பிதா, குமாரர், பரிசுத்த ஆவியாம் கடவுளே! வல்லமை மிகுந்த உன் உதவிக் கரத்தை நேசமுடன் இந்தத் தொண்டன் மீது

வைப்பதற்காக என் பலவீனமான கரத்தை உன் திருநாமத்தின் பெயரில் இவன் மீது வைக்கிறேன்.''

பிறகு சாமியார் குஞ்சுநைனுவின் காதருகில் சொன்னார் :

'' 'மௌத்யோ நூஸோ' பிரார்த்தனையைச் சொல்லி, செய்துள்ள பாவங்களை ஒப்புக்கொள்ளுங்கள்.''

குஞ்சுநைனுவின் உதடுகள் முணுமுணுத்தன.

சாமியார் மறுபடியும் ஜெபம் பண்ணினார் :

''பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் பெயரால் எனக்குச் சித்தமுண்டு நீ தூயவனாகக் கடவது. உள்ளத்தாலும் உடலாலும் தெரிந்தும் தெரியாமலும் நீ செய்த குற்றங்களும் பாவங்களும் மன்னிக்கக் கடவது. எல்லாத் தீமைகளும் பிசாசின் கிரியைகளும் உன்னை விட்டுப் போகக் கடவது.''

கண் இமைகளில் சிலுவை அடையாளத்தில் தைலம் பூசியவாறு சாமியார் பிரார்த்தனை செய்தார் :

''இந்தப் பரிசுத்தத் தைலத்தின் உதவியாலும் தமது கருணையின் வாயிலாகவும் நீ கண்களால் செய்த எல்லாப் பாவங்களையும் கடவுள் மன்னிக்கக் கடவது.''

பிறகு மூக்கிலும், உதட்டிலும், காதிலும் கைகால்களிலும், தொப்புளுக்குக் கீழும் சிலுவை அடையாளத்தில் தைலம் பூசி முன் போல் பிரார்த்தனை செய்தார்.

தைலப்பூச்சுச் சடங்கு முடிந்தபின் சாமியாரையும், மத்தாயியையும் தட்சிணை கொடுத்து அனுப்பினார்கள் உற்றார் உறவினரும் ஒவ்வொருவராக விடைபெற்றுக்கொண்டு கிளம்பிப் போனார்கள். வர்கீஸும், குட்டியம்மாவும், தாமஸ் ஸாரும், வீட்டாரும் மட்டுமே இருந்தார்கள்.

தாமஸ் ஸார் சொன்னார்:

''மருந்தையும் பத்திய உணவையும் நிறுத்தியதனால்தான் வியாதி அதிகமாகியது.''

''இனி என்ன பத்தியம் வேண்டியிருக்கு, மாப்பிள்ளே?''

''அப்படிச் சொல்லாதீங்க, மாமா! இந்த வயதிலேயும் மற்ற

வர்களுக்கு இல்லாத திடமும் ஆரோக்கியமும் அவருக்கு இருக்குதுன்னு டாக்டர் சொன்ஞர்.''

''அது சரிதான். எழுபது வயது அப்பாவைப்போல் ஆரோக்கியம் இந்த ஊரில் வேறு யாருக்காவது இருந்ததா?''

மாத்யு கேட்டான்:

''பத்தியமா இருக்கணமுன்னு சொன்ஞல் கேட்டால்தானே?''

''நான் சொன்ஞல் கேட்காமல் இருக்க மாட்டார். டாக்டரைப் பார்த்து விவரம் சொல்லி மருந்து வாங்கி வர்றேன்.''

''உம், அப்படியாஞல் சொல்லிப் பாரு.''

வர்கீஸ் மாத்யுவை அழைத்துக்கொண்டு முற்றத்திற்குப் போஞன். பலாமரத்து வேரின் மீது வர்கீஸ் உட்கார்ந்தான். வெகு நேரம் வரை மௌனமாகப் பலா இலைக் காம்பால் தரையில் கிறுக்கிக் கொண்டிருந்தான்.

''நடந்ததெல்லாம் நடந்துவிட்டது. அப்பாவும் இன்னிக்கோ நாளைக்கோன்னு படுத்திருக்கார். நீ என்ன செய்யப்போகிருய்?''

மாத்யு பதில் ஏதும் கூறவில்லை! 'எனக்கு உதவி கர்த்தரிட மிருந்து வருகிறது' என்னும் கூற்றில் உறுதியோடு இருப்பதைப் போல் வானத்தை நோக்கியவாறு நின்றுகொண் டிருந்தான்.

''இதுவரையிலும் வீட்டைப்பற்றிக் கொஞ்சமும் அக்கறையில்லாமல் ஏனே தானே என்று நடந்துகொண் டிருந்தே; பையன் ஏதோ அனுப்பிக்கொண் டிருந்தான். அதஞல் தீஞம்மா வீட்டுக் காரியங்களை நடத்தி வந்தாள். இனி நீ என்ன செய்யப்போகிருய்?''

''என்ன செய்கிறது? வருவது வரட்டும்.''

''அதுதான் சொன்னேன். உனக்கு இன்னமும் பொறுப்பு உணர்ச்சி வரவில்லை.''

''வேறு நான் என்ன செய்ய? விதி.''

''ஏதாவது தொழில் ஆரம்பி''

''அதுக்குப் பணம் வேணுமே?''

''பணம் வேணுமேன்னு சொல்லிக்கிட்டிருந்தால் போதுமா? அதுக்கு ஏதாவது ஒரு வழியைத் தேடு. ராணுவத்திலிருந்து ஏதோ ஆயிரம் ரூபாய் வரப்போவதாகச் சொன்ஞயே? அதோடு ஆயிரமோ

இரண்டாயிரமோ யாரிடமிருந்தாவது கடனுக வாங்கி ஒரு மளிகைக் கடையைத் தொடங்கு.''

''யார் தருவாங்க, இந்தக் காலத்திலே இரண்டாயிரம் ரூபாய்? நம்மவங்களிலே தருவதற்கு வசதியிருக்கிறவர் பிலிப்பு அண்ணன். அவர் எங்கே தரப்போகிறார்?''

''அவனிடம் நான் இதைப்பற்றிப் பேசினேன். ஆனால் அவன் கல்மனம் கரையுமா என்கிறது சந்தேகம்தான். இந்த நாள் வரையிலும் ஒரு தாய் வயிற்றில் பிறந்த அண்ணன் தம்பிகள் என்கிற எண்ணமே அவனுக்கு உண்டாகவில்லை.''

''அதைத்தான் நானும் சொல்கிறேன்.''

''சரி. நான் பங்குக்கு ஒரு ஆளை ஏற்பாடு பண்ணுகிறேன், நீ பொறுப்புடன் காரியங்களைக் கவனிச்சு நடத்துவியா?''

''யாரு?''

''சிவராம குறுப்பு. அவனே என்னிடம் சொன்னான். அவனுக்கு வியாபாரத்தைப்பற்றித் தெரியுமே. ஷண்முகம் பிள்ளை கடையில் ரொம்ப நாளாய்க் கணக்குப் பிள்ளையாக இருக்கிறான்.''

வெகு நேரம் வரையில் மாத்யு எதுவும் பேசவில்லை. மளிகைக் கடை ஆரம்பிப்பது என்பது ஒரு நல்ல யோசனையே. பழையகுளம் ராமகிருஷ்ணனின் வியாபாரம் இப்போது வெகுவாகக் குறைந்து விட்டது. பனைச்சமேட்டில் வேறு ஒரு மளிகைக் கடையும் இல்லை. கடனுக்கு வியாபாரம் செய்யாமல் இருந்தால் ஆபத்தில்லை. ஆனால்......

''அந்த இளிச்சவாயன் குறுப்பைப் பங்காளியாச் சேர்த்துக் கொண்டு வியாபாரம் செய்யத் தகுமா?''

''அவன் இளிச்ச வாயோடு நடக்கட்டும். பிடிப்பு உன் கையில் இருக்கணும்; அதுதான் சாமர்த்தியம்.''

மீண்டும் வெகு நேரம் வரையில் அண்ணனும் தம்பியும் மௌனமாக இருந்தார்கள்.

''நான் நாளைக்கு அவனைப் பார்த்து மறுபடியும் கேட்கிறேன். அப்புறம் ஒரு முடிவுக்கு வந்தால் போதும். அப்புறம்......சாந்தா காரியத்தைப்பற்றி ஏதாவது யோசித்தாயா?''

''சாந்தா காரியமா?''

''அவள் அம்மா ஏதாவது சொன்னளா?''

''என்ன?''

''அவள் சின்னப் பெண்தானே. நாம் அவளை இங்கே வைத்திருக்கிறது சரியா?'

மாத்யு பதில் பேசவில்லை.

''என்னைக் கேட்டால் அவள் தன் வீட்டுக்குப் போவதுதான் நல்லதுன்னு சொல்வேன். ஏன் அவள் வாழ்வைப் பாழாக்கணும்?''

''அதைப்பற்றி நான் ஒரு முடிவுக்கு வந்தாச்சு, மாமா.''

''ஏ...?''

திரும்பிப் பார்த்தபோது சாந்தா கிணற்றடியிலுள்ள மரத்தின் கீழ் நின்றுகொண் டிருந்ததைப் பார்த்தனர். அவள் ஓர் இலையைப் பறித்து நெருடிக்கொண் டிருந்தாள்.

''இனி இந்தப் பிறவியில் எனக்கு வேருெரு உறவில்லை; வேருெரு வீடில்லை.''

''நன்ருகயோசித்து ஒரு முடிவுக்கு வா, அம்மா!''

''நன்ருக யோசித்தபிறகுதான் மாமா, ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன்.''

அவள் தலைநிமிர்ந்து சங்கோசப்படாமல் இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள். அவளுடைய முகத்தில் அலாதியானதொரு பேரொளி பரவியிருந்தது! திடமான முடிவு.

''உம், நீ போ அம்மா.''

சாந்தா பின் பக்கமாகச் சமையல் அறைக்குப் போனுள். அப்போது திடீரென்று பிலிப்பு சைக்கிளில் வந்திறங்கினுன். வேகமாக வந்ததனுல் அவன் வியர்வையால் சொட்டச் சொட்ட நனைந்திருந்தான்.

''தைலச் சடங்கு முடிந்ததா?''

''நீ எங்கே போயிருந்தே?''

''எங்கே போயிருந்தே! தலைக்கு மேல் நூறு வேலை. நாய் கெட்ட கேடா அலையறேன். கார் வர்க் ஷாப்பிலே கிடக்கு. என்ன செய்கிறது? பறக்க முடியுமா?''

''எங்கே போயிருந்தேன்னுதானே கேட்டேன். அதுக்குப் போய் 'இப்படிப் பொரிச்சுக் கொட்டுகிறுயே?''

''ஆம். பொரிச்சுக் கொட்டினேன். அப்பாவுக்கு எப்படி இருக்கு?''

''அப்படியேதான் இருக்கு.''

பிலிப்பு தந்தையின் கட்டிலருகில் செல்கையில் வர்கீஸ் கூப்பிட்டான்.

''பிலிப்பு!''

பிலிப்பு, திரும்பிப் பார்த்தான்.

''நான் போனவாரம் சொன்னேனே, மாத்யுவின் சங்கதி. நீ பதில் எதுவும் சொல்லவில்லையே? ஏதாவது தொழில் செய்யாவிட்டால் எப்படி அவன் பிழைப்பை நடத்துவான்?''

''என்னைக் கேட்டால்? முப்பதாயிரம் ரூபாய்க்குக் கான்டிராக்டு வேலை கிட்டத்தட்ட முடியும் தறுவாயில் இருக்கு. நாசமாப் போன ஒரு இஞ்சினியர் வந்திருக்கிருன். லஞ்சம் கொடுக்காமல் அவன் பில் பாஸ் பண்ண மாட்டான். நான் கடன் வாங்காத இடம் இல்லை....''

''அதெல்லாம் உங்கள் சொந்த விஷயம்.''

''ஆமா, என் சொந்த விஷயம்தான்.''

''இந்த முப்பதினுயிரம் நாற்பதினுயிரம் கணக்கையெல்லாம் யார் உங்களிடம் கேட்டது? இல்லையென்ருல் இல்லைன்னு சொல்லுங்க!''

''இல்லை.''

''வர்கீஸண்ணனைத்தான் சொல்லணும். தம்பிக்கு உதவி செய்யறதுக்குப் பார்த்து வைச்ச வழி! ''

அதற்குப் பதில் கூருமல் பிலிப்பு, குஞ்சுநைனுவின் கட்டிலருகில் சென்ருன். அப்போது விளக்கு ஏற்றியாயிருந்தது. கட்டிலருகிலிருந்து அந்தி நேரத் துதிப்பாடல் ஒலித்தது ..........

கதவைத் தட்டிச் சாவு கூப்பிட்டபோதிலும் சிறிதளவு குணம் பெற்றதாகத் தோன்றியது. மருந்தும் பத்தியமும் மட்டுமே இதற்குக் காரணம் என்று சொல்ல முடியாது; சாந்தாவின் பணிவிடையும் தன் பங்கைச் செய்திருந்தது. இனி எழுந்திருக்கவே முடியாது என்ற அளவுக்குச் சாந்தா மனம் உடைந்து போயிருந்

தாள். எனினும் அந்த ஆருத் துயரத்திலிருந்து விடுதலை பெற்றுப் புதுப் பொலிவுடன், புத்துணர்ச்சியுடன் எழுந்தாள். அது அவளுக்கு மறுபிறப்பைப்போல் இருந்தது. இழந்தது ஏதுமில்லை; ஆனுல் பெற இருப்பதோ மிக உயர்ந்தது என்று அவள் உள்ளம் கூறியது. நித்திய மணுளன் வரப் போகிருர்; அவருக்காக எண்ணெய் ஊற்றிய விளக்குடன் கண் விழித்திருக்க வேண்டும் என்பதை அவள் தன் வாழ்க்கையில் இலட்சியமாகக் கொண்டாள். பரலோக ராச்சியம் மணவாளனை எதிர்கொண்டழைக்க விளக்குகளுடன்போன பத்துக் கன்னிகைகளுக்கு ஒப்பாயிருக்கும் என்று கர்த்தர் கூறியிருக் கிருர். அவர்களில் ஐந்து பேர்கள் புத்தியுள்ளவர்களும், ஐந்து பேர்கள் புத்தியில்லாதவர்களுமாக இருந்தார்கள். புத்தியில்லாத வர்கள் விளக்கை எடுத்தபோது எண்ணெய் எடுக்கவில்லை. புத்தி யுள்ளவர்கள் விளக்குடன் தங்கள் பாத்திரங்களில் எண்ணெயும் எடுத்தார்கள். மணவாளன் வரத் தாமதமானபோது அவர்கள் எல்லோரும் தூங்கிவிட்டார்கள். ஆனுல் நடு ராத்திரியிலே 'இதோ மணவாளன் வருகிருர், அவரை எதிர்கொண்டழையுங்கள்!' என்ற சத்தம் கேட்டது. அப்போது அந்தக் கன்னிகைகள் எல்லோரும் எழுந்து தங்கள் விளக்குகளைச் சரிப்படுத்திக் கொண்டார்கள். புத்தி யில்லாதவர்கள், புத்தியுள்ளவர்களிடம் 'உங்கள் எண்ணெயில் எங்களுக்கும் கொஞ்சம் கொடுங்கள். எண்ணெய் இல்லாமல் எங்கள் விளக்குகள் அணைந்துவிடப் போகின்றனவே' என்ருர்கள். ஆனுல் புத்தியுள்ளவர்கள் 'நாங்கள் எண்ணெய் கொடுத்தால் உங்களுக்கும் பற்ருமல் எங்களுக்கும் பற்ருமல் போய்விடும். எனவே நீங்கள் விற்கிறவர்களிடம் போய், வாங்கிக் கொள்ளுங்கள்' என்று பதில் கூறி விட்டார்கள். அப்படியே, அவர்கள் வாங்கப் போனபோது மண வாளன் வந்துவிட்டார். விளக்கோடு தயாராக இருந்தவர்கள் அவருடன் கல்யாண வீட்டினுள் பிரவேசித்தார்கள். கதவு, அடைக்கப்பட்டது. பிறகு மற்றக் கன்னிகைகளும் வந்தும் 'ஆண்டவரே, ஆண்டவரே! எங்களுக்கும் கதவைத் திறந்து உத வுங்கள்' என்ருர்கள். அதற்கு அவர் 'நான் உங்களை அறியேன்' என்று கூறிவிட்டார்.........

இவ்வாறு, எண்ணெயுடன் காத்திருக்கும் ஒரு புத்தியுள்ள கன்னிகையாக மாறினாள் சாந்தா. காத்திருப்பதோடு மட்டுமல்லாமல் மற்றவர்களிடமும் அந்த அரிய வாய்ப்பைப் பெறக் காத்திருக்கும்படி நல்லுரை கூறினாள். நல்லுரைகளைக் கூறுவதற்கும் கேட்பதற்கும் அவள் அக்கம்பக்கத்துக் கிராமங்களுக்குப் போகலானாள். தினமும் வைகறையில் எழுந்திருப்பாள். குஞ்சுநைனாவின் கட்டில் அருகில் உட்கார்ந்து துதிப்பாடல்கள் பாடுவாள். பனைச்சமேடு கிராமம் துயில் எழுவதே சாந்தாவின் பாட்டைக் கேட்டுத்தான்.

எத்தனை எத்தனை இன்பம் – ஆகா
என்ன பேரானந்தம்.
வித்தகத் தூதுவர் நடுவில் யானும்
சித்தத்தில் தேவனை வாழ்த்திடும் போதில் — (எத்தனை)
வாழ்க்கை என்பதே வனப் பயணம் — என்றன்
வாழ்வும் போராட்டமே — வையம்
தாழ்வில்லாமல் வெற்றி கண்டாலே
சாரும் புகழாமே. (எத்தனை)
புல்லுக் கொப்பாகும் புவியின் வாழ்க்கை
பூவைப் போல மாயும் — அந்த
வல்ல இறைவன் கருணை இல்லாவிடில்
மாய்ந்தொழிந்தே போகும். (எத்தனை)

பிரார்த்தனைக்குப் பிறகு வீட்டு வேலைகளைச் செய்வாள். குஞ்சுநைனாவிற்கு மருந்தும் காபியும் கொடுப்பாள். பிறகு சுவிசேஷ பிரார்த்தனைக்குப் போவாள். திரும்பி வரும்போது சில வேளைகளில் உச்சிப்பொழுதுகூட ஆகிவிடும். நண்பகல் உணவு சமைக்கும் வேலை மட்டும்தான் தீனும்மாவிற்கு. திரும்பி வந்தபிறகு சாந்தாவே வீட்டுப் பொறுப்பை ஏற்பாள்.........

இந்தத் தடவை குஞ்சுநைனா திரும்பப்பெற்ற ஆரோக்கியம் சிறிது காலத்திற்குத்தான் நிலைத்தது. எண்ணெய் தீர்ந்து போன விளக்கு படர்ந்து எரிவதுபோல், சிறிது நாட்களுக்குப் பிறகு வயிற்றில் கோளாறு கண்டது. மந்தம் தட்டியது. அத்துடன் களைப்பும் அதிகமாகியது; இடையிடையே தலைசுற்றலும் மயக்கமும்

கூடின. எதுவும் நினைவில்லை. ஒருவருடன் பேசிக்கொண் டிருக்கும் போது அது வேறு ஒருவர் என்று மனத்தில் எண்ணுவார். குழந் தைகள்போல் அடம் பிடிப்பார்; அழுவார்.

சாந்தாதான் குஞ்சுநைனுவிற்குப் பணிவிடை அனைத்தும் செய்தாள். ஒன்று விட்ட நாட்களில் தைலம் தேய்த்து வெந்நீரில் குளிப்பாட்டினுள். குளிர் மிகுந்த காலை நேரங்களில் சட்டியில் நெருப்பைப் பற்றவிட்டுக் குளிர் காயக் கொடுத்தாள். இரவில் நான்கைந்து தடவை காபி போட்டுக் கொடுத்தாள்.

சிறிது தெம்பு வந்தபோது ஒரு நாள் குஞ்சுநைனு சொன்னுர்:

''கடைசி காலத்தில் நீதான் எனக்குத் துணையாயிருப்பாய் என்று யாராவது நினைத்தார்களா? பொண்ணு, உனக்குத் தருவ தற்கு என்னிடத்தில் எதுவும் இல்லையே!''

''அதெல்லாம் சொன்னுல் முடியாது, தாத்தா.''

''என்னிடம் என்ன இருக்கு?''

''ஆசீர்வாதம்.''

''என் ஆசீர்வாதத்திற்கு மதிப்பில்லாமல் போச்சே! என் ஆசி யிருந்தும் ஆண்டவர் உன் மண்குடிசையை நொறுக்கிவிட்டாரே! நாளைக்குப் புறப்படுகிறேன் என்ற கடிதம்...''

''வேண்டாம் தாத்தா, அதைப்பற்றி மட்டும் எதுவும் சொல்லா தீங்க. கடவுளின் வழி யாருக்குத் தெரியும்? நான் உங்கள் வீட்டு மருமகளாவேன் என்று நினைத்தீர்களா? நிச்சயமான கல்யாணத்தை வேண்டாம் என்று எழுதச் சொன்னவரும் நீங்கள்தானே?''

''ஆமாம்.''

''எல்லாம் அவன் திருவுள்ளம். அவன் நாமத்திற்கு ஸ்தோத் திரம்.........''

தனிமையான பாதையில், கண் காணுத, முற்றிலும் தெரியாத புகலிடத்தைத் தேடிப் புறப்பட்ட பயணத்தின்போது, ஓர் ஆணின் உதவி தேவைப்பட்டபோதெல்லாம் சாந்தாவிற்கு உதவி செய்தான் பேபி. ராணுவ அலுவலகத்திற்குக் கடிதங்கள் எழுதுவது, பட்டணத் திலிருந்து தேவையானதை வாங்கி வருவது, புத்தனுற்றங்கரைக்குப்

போய், தாயார் நலன் விசாரித்தறிந்து வருவது போன்றவையெல்லாம் அவன்தான் செய்தான். ராஜன் இறந்த பிறகு பேபி தேவையளவு, அளந்து பேசும் ஒரு கம்பீர மனிதனாக மாறிப் போய் விட்டான். திருமணம் முடிந்து இரண்டு வாரங்களுக்குப் பிறகு திரும்பிப் போகும் நாள் வரையில் நண்பர்கள் இருவரும் வேடிக்கை வேடிக்கையாகப் பேசினதையெல்லாம் அவள் நினைவு கூர்ந்தாள்.

பேபி தன் மனைவி லீலாம்மாவுடன் ஒரு வாடகை வீட்டில் வசித்து வந்தான். தாய், இரண்டு தங்கைகள், லீலாம்மா, இரண்டு மாதமான பச்சிளங் குழந்தை ஆகியோருடன் குடும்பம். சம்பளம் மட்டுமே வருமானம். வீட்டுச் சுமையும், நண்பனின் எதிர்பாராத பிரிவும் மகிழ்ச்சி நிரம்பியிருந்த அவனுடைய உள்ளத்தைக் கீறின.

ஒரு நாள் சாந்தா ஐந்து மைல் தொலைவில் ஓர் ஊரில் நடந்த 'கன்வென்ஷன்' முடிந்து வீட்டிற்குத் திரும்பினாள். அப்போது சமையலறையில் லீலாம்மா தன் குழந்தையுடன் உட்கார்ந்திருந்தாள். பக்கத்தில் தீனம்மாவும் இருந்தாள். வந்ததும், இருவர் முகத்தையும் கவனிக்காமல், குழந்தையை வாங்கக் கை நீட்டியவாறே சாந்தா சொன்னாள்:

''லீலாக்காவைப் பார்த்து ரொம்ப நாளாச்சே. பேபி அண்ணன் பென்ஷனுக்கான ஒரு விண்ணப்பத்தை எழுதி வாங்கிக்கிட்டுப் போனவர்தான். ஒரு வாரமாச்சு கண்ணில் படவில்லை.''

''பேபியண்ணனைப் பார்க்காமல் உனக்குத் தூக்கம் வராவிட்டால் இங்கேயே அழைத்துக்கொண்டு வைத்துக் கொள்ளேன்.''

தீனம்மா உரத்த குரலில் சொன்னாள்:

''லீலா, முறையில்லாமல் பேசாதே. புறம் கூறுபவர்கள் கதை கட்டியிருப்பார்கள் என்று நான் சொல்லவில்லையா?''

''ஹூம், செய்வது முறை. அதைச் சொல்வது முறைகேடா?''

சாந்தா கேட்டாள் :

''அப்படி நான் என்ன தவறு செய்தேன்?''

''சொல்லணுமா?''

''சொல்லாமல் எப்படித் தெரியும்?''

தீனம்மா அவசர அவசரமாகக் குறுக்கிட்டாள் :

"அவள் சொன்னுள். நீ கேட்டாய். லீலாம்மா, நீ பேசாமல் இருக்க மாட்டாயா? தாத்தா அந்தப் பக்கம் உடம்பு சரியில்லாமல் படுத்திருக்கிறதை நினைத்துப் பார், மனத்துயரம் சுமையாக அழுத்த, இங்கு அவள் எப்படி வாழ்கிருள் என்பதையும் எண்ணிப் பார்."

"அதையெல்லாம் நான் மட்டும் எண்ணிஞல் போதுமா?"

"போதாது. எல்லாரும் எண்ணணும். என்னவாஞலும் நீ இப்போ போய் வா, லீலா. நான் உனக்குத் தாயைப் போன்ற வள்: என் பேச்சைக் கேளு."

தெளிவாக இல்லாவிட்டாலும். விஷயத்தை ஒருவாறு புரிந்து கொண்டாள் சாந்தா. தீஞம்மாவைப் பார்த்துச் சொன்ஞள்:

"மாமி, பதற்றமடையாதீர்கள். அக்கா சொல்ல வந்ததை நானும் தெரிஞ்சுக்கிறேன்."

லீலாம்மா வெற்றிச் செருக்குடன் சொன்ஞள்:

"பார்த்தீங்களா; அவளுக்கு என்ன அழுத்தமுன்னு, சித்தி! இது என்னிடம் யாரும் சொன்னதல்ல. நான் கண்கூடாகப் பார்த்தது."

"என்ன பார்த்தீங்க?"

"கொஞ்ச நாளாக அவர் சரியாச் சாப்பிடறதில்லே. தூங்கற தில்லே."

"அதுக்கு, பாவம் இந்தப் பெண் என்ன தப்புச் செய்தாள்?"

"அப்படித் தேவையாயிருந்தால் மறுபடியும் கல்யாணம் கட்டிக்கச் சொல்லுங்க. வேத புத்தகத்தை எடுத்துக்கிட்டு ஊர் ஊராகச் சுற்றுகிறது போதாதா! மற்றவங்களே ஏன் வதைக் கணும்?"

தீஞம்மா பொறுமை இழந்தாள்:

"ச்சீ போடி. ஆணவக்காரி. அஞவசியமாப் பேசாதே!"

"நீங்க சொல்லிக் கொடுத்த பாடம்தானே?"

தீஞம்மா சீறிட்டு எழுந்தாள்:

"எங்கே? துடைப்பம் இவளே நான் .. நீ வெளியே போறியா, இல்லே .. ..."

சாந்தா, தீனும்மாவின் கையைப் பிடித்துக்கொண்டு சொன்னாள் :

''வேண்டாம் மாமி ! எதுவும் சொல்லாதீர்கள் !

''அதெப்படி. எந்த அம்மாவுக்கு மகளென்று தெரிய வேண்டாமா?''

குஞ்சுனைநா கூப்பிட்டுக் கேட்டார் :

''என்ன பொண்ணு? என்ன ?''

''ஒன்றுமில்லே மாமா, ஒன்றுமில்லே.''

''என்னன்னு சொல்லு.''

''ஒன்றுமில்லேன்னு சொல்லலேயா?''

இவ்வளவுக்குப் பிறகும் தீனும்மா ஏதேதோ முணுமுணுத்த வண்ணம் வெளியே சென்றாள். வேலிக்கு அப்பால் அண்டை வீட்டுப் பெண்கள் சிலர் நின்று வேடிக்கை பார்ப்பதை அவர்கள் கண்டார்கள். சாந்தா குஞ்சுனைநாவின் கட்டிலருகே சென்று வேத புத்தகத்தை நெஞ்சோடு அணைத்து, அவர் காலடியில் கும்பிட்டவாறு வெகுநேரம் உட்கார்ந்திருந்தாள். பிறகு முகத்தைத் தூக்கிச் சேலைத் தலைப்பால் துடைத்துக்கொண்டு மனத்துள் முறுவலித்தாள். குஞ்சுனைநா 'யாரடி வந்தா? விஷயம் என்ன?' என்று இடைவிடாமல் கேட்டுக்கொண்டே இருந்தார்.

சாந்தா சொன்னாள் :

''தாத்தா, நான் வேத புத்தகத்தைப் படிக்கட்டுமா? பதினேழாவது சங்கீதம்--''

கர்த்தாவே, நியாயத்தைக் கேட்டருளும்; என் கூப்பிடுதலைக் கவனியும். கபடமில்லாத உதடுகளினின்று பிறக்கும் என் விண்ணப்பத்திற்குச் செவிகொடும்—என்று சாந்தா படிப்பதைக் கேட்ட குஞ்சுனைநா வானவெளியில் அடைக்கலம் தேடும் விழிகளுடன் படுத்துக்கொண்டிருந்தார்.

மறுநாள் பேபி வந்தான். இரண்டு மைல் தொலைவில் ராஜனின் பட்டாளக் கம்பனியிலிருந்து விடுமுறையில் வந்திருந்த ஒருவனைப் பார்த்துப் பென்ஷனுக்கு என்ன என்ன செய்ய வேண்டுமென்று கேட்டுத் தெரிந்துகொண்டு வந்திருந்தான். விவரங்களை எல்லாம் விளக்கிக் கூறிய பிறகு அவன் சொன்னான் :

''கொல்லத்தில் 'டிஸ்ட்ரிக்ட் ஸோல்ஜர்ஸ் போர்'டிலிருந்து ஒரு அத்தாட்சிப் பத்திரம் வாங்கணும்; அதற்கு நாளை மதியம் போய் வரலாம்.''

''வேண்டாம், பேபியண்ணு.''

''ஏன்...?''

''பென்ஷன் கிடைக்காவிட்டால் போகட்டும். நண்பனின் மனைவி நிம்மதியாக இருப்பதைப் பார்க்கணுமுன்னு இனிமேல் .........''

''இனிமேல்......?''

''பேபியண்ணன் என் காரியங்களை விசாரிக்க இங்கே வரலாகாது.''

அதற்குப் பின்னரும் அங்கே நின்றுகொண் டிருக்கவோ பேபியைப் பார்க்கவோ சாந்தாவிற்கு மனஉறுதி இல்லை. அவள் கட்டிலில் குப்புற விழுந்து தேம்பி அழுதாள்.

## பன்னிரண்டு

பனைச்சமேட்டில் ராமகிருஷ்ணனின் கடைக்கு எதிரிலேயே மாத்யு தன் மளிகைக் கடையைத் தொடங்கினான். லாபத்தில் பாதி என்ற ஒப்பந்தத்தில் சிவராம குறுப்பு இரண்டாயிரம் ரூபாய் முதலீடு செய்தான். ராஜனுடைய சம்பளத் தொகையும் காப்பு நிதியும் சேர்ந்து கிடைத்த தொகை ஆயிரம் ரூபாய் மாத்யுவிடம் இருந்தது. சரியான நேரத்தில் பிலிப்பு ஆயிரம் ரூபாய் கடனாகக் கொடுத்து உதவினான். மொத்த முதலீடு நாலாயிரம் ரூபாய். காயங்குளத்து உண்ணூரண்ணி அச்சனது மொத்த விற்பனைக் கடையிலிருந்து மளிகைகள் கடனாக வேறு கிடைத்தன. மொத்தத்தில் ஒரு நல்ல மளிகைக் கடை. ராமகிருஷ்ணன் கடையில் வேலை செய்துகொண் டிருந்த ஒருவன் வேலைக்குக் கிடைத்தான். பனைச்ச மேட்டில் வேறு கடைகள் இல்லை. ஆகையால் வியாபாரம் நன்றாக நடந்தது.

துணி விரித்த மேஜைக்குப் பின்னால் பில்லைச் சரி பார்த்துக் காசு வாங்கியவாறு, முதலாளியாக மாத்யு உட்கார்ந்திருந்தான். கணக்கு எழுதுதல், சாமான் வாங்குதல் போன்ற வேலைகளைச்

சிவராம குறுப்பு கவனித்து வந்தான். ஆக, பனைச்சமேட்டில் மேலைத்தொழுத்து வீட்டாரின் கடையைப் பற்றியே பேச்சாக இருந்தது.

வியாபாரம் ஆரம்பித்ததிலிருந்து மாத்யுவின் செல்வாக்குக் கூடியது. ஊரிலுள்ள பெரிய மனிதர்கள் அவனுடைய ஆலோசனை யைக் கேட்க அவன் கடைக்கு வந்தார்கள். முக்கியமான விஷய மாயிருந்தால் காருடன் வந்து அழைத்துப் போனார்கள்.

மகனுடைய மீளாப் பிரிவினால் மாத்யு இனி தலைதூக்க மாட் டான் என்றுதான் அவனுடைய விரோதிகள் எண்ணியிருந்தார்கள். ஊரில் நல்ல செல்வாக்கு இருந்ததனால் அவனுக்கு நிறைய விரோதி களும் இருந்தார்கள். ஆனால் 'சங்கீதக்காரர்' கூறியது போலப் பகைவர்களதும், துன்மார்க்கிகளதும் விருப்பத்திற்கு மாறாகக் கர்த்தரின் கருணை மாத்யுவுக்குக் கோட்டையாக எழும்பியது. கர்த்தரின் மகிமை வியக்கும்படியான விதத்தில் அவனை ஆட் கொண்டது. சிறு தொகையானாலும் மகனுக்கென்று வந்த பென் ஷனும் வியாபாரத்தில் கிடைத்த லாபமும் கவலையைப் போக்கின. அடுத்த ஆண்டாவது வீட்டை மாற்றியமைக்க வேண்டும் என்று திட்டமிட்டான். தீனம்மாவும் முன்னெப்போதையும்விட மகிழ்ச்சி யாகவும் உற்சாகமாகவும் காணப்பட்டாள். சுறுசுறுப்போடு வீட்டைக் கட்டியாண்டாள். உலக விஷயங்களிலிருந்து விடுபட்டு எப்போதும் வேத புத்தகத்தைக் கையில் ஏந்தி நடந்த சாந்தாவை எதற்கும் தொந்தரவு செய்வதில்லை.

ஒருநாள் மாலை. பிலிப்பு கடைக்கு வந்தான். அப்போது கடையில் நல்ல கூட்டமாயிருந்தது. எப்போதும் போலக் குஞ்சுச் செறுக்கனும் கடையில் இருந்தான். அவன் மாலை நேரத்தில் வருவது வழக்கம். வியாபாரம் ஆரம்பித்ததிலிருந்து அவனுக்குச் சிவராம குறுப்புடன் பழைய பகைமை போய் நேய பாவம் நிலவியது. அரிசி மூட்டை மேலோ, பருப்பு மூட்டை மேலோ உட்கார்ந்து கொள்வான். அந்த நேரங்களில் அவன் அதிகாரம் தான் தூள் பறக்கும். குஞ்சுக்கண்டத்து வீட்டு லட்சுமி சாமான் வாங்க வந்தாள். அவளிடம் நாலணா குறைவாக இருந்தது. நாலணா

நானே தருகிறேன்' என்ருள். சாமான் எடுத்துக் கொடுக்கும் பையன் 'காசு குறைவாக இருந்தால் அதுக்குக் கிடைக்கிற சாமான் வாங்கினுப் போதும்' என்ருன். அப்போது குஞ்சுச் செறுக்கன் சொன்னுன் : "லட்சுமி, அவன் அப்பா அப்படி ஒன்றும் அவனுக்கு லட்சக்கணக்காச் சம்பாதிச்சு வைக்கலே. ஏதோ கடன் வாங்கி இந்தக் கடையைப் போட்டான். கடன் கொடுத்தால் உருப்பட்டாப் போலத்தான்."

இப்படி எல்லா விஷயங்களிலும் தனது அபிப்பிராயத்தை வெளியிடுவான். இல்லாவிடில் குடும்பப் பெருமை இருக்கவே இருக்கிறது !

"மேச்சேரி வயலில் அப்பா விவசாயம் பண்ணிக்கொண் டிருந்த காலம். கோசியண்ணனுடைய வீட்டிலிருந்து பெரிய ஏரி வரை ஒரே வயல்தானே...பயிர் விளை முற்றி நிற்கிறது. யானை வயலில் இறங்கி நின்ருல்கூடத் தெரியாது! அப்படி அமோக விளைச்சல். ஒருநாள் ராத்திரி மடை உடைந்தது. என்ன செய்ய ?"

என்ன செய்தால் யாருக்கென்ன? கேட்பவர்களுக்கு அதனுல் என்ன பயன்? இதையெல்லாம் அவன் யோசிப்பதில்லை. இப்படியாகத் தோன்றியபடியெல்லாம் பேசியும், அதிகாரம் செலுத்தியும் இரவு எட்டு மணி வரை அங்கே உட்கார்ந்திருப்பான் அவன். வீட்டுக்குப் புறப்படும் பொழுது, "டேய் பையா, ஒரு வீசை வெல்லம் எடு" என்று கட்டளையிடுவான்.

பையன் வெல்லம் பொட்டலம் கட்டிக் கொடுக்க அதை வாங்கிக்கொண்டு பேசாமல் கிளம்புவான். காசு கேட்கக் கூடாது; கேட்டால் குணம் மாறிவிடும். கொடுக்கும்போது வாங்கிக் கொள்ளலாம் அல்லது அவர் பிள்ளைகளிடமிருந்து வாங்கிக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் மாத்யு பேசாமல் இருந்து விடுவான்......

குஞ்சுச்செறுக்கன் தன் சொற்பொழிவைத் தானே ரசித்துக் கொண்டிருக்கும்போதுதான் பிலிப்பு அங்கே வந்தான். சிவராம குறுப்பு அப்போது கடையிலே இல்லை. குஞ்சுச்செறுக்கன் கேட்டான் :

"என்னடா சமாசாரம் ?"

பிலிப்பு அதை அவ்வளவாகப் பொருட்படுத்தாமல் மெல்லக் கூறினான் :

''ஒண்ணுமில்லே.''

''அப்பாவுக்கு ரொம்பக் களைப்பு. நான் காலையில் போய்ப் பார்த்துவிட்டு வந்தேன்.''

''உம்... மாத்யு, இப்படிக் கொஞ்சம் வா.''

பிலிப்பு நெடுஞ்சாலையில் இறங்கி நடந்தான். மாத்யு அவன் பின்னே சென்றான். சாலையோரத்தில் இருந்த ஆலமரத்தடியில் நின்று பேசலாம் என்றுதான் பிலிப்பு எண்ணினான். ஆனால் அங்கே வேறு இருவர் ஏதோ ரகசியமாகப் பேசிக்கொண்டிருந் தார்கள். எனவே சாலையில் நேராகக் கிழக்கே நடந்தான். சிறிது தூரம் போன பிறகு ஒரு சந்தில் நுழைந்தான்.

மாத்யு கேட்டான் :

''என்ன அண்ணா, சங்கதி ?''

பிலிப்பு உடனே பதில் அளிக்கவில்லை. சிறிது நேர மௌனத் திற்குப்பின், ''உன்னால் இரண்டு நாள் கடையை விட்டு வெளியே போய்வர முடியுமா?'' என்று கேட்டான்.

''எதற்கு?''

''வயநாடு வரை போய் வரவேணும்.''

''உம்.''

மீண்டும் பிலிப்பு மௌனியானான். சற்று நேரம் கழித்துச் சொன்னான் :

''பையனை எப்படியாவது அங்கிருந்து கொண்டு வரணும். அவன் மோசமான விதத்தில் வாழுறான். எங்கள் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்த பெண் அவனுடன் இருக்கிறாள். நீ கேள்விப் படவில்லையா ?''

''பையனுங்க யாரோ சொன்னானுங்க.''

''அவன் அம்மா இந்தக் கவலையினாலே நாலஞ்சு நாளாக ஒரு மாதிரியாக இருக்கிறாள். சித்தப் பிரமை பிடித்தவளைப்போல் பேசு கிறாள். அறைக்குள்ளே போட்டுப் பூட்டியிருக்கேன்.''

''......''

''இன்னைக்கு என்னடாவென்றல், நான் அவளுடைய பையனை எங்கோ கொண்டுபோய்க் கொலை செய்துவிட்டதாகச் சொல்ல ஆரம்பிச்சிருக்கா. என்ன செய்ய? நான் பாடுபட்டுச் சம்பாதிச்சு ஒரு வேளைச் சாப்பாட்டுக்கு வழிசெய்து வைச்சாலும் நிம்மதியாக ஒரு நாள் என்றல் ஒருநாள் தூங்கக் கொடுத்து வைக்கலே.''

''வர்கீஸ் அண்ணனிடம் சொன்னீங்களா?''

''சொல்லி என்ன ஆகப் போகிறது? அவரால் என்ன செய்ய முடியும்? இன்னும் பத்துப் பேருக்குத் தெரிஞ்சுவிடும். மானம் பறி போகும். வேறு என்ன பயன்?''

''நான் சொன்னல் அவன் கேட்பான?''

''நீ சொன்னல்தான் கேட்பான். எப்படியாவது கையோடு அழைச்சுக்கிட்டு வா. மானம் போனபின் சொல்லி என்ன லாபம்?''

மாத்யு எண்ணினன் - மானம்தான் போயாச்சே! இனி என்ன பாக்கி இருக்கு, போகிறதுக்கு? எனினும், ''நாளைக் காலை யாகட்டும்'' என்று சொல்லிவைத்தான்.

''கார் கொண்டுபோ.''

''உம்.''

சந்து வழியே பிலிப்பு நடந்தான். மாத்யு அவன் செல்வதையே பார்த்துக் கொண்டு நின்றன். வர்கீஸண்ணன் பிலிப்பண்ணனைப் பற்றிச் சகோதர பாசமில்லாதவன் என்று சொன்னது உண்மை யல்ல. தேவைப்பட்ட போதெல்லாம் பாசத்தை வெளியிட்டிருக் கிறன். மற்ற நேரங்களில் சல்லிக்காசுக்குக்கூடக் கணக்குப் பேசு வான். முன்பின் பழக்கமில்லாதவனைப்போல் நடப்பான். ஆனல் உள்ளம் அப்படியல்ல. செல்வந்தன், சீரும் சிறப்புமாக வாழ் கிறவன் என்றெல்லாம் அவனைப்பற்றிச் சொன்னர்கள். ஆனல் மற்ற இருவரைக் காட்டிலும் மனத்துயரம் அனுபவிப்பவன் - பிலிப் பண்ணன்தான், பாவம்.

மாத்யு கடைக்குத் திரும்பியபோது சிவராம குறுப்பு முதலாளி யின் ஆசனத்தில் உட்கார்ந்துகொண் டிருந்தான். காயங்குளத்திலி ருந்து வந்த இரண்டு மாட்டு வண்டிகளிலிருந்து சாமான்களை இறக்கிக்கொண் டிருந்தார்கள்.

மாத்யு கேட்டான் :

"ஏன் இவ்வளவு நேரமாச்சு ?

"உண்ணூரண்ணியச்சன் கொச்சிக்குப் போயிருந்தார். அவர் வந்து சாமான் வாங்கி வருவதற்கு நேரமாச்சு."

"உம், நான் இரண்டு நாள் ஊரில் இருக்கமாட்டேன். நாளை ஞாயிற்றுக்கிழமை. கடை திறக்கவேண்டாமே. அநேகமாக நாளை மறுநாள் மாலைக்குள் வந்துவிடுவேன்."

"அதுக்கென்ன ! போய் வாங்க."

குஞ்சுச்செறுக்கன் கேட்டான் :

"எங்கே போகிறே?"

"மலபார் வரைக்கும்."

"பிலிப்புத் தோட்டத்திற்கா?"

"ஆமாம்."

"பையனை அழைச்சுக்கிட்டு வரப் போறே! சரிதானே? அதைச் சொல்கிறதுக்கா இவ்வளவு ரகசியமா அழைச்சுப் போனுன்? நான் கேட்கலாகாது-அப்படித்தானே? சும்மா அல்ல......ஒரு விஷயம்... பையன்களை வளர்க்கிறபடி வளர்க்கணும்."

"போதும், கண்ட கண்ட இடங்களிலெல்லாம் உட்கார்ந்து அதைப்பற்றிப் பேச வேண்டாம்."

"இல்லை நான் எதுவும் பேசவில்லை. அதுக்காக யாருக்கும் தெரியாதுன்னு நினைக்க வேண்டாம்!"

சிவராம குறுப்பு கணக்கைச் சரிபார்த்துக்கொண் டிருந்தான்.

மாத்யு வேறு வேலையில் மூழ்கியிருந்தான். இனி உட்கார்ந் திருப்பது சரியல்ல என்பதைப் புரிந்துகொண்டு குஞ்சுச்செறுக்கன் அங்கிருந்து கிளம்பிப் போனுன்.

அதிகாலையிலே எழுந்திருக்க வேண்டுமென்று நினைத்திருந்தா லும் தீனும்மா கூப்பிட்ட பிறகுதான் மாத்யு எழுந்தான்.

"இதென்ன தூக்கம்! அஞ்சு மணிக்கே பிலிப்பு மச்சான் கார் வந்து காத்துக் கிடக்கே."

"மணி என்ன?"

"ஆறு இருக்கும்."

''உம். குளிக்கிறதுக்குத் தண்ணீர் நிரப்பி வை. சீக்கிரம் ஆகட்டும்.''

இரவு தூங்கும்போது இ ர ண் டு மணியாயிற்று. சீக்கிர மாகட்டும், வேலையை முடிக்காமல் திரும்பக் கூடாதே. அதற்கு முன்னெச்சரிக்கையாகச் சில காரியங்கள் செய்ய வேண்டியிருந்தன. கூட அழைத்துப் போவதற்கு இருவரை ஏற்பாடு செய்தான். அவர்கள் எதையும் செய்ய வல்லவர்கள். கொல்லத்திற்குப் போய் ஒரு ஆள் பிடித்து அவர் மூலமாக ஏ.எஸ்.பி. பெயருக்கு ஒரு கடிதம் வாங்கினான். ஜோணி எஸ்.ஐ.யைக்-கைக்குள் போட்டிருப்பதாகக் கேள்வி. அதற்கு மாற்று ஏற்பாடு அது. இதையெல்லாம் செய்து முடித்து வந்தபோது மணி இரண்டாயிற்று. பொழுது விடிந்தது தெரியவில்லை.

பயணத்திற்கு ஆயத்தமான மாத்யு குஞ்சு நைனாவிடம் சென்று சொன்னான்:

''அப்பா! நான் மலபார் வரையிலும் போகிறேன்.''

''......''

குஞ்சுநைனாவின் காதில் எதுவும் விழவில்லை. சட்டியில் நெருப்பை மூட்டியவாறு அங்கே நின்றுகொண் டிருந்த சாந்தா அவர் காதருகில் சொன்னபோதுதான் அவருக்கு விஷயம் தெரிந் தது.

''எதுக்குடா போறே?''

''பிலிப்பண்ணன் தோட்ட விஷயமா.''

''அதுக்கு அவன் பிள்ளை அங்கே இருக்கானே.''

ஆபத்து! எல்லாமே சொல்லியாகணும். மீள வழியில்லை.

''அவன் சின்னப் பையன்தானே?''

''ஏ...?''

''அவன் தனியாகத்தானே இருக்கிறான், அப்பா.''

''தனியாக இல்லையடா. அவங்க வீட்டு வேலைக்காரப் பெண்ணையும் அழைச்சுக்கிட்டுப் போயிருக்கிறான்.''

''உங்களிடம் இதை யார் சொன்னது?''

''கடவுள். நீ போய்ப் பார். அப்போ தெரியும்.''

சாந்தா கேட்டாள் :

''தாத்தா, உங்களுக்கு இதெல்லாம் எதற்கு?''

''தேவையில்லேதான், இருந்தும் சும்மா சொல்லிவைச்சேன்.''

மாத்யு புறப்படலானுன். முற்றத்தில் ஒரே ஆரவாரம்–பையன்கள் சத்தமும் சிரிப்பும் அமர்க்களமாக இருந்தது.

பிலிப்பின் மனேவி அன்னம்மா!

சிவப்புப் புள்ளிகள் போட்ட ஒரு சில்க்குச் சேலேயை வாரி உடுத்தியிருந்தாள். கழுத்தில் நான்குவடச் சங்கிலி. காதில் 'ரிங்' வளேயம்.

''இன்னுமா உடுத்தித் தயாராகலே: எவ்வளவு நேரமா நான் மணவறையில் காத்திருக்கேன். வா!''

''அண்ணி!''

''அண்ணியா? நல்ல வேடிக்கை போ. எனக்கு என்ன வயசு தெரியுமா? பத்தொன்பது. ஏய், என்னேப் பாரு...உம்!''

முகம் பலவாறு கோணியது. அங்கங்கள் அசைந்தன; கடகட வெனச் சிரிப்பு!

தீனும்மா வெளியே வந்தாள்.

அன்னம்மா, அக்கா!

''ஏய்...வாடி. நீதான் பிடிச்சு வைச்சிருந்தியா? நீ என்ன சாதாரணக்காரியா...குத்திக் கொலே பண்ணுவேன். நாங்க போய் வர்றோம். எனது பள்ளி உற்சவத்துக்கு. ஏய், சீக்கிரம் வாடா!''

முற்றத்தில் நின்றுகொண்டிருந்த பையன்கள் ஆரவாரித்தார்கள்.

அன்னம்மாவின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு சாந்தா சொன்னுள் :

''மாமி, உள்ளே வாங்க.''

''ச்சீ, கையை விடடி......''

அதைத் தொடர்ந்து வந்தன, வெளியே சொல்லத்தகாத வசவுச் சொற்கள்.

மூச்சு அடைத்ததுபோல் சாந்தா வாய் பொத்திக்கொண்டு சொன்னுள்:

''ஹம்மா!''

"யோவ் கிழவா! பையன்களைச் சரியா வளர்க்கணும். அதெப்படி உன்னால் முடியும்? நீ சரியா இருந்திருந்தால்தானே? உனக்குத் தான் ஒரு வைப்பாட்டி இருந்தாளே - ஒரு சிங்காரி..."

அப்புறம் தயங்கவில்லை. தீனம்மாவும் மாத்யுவும் சேர்ந்து அன்னம்மாவைப் பலவந்தமாக வீட்டுக்குள் கொண்டு செல்ல முயன்றார்கள். அன்னம்மா மாத்யுவின் கையைக் கடித்தாள். இந்த ஆர்ப்பாட்டத்திற்கிடையில் பிலிப்பும் வேறு ஏழெட்டுப் பேர்களுடன் ஓடிவந்தான்.

பிலிப்பு உரக்கக் கேட்டான்:

"எங்கேடா அந்த — வன் மகள்? கொல்லுடா அவளை!"

கூடவந்தவர்களில் ஒருவன் சொன்னான்:

"ஒன்றும் செய்யாதீர்கள், அவளுக்கு மூளை சரியில்லை. பாவம் . "

அன்னம்மாவை வெளியே கடத்திவருவது கடினமாக இருந்தது.

"காரில் போட்டுக் கொண்டு போகலாம்."

"மாத்யு, நீயும் ஏறி உட்காரு."

கார் கிளம்பியபோது பையன்கள் கூச்சலிட்டுக்கொண்டு பின்னால் ஓடினார்கள்.

எல்லாமே குஞ்சுநைனாவிற்கு ஒரு கனவுபோல் இருந்தது.

"இதென்னடி, பொண்ணு. எல்லாம் தலை கீழா இருக்கே எனக்கு ஒண்ணும் புரியவில்லையே?..."

"ஒண்ணுமில்லை, மாமா."

"ஒண்ணுமில்லாமலா அன்னம்மாப் பொண்ணு தலையை விரிச்சுப் போட்டுக்கொண்டு வந்தாள்?"

"மாமிக்கு உடம்பு சரியில்லை, தாத்தா."

"பைத்தியமா?"

தீனம்மா சொன்னாள் :

"மனசு சரியில்லை. அதனால்தான்."

"என்ன மனசு சரியில்லை? அவளை அழைச்சிட்டுவா!"

"காரில் கொண்டு போறுங்க. பிள்ளையைப் பற்றிய கவலே. ஜோணியை அழைச்சுக்கிட்டு வர்றதுக்குத்தான் ஸிஸிலி அப்பா இன்னேக்குப் போகிருர். அவனேப் பார்த்தால் எல்லாம் சரியாப் போய்விடும்."

"அடி, அவன் வரமாட்டான்."

"ஸிஸிலி அப்பாவை அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். அதனுல் அவர் கூப்பிட்டால் கட்டாயம் வருவான்."

"என்ன பிடிக்கும்?"

"............"

"அந்தப் பெண்ணேவிடவா இவனேப் பிடிக்கும்? அவ்ன் ஏன் மானக்கேட்டுக்குப் போகணும்?"

"இந்த மாமாவிடம் எதையும் சொல்லக்கூடாது. நாம் பார்க்கலே, கேட்கலேனு நினேச்சுச் சும்மா இருக்கணும்."

"பார்க்கலே...கேட்கலே. கண்ணும் காதும் இருக்கிற நாள் வரைக்கும் அது நடக்குமா?"

தீனம்மா எதுவும் பேசாமல் சமையலறைக்குள் சென்ருள். சாந்தா சொன்னுள்:

"நானும் ஸிஸிலியும் கோவிலுக்குப் போய் வரட்டுமா, தாத்தா?"

"இன்னேக்கு ஞாயிற்றுக்கிழமையா?"

"ஆமாம்."

"வாழைப்பள்ளிச் சாமியாரானுல் சீக்கிரமாகவே *'கொர்பானே' ஆரம்பிப்பார்.

பரிசுத்த ஸ்தலத்தில்
கடவுளேத் துதியுங்கள்.
அவர் வல்லமை விளங்கும்.
ஆகாய விரிவில் அவரைதுதியுங்கள்..."

பாட்டைக் கேட்டுத் தீனம்மா வெளியே வந்தாள். அவள் மூக்கின் மீது விரலே வைத்துக் கேட்டாள்:

---

* கொர்பானே—காணிக்கையுடன் செலுத்தும் பிரார்த்தனே

''ஆண்டவரே! இந்த மாமாவும் புத்தி சரியில்லாதவர் ஆகி வருகிறாரே! இல்லாவிட்டால் இதையெல்லாம் பார்த்தும் இப்படிப் படுத்துக்கொண்டு பாட்டுப் பாடுவாரா?''

சாந்தா சொன்னாள்:

"நேற்று இரவு பூராவும் அந்தப் பிரார்த்தனைப் பாடல்களைப் பாடிக்கொண் டிருந்தார். சரியாகப் புரியவும் இல்லை.''

''கஷ்டப்படுத்தாமல் இருந்தால் போதும்.''

"இல்லை மாமி, கடவுள் மாமாவைக் கஷ்டப்படுத்த மாட்டார்.''

ஸிஸிலி குளித்துவிட்டு, சட்டையணிந்து தலையில் கைக்குட்டையைப் போர்த்திக்கொண்டு சின்னஞ்சிறு தேவகன்னிபோல் துள்ளிக் குதித்து வந்தாள்.

"சாந்தக்கா, சீக்கிரம் புறப்படுங்க. நேரமாச்சு.''

குஞ்சுநைனா கேட்டார்:

"யாரு? சின்னக்குட்டியா?''

"ஆமாம், மாமா.''

"அவள் இப்போதெல்லாம் என் பக்கத்தில் வர்றதில்லை. என்னிடம் பேசறதும் இல்லை.''

''அப்படியா, கண்ணா!''

"அம்மா, எனக்குப் பயமா இருக்கு. கொஞ்ச நாள் முன்னால், கச்சைமுண்டு உடுத்தி வா; பார்க்கட்டுமுன்னு சொன்னார்.''

''சும்மாவா குழந்தை பக்கத்தில் வர்றதில்லை?''

''கோவிலுக்குப் போனால் குழந்தைகளுடன் சண்டை போடக் கூடாது. அம்மா அல்லது அக்கா சேலைத் தலைப்பைப் பிடிச்சிட்டு நிற்கக் கூடாது. வலது பக்கத்தில் பெண்களுக்கு முன்னால் பயபக்தியுடன் கைகூப்பி நிற்கணும்.

கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிட்டிருக்கிறேன்;
என்னிடம் விரைந்து வாரும்.
நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகையில்
என் சத்தத்திற்குச் செவி சாய்த்தருளும்.''

மீண்டும் கொர்பானைப் பாடல்களைப் பாடிப் பிரார்த்தித்தார்,

......சகோதரர்களே! நாம் எல்லோரும் அழகாகவும், பயத்துடனும், பணிவுடனும், சுத்தமாகவும், பரிசுத்தமாகவும், அன்புடனும், உண்மையான நம்பிக்கையுடனும், கடவுள் பக்தியுடனும் இந்தப் பட்டக்காரருடைய கைகளால்....

அட! கோவிலில்தான் இருக்கிறார்! 'மாமோதீஸா' கல்லுக்கு கீழே, கால் ஊன்றி நிற்க முடியவில்லையே. இன்று கொர்பானையில் பங்கு கொள்ள வேண்டும். 'மதுபஹா'விற்கு ஏறுகின்ற படிகளில் சாமியார் 'பீலாஸிடன்' நின்றுகொண்டிருந்தார். யாரோ கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போனான். கொர்பானை முடிந்த பிறகு கையைப் பிடித்து அழைத்துச் சென்றவன் சொன்னான்.

"வாங்க. அப்பா போகலாம்."

அப்போதுதான் கையைப் பிடித்துக்கொண்டிருந்தவனின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்; தாமஸ்-தலைமகன் !

"நீ கோவிலில்தான் இருந்தாயா?"

"இருந்தேனே — ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் நான் வருவதுண்டு."

"அ...ஹா?"

"என்னைப் பார்க்கமுடியாது. இறந்தபின் பூதஉடல் இல்லாததனால் உருவமற்றவன். ஆனால் ஆவியால் எல்லா இடந்திற்கும் போக முடியும். ஒரு நாள் ஒரு தடவையாவது நான் உங்கள் கட்டிலுக்கருகில் வருவேன்."

"நான் உன்னைக் காண்கிறேனே . ?"

"அதற்குக் காரணமிருக்கு. நீங்கள் என்னுடன் வருவதற்கான நேரமாகிவிட்டது."

"உன் வீட்டுக்காரியும் பையனும் நேற்று என்னைப் பார்க்க வந்திருந்தார்கள். கோழிக்கறி துண்டு துண்டா அரிஞ்சு வறுத்துக் கொண்டு வந்திருந்தாங்க. கடைவாயில் பல்லில்லையே. என்னால் தின்ன முடியுமா?"

"அவர்களுடன் நானும் வந்திருந்தேன். அப்போது மாத்யுவின் மருமகள்தானே பிரார்த்தனை செய்தாள்?"

"வர்கீஸுக்கு இப்போ கஷ்டமொன்றுமில்லை."

''உம்.''

''மாத்யு ஒரு மளிகைக்கடை வச்சிருக்கான், பார்த்தாயா?''

''உம், பார்த்தேன்.''

''பங்கு வியாபாரம்.''

''அதுவும் தெரியும்.''

''பங்காளியைத் தெரியுமா?''

''பேஷாகத் தெரியும்.''

''ஆனல் எல்லாமே மாத்யுவின் பிடியில்தான்.''

''அப்படின்னு யார் சொன்னர் உங்களிடம்? அவன் கையில் ஆயுதம் இருக்கு! அயோக்கியன். மோசக்காரன்.''

''அதென்னடா நீ, அப்படிச் சொல்கிறே?''

''நீங்கள் என்னத்தைக் கண்டீங்க? ஒரே கும்மிருட்டு. ஒரு மெழுகுவத்தியை ஏற்றி வைச்சுக்கிட்டு எல்லாவற்றையும் பார்த்த தாகச் சொல்கிறீங்க. நீங்கள் எதுவும் காணவில்லே. உங்களுக்கு ஒன்றும் தெரியாது.........''

''மாமா!''

''ஏ...?''

''உங்களேப் பார்க்க யார் வந்திருக்கான்னு பாருங்க. எவ்வளவு நேரமாக நின்னுகிட்டிருக்கான்!''

''யாரு?''

''குஞ்சுச்செறுக்க மச்சானுடைய பிள்ளே. குஞ்சச்சன்.''

''பெரியவனு?''

''இல்லே. இரண்டாவது பிள்ளே. அவன் பம்பாயிலிருந்து நேற்றுதான் வந்தானும்.''

குஞ்சச்சன் குஞ்சுநைனுவின் கட்டிலில் உட்கார்ந்தான். சுருக்கங்கள் விழுந்திருந்த அவரது வறண்டு போன உள்ளங்கையை அவன் மெல்லத் தடவினன்.

''உன் அண்ணு எங்கேடா?''

குஞ்சச்சன் தீனும்மாவின் முகத்தைப் பார்த்தான். தீனும்மா மெல்லக் கூறினள் :

''தாத்தாவிடம் எதையும் சொல்லாதே.''

பிறகு உரத்த குரலில் சொன்னான்:

''பம்பாயில் இருக்கிறான்.''

''அவனைத் தண்டிச்சாங்களா?''

''ஆ...இல்லை.''

''இனி நீ எப்போ திரும்பிப் போகணும்?''

''இரண்டு மாதம் கழிச்சுப் போனால் போதும்.''

''டேய், உன் அண்ணனிடம் நான் பணமே கேட்கவில்லை நள்ளிரவில் அவன் இங்கே வந்தான்.''

''அந்த விஷயத்தைப்பற்றிக் குஞ்சச்சன் உங்களிடம் ஏதாவது கேட்டானா?''

''அவன் பணம் கொடுத்தபோதும் நான் வாங்கவில்லை! பொண்ணுதான் வாங்கினாள்... ..''

''கொஞ்சம் பேசாமல் இருங்க, மாமா.''

''நான் போய் இன்னொருநாள் வருகிறேன்.''

நீனம்மா குஞ்சச்சனுடன் தோட்டவாயில் வரை போனாள்.

''இங்கேயே ஏதாவது ஒரு வேலைக்கு முயற்சி செய்யக்கூடாதா குழந்தே?''

''இங்கே என்ன வேலை கிடைக்கப் போகிறது, சித்தி? இதுதான் பொசிப்புன்னு நினைச்சுச் சமாதானப்பட வேண்டியதுதான்.''

நான்கு ஐந்து அடிகள் முன் சென்றபின் திரும்பி நின்று சொன்னான்:

''தாத்தாவைக் காண வரும்போது வெறுங்கையுடன் வரும்படியாகிவிட்டது.''

''அவருக்கு எந்தக் குறையும் இல்லை. நீ அதை நினைச்சுக் கவலைப்படாதே.''

குஞ்சச்சன் செல்வதைப் பார்த்தவாறு தீனும்மா வாசலில் நின்றுகொண்டிருந்தாள்.

பாவம்! யார் காலையோ கையையோ பிடித்து அவனுக்குக் கிடைத்த வேலை போயிற்று! பம்பாய் நகரம் முழுவதும் ஒரு வேலைக்காக அலைந்து கடைசியில் சோர்ந்து போய் ஊருக்குத் திரும்பி வந்திருக்கிறான். அவனுடைய அண்ணனால் வந்த வினை! கள்ளக் கடத்தல் சாமான்களைத் தம்பியின் அறையில் மறைத்து வைத்திருந்ததை அதிகாரிகள் கண்டுபிடித்தார்கள். அண்ணனுக்கு மூன்றாண்டுச் சிறை. அது அப்படியொன்றும் புதிய விஷயமல்ல. இதற்கு முன்பும் இரண்டு மூன்று தடவைகள் சிறைக்குப் போயிருக்கிறானும். சுமார் நூறுபேர்களைக் கொண்ட கள்ளக் கடத்தல் கும்பல். யாராவது கைதானால், மற்றவர்கள் அவன் வீட்டிற்கு ரகசியமாக உதவி செய்வார்களாம் மனத்தாலும் நினையாத காரியத்திற்கு அவனுடைய வேலை போயிற்று! கள்ளக்கடத்தல் காரர்களுடைய கூட்டாளி என்ற அவப்பெயர் வேறு...

''பொண்ணு''

''என்ன?''

''பொழுது சாய்ந்துட்டுதா?''

''இல்லை மாமா. காலை நேரம். கோவிலில் கொர்பானை நடக்கிறது.''

''எல்லாம் மங்கலாகத் தெரியுது.''

மயக்கமாகப் படுத்திருந்ததனால்தான் அப்படித் தோணுது பிரார்த்தனை செய்துக்கிட்டே படுத்துக்குங்க. நான் போய் உச்சி வேளைச் சமையலைக் கவனிக்கிறேன்.

தலையை ஏதோ ஒரு சுமை அழுத்தும் பாரம். கை, கால்கள் தளர்ந்திருந்தன. நெஞ்சு எதற்கோ பரபரத்து அலைகிறது. அபின் தின்ன வேண்டிய நேரம் வந்தால் இவ்வகையில் பொருந்தாமை அலைக்கும். குஞ்சுகைநனு தலையணைக்கு அடியிலிருந்து பொட்டலத்தை எடுத்தார். ஒரே ஒரு மாத்திரைதான் இருந்தது. அதை எடுத்து விழுங்கினார்.

பிரார்த்தனை செய்துகொண்டு படுத்திருக்கச் சொல்கிறான். பிரார்த்தனைகளெல்லாம் 'அப்பபன் தாடி' போல் அல்லவா மனத்தினுள் பறந்து திரிகின்றன! எதுவுமே பிடிபடுவதில்லையே, பொண்ணு! என்னை யாரும் கவனிப்பதில்லை; பொருட் படுத்துவதில்லை. என்றால் யாருக்கு என்ன பிரயோஜனம்? அதனால்தான் எல்லோரும் கைவிட்டு விட்டார்கள்.

சின்னக்குட்டிகூடச் சட்டை செய்வதில்லை. சினத்தின் பிரம்படியிலிருந்தும் எதிர்பாராத சாவிலிருந்தும் எங்களைக் காக்க வேண்டும் என்று இறைஞ்சுவதே அந்தி வேளையின் பிரார்த்தனை. ஆயுள் நிறைவேறுமுன்பு எங்களை எடுத்து விடாதேயும் என்று வேறொரு இடத்தில் வேண்டுகோள் விடுத்தல். இவ்வளவெல்லாம் வேண்டுமா? எண்ணெயில்லாமல் இவ்விதம் படர்ந்து எரிவதைவிட எண்ணெய் நிரம்பியிருக்கும் போது அணைந்து போவதே மேல். தலை நரைத்துப் போனவர், வீட்டிற்குப் பெரியவர் என்றெல்லாம் கூறுவார்கள்; இதெல்லாம் வெளிப்பேச்சு! வாழ்க்கையே ஓர் ஓட்டம்! ஓடிஓடிக் களைத்தால் சாலையோரத்தில் நிழலில் உட்கார்ந்து சிறிது ஆசுவாசப் படுத்திக் கொள்கிறான். மயக்கம் போட்டு விழுகிறான். உடல் சில்லிட்டுப் போகிறது. அவனைத் திரும்பிப் பார்க்கவும் பிறருக்குப் பொழுது இருப்பதில்லை! முகத்தில் பட்டை கட்டிய குதிரைகள் போல் இருமருங்கும் பாராமல் ஒரே குறியாக நேராக ஓடுகிறான் மனிதன். இது வரையில் எவரும் கால் வைக்காத செழிப்பான நாட்டில் சென்று கொடியை நாட்ட வேண்டும் என்பது அவனது லட்சியம். இதோ தெரிகிறதே, இவை எல்லாம் என்னுடையவை என்று கூறிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை. பிசாசு கர்த்தரை மலையுச்சிக்கு அழைத்துப் போய்ச் சொன்னாற்போல் — இதோ தெரிகிறதே, இவையெல்லாம் என்னுடையவை. ஆனால் எவ்வளவு நேரத்துக்கு? ஒரு கண நேரத்துக்கு. அதை அப்போது மனிதன் யோசிப்பதில்லை. பின்னால் படுவேகமாக அவனைத் துரத்திக் கொண்டு ஓடிவரும் வல்லவனைப்பற்றி அவனுக்குத் தெரியாது. அவன் உன்னுடையதெல்லாவற்றையும் தன் வசமாக்கிக்கொண்டு

---

* இலவம் பஞ்சை போன்றதொரு காய் வேடிக்கையாகத் தாத்தா தாடி என்னும் பொருள்பட அப்பூப்பன் தாடி என்பார்கள்.

விடுவான். உன் ஆடுமாடுகள், கோதுமை வயல்கள், திராட்சைத் தோட்டம் ……… அந்த முரடன் களைத்துப்போன உன்னிடம் வந்து உன் திராட்சைத் தோட்டத்தை எனக்குக் கீரைத் தோட்டமாக்குவதற்குக் கொடு என்பான்; பழைய ஏற்பாடு காலத்தில் சமாரிய அரசனுன ஆகாப் இஸ்ரவேலனுன நாபோத்திடம் சொன்னதைப் போல். அதற்கு நாபோத், ''என் தந்தையர்களின் உரிமையை உமக்குத் தரமாட்டேன்!'' என்று கூறினுன். அதைக் கேட்ட ஆகாப் சலிப்பு அடைந்து சினத்துடன் வீட்டிற்கு வந்து உணவு அருந்தாமல் கட்டிலில் முகத்தைத் திருப்பிக்கொண்டு படுத்தான். அப்போது ஆகாபின் மனைவி யேசபேல் அங்கே வந்தாள். அவளிடம் அவன் அதைப்பற்றிச் சொன்னுன். அப்போது அவள், ''நீரும் ஓர் அரசரா? எழுந்திருந்து மகிழ்ச்சியாக இரும். நான் அதற்கு ஒரு வழி செய்கிறேன்'' என்ருள். அவள் ஆகாபின் பெயரால் நாபோத் வசிக்கும் பட்டணத்து மூப்பர்களுக்கு ஒரு நிருபம் எழுதினுள். ''தீயவர்களான இருவரை விட்டு நாபோத், தேவனையும் ராஜாவையும் தூஷித்தான் என்று பொய்ச் சாட்சியம் சொல்ல வையுங்கள், பிறகு அவனைப் பட்டணத்திற்கு வெளியே கொண்டுபோய், அவன் சாகும் வரை கல்லெறியுங்கள்'' என்ருள். என்ன கொடுமை! கல்லடிபட்டு மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் ரத்தம் பீரிடும். அணு அணுவாகச் செத்துமடிய வேண்டும்! அது போகட்டும். இரண்டு கால்களை இரண்டு யானைகளின் கால்களில் கட்டியிழுத்துக் கிழித்துப் போடுவதும் உண்டாம். வேலுத்தம்பித் தளவாய் போன்றவர்கள் அப்படிச் செய்திருக்கிருர்களாம். மடத்து வீட்டாரின் நீலகண்டன் என்னும் யானை பாச்சு குறுப்பைக் குத்திக் கொன்றதைப் பார்த்திருக்கிறேன். பாச்சு யானையை நன்கு துன்புறுத்துவான். இன்னெரு பாகன் பாச்சுவின் தம்பி பாஸ்கரன். ஒரு நாள் பாச்சு நீலகண்ட யானைக்குத் தின்னப் பனையோலை வெட்டிப் போட்டுக்கொண்டிருந்தான். பாஸ்கரன் பக்கத்திலேயே இருந்தான். யானை வஞ்சம் தீர்க்கத் தருணம் பார்த்துக்கொண்டே இருந்து. ஓரக்கண்ணுல் பார்த்தது. அவ்வளவு தான், துதிக்கையால் பாச்சுவைத் தூக்கியது. பாச்சுவுக்குத் தெரிந்துவிட்டது, யானை தன்னைத் தீர்த்துக்கட்டிவிடும் என்று! 'பாஸ்கரா' என்று கூப்பிட்டான். பாஸ்கரன் வெட்டுக்கத்தியை

எடுத்துக்கொண்டு தயாராக நின்ருன். நீலகண்டன் பாச்சுவைக் குத்தப் போகும்போது பாஸ்கரன் அதன் வாலே வெட்டினுன். நீல கண்டன் திரும்பிப் பாஸ்கரன் பின்ஞல் ஓடியது. ‘அண்ணு, ஓடித் தப்பிச்சுக்கோ’’ என்று கூவினுன் பாஸ்கரன். யானே அதைப் புரிந்து கொண்டது. திரும்பி ஓடிப் பாச்சுவைப் முடித்தது. பாஸ் கரன் மறுபடியும் நீலகண்டனது வாலே வெட்டினுன். யானே அதைப் பொருட் படுத்தவில்லே தந்தத்தை அவன் நெஞ்சிலே குத்தி இறக் கியது. ஐயோ...அம்மா...தண்ணீ...என்று கதறினுன்...

கொஞ்சம் கஞ்சித் தண்ணீர் கிடைத்தால் தேவலே போல் இருக்கு. நா வறண்டு போகுதே!

‘‘பொண்ணு.’’

காதில் விழவில்லே. பாவம், அவளுக்கு ஓய்ச்சலில்லே! இல்லா விட்டால் அடிக்கொரு தரம் வந்து நின்று ‘கஞ்சி வேணுமா, காபி வேணுமா’ என்று கேட்பாளே? அவளொருத்தியே எல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது! அவன் மூழ்காமல் இருப்பதே இவள் சாமர்த்தியத்திஞல்தான் உதவாக்கரையான சண்டைக்காரியை மனேவியாகக் கொண்டவன் உருப்பட்டதில்லே. பெருமழை பெய்யும் நாட்களில் ஒழுகும் வீடும், சண்டைக்காரிப் பொண்ணும் ஒன்று போல. அவனே ஒதுக்கிவிடப் பார்க்கிறவன் காற்றை ஒதுக்கித் தள்ளப் பார்க்கிருன். அவன் வலது கையால் எண்ணெயைப் பிடிக்க முயல்கிருன். நல்லவள் குடும்பத்திற்கு வரப்பிரசாதம். சிறிது காலத்திற்கு முன் தோனுட்டைச் சேர்ந்த ஓர் ஆசிரியர் ஊர்ப் பள்ளிக்கூடத்தில் பணியாற்றிக்கொண் டிருந்தார். அவருக்கு ஏழு குழந்தைகள். ஏழும் பெண் குழந்தைகள். ஆள் அஷ்ட தரித்திரம். வெற்றிலே போட்ட எச்சில் சதா வாயிலிருந்து ஒழுகும். தாடி வேறு, ஏழு நாள் வீட்டில் அடுப்பு எரியாவிட்டாலும் வெளியே தெரியாது. குணக்குன்று அவர் மனேவி பெண்கள் அனேவரும், ராசாத்திகள்! ..

ஓ...தொண்டை வறண்டு போகிறதே!

‘‘பொண்ணு’’

ஒரே தளர்ச்சி!

நா ஒட்டிக் கொள்கிறதே!

எங்கே போனாள் பொண்ணு? உடம்பு சரியில்லாமல் படுத்திருக்கிறாளா? அவள் பகலில் தூங்குவதில்லையே?...உரக்கக் கூப்பிட்டார்.

''பொண்ணு''

சத்தமே இல்லை! எவ்வளவு முயற்சியெடுத்தாலும் குரல் வெளிவருவதில்லை! தொண்டை வறண்டு காய்ந்துபோய் இருக்கிறது. எழுந்து பார்ப்போம். தலை சுற்றிக் கீழே விழுந்து விடுவேனோ? கைத்தடி எங்கே? நல்ல வேளை! பையன்கள் யாரும் எடுத்துப் போகவில்லை. கட்டிலுக்குப் பக்கத்திலேயே இருக்கு. குஞ்சுநைனு மெல்ல எழுந்தார். கால் ஊன்ற முடியவில்லை. மறுபடியும் உட்கார்ந்தார்... ......

''பொண்ணு.''

மறுபடியும் எழுந்தார். சுவரைப் பிடித்துக்கொண்டு நடந்தார். கதவு சாத்தியிருந்தது. தள்ளித் திறந்தார்.

''பொண்ணு.''

யாரு?......ஏ?...... கட்டிப் பிடித்துக்கொண்டு படுத்திருக்கிறார்கள். கறுத்த காட்டெருமை போன்ற குறுப்பு. நிர்வாணக் கோலம். சிவப்பான கொழுத்த மேனியுடன் தீனும்மாள். விழுந்தடித்துக் கொண்டு எழுந்திருக்கிறார்கள். துணியை வாரிச் சுருட்டிக் கொள்கிறார்கள்.

கடவுளே!.........

தடுக்கி விழுகிறாள். ஓடுகிறார்கள். தடி எங்கே? கையிலேயே இருக்கிறது. புயற்காற்றின் சீறல், பெரும் மக்கள் கூட்டம் ஆர்ப்பரித்து வருவதுபோல், எதையாவது பலமாகப் பிடித்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் இந்தப் புயலில் பறந்து போய் விடுவேன். பிசாசைத் தளையிலிருந்து அவிழ்த்துவிட்டார்களா? அவன் உலகின் நாற்திசைகளிலுமுள்ள ஜாதிகளாகி, எண்ணிக்கையில் கடற்கரை மணல் போன்ற 'கோகு' 'மகோகு' என்பாரைப் போருக்கு அழைத்து வந்திருக்கிறானா? ஆகாயத்திலிருந்து தீமழை ஏன் பொழிவதில்லை?

இந்த ஆரவாரம்தான் என்ன? பிசாசின் வருகையல்ல. பரமண்டலத்தில் கர்த்தருக்கு 'அல்லேலூயா' பாடுகிறார்கள். வேசித் தொழிலால் உலகைப் பாழடித்த பெரும் வேசியிடமிருந்து ரத்தம் பெற்று வஞ்சம் தீர்க்க வந்திருக்கிறார்.

அல்லே லூயா...... கர்த்தரின் நாமம் வாழ்க.

பிரளயத்தின் பேரிரைச்சல் போன்றும் இடி முழக்கம் போன்றும் .........அல்லேலூயா!

கண்விழித்துப் பார்த்தபோது சுற்றிலும் ஆட்கள். பனித்திரையினூடே பார்ப்பதைப்போல் எல்லாம் தெரிந்தது. யாரையும் அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆண்கள், பெண்கள், குழந்தைகள்.. ......

''அப்பா!''

ஒட்டி வெட்டின முடி. 'காதில் நரைத்த மயிர். குஞ்சுநைனு முணுமுணுத்தார்.

''வர்கீஸ்''

''ஆமாம் அப்பா. நான் வர்கீஸ்தான். ஏதாவது குடிக்கிறதுக்குத் தரட்டுமா?''

''மாத்யு எங்கேடா?''

''அவன் மலபாருக்குப் போயிருக்கான் .............தீனும்மா, கொஞ்சம் காபி கொண்டுவா.''

''ஸ்பூனில் ஊற்றிக் கொடுத்தால் போதும்.''

''தூக்கி உட்கார வைக்கணுமா?''

''இப்படிக் கொஞ்சம் தள்ளி நில்லுங்க, நான் பிடிக்கிறேன்.''

''தீனும்மா, அப்பாவுக்குக் காபி ஊற்றிக்கொடு.''

இப்பொழுதுதெளிவாகத் தெரியுது, அடி உன் முகம் ஏன் இவ்வளவு சிவப்பாக இருக்கு? நீ ஆடை உடுத்தியிருக்கிறாயா? நீ தரும் நீரை நான் எப்படி நம்பிக் குடிப்பேன்? கை தூக்க முடியவில்லையே!

பிரயாசையுடன் கையைத் தூக்கினார் ஒரு தட்டுத்தட்டி விட்டார். அவ்வளவுதான்; டம்ளரும் ஸ்பூனும் தெறித்துக் கீழே விழுந்தன. ஒரே மகிழ்ச்சி.........

''ஐயோ, இதென்ன. ?''

''மாமா, இது நான்தான்.''

ஆமாம் நீதான். அதனால்தான் தட்டி விட்டேன். என் கண்ணெதிரிலிருந்து போய் விடு.

''ஆளை அடையாளம் தெரியாததனால்தான்.''

' வர்கீஸ்!''

''என்ன அப்பா?"

"இந்த தொண்ணூறாவது வயசில் நான் கண் தெரியாதவனாகப் போய் விட்டேனே!''

''உங்களுக்குக் கண் தெரியுமே, அப்பா.''

''இல்லையேடா.''

அவர் வேறு ஏதோ கூற முயன்றபோது, அதை யாரும் கேட்டு விடக் கூடாதே என்பதற்காகத் தீனம்மா உரத்த குரலில் சொன்னாள்:

''என்ன சொல்கிறோமுன்னு தெரியாமல் பிதற்றுகிறார்.''

''உண்மைதான், இல்லாவிட்டால் சித்தி கொடுத்த காபியைத் தட்டி விடுவாரா?''

''எங்கே அந்த அயோக்கியன்?''

"யாரு அப்பா?''

தீனம்மா மறுபடியும் குறுக்கிட்டுச் சொன்னாள்:

''இப்படி ஏதேதோ கேட்டு, மாமா தத்துப்பித்துன்னு உளறிக் கொண்டே இருக்கார். ஒண்ணும் கேட்காதீங்க, அவர் சும்மாப் படுத்திருக்கட்டும்.''

''எனக்கு என் பையன் மாத்யுவைப் பார்க்கணும். எங்கே அவன்? என் மடக்குக் கத்தி அவனிடம் இருக்கு.''

சாந்தா அருகில் வந்து கூறினாள்:

''இன்னைக்கோ நாளைக்கோ வருவார், தாத்தா.''

''யாரு ? சின்னப் பொண்ணா ?''

''ஆமாம்''

''பக்கத்தில் வா!''

அவளது கையைப் பிடித்தார்.

"நீ எங்கே போயிருந்தே ?"

"மாதா கோவிலுக்கு. உங்களிடம் சொல்லிவிட்டுத்தானே போனேன்."

"இனிமேல் எங்கும் போகாதே."

"ஏன் தாத்தா ?"

"திருட்டுப் பயல்."

சாந்தா எதுவும் புரியாமல் சுற்று முற்றும் பார்த்தாள்.

"செல்லாத ரூபாயைச் சுண்டிப் பார்த்தால் தெரியும், பலாப் பழத்தைத் துளைபோட்டுப் பார்த்தால் தெரியும். பெண் மனத்தை எப்படியடி தெரிஞ்சுக்க முடியம் ?"

குஞ்சுநைநுவின் விழிகளில் நீர் ததும்பியது.

"கொஞ்சம் தண்ணி கொடு"

சாந்தா காபியைக் கொடுத்தபோது குடித்தார். வறண்டு மரத்துப் போன உணவுக் குழாயின் வழியாக வெதுவெதுப்பான காபி வயிற்றினுள் இறங்கியபோது இதமாக இருந்தது. பார்வை தெளிந்தது.

சுற்று முற்றும் பார்த்தார் ஒவ்வொரு முகத்தையும் அடையாளம் தெரிந்துகொள்ள முடிந்தது. தீனும்மாவின் முகத்தில் பார்வை நிலைத்தபோது அவள் நடுங்கினாள். அதைக் குஞ்சுநைநு கவனித்தார்.

"வர்கீஸ் !"

"என்ன ?"

"எங்கேடா அந்தக் குறுப்பு ?"

"அவன் வீட்டில் இருப்பான். இன்றைக்கு ஞாயிற்றுக் கிழமை தானே? கடை இல்லை."

தீனும்மா கூறினாள் :

"ஸிஸிலி அப்பா போனபோது கடை விஷயங்களை யெல்லாம் சொல்லி ஏற்பாடு பண்ணிவிட்டுப் போயிருப்பாரா, மாட்டாரா என்கிற சந்தேகம் போலிருக்கு இப்படித் தள்ளாமல் படுத்திருந்தும் மாமாவுக்கு வீடு வாசல் பிள்ளைகள் நினைவுதான் எப்பவும்.

தீனும்மா கூறியது குஞ்சுநைநுவிற்குச் சரியாகக் கேட்கவில்லை. திரும்பவும் அவரது பார்வை அவள் முகத்தில் பதிந்தது. மயக்கும்

விழிகள், தேனினிக்கும் பேச்சு. போதையூட்டும் அழகு. நீ ஆண்களை வேட்டையாடுகின்றவள். உன் வலையில் விழுந்தவன் அழிந்து போவான். ஒருவன் எப்படித் தன் துணியை எரியவிடாமல் மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டு வர முடியாதோ, கால் வெந்து போகாமல் நடக்க முடியாதோ அது போல உன் மோக வலையில் சிக்கியவன் அழிந்து போகாமல் தப்ப முடியாது.........

நல்ல வெயில் காயும்போது சிறு மேகமொன்று ஆதவனை மறைப்பது போன்று மறுபடியும் ஒளி மங்கியது. அல்லதுபொழுது சாய்கிறதா ?

எதுவும் தெரியவில்லையே ! அப்படியானால் நான் கண்டது கனவா? நான் ஏதாவது கனவு கண்டேனா ? இல்லை, அவள் அப்படிச் செய்ய மாட்டாள்.........

'சந்தேகமிருந்தால் சோதித்துப் பார்க்கலாம். அதற்கு வழி இருக்கு''!

வெளிச்சம் ஒருவர் மட்டும் புலப்பட்டார்.

'நான்தான் மோசே, இஸ்ரவேலர்களை அழைத்துச் சென்றவன். உனக்கென்ன சந்தேகம்? சந்தேகமிருந்தால் சோதித்துப் பார்ப்பதற்குக் கர்த்தர் வழி கூறியுள்ளாரே. அவளை அழை.'

அழைக்கப் போக வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அவள் தலை குனிந்து மெல்ல அடியெடுத்து வந்தாள்.

'...ஒருவன் மனைவி நெறிதவறி, புருஷனுக்குத் துரோகம் பண்ணி, ஒருவன் தன்னோடு சேரும்படி சயனித்துத் தீட்டுப்பட்டால், அவன் புருஷனின் கண்களுக்கு அது மறைக்கப்பட்டு வெளியே தெரியாமல் இருந்தாலும், சாட்சியில்லாமலும், அவள் கையும் களவுமாகப் பிடிக்கப் படாமலிருந்தாலும், அந்தப் புருஷன் தன் மனைவியை ஆசாரியனிடத்தில் அழைத்துச் செல்லக் கடவது. அவள் நிமித்தம் வழிபாட்டிற்கு ஒரு படி கோதுமை மாவில் பத்தில் ஒரு பங்கைக் கொண்டுபோகக் கடவது. அதன் மேல் எண்ணெய் வார்க்காமலும் தூப வர்க்கம் போடாமலும் இருப்பானாக. அது சந்தேகத்தின் காணிக்கை.......

''ஆசாரியன் ஒரு மண்பாண்டத்தில் பரிசுத்த ஜலம் வார்க்க வேண்டும். பிறகு அவள் தலையை விரித்துப்போட்டு, சந்தேகத்திற்கான ஞாபகார்த்த காணிக்கையை அவள் உள்ளங்கையில் வைக்க வேண்டும். சாபகாரணமான கசப்பான ஜலம் ஆசாரியனது கையில் இருக்கவேண்டும். அந்த ஜலத்தை அவள் குடிக்கும்படி பண்ண வேண்டும் அவள் தீட்டுப் பட்டு தன் புருஷனுக்குத் துரோகம் பண்ணியிருந்தால் அந்த ஜலம் குடித்தபின் அவள் வயிறு வீங்கி இடுப்பு சூம்பும், சோதனை செய்து பார்க்க வேண்டுமா?

''வேண்டும் யஜமானரே, இவளைச் சோதனை செய்து பார்க்க வேண்டும்.'

சோதனை நடந்தது. என்ன ஆச்சரியம்! அவளது வயிறு வீங்கியது. இடுப்பு சூம்பியது. முகத்தில் சோகை .....

''கல்லெறிந்து கொல்லு இவளை...கல்லெறிந்து கொல்லு...''

''அப்பா!''

''மாமா!''

''தாத்தா!''

இப்படி வெளிச்சம் மங்குவதும் தெளிவதுமாகக் குஞ்சுறைநூ இரவைப் போக்கினார். பிள்ளைகளும், பேரன் பேத்திகளும், உற்றாரும், சுற்றத்தாரும், ஊராரும் அவரைக் காண வந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

இரவு முழுவதும் சாந்தா கண் விழித்துக் குஞ்சுறைநூவிற்குப் பணிவிடை செய்தாள். மயக்கம் தெளியும் போதெல்லாம் தீனம்மா தந்திரமாகப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தாள். அவள் உள்ள முருகி 'ஆண்டவரே! அவரது வாயிலிருந்து எதுவும் வரலாகாதே' என்று வேண்டினாள். வர்கீஸும் குட்டியம்மாவும் அன்று மேலைத் தொழுத்தில் படுத்துத் தூங்கினார்கள்.

பொழுது விடிந்தபோது குஞ்சுறைநூ சற்றுக் கண்ணயர்ந்தார். தீனம்மா காபி போட்டுக்கொண்டிருந்தாள். வர்கீஸ் சமயலறைக் கதவருகில் வந்து, ''தீனம்மா, இப்படிக் கொஞ்சம் வா'' என்று அழைத்தான்.

தீனும்மாவிற்குப் பகீரென்றது. இரவில் அவள் கண்ணயர்ந்த போது பிள்ளையிடம் ஏதாவது சொல்லியிருப்பாரோ ? கையும் களவுமாகப் பிடிக்கப்பட்ட கள்வனைப் போல அவன் பின்னால் சென்றாள். தனியாக ஓரிடத்திற்கு அழைத்துச் சென்று வர்கீஸ் கேட்டான் :

''அப்பா எப்படியம்மா கீழே விழுந்தார் ?''

''நான் சமையலறையில் வேலையாயிருந்தேன். சத்தம் கேட்டு ஓடி வந்து பார்த்தபோது,.........

''ம், கவனிச்சிருக்கணும், போகட்டும். நேரம் சரியில்லே.''

''குரல் கொடுத்தால், நான் எங்கே இருந்தாலும் ஓடிச் செல்வேன். இரவில்கூட நான்கைந்து தடவைப் போய்ப் பார்கிறதுண்டு.''

தீனும்மாவின் குரல் தழதழத்தது. அவள் கண்களில் நீர் வழிந்தது.

''நீ கவனிக்கிறதில்லையென்று சொன்னேன்? இத்தனை காலமும் அப்பாவுக்குப் பணிவிடை செய்ததே நீதானே?''

வர்கீஸ் வாசல் பக்கம் போனபோது குறுப்பு உள்ளே வந்து கொண்டிருந்தான்.

''குஞ்சுநைனாவிற்கு எப்படியிருக்கு?''

''எப்படியிருக்கு! கீழே விழுந்ததனால் ஏதோ உட்காயம் பட்டதுபோல் இருக்கு. வரவேண்டியதெல்லாம் வந்தாச்சு, அபின் இல்லே. எங்கிருந்தாவது கொண்டு வரணும். அது இல்லாததனால்தான் களைப்பு அதிகம்போல் இருக்கு.''

''அப்படியா? கொண்டு வருகிறேன்.''

''நான் வீடுவரை போய்வர்றேன்.''

''போய் வாங்க.''

வர்கீஸ் போனான். குறுப்பு தீனும்மாவிடம் மெலிந்த குரலில் கேட்டான்:

''என்ன ஒரு மாதிரியாயிருக்கிறே? ஏதாவது குழப்பமா?''

தீனும்மா பதில் கூறவில்லே. குறுப்பை உற்றுப் பார்த்தாள்.

''ஏன் இப்படிப் பார்க்கிறே?''

"கடைசி தடவையாப் பார்க்கிறேன்."

"கடைசி தடவையா?"

"ஆமாம், நாளைக்கு என் பிணத்தைத்தான் பார்ப்பாய்."

"பைத்தியம்போல் பேசாதே."

"ஆமாம், பைத்தியம்தான். போய்விடு! என் முன் நில்லாதே. நீ இங்கிருந்து தொலையா விட்டால் உன் எதிரிலேயே தலையை முட்டிக்கொண்டு உயிரை விடுவேன். நான் எவ்வளவு தடுத்தேன்! இரண்டு ஆண்டுகளாக மறைத்து வைத்தேன். கடைசியில் நீ என்னைப் பலி கொடுத்தாயே. பாவி!"

"நீ பயப்படாமல் சும்மா இரு. குஞ்சுநைனுவுக்கு எதுவும் தெரியவில்லை. நான் போய் அவரைப் பார்த்து வருகிறேன்."

"பாதகா! அங்கே போகாதே. இங்கிருந்து இப்போதே போய்த் தொலை. உன்னை அவர் பார்த்துவிட்டால் எல்லாம் இப்போதே முடிந்துவிடும்."

குறுப்பு சிறிது நேரம் யோசனை செய்தவாறு நின்றான். ஓர் அகதியைப்போல் பரிதாபமாக அவன் தீனும்மாவைப் பார்த்தான். பிறகு பேசாமல் திரும்பிப் போனான். அப்போது தீனும்மா மயக்கம் தெளியும்போதெல்லாம் அதைச் சொல்ல முயல்கிறார். கடவுளே, யாருக்காவது தெரிவதற்கு முன்னால் விஷம் சாப்பிட்டுச் செத்துப் போனால் போதும்' என்று முணுமுணுப்பது குறுப்பு காதில் விழுந்தது.

சிவராம குறுப்பு நடந்தான். கால்களைத் தரையில் சரியாக ஊன்ற முடியவில்லை, தாளம் தவறினாற்போல் இருந்தது மனத் திற்கு நிம்மதியில்லை.

அவனது கண்ணியம் என்கிற, 'நிலையங்கி' கிழிந்து விட்டது. நிர்வாணமாக்கப்பட்டு நிற்கிறான். நீதிபதியின் சட்டைப்பையி லிருந்தே திருட்டுப்பொருளைக் கண்டெடுத்ததுபோல்...இனி என்ன வழி? வெகு கவனமாகத் திட்டமிட்டுச் செயலாற்றிய அவனது போர்முறையில் ஒரு சிறு தவறு ஏற்பட்டுவிட்டது அணியில் பிளவு. அதை அப்படி அடைக்கலாம்... .. கூட்டியும் கழித்தும் பெருக்கியும் வகுத்தும் கணக்கை எப்படித்தான் சரி பார்த்தாலும் கடைசியில் ஓர் எண் தவறிப் போகிறது .....

அவன் எண்ணினுன் :

கேசவப் பிள்ளையின் மகளை விவாகரத்து செய்து தள்ளி வைத்த காலம். அவன் குளித்துவிட்டு ஆற்றிலிருந்து வந்துகொண்டிருந் தான். 'துர்யோதன' வதம் கதகளியின் பாடலொன்றை முணு முணுத்துக்கொண்டிருந்தான். ஓணப் பண்டிகை நாட்கள். பாட லுக்கு ஏற்றவாறு எங்கிருந்தோ 'செண்டை' ஒலித்துக்கொண்டிருந் தது. சந்து வழியாக வரும்போது ஒரு பெண் எதிரே வந்துகொண் டிருந்தாள். தூய வெள்ளைச் சேலை. கையில் கறுத்த பைண்டு செய்த புத்தகம். கூட வண்ணத்திப் பூச்சிபோன்று அழகான மகள். பக்கத தில் வந்தபோது தான் யாரென்று தெரிந்தது. குஞ்சுநைனுவின் மருமகள், மாத்யுவின் மனைவி. குஞ்சு நைனுவை அதற்கு முன் பிருந்தே தெரியும். தடியை ஊன்றியாகிலும் நாட்டை ஆண்டு கொண்டிருந்த காலம்......

''அம்மாவும் பெண்ணும் எங்கே போகிறுப்போல?''

கன்னத்தில் அறைந்தது போன்ற பதில்.''

''சொல்லித்தான் தெரியணுமா? ஞாயிற்றுக்கிழமை காலையில் ஜெப புஸ்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டு எங்கே போவார் களாம்?''

அறுந்து விட்டதாகத் தோன்றிய ஆசையின் சங்கிலி வளையம் மறுபடியும் இணைந்தது. குஞ்சுநைனுதான் காரணம். குஞ்சுநைனு அல்ல அபின்.

ஒரு நாள் பனைச்சமேட்டு முச்சந்தியில் அந்த விஷயத்தைப் பற்றிச் சொன்னபோது மனத்துள் திட்டமிட்டான். இது ஒரு கொக்கி! சிறிது சிரமப்பட்டபோதிலும் அபினுக்கான ஏற்பாடு செய்தான். அடிக்கடி போவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைததது.

அதற்குப்பின்.................எல்லாவற்றையும் யோசித்தான். குழந்தைக்கு வெகுமதிகள், யாத்யுவுக்குப் பொருள் உதவி......

வருவது வரட்டும் என்று ஒரு தடவை முயன்று பார்த்தான். அந்த நிகழ்ச்சி. உச்சி வேளையில் குஞ்சு நைனு அபின் தின்று மயக்கமாகப் படுத்திருக்கும்போது அவனது கையைப் பிடித்தான்...

ச்சீ !

தீப்பிழம்பு போன்ற விழிகள்.

துடிதுடிக்கும் உதடுகள்.

''அதற்கு வேறு ஆளைப் பாரு. ஹூம் நீ, இப்படிப்பட்டவனா ?

கன்னத்தில் கை வைத்து அழுதாள்; அப்படி அழுதாள்

''மானத்தை வாங்காதே. தவறு நேர்ந்துவிட்டது. மன்னித்து விடு. யாரிடமும் சொல்லாதே.''

''சொல்லமாட்டேன். ஆனால், இனிமேல் இப்படி நிகழக் கூடாது.''

ஆனால் நிகழ்ந்தது......

ஆம், பலாத்காரம் நிகழ்ந்தது. கற்பழித்தலில் முடிந்தது அவள் கீழ்ப்படிந்தாள்.

எல்லாப் பொத்தல்களையும் அடைத்திருந்தான். எல்லாச் சந்தேகங்களையும் நீக்கியிருந்தான். ஆம், அவ்வளவு எச்சரிக்கையாக நடந்து கொண்டான். அப்படியும் மாட்டிக் கொண்டான் கரையை அணையும் தறுவாயில் படகு மூழ்கத் தொடங்கியது.

இனி என்ன வழி ?

*

ஏ ?

'' அப்பா ! இதைச் சாப்பிடுங்க. கொஞ்சம் நிம்மதியாயிருக்கும்.''

கண்களைத் திறந்து கேள்விக்குறியுடன் வர்கீஸைப் பார்த்தார். அவருடன் நீண்ட நாளைய சொந்தம் கொண்ட அபின் அவன் கையில் இருந்தது உள்ளம் குளிர்ந்தது வாங்கிச் சாப்பிட்டார்.

எவ்வளவோ விஷயங்கள் சொல்ல வேண்டும்போல் இருந்தது. தொண்டையை அடைத்தது சொல். வெளியே வரவில்லை. எல்லாமே உள்ளத்தில் குழம்பிக்கொண்டிருந்தன.........

''மாத்யு!''

''நேற்றே வரவேண்டியவன். இன்று மாலைக்குள் வந்து விடுவான்.''

''அவன் வந்ததும், ஒரு விஷயம் சொல்லணும்.''

''என்ன அப்பா?''

''ஏ.........?''

''என்னிடம் சொல்லுங்க!''

''குடிக்க ஏதாவது கொடு. வயிற்றைப்பற்றி எரியுதே!''

எதுவுமே சாப்பிடாததனுல்தான்."

சாந்தா காபி கொண்டுவந்து கொடுத்தாள். எவ்வளவு குடித்தும் போதவில்லே. கும்பி குபுகுபுவென எரிந்துகொண்டிருந்தது. தலேயை தூக்கிப்பிடித்து மறுபடியும் காபி கொடுத்தார்கள் குடலில் முட்களேப் போட்டு இழுப்பது போன்று .... ... ஜுவாலே இன்னும் மேலே எழும்பியது. கண்களில் இருட்டு . ... ..

எவ்வளவு வேகமாக இருட்டியது. சீக்கிரம் போக வேண்டும். விளக்குமில்லே. நிலவொளியுமில்லே. வேகமாக நடந்தார்.

''நில்லுடா!''

பின்னுலிருந்து அவரது மேல்துண்டை யாரோ பிடித்து இழுத்தார்கள். யார்? ஆணுெருவனும் பெண்ணுெருத்தியும். பெண்ணே இதற்குமுன் பார்த்ததுண்டு. பெண்ணம்மா. ஆண்?

''தப்பி ஓடலாமுன்னு நினேச்சியா?''

''உம், என்ன விஷயம்?''

''உனக்கு இவளேத் தெரியுமா?''

''யாரோ?''

''ஏமாற்றி விடலாமுன்னு நினேக்காதே. கணக்குச் சொல்லித்தான் ஆகணும். வீட்டில யாரும் இல்லாத நேரத்தில் திருட்டுத்தனமாக வந்து அவளே மயக்கி, கடைசியில் தெருவில் அலேய விட்டாய். ஞாபகம் இருக்கா?''

''நான் அல்ல. துண்டை விடு!''

கடகடவென்ற சிரிப்பொலி.

''என்றைக்கு ஆனுலும் ஒருநாள் வாங்கிய கடனேத் திருப்பிக் கொடுத்துத்தான் ஆக வேண்டும். நீயோ, உன் சந்ததியோ! தெரிகிறதா?''

''என்ன?''

''நீ வாங்கினுய், உன் மகன் கொடுத்தான்''

மறுபடியும் சிரிப்பொலி.

''இருட்டிப் போச்சு, வெளிச்சமில்லே. நான் போகணும்.''

''வெளிச்சமில்லேயா? மேலே பார்!''

என்ன? வானவீதியிலிருந்து ஒரு வெள்ளைக் குதிரை பாய்ந்து வந்தது. அதன் மேல் அமர்ந்திருப்பவனது கண்களில் தீப்பிழம்பு. தலையில் மகுடம். பாவிகளின் தலையைச் சீவுவதற்கு அவன் வாயிலிருந்து கூர்மையான வாளொன்று கிளம்புகிறது. ஒரே வெட்டு— ஆயிரம் சடலங்கள் தலைவேறு உடல்வேருக வீழ்கின்றன. செங்குருதி பீரிட்டு வருகிறது. அது வானத்தின் எல்லைவரை பரவுகிறது. எங்கும் சிவப்பு நிறம், பளபளக்கும் சிவப்பு. புத்தம் புது காலை மலர்கிறதா? பறவைகள் சலசலக்கின்றன. சேவல் கூவியது.

என்னவெல்லாமோ தெரிந்தது. எதுவும் தெளிவாக இல்லை. கண்ணெதிரில் மிச மெல்லிய படுதா ஒன்று தொங்குகிறது. இப்படியும் அப்படியுமாகப் போகிறவர்களின் நிழல்கள் தெரிந்தன. அழுகை, ஒப்பாரி, எல்லாமே மிகத் தொலைவிலிருந்து கேட்கும் எதிரொலி போல...

'' அப்பா '' !

'' தாத்தா ! ''

'' கண் திறந்து பாருங்க, ''

'' கொஞ்சம் கூச்சல் போடாமல் இருங்க. ''

'' சாமியாருக்கு ஆளை அனுப்பட்டுமா? மறுபடியும் தைலச் சடங்கு நடத்தணும். ''

'' சரி. ஆளை அனுப்பு. ''

'' அடிக்கடி இப்படி மயக்கம் வருவதுண்டா ? ''

படுதாவிற்கு இப்போது நல்ல நிலவொளியின் நிறம். பால் போன்ற நிலவொளி.

அல்லவே !

படுதாவிற்கு ஏழு நிறங்கள் உள்ளன.

படுதா மேலே எழும்புகிறது. அப்போது தங்கச் சிங்காதனமொன்று தெரிகிறது. அதில் வீற்றிருப்பவர்களுடைய கரத்தில், உள்ளேயும் வெளியேயும் எழுத்துக்கள் உள்ள ஏழு முத்திரைகள் போட்ட புத்தகமொன்று இருந்தது.

முதல் முத்திரையை எடுத்தபோது வெள்ளைக் குதிரையொன்று தெரிந்தது. அதன் மேல் உட்கார்ந்திருப்பவன் தனது கையில் வில்லை வைத்திருந்தான்.

இரண்டாவது முத்திரையை எடுத்தபோது சிவப்பு நிறமான வேறொரு குதிரை வந்தது. அதன் மேல் அமர்ந்திருப்பவனின் கையில் கூரிய வாளொன்று இருந்தது.

மூன்றாவது முத்திரையை எடுத்தபோது கறுப்புக் குதிரை யொன்று வந்தது. அதன்மேல் அமர்ந்திருப்பவன் தன் கையில் ஒரு தராசு வைத்திருந்தான்.

ஓவென்று அழும் குரல். ஓடி வருபவர்களுடைய கூக்குரல். சத்தம் அருகில் நெருங்குகிறது. என்ன இது? கடல் கொந்தளித்து பூமியை மூழ்கடிக்க வருகிறதா? அலைகள் வானமளவிற்கு உயரக் கிளம்புகின்றன. கணப்பொழுதில் எல்லோரையும் அலைகள் விழுங்கின. அவர்களுடைய ஓலம் வானத்தை முட்டியது. நீருக்கு அடியிலிருந்து மேலே வரவேண்டும். மேலே எழும்ப முயன்றபோது கழுத்தில் பெரும் கல்லைக் கட்டிப் போட்டதுபோல் அவர் தாழ்ந்து போனார். அப்படி விட்டு விடக் கூடாதே—அப்படி விட்டுவிடலாகாதே! ஒரு விதமாக மேலே வந்தார். மிகவும் களைத்து, மேல் பரப்பில் வந்தார். அவரால் வானத்தின் கூரையைத் தொட முடிந்தது. எரிந்து அணையப்போகும் ஆதவனைப் பார்க்க முடிந்தது. சுற்றிலும் ஆட்கள். இவர்கள் ஏன் போகவில்லை?...

''என் தாத்தா! கொஞ்சம் கண்ணைத் திறவுங்களேன்!''

''இது யார் வந்திருக்கான்னு பாருங்க!''

எப்படியடி பொண்ணு, கண்களைத் திறப்பேன்? கண் இமைகளை யாரோ தைத்துவிட்டார்களே.

''இது நான்தான் தாத்தா. குட்டியம்மா.''

தெரியும்.

சற்று முன்னால் நீ வந்திருந்தால் உன்னிடம் ஒரு விஷயம் சொல்லியிருபேனே. நேரம் கழித்து வந்தாயேடி...

திரும்பவும் அலைகளில் சிக்கித் தவிக்கிறார். கைகால்கள் சோர் வடைகின்றன. உம் இனி முடியாது

மேலேத்தொழுத்து வீட்டிற்குள்ளும், முற்றத்திலும், தோட்டத்திலும் ஊரே கூடியிருந்தது. பலவேறு ஜாதிமதங்களைச் சார்ந்த ஆண்களும் பெண்களும் குஞ்சுநைனாவைப் பார்த்துவிட்டுப்

போனார்கள். பனைச்சமேட்டிலேயே வயதில் முதிர்ந்தவர். பிள்ளைகள், பேரன் பேத்திகள், கொள்ளுப் பேரன்கள்—பேத்திகள், ஆகியவர்களைக் கொண்ட ஒரு பெரிய குடும்பத்தின் தலைவர்.

எவரேனும் இருவர் சந்திக்கும்போது சொன்னார்கள் :

''மேலைத் தொழுத்துக் குஞ்சுநைனாவிற்கு உடம்புக்கு ரொம்ப அதிகமாமே?''

''ஆமாம். கடைசி மூச்சு.''

''மாத்யு மலபாருக்குப் போயிருக்கானாமே. இன்னும் வரலையா?''

''இல்லை கடைசி மருமகள்தான் இத்தனை காலமாக அவருக்குப் பணிவிடை செய்து வந்தாள். பாவம், இரவெல்லாம் கண்முழிச்சு அவரைக் கண்ணும் கருத்துமாகக் கவனிச்சு வந்திருந்தாள்.''

இந்த குழப்பத்திற்கிடையில் குறுப்பு அனேக தடவைகள் அங்கே வந்து போனான். குடும்பத்தவரில் ஒருவனைப் போல எல்லாவற்றையும் விசாரித்து, செய்ய வேண்டியவைகளை முன் நின்று கவனித்துக்கொண் டிருந்தான். இனி பிழைப்பது அரிதே என்று உறுதியானபோது சாமியாரை வரவழைத்துப் பிரார்த்தனை செய்வித்தார்கள்.

முற்றத்தில் பந்தல் போட்டிருந்தது. மேற்பார்வை குறுப்பே தான். தீனம்மா பந்தலில் நின்றுகொண்டு, கண்ணீரை விட்ட வாறு சில பெண்களிடம் விவரங்களைக் கூறிக்கொண் டிருந்தாள். அப்போது குறுப்பு ''ஸிஸிலி அம்மா, கொஞ்சம் இப்படி வாங்க'' என்று அழைத்தான். தீனம்மா பக்கத்தில் சென்றாள். யாருமில்லாத ஒரு மூலையில் நின்றுகொண்டு முணுமுணுப்பதுபோல் கேட்டான்.

''இப்பே, நிம்மதியாச்சா?''

''நீ சொல்கிறது மகா பாவம். என்னிடம் மாமாவிற்கு எவ்வளவு அன்பு இருந்ததுன்னு உனக்குத் தெரியுமா? என் மீது கந்தகமும் தீயும் இன்னும் ஏன் பொழியவில்லை? கடவுளை நினைத்து இனிமேல் என்னைப் பார்க்க வராதே. கருணை நிறைந்த கர்த்தர்...''

''கர்த்தர் அல்ல. நான்தான் காப்பாற்றினேன்.'' சிவராம குறுப்பின் உதட்டில் கொடூரமானதொரு புன்னகை அரும்பியது. அவன் முணுமுணுத்தான்.

''நான் செய்த வேலை''.

''என்ன?''

''ஏ...?''

''என்ன வேலை செய்தே?''

''ஒரு வேலை.''

''என்ன ஒரு வேலை? சொல்லு!''

''அபினில் கொஞ்சம் விஷம் கலந்து கொடுத்தேன்.''

''ஆண்டவரே!''

தீனும்மா கூக்குரலிட்டாள். ஆனால் அது அவள் தொண்டையிலேயே தங்கிவிட்டது.

''மானம் போன பிறகு இருக்க மாட்டேன்னு காலையில் என்னிடம் சொன்னையே?''

''போதுமடா...''

அவனை நகத்தால் கிழித்துப் போட்டு அவன் உதிரத்தைக் குடிக்க வேண்டுமென்று எழுச்சி உண்டாயிற்று அவளுக்கு.

மாபாவி! அரக்கா! குடிக்கும் நீருக்குக்கூட நம்பத்தக்காதவனே, ஓடிப்போடா என் எதிரிலிருந்து! இல்லாவிட்டால் உன்னைக் கொலை செய்து விடுவேன் .....

எல்லாவற்றையும் மனத்துள் அடக்கிக்கொண்டு தீனும்மா குஞ்சுனைநனுவின் கட்டிலருகே வந்தாள். வெகுநேரம் வரையில் முகத்தை உற்றுப் பார்த்தாள். அவளால் தன்னைக் கட்டுப் படுத்த முடியவில்லை. கட்டிலின்மீது தடாலென்று விழுந்து குஞ்சுனைநனுவின் கால்களைப் பற்றிக் 'கோ'வென்று அழுதாள். சுற்றுமுற்றும் நின்றுகொண் டிருந்தவர்கள் வியந்து போனார்கள். திடீரென்று இப்படி அழும்படியாக என்ன நடந்தது? வயதான ஒரு மூதாட்டி சொன்னாள் :

''பாவம், இத்தனை வருஷமாக அவள் மாமாவுக்குப் பணிவிடை செய்திருக்கிருள். பின்னே அவளுக்குத் துக்கம் இருக்காதா?''

வர்கீஸ் கூறினான் :

''தீனும்மா, இப்படி அழுது புலம்பி மற்றவர்களது துக்கத்தையும் கிளறி விடாதே.;'

குஞ்சுச்செறுக்கன் சொன்னான் :

''மாத்யுவை இன்னமும் காணேமே? அவன் எப்பவும் அப்படித் தான். ஒரு இடத்திற்குப் போனல் நேரத்திற்குத் திரும்ப மாட்டான்.''

தோமஸ் ஸார் சொன்னர் :

''டாக்டரை அழைச்சிட்டு வரட்டுமா?'

''இனி எதுக்கு, மாப்பிள்ளை?''

''குஞ்சப்பியும் சொன்னன் :

''அப்படியில்லே, மச்சான். வயசாச்சேன்னு வாளா இருக்க லாமா? மனிதனது ஆயுள் என்னவென்று யாருக்குத் தெரியும்?''

''அப்போ சரி, மச்சான். வயசாச்சேன்னு வாளா இருக்க லாமா? மனிதனது ஆயுள் என்னவென்று யாருக்குத் தெரியும்?''

''அப்போ சரி, மச்சான். உனக்கு அப்படித் தேவைன்னு தோன்றினல் கார் எடுத்துப் போய் டாக்டரைச் சீக்கிரம் அழைச் சிட்டு வா!''

தோமஸ் ஸார் புறப்பட இருந்தார். குஞ்சுநைந திடீரென்று துடிதுடித்தார். ஓர் அவக்குரல். ஓரிரு விக்கல்.

''கட்டிலிலிருந்து கீழே இறக்குவோமா''.

''அந்தப் பக்கம் ஓராள் பிடியுங்கள்.''

''அப்பா!''

''தாத்தா!''

வாயில் தண்ணீர் ஊற்றினர்கள். புதிய வானம்! புதிய பூமி தொண்ணூறு ஆண்டுகளாகக் கண்ட பழைய வானமும் பழைய பூமி யும் மறைந்து போயின. மிகத் தொலேவில் தங்கச் சிங்காதனம் தெரிந்தது. சிங்காதனத்திலிருந்து பேரொலி ஒன்று முழங்கியது. வா, என் கூடாரத்திற்கு வா. இனிமேல் நீ என்னுடன் வசிப்பாய். தான் உன் கண்ணீரைத் துடைப்பேன். துன்பதும் துயரமும் இனி உனக்கில்லே.''

அருகில் சென்ருர். கைகளே நீட்டினர். அணேத்துக் கொண் டார். நெற்றியில் முத்தமிட்டார்.

குஞ்சுநைந மீண்டும் ஒரு முறை துடியாய்த் துடித்தார். வாய் திறந்தது. தலே ஒரு பக்கம் சாய்ந்தது.

''ஓ!'' என்று எல்லோரும் கதறியழுதார்கள். தீனம்மாவின் அழுகைக் குரல் எல்லாவற்றையும் மிஞ்சியது.

''என் மாமா! என் தங்க மாமா!''

அவள் என்ன சொல்ல நினைத்தாளோ, சத்தம் வெளியே வரவில்லை. அழுகையைக் கேட்டு அக்கம் பக்கத்து வீட்டார்கள் ஓடோடி வந்தார்கள். முதியவர் ஒருவர் கூறினார் :

''கர்த்தர் அபிரகாமிடம் கூறியதுபோல், குஞ்சுநைனா நல்ல முதுமையில் அழைக்கப்பட்டிருக்கிறார். அதிருஷ்டசாலி.''

அப்பொழுதும் தீனம்மாவின் அழுகைக் குரல் ஒலித்துக்கொண்டிருந்தது.

(முற்றும்)